திருஞானமுத்திரை துணை.

# தனிப்பா மஞ்சரி.

நூலாசிரியர்

ஸ்ரீ வானமாமலை மடம் ஆஸ்தான வித்வான்

தென்திருப்பேரை

அபிநவ காளமேகம்

ஸ்ரீ அநந்தகிருஷ்ணையங்கார்



அச்சியற்றினோர்

ஸ்ரீவைகுண்டம் வைக்கீல்

(Land lord)

ஸ்ரீமான் பொன்னம்பலநாத முதலியார்.

ஸ்ரீ கான வித்யா பிரஸ்,

ஸ்ரீவைகுண்டம்.

இதன்விலை ] 1936. [ அணா 8.

# முன்னுரை.

'தனிப்பா மஞ்சரி' என்னும் இந்நூல் தென்திருப்பேரை ஸ்ரீ. அனந்தகிருஷ்ண அய்யங்கார் அவர்களால் இயற்றப்பட்டது. இவ்வாசிரியர் அரசர்களால் ஸம்மானம் பெற்றுப் புகழுடன் விளங்கிய புலவர் பரம்பரையில் தோன்றியவர்கள். வடமொழி, தென்மொழி யிரண்டிலும் கவித்திறமை வாய்ந்தவர்கள். இவர்கள் குடும்பத்தைச் சார்ந்த பி. ஸ்ரீ. ஆச்சார்யா முதலிய பலர் தமிழுலகிற்குப் பெருந்தொண்டு புரிந்து வருகின்றார்கள்.

இவ்வாசிரியர் தமது நூலை அச்சியற்றி வெளியிடுதலில் ஊக்கமின்றி வெகுகாலமாக மலைவுற்றிருந்தார்கள். சிலேடை, யமகம், திரிபு முதலிய கவி வகைகளை இக்காலத்து இயற்றுவாரும் அரியர்; அவற்றைப் போற்றுவாரும் இல்லை. ஆகவே யாது செய்வதென்று வருந்தியிருந்த காலத்து ஒரு சில அன்பர்கள் இப்பாடல் வகைகளைக்கேட்டு, இன்புற்று, இக்காலத்திலும் காளமேகம்போலக் கவி சொல்ல வல்லார் உளராதலைக்கண்டு வியந்து, இவற்றை அச்சிடுமாறு ஊக்கினர். இவ்வன்பர்களுள் ஒருவர் கல்விச்செல்வமும், பொருட்செல்வமும் ஒருங்கே அமைந்த திருவாளர் போன்னம்பலநாத முதலியார் அவர்கள். இவர்கள் இந்நூலினை அச்சியற்றி வெளியிடுதற்கு வேண்டும் பொருளையும் தாமாகவே அன்பு கூர்ந்து உதவினார்கள். முதலியாரவர்களது தமிழ்ப்பற்று மிகவும் பாராட்டத்தக்கது.

இத்தமிழ்ப்பா மஞ்சரியை யாவரும் வாசித்து எளிதிற் பொருளுணர்ந்து கொள்ளும்படி ஆசிரியரது தம்பியாராகிய ஸ்ரீ நம்பி ஐயங்காரவர்கள் குறிப்புரை யொன்று எழுதியுள்ளார்கள். இக்குறிப்புரையும் இந்நூலுடன் சேர்த்துப் பதிப்பிக்கப்பெற்றிருக்கின்றது.

இந்நூலிலுள்ள விசித்திர கவிகளைத் தமிழ்மக்கள் கற்று இன்புறுவாராக.

சென்னை.
25—3—36.

எஸ். வையாபுரிப் பிள்ளை,
தமிழ்லெக்ஸிகன் பதிப்பாசிரியர்.

6—5—1935-ல் நடந்த வெள்ளிவிழாவில் இயற்றிய கமலபந்த வெண்பாவைப் பார்வையிட்ட, திருநெல்வேலி ஜில்லாக் கலெக்டர் துரையவர்கள் எழுதிய கடிதம்.

Tinnevelly Collector's
Banglow
Camp Trichendur.
Dated 13th May 1935

Dear Mr. Ananthakrishna Ayyengar,

Thank you very much for the songs composed by you in commemoration of the Silver Jublee of His Majesty the King Emperor.

Yours sincerely,
(Sd.) D. D. WARREN,

To

**Sri Ananthakrishna Ayyangar,**
*Sri Vanamamalai Madam,*
*Asthana Vidwan,*
Tentiruperai, Trichendur Taluk.

---

இந்நூலாசிரியர் இயற்றிய பிரபந்தங்கள்.

1. ஸ்ரீபத்மநாபஸ்வாமிபேரில் சந்திரகலாமாலை அச்சிடப்பட்டது
2. திருவரங்கச் சிலேடைமாலை
3. திவ்யதேசப்பாமாலை
4. திருப்பேரைக்கலம்பகம்
5. மணவாளமாமுனி ஊசற்றிருநாமம்,
6. கண்ணபிரான்பேரில் கிளிக்கண்ணி
7. ஐந்தாவது ஜியார்ஜ்சக்ரவர்த்தி அவர்களின் மகுடதாரண வைபவ வெண்பா
8. ஞான சித்தர் வேள்வி விளக்கம்
9. தனிப்பா மஞ்சரி
10. நீதிவெண்பா

(Items 6–9: அச்சிடப் பட்டவை)

மற்றவை கூடிய சீக்கிரம் அச்சிடப்படும்.

# மதிப்புரை.

சிதம்பரம் மீனாக்ஷி தமிழ்க்கல்லூரியில் நான் படித்து வரும் சமயம் 1928-ஆம் ஆண்டில், மகா மகோபாத்தியாய பிரம்மஸ்ரீ டாக்டர். உ. வே. சாமிநாதையரவர்கள் எங்கள் தலைமையாசிரியர் ஒருநாள் தென் திருப்பேரை, கவி ஸ்ரீ அநந்தகிருஷ்ணையங்காரவர்களை வகுப்பறையில் வைத்து அறிமுகப்படுத்தினார்கள்.

அவ்வளவுதான்; காள மேகம் மின்னாமல் கவிமாரி பெய்யத் தொடங்கியது. கடல்மடை திறந்தாற்போலக் கவி வெள்ளம் பாயத் தலைப்பட்டது. சிலேடைப்பொருத்தம், செம்பாகத்தெளிவு, வழக்கச் சொல்லாட்சி இவற்றில் ஐயங்காரவர்கள் காளமேகத்தை வெகு எளிதில் வென்றுவிட்டார்கள். சிலேடை வெண்பாக்களுள் மிகச்சிறந்தது கலைசைச்சிலேடை என்பார்கள். ஐயங்காரவர்களுடைய அரங்கச்சிலேடை, மற்றுமுள்ள ராசாவுக்கும் கூசாவுக்கும், கருடனுக்கும் திருடனுக்கும், வேம்புக்கும் ஸ்டாம்புக்கும் முதலிய சிலேடைகள் எங்களை வயிறு குலுங்கச் சிரிக்கவைத்தன.

சென்ற நூற்றாண்டின் யமகம் திரிபுகள் யாரும் தெரியக்கூடியனவாக இல்லை. எளிதில் அணுகவொட்டாது மலையவைக்கின்றன. உள்நுழைந்து தாருவுகையிலும் மலைதோண்டி எலிபிடிப்பதாகவே முடிகின்றன. தற்காலத்தில் இம்மலக்குச் சொல்லடுக்குகளைக் கலைரஸிகர்கள் காய்வதிலும் வியப்பில்லை. ஆனால், ஐயங்காரவர்கள் சொல்லலங்காரமோ பண்பும் பயனுமுடையன. வனப்பும் வன்மையும் வாய்ந்தன. இவர்கள் வாக்கு நலம் யாரையும் தன் வசப்படுத்துகிறது. இவர்களைக்கேட்குங் காலை எங்களை நாங்கள் மறந்து நின்றோம்.

பிரம்மஸ்ரீ ஐயரவர்கள் எங்களுக்கெலாம் ஆசிவழங்க இவர்களைக் கேட்டுக்கொண்டார்கள். இவர்களுக்குக் கவி எங்கிருந்துதான் உதித்ததோ? எப்படியோடியது பாருங்கள்!

" வாசித்தலை மருவு மாலருளார்ந்தித்தில்லை
வாசித்தலை மருவு மாணவர்கள்—நேசித்தே
அக்கரையா ஆசான் அருளால் கலைக்கடலின்
அக்கரையைக் காண்பார் அறிந்து ".

மாலெங்கே வாசித்தலை மருவினர்? அவர்தான் "பைந்தமிழ்ப்பி சென்ற பச்சைப் பசுங்கொண்ட" லாயிற்றே! அதனாலோ? என்( லாம் எண்ணலானேம். "திருமாலின் ஹயக்கிரீவ மூர்த்த உபாச யே கல்விக்காய தென்ற சமயக்கருத்தினை" இவர்கள் விளக் காட்டினார்கள். ஐயாவர்களும் இவர்களுடைய கவித்திறம் கற்ப வளம் இவற்றின் சிறப்பியல்புகளை விவரித்துப்பேசி வியந்தார்க

இடையே ஏழெட்டாண்டுகள் கழிந்தன. சென்ற மா தென்திருப்பேரைக்கு நண்பர் T. K. சிதம்பரநாத முதலியாரவ ளுடன் சென்றிருக்கையில், மீண்டுமிவர்களுடன் கலந்துறவாடு பேறுகிடைத்தது. இவர்கள் இவ்வூரில் வாழையடி வாழையா வந்த பரம்பரைக் கவிராயர் மரபைச் சேர்ந்தவர்கள். இவர்கள் பி மகர் திருவிதாங்கூர் சுவாதித்திருநாள் மன்னர்பெருந்தகையிட வீரசங்கிலிமுதலிய விருதுகள் பெற்றவர். தந்தையாரும் கவிவலா செல்வர்களால் சிறப்பிக்கப்பட்டவர். இவர்களையும் கருவிலே திரு டைய வரகவி எனல் தகும். பண்டித பாமரத் தமிழரானோர் அ வருக்கும் கம்பன் பாக்களியமுதைப் பகிர்ந்தளித்தூட்டும் க டுரை வல்ல திருவாளர் பி. ஸ்ரீ, ஆச்சாரியா ரவர்கள் சிறந்த எ நண்பர், நமது புலவரின் தமையனார் புதல்வர். இம்மரபு ஆல்போ தழைப்பதாக.

கவி ஸ்ரீ ஐயங்காரவர்கள் வானமாமலைமடம் ஆஸ்தா த்வான். 25-ம் பட்டம் ஸ்ரீ ஸ்வாமிகளால் அபிநவ பிள்ளைப்பெ மாள் என்று சிறப்பிக்கப்பட்டவர். காலஞ்சென்ற ஜார்ஜ் மன்ன முடிசூட்டு விழாவிலும், வெள்ளி விழாவிலும் வீரசங்கிலி முதலிய பரிசுகள் பெற்றவர். சென்னை கவர்னர் கோஷன் பிரபுவும் இவ களைச் சிறப்பித்திருக்கிறார். இத்தகைய வித்தகக்கவியின் சித்திர

பாடல்களைத் தமிழ் உலகிற்கு அறிமுகப்படுத்துபவன் நானா என்ற அச்சம் எழுகிறதாயினும் அவர்கள் விருப்பை நிறைவேற்ற வேண்டியதென் கடமையெனும் உணர்வு பற்றி யிதை எழுதத் துணிந்தேன்.

பல்வேறு காலங்களில் பலர் முன் முடைந்து தொகுக்கப் பட்ட இவர்கள் கவிமலர்கள் இன்னும் வாடாமணமே வீசுகின்றன. என்றும் வீசுமென்பது திண்ணம். இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னமே இவர்கள் பாடல்களை ரஸித்தனுபவித்த திருமணம் செல்வக்கேசவராயமுதலியாரவர்கள் "முப்பாலில் முடிவான பாலினைத் தும் இவர்பாலுண்டு, ஏனைப்பால்களை அப்பால் விடுதலான வெறுப்பும் போந்தது. ஏனைரஸமெலாம் பாதரஸமே; இவர் கவிரஸமே ஷட்ரஸம். ஆகலால் இதனை யின்னும் கோடலான விருப்பும் உளதாயிற்று" என்றெழுதினர்கள். இவர்கள் பாடல்களைச்செவி மடுக்கு மெல்லார் அனுபவமும் இதுவேயாக.

ஸ்ரீவைகுண்டம் வழக்கறிஞர் S. T. பொன்னம்பலநாதமுலியாரவர்கள் கவிச்சுவையை மாந்தித்திளைத்துத் தாம் பெற்ற இன்பத்தைத் தமிழுலகும் பெற வைத்தார்கள். தனிப்பா மஞ்சரியை அச்சிட்டுத் தமிழணங்கின் கொந்தளகத்தில் கவிப்பூங் கொத்தாகச் சூட்டினர்கள். இவர்கள் நீடுவாழ்க. இது கால கதியில் கறுகாது நறுமணம் வீசித்தளிர்வுறு மென்பது என் நம்பிக்கை ஈடேறுவதாக.

மதுரை திரவியம்
தாயுமானவர் இந்து காலேஜ்,
திருநெல்வேலி.
1—4—36

P. K. அருணசலக்கவுண்டர்,
தமிழாசிரியன்.



# AN APPRECIATION.

**K. G. Sesha Aiyar,** *Taikad, Trivandrum.*
Judge, High Court (Retired,)

I have had great pleasure and privilege of being acquainted with Brahmasri Ananta Krishna Aiyangar of Tentiruperai for many years. He is a Tamil scholar and poet of high merit and distinction. His poems are varied in character, as regards subject matter, but are uniformly sweet and flowing, and they exhibit in a remarkable degree the excellent adaptability and flexibility of Tamil for the expression of high poetic ideas. His manipulation of delightful **double entendres** is wonderfully facile. He is also a good Sanskrit scholar. He is the **Asthana Pandit of Sri Vanamamalai, Mut**, a position to which by his scholarliness and poetic excellence he does very great credit.

(Sd.) **K. G. Sesha Aiyar,**

*January 19th, 1930.*

(TRUE COPY.)

# மதிப்புரை

பிரம்பூர்,

செல்வக்கேசவராயமுதலியார் M. A., மதுராஸ்,

12—6—1911.

பாளையங்கோட்டையில், சைவசமயாபிவிர்த்திஸபையின் பத்தைந்தாவது வருஷோஸ்தவத்தின் பொருட்டு, நான் சென்றிருந்த காலத்தில், தென்திருப்பேரை, கவி. ஸ்ரீ அனந்தகிருஷ்ண அய்யங்காரும், அவர் சகோதரரும் அங்குற்றிருந்தனர். நானும் பிறரும் தங்கியிருந்த மாளிகையில் அவரைச்சந்திக்கும் சமயம் நேர்ந்தது. நேர்ந்த விடத்து, அனந்த கிருஷ்ணர் தாமியற்றிய, ஸ்ரீபத்மநாப ஸ்வாமி சந்திரகலாமாலை, திருவரங்கச்சிலேடைமாலை, தனிப்பா மஞ்சரி, திருப்பேரைக் கலம்பகம், முதலிய நூல்களில் நின்றும் பல பாக்களை எடுத்தோதி விளக்கினர். புதிய வசன நூல்களை வாசிப்பதும், எழுதுவதும் எனக்குக் காலக்ஷேபம், புதிய செய்யுள்நூல்களை நான் பார்ப்பதுமில்லை; கவனித்துக் கேட்பதுமில்லை. ஆயினும், இந்தக்கவியின் சிலேடைகளைக் கேட்ட அளவில், காளமேகம் அகாலத்தில் வந்து கவிமாரி சொரிகின்றதோ? என்கிற ஐயம்புகுதலாயிற்று. இவருடைய மடக்குகளைக் கேட்ட அளவில், சைவ எல்லப்ப நாவலரையும், பிள்ளைப்பெருமாளையங்காரையும், மீண்டும் பார்க்கவேண்டுமென்கிற எண்ணம் எழலாயிற்று. முப்பாலில் முடிவான பாலனைத்தும் இவர்பால்கண்டு ஏனைப்பால்களை அப்பால் விடுதலான வெறுப்பும் போந்தது. ஏனை ரஸமெல்லாம் பாத ரஸமே; இவர் கவிரஸமே ஷட்ரஸமாதலால் இதனை யின்னுங் கோடலான விருப்பும் உளதாயிற்று. அப்போது அங்குற்ற ஸ்ரீவைகுண்டம் தாசில்தார் ஸ்ரீ வேங்கடசாமி முதலியாரவர்கள் கவிராஜனை நிமிஷகவி யென்றார். அந்தோ! காட்டைக்கவி, கலைக்கவி என்று வழக்கறின்றே! என வருந்தினேன். இக்காலக் கவிகளில் அநேகரிருந்தும் இறந்தகாலக்கவிகளே. இந்த அனந்தகிருஷ்ணர் நிகழ்கால எதிர்காலக்கவியென்பது திண்ணமாகத் தோன்றுகிறது. மதுரகவி ஆழ்வார்குலத்தரான இவரையும் இக்கால மதுரகவியென்றே போற்றவேண்டும். இவ்வென்கூற்றைக் கேட்பவர் இதனை அதிசயோக்தியாகக் கருதக்கூடும். இவருடைய கவிகளைக் காண்பவரும் கேட்பவரும் என் கூற்றை ஸ்வபாவோக்தியென்றே கொள்வர். இந்தக்கவிராஜர் இன்னும் கால நீடித்தல் செய்யாது தமது நூல்களை யெல்லாம் ஒருசேரமுத்ரித்துக்காட்டி, என் கூற்றை மெய்ப்பிப்பாரென்று விரும்புகிறேன். இவர் கருவிலே திருவுடைய கவியென்பதே என்கோள்.

(Sd.) திருமணம் செல்வக்கேசவராயன்,

வண்ணார்பேட்டை,
திருநெல்வேலி
4—7—1935.

தென்திருப்பேரை ஸ்ரீ அனந்தகிருஷ்ணய்யங்கார் அவர்கள் பரம்பரையாய்த் தமிழ் ஸம்ஸ்கிருதம் ஆகிய இரு பாஷைகளிலும் வல்லவரா யிருந்துவந்த குடும்பத்தைச்சேர்ந்தவர்கள். தற்போது ஸ்ரீ வானமாமலைமடத்து ஆஸ்தான வித்வானும் இருக்கிறார்கள். அவர்கள்பாடியுள்ளசிலேடை, யமகம், திரிபு, ஏய்ப்புமுதலானஹாஸ்ய ரஸமுள்ள பாடல்களுக்குக் கணக்கில்லை. மணிக்கணக்கில் அல்ல, நாட்கணக்கிலேயே பாடல்களைக்கொட்டிக்கொண்டிருப்பார்கள். கேட்டுக்கொண்டிருந்தால், சித்திர கவிகளில் ஈடுபட்டவர்களுக்குப் போது போகிறதே தெரியாது. பசிதாகம்கூட ஏற்படாது. காளமேகத்தைக்கொண்டாடிக்கொண்டிருக்கிற புலவர்கள்கூட ஐயங்கார் அவர்கள் பாடலைக்கேட்டுவிட்டால் காளமேகம் எல்லாம் சூரியனைக் கண்ட பனிதான் என்று விடுவார்கள். மேலேசொன்ன விந்நியாச விசித்திர வேலைகளுக்கெல்லாம் தமிழ்ப்பாஷை எப்படி இடங் கொடுக்கிறது என்பது; ஐயங்கார் அவர்கள் பாடலிலிருந்து நன்றாய்த் தெரியவரும். இது பற்றி அவர்களுடைய பாடல்களை அனுபவிக்க எல்லாரும் முன் வரவேணும்.

(Sd.) T. K. சிதம்பரநாதமுதலியார்,

Entomend Board, Commissioner (Retired.)



# மதுரைத் தமிழ்ச்சங்கம்.

மதுரை 31—8—1935

உபய மஹா வித்வான்

# ஸ்ரீ. உ. வே. திருநாராயணையங்கார்

ஸ்வாமி அவர்களின்

# அபிநந்தனப்பத்திரிகை.



திருமகளென்றும் மருமகளொடுவாழ்
சீரியன்தென்திருப் பேரைமாநகரோன்
தேசமர் சீநிவாச வேதியனார்
நன்மைப்புதல்வன் தொன்முறைவழாது
வடமொழி தென்மொழி திடவல்லுநரைத்
தலவகாரம்மென உலவுநற்சாமமாம்
வேதமுந்தமிழ்தரு வேதமுமுணர்ந்தோன்
உயர்ந்தோர் குழாத்தி னுட்கொளப்பெற்றோன்
அநந்தசயனத் தநந்தன்பதமிசை
புனைந்தசந் திரகலா மாலையும்; பொன்னிசூழ்
திருவரங்கச் சிலேடைமாலையும்;
திருப்பேரைப்பதி விருப்புறுமாற்கு
கலம்படியின்சொற் கலம்பகமுதலா
பலபிரபந்தம் பல்முறப்பாடி,
வனமாமலைமுனி வரருளபிநவ
பிள்ளைப்பெருமாளெனும் பெயர்பெற்றோன்.
தனிப்பாமஞ்சரி யினிப்பா வியம்பினன்.
காளமேக கவியெனப்புவிசொலும்

அனந்தகிருஷ்ணாசாரியன்.

கனிந்தசெஞ்சொற்கவிஞரேறே!



# பிழை திருத்தம்.

| பக்கம் எண். | பாடல் எண். | பிழை. | திருத்தம். | வரு. |
|---|---|---|---|---|
| | | ஸபவை | ஸபை | மதிப்புரை (பிரம்பூர்) |
| | | என | என் | ஷை ஷை |
| | | Entomend | Endowment | ஷை (வண்ணு ர்பேட்டை) |
| | | முதலா | முதலாப் | ஷை (மதுரை) |
| 2 | 6 | பெச்சாளி | பெருச்சாளி | உரை |
| 8 | 26 | யவணின் | யவனின் | |
| 9 | 27 | ஊசிகுக்ம் | ஊசிக்கும் | |
| 14 | 44 | இல்லத்தை | இல்லத்தை. | உரை |
| 15 | 47 | கட்டிடல் | கட்டிடல். | ஷை |
| 16 | 51 | பன்னுமிர்த | பன்னுமிரத | |
| 16 | | கோவிந்தமய்யங்கார் | கோவிந்தய்யங்கார் | |
| 1748 | 53 | பலகை; பலகை. | பலகை; பல கை. | |
| 17 | | திருவேங்கடத்தைய் யங்கார் | திருவேங்கடத்தையங்கார் | |
| 19 | 59 | லாயர் நிரை | லானுயர் | |
| 20 | 62 | யோர் தேசாச் | யோர்—தேசாச் | |
| 21 | 65 | மாப்பின்ளையை | மாப்பிளையை | |
| 22 | 67 | சிறுவர்க்கரு | சிறுவர்க்கு | உரை |
| 23 | 67 | கேண்மை யென்று | கேண்மையனென்று | |
| 23 | 68 | வாயு-மகன்-ஆகு-மனு மான் | வாயு, மகன், ஆகு, மனு, மான் வாயுமகனுகுமனு யான் | ஷை |
| 25 | | | | உரை |
| 25 | 73 | கண்ணுடி | (கண்ணுடி) | |
| 27 | 74 | புகழ் கருஷ்ண | புகழ்க் கிருஷ்ண | |
| 29 | 79 | சாராவணே | சாராவணே | |
| 29 | 83 | | சந்து-தூது, சாயகம்-பாணம் வசந்தன்—மன்மதன் | உரை |
| 29 | 84 | வென்றுன் | வென்றான் | |
| 30 | 85 | வென்றவன | வென்றவன் | |
| 32 | 91 | நாட்டைக்குறிஞ்சி | நாட்டைகுறிஞ்சி | உரை |
| 32 | 91 | | சீ—ஸ்ரீராகம் | |
| 33 | | சாமிநாதைய்யர் | சாமிநாதையர் | உரை |
| 33 | 94 | இலகும்ப ரமன் | இலகும் பரமன் | |
| 37 | 103 | நின்சிவிகை | மின்சிவிகை | |
| 38 | 106 | கற்ப தரு | கற்பதரு | |
| 40 | 113 | | அலங்கல்—மாலே | |
| 40 | 114 | | உவா—அமாவாசை. சிக்கம்— குடுமி. | உரை |

| பக்கம் எண். | பாடல் எண் | பிழை. | திருத்தம். | ஆதா. |
|---|---|---|---|---|
| 40 | 115 | | வாரணம் தும்பி—யானை, அம்பகம்—கண். | உரை |
| 41 | 117 | அன்பா!—நீ | அன்பா! நீ | |
| 44 | | லெக்ஸிகன் ஆபீஸரும் | லெக்ஸிகன் பதிப்பாசிரியரும் | |
| 44 | | வையாபுப்பிள்ளை | வையாபுரிப்பிள்ளை | |
| 48 | 136 | மாறனை | மாரனை | |
| 48 | 139 | உமாதவன்—மாதவன் நடராஜன்-கோவிந்தராஜன் | உமாதவன்-நடராஜன்; மாதவன்-கோவிந்தராஜன் | உரை |
| 51 | 149 | மூன் | மூன்று | உரை |
| 54 | 160 | அன்ஞன் | அந்நான் | |
| 56 | 162 | நீறை | நிறை | |
| 60 | 176 | புலவீரினத்தும் | புலவீரிதைநும் | |
| 61 | 181 | விருத்தியக்ஷமான | விருத்திக்ஷயமான | உரை |
| 62 | 183 | மா—சிலை காண்டீபம் | மாசிலை-பெரியவில் காண்டீவம் | உரை |
| 62 | | | | |
| 63 | 183 | | பல அலவன்-பலநண்டு. அலவலவன்—பலராமன் | உரை |
| 63 | 186 | | வேந்தன்—சந்திரன் | உரை |
| 65 | 197 | வர்ணித்தல் | வர்ணித்தல் | |
| | | | மித்திரன் வெய்யவன் } சூரியன். | உரை |
| | | | சசி—சந்திரன் | |

குறிப்பு:— 189-ம் செய்யுள் "அந்தப்புர" என்றது முதல் 193-ம் செய்யுள் "தனுவோடி" என்ற செய்யுள் முடிய 179-ம் செய்யுளின் தொடர்ச்சியாக வாசித்துக் கொள்க.



அபிநவ காளமேகம்



ஸ்ரீ அநந்தகிருஷ்ணையங்கார்.

ஸ்ரீ

திருஞான முத்திரை துணை.



# தனிப்பா மஞ்சரி.



## காப்பு.

காளமேகப்பேர்க் கவிஞனெனப் பாமொழிய
நாளமே கப்பேர் நளினவுன்றன்—தாளைத்
துதித்தேன்; குருகைச் சுடரே!பா மாறா!
உதித்தருள்வா யென்றனுளத்து.

## திருமகளுக்கும், திருமணப்பந்தருக்கும் சிலேடை.

1 மாலையுற லாலதிக மாதருள வால்நயமா
வேலைபெற லாற்பூவில் மேவுதலால்—சோல
மணத்தார் புனையும் வகுளா பரணா!
மணப்பந்த ராம்பூ மகள்.

குறிப்புரை:– மாலை—பூமாலை; திருமாலை. மாதர்—அழகு-ஸ்திரீகள்.
வேலை-கடல்; வேலைப்பாடு.

## திருமகளுக்கும், பார்வதிக்கும்.

2 ஆரு மலைமகளென் றஞ்சக் கரன்கொளலாற்
பேருலகி லஞ்சம்பு பெற்றவேள்—சேரிசைந்
தன்னையெனப் போற்றுகையா லாரியனே! பார்வதியும்
பொன்னவளு மொன்றெனவே போற்று.

ஆரும் அலைமகள்—இலக்குமி; ஆரும் மலைமகள்-பார்வதி.
அம்சக்கரன்-அழகிய சக்கராயுதத்தையுடையவன்.
அஞ்சு அக்கரன்-பஞ்சாட்சரன்.
அஞ்சு அம்பு பெற்றவேள்-பஞ்சபாண முள்ளமன்மதன்.
அம்சம்பு பெற்றவேள்-அழகிய சிவபெருமான்பெற்ற சுப்பிரமணியர்.

## திருமாலுக்கும், தாமரைப்பூவுக்கும்

3 தண்டுறலால் மாவாசஞ் சாருதலால் மித்திரனைக்
கண்டுமகிழ்ந் தங்குளத்திற் காணலால்—ஒண்டொடிசேர்
செய்யவளுக் குப்பதியாச் சேர்ந்திடலால், தாமரையைச்
செய்யதிரு மாலெனவே செப்பு.

தண்டு-கதாயுதம்; தாமரைத்தண்டு. மாவாசம்-அழகிய வஸ்திரம்; மிக்க வாசனை. மித்திரன்—அன்பனாகிய தாசன்; சூரியன். அங்கு உளம்; அம்குளம். பதி—நாயகன்; இருப்பிடம்.

## திருமாலுக்கும், தேங்காய்க்கும்

4 பாலுறலா லங்கோடு பற்றுதலா லிங்கேபெய்
காலமுமே யுள்ளீரம் காணலால்—ஞாலமதில்
கல்லுக் குடைகொளலாற் கண்ணனையே தேங்காயாய்
எல்லோர்க்கு மாரு! இயம்பு.

பால் உறல்—பாற்கடலில் சேர்தல்; தேங்காய்ப்பால். அம்கோடு—அழகிய சங்கு; அந்த ஓடு. ஈரம்—அன்பு; குளிர்ச்சி. கல்லுக்குடைகொளலால்—கோவர்த்தன மலையைக் குடையாய் எடுத்தலால்; கல்லுக்கு உடைகொளலால். எல்—சூரியன்.

## இராமனுக்கும், கிருஷ்ணனுக்கும்,

5. அம்மானை வென்றவரா யாதவகு லோத்தமராய்ச்
செம்மா ருதிக்குதவி செய்தவராய்—சும்மாமுன்
கானத்து வந்தவராய்க் காசினியில் தோன்றியமால்
ஞானத்தை யீவான் கனி.

அம்மானை—அழகிய மான்வடிவமான மாரீசனை; மாதுலனான கஞ்சனை. ஆதவகுலம்-யாதவகுலம். மாருதி—வாயுகுமாரனான அனுமான் வீமன். கானத்து வந்தவர்—காட்டில் வந்தவர்; வேணு கானத்தில் சந்தோஷித்தவர்.

## வீணைக்கும், விநாயகருக்கும்

6. சாற்றுங் கடமுறலால் தந்திமுகங்கொளலால்
தோற்றிடவே யாகுமிசை தோய்ந்திடலால்—ஏற்ற
மணம்பதியுஞ் செய்ய மகிழ்மாலை மார்பா!
கணபதியே வீணைநிகர் காண்.

கடம்—குடம்; மதஜலம். தந்திமுகம்—தந்திக்கம்பி பொருந்துமுகம்; ஆனைமுகம். ஆகுமிசை—ஆகும் இசை; (வாகனமாகிய) பெச்சாளியின் மேல்.

கந்தனுக்கும், பரமசிவனுக்கும்

7. செந்திலையே மேவுதலால் சீர்ப்பணியைப் பூணுகையால்
சந்ததமுங் கங்கா சலமுறலால்—எந்த
இடத்துமலை வில்லானென் றேத்துகையாற் பெண்ணை
இடத்திலுளான் கந்தற் கிணை.

செந்திலை-செந்தில் நகரை; செம் தில்லை-அழகிய தில்லையை. பணி-ஆபரணம்; பாம்பு கங்காசலம்-(கங்க அசலம்) கழுகுமலை; கங்கைநீர். மலைவில்லான்-மலைவு இல்லாதவன்; மேருமலையை வில்லாக உடையவன். இடத்தில்-இடது பாகத்தில்.

சந்தனுக்கும், பச்சைமிளகாய்க்கும்

8. பார்க்கவிதை யுட்கொளலாற் பண்பா முன்னுதுகையால்
தீர்க்க வரைபடவே செய்திடலால்—ஆர்க்குமெழிற்
சந்தையிலு மேவுகையாற் சாருதலா லாங்காரம்
கந்தனிகர் பச்சைமிள காய்.

பார்க்கவிதை—பாரில் [பக்தர்கள் பாடும்] கவிதை; பார்க்க விதை. முன்னுலுகை—பன்னிருகை; (செடி) முன் தொங்குகை. தீர்க்கவரை படவே—பெரியகிரௌஞ்சகிரிபடவே; தீர்க்க அரைபடவே. சந்தையிலும்-சந்து (சந்தனம்) ஐயிலும் [வேலும்]; வியாபார ஸ்தலத்திலும். ஆங்கு ஆரம்; ஆம்காரம்.

நரசிங்கமூர்த்திக்கும், பரமசிவனுக்கும்

9. அங்கனகனைக்கொலலா லஞ்சுமுக மார்ந்திடலால்
தங்கமணித் தாணுவிலே தோய்ந்திடலால்—கொங்குகமழ்
தாளரவிந் தத்திருநந் தாழ்ந்தோர்க் கருள்மாறு!
ஆளரியைப் போன்றா னரன்.

அங்கனகனை-அழகிய இரணியனை; அங்கு அனகனை [அனங்கனை]. அஞ்சுமுகம்-பயப்படும் படியான முகம்; ஐம்முகம். தாணு-தூண்; மலை-(கைலைமலை).

செக்குக்கும், பரமசிவனுக்கும்,

10. ஆடுதலா லப்போ தரவம் படிந்திடலால்
மாடுளதாற் செட்டி மருங்குறலால்—நாடதனில்
மிக்க கனமுறலால் மேன்மைவது ளாபரனு!
செக்குநிக ராகுன் சிவன்.

அப்போது அரவம் படிந்திடலால்-ஆடும் போது சத்தம் உண்டாதலால்; அ புஷ்பத்தையும சர்ப்பத்தையும் அணிதலால். மாடு-செக்கான்காளை; ரிஷபம். (வாகனம்). கனம்-பாரம்; மேன்மை.

## சேக்குக்கும், சங்குக்கும்

11. *சத்த மிடலால் தருமலைநின் றேவரலால்*
*சுத்தவெண்மை யாயதிலே தோன்றிடலால்—நித்தமுமே*
*வாணியனை நேருதலால் வாய்ந்த பெருஞ் செக்கினுக்கு*
*நீணிலத்திற் சங்கே நிகர்.*

*தருமலை நின்றேவரலால்—மலையிலிருந்து வருதலால். அலைநின்று—கடலிலிருந்து வருதலால்; சுத்த எள் மையாய் (மை, மசிதல்); சுத்த வெண்மையாய். வாணியனை நேருதல்—எண்ணெய் விற்கும் செட்டியைப் பொருந்துதல்; நிறத்தால் சரஸ்வதியாகிய அன்னையை ஒத்தல்.*

## ஜவுளிக்கடைக்கும், பரமசிவனுக்கும்

12. *பலவம் பரத்தினையே பார்ப்பவர்க்கு நல்கி*
*பலவிலையன் றேரிடவே பற்றி—நலமருவுஞ்*
*செய்யமதி மானவிடஞ் சேர்ந்திடலாற் சங்கரனைத்*
*துய்யசவு ளிக்கடையாச் சொல்.*

*பல அம்பரத்தினை—பல வஸ்திரங்களை; பிரயோஜனமான அழகிய முத்தியை. பார்ப்பவர்க்கு—காண்போருக்கு; பூமியில் ஸம்ஸாரிகளுக்கு. பலவிலை—வேறுபாடான கிரயம்; பழங்களும் பச்சிலைகளும். மதிமான் அவிடம்சேர்ந்திடலால்—புத்திமான் அந்த இடத்தில்இருத்தலால்; சந்திரன் மான் விஷம் [நீலகண்டம்] சேர்ந்திருத்தலால்.*

## வயலுக்கும், குயிலுக்கும்.

13 *அங்கங்க றுப்பா லறுமா விலைகொளலால்*
*எங்கெங்குஞ் சத்த மிடுகையால்—கங்குல் பகல்*
*காக்கையினு லேவளரக் காணலால் மாறு! நல்*
*வாக்குக் குயிலாம் வயல்*

*அங்கு அங்கு அறுப்பு; அங்கம் கறுப்பு. மா விலை மா இலை. சத்தம்—அறுப்புக்கூலி; சப்தம்; காக்கையினுல்—காத்தலினுல்; காக மெனும் பறவையால்.*

### கருடனுக்கும், திருடனுக்கும்.

14 எப்பணியுந் தூக்குதலா லென்றுஞ் சிறைபுறலால்
இப்புவியோர் முன்பாவி யென்பதனால்—செப்புபுகழ்ச்
சக்கிரிபாற் கைகூப்பித் தாழ்ந்திடலால் நாவிநா!
தக்ககரு டன்திருடன் தான்.

பணி—பாம்பு; ஆபரணம். சிறை—இறகு; சிறைச்சாலை. முன்பாவி
வீ—பட்சி; முன் பாவி. சக்கிரி—விஷ்ணு; அரசன்.

### ஆனைக்கும், பூனைக்கும்.

15 பன்னகங்க ளிற்பிறந்து பாரிலமர் வாயிருந்து
முன்னங் கெலித்தலையுண் மூட்டுதலால்—இன்னிரசத்
தேனனைய பாவாந் திருவாய் மொழிபகர்ந்தோய்!
ஆனைநிகர் பூனை யறி.

பன்னகங்களில்—பல்நகங்களில் (பல மலைகளில்,) பன்னு அகங்
களில். அமர்வாய்—யுத்தத்தில்; அமரிக்கையாய். கெலித்தலை—
ஜெயித்தலை; முன் அங்கு எலித்தலை.

### வேம்புக்கும், ஸ்டாம்புக்கும்.

16 மிக்க விலைபெறலால் வெண்டரையு மேவுதலால்
தக்க வரசுத் தலைபுறலாற்—பக்கமதாய்ப்
பத்தர் பணியும் பராங்குசனே! அச்சுமுகர்ப்
பத்திரமே வேப்பமரம் பார்.

மிக்க இலை; மிக்கவிலை. வெண் தரை; ஸ்டாம்புவெண்டரை.
அரசுத்தலை—அரசமரத்தினிடத்து; ராஜாவின்தலை. (வேம்பையும்
அரசையும் ஒன்றாக வளர்த்தல்மரபு)

### துட்டனுக்கும், சிட்டனுக்கும்

17 இவனல்ல யோக்கியனென் றெல்லாருஞ் சொல்வார்
அவனியிற்பே ராசை யகலும்—நவமாப்
பாத்தையகம் நாடுதலால் பராமரா! நல்ல
நாற்து நிகர் பொல்லா நரன்.

இவன் அல்ல; இவன் நல்ல. அகலும்—அதிகரிக்கும்; நீங்கும்.
பாத்தை அகம்—வேசை வீடு; மேலானதை மனம்.

## பாலுக்கும், மாலுக்கும்

18 வாய்ந்தமடு மேவிடலான் மாதுரிய மேவுறலால்
ஏய்ந்திடுநல் லாடை யிசைந்திடலால்—தோய்ந்தவெழில்
யாத்திரமுட் கொண்டிரதம் பற்றிடலா லெல்லாரும்
ஏத்திடுமால் பாலுக் கிணை.

மடு—பசுவின்மடி; காளியன்குளம். மாதுரியம்—இனிப்பு; மூத்திநிலை. நல் ஆடை—பால் ஆடை; நல்ல வஸ்திரம் (பீதாம்பரம்). பாத்திரம் உட்கொண்டு; பா—(ஆழ்வாராதிகள்) பாடல், ஸ்திரம் உட்கொண்டு. இரதம்—இரசம்; தேர் (அர்ச்சுனன் தேர்).

## ஓலைக்கும், சேலைக்கும்

19 தாலமதில் மேவுந் தறித்தலைமுன் கொண்டிடலால்
மேலு மிறப்பினிலும் வேய்ந்திடலால்—சீலமுடன்
நாடாருங் கட்டுதலால் நன்னெசவுச் சேலைகளை
வீடாரு மோலையெனு வீர்.

தாலம்—பனை; பூமி. தறித்தலை — தறிக்கையை; தறியினிடத்தில். இறப்பு—கூரை; மரிப்பு. வேய்ந்திடல்—மூடுதல்; அலங்கரித்தல். நாடாரும்—பனையேறும் ஓர் சாதியாரும்; நாட்டில் யாவரும். கட்டுதல்—வெட்டிக் கட்டுதல்; அரையிற் கட்டுதல்.

## சந்திரனுக்கும், இந்திரனுக்கும்

20 சாப மருவிச் சசியென்று மேவுதலால்
மாபணிபுந் தன்பான் மருவலால்—மாபதஞ்சேர்
தாங்கநல வானை யணுகியே தோன்றிடலால்
திங்களைநேர் தேவேந் திரன்.

சாபம்—குருசாபம்; வில். சசி—சந்திரன்; இந்திராணி. பணி—இராகு வெனும் பாம்பு; ஆபரணம். பதம்—இடம்; கால். [நல]வானை—ஆகாயத்தை; [நல]ஆனை—ஐராவதம்.

### ராசாவுக்கும், கூசாவுக்கும்

21 அண்டு முலோகத்தா லமைச்சும் பயமதைபுட்
கொண்டு கரம்பற்றுங் கொள்கையால்—மண்டும்
தமிழருமே சேர்ந்திடலால் தக்கபுகழ் மாறு!
தமிழராசைப் போன்றது கூசா.

உலோகம்—உலகம்; பஞ்சலோகம். அமைச்சு—மந்திரி; செய்து (அமைத்து). பயம்—பீதி; பால்; ஜலம். கரம்—கப்பம்; கை. தமிழர்—தமிழ்ப் பாஷை பேசுபவர்; ஓர் வகைப்பாத்திரம்.

## ஸ்ரீவைகுண்டம் தாசில்தார்
## ஸ்ரீமான் திருவேங்கடத்தையங்கார் அவர்கள்
## முன்புக்குப் பாடியது.

### கண்டகத்திற்கும் முண்டகத்திற்கும்

22 வாயு முளரியென வண்கான் மருவுதலால்
ஏயு மடுப்புக் கெடுத்திடலால்—தீயவரைத்
தெண்டனையே செய்யுந் திருவேங் கடத்தானே!
கண்டகமே முண்டகமாங் காண்.

வாயுமுள் அரியென, முளரியென—அரி—சத்துரு; முளரி—தாமரை. கான்மருவுதல்—காலில்தைத்தல்; வாசனை சேருதல். அடுப்புக்கு; மடுப்புக்கு. கண்டகம்—முள். முண்டகம்—தாமரை.

### தட்டானுக்கும் முட்டாளுக்கும்

23 படிப்பை யெடுத்திடலால் பாரினகை செய்ய
மடத்தனமு மண்டி வரலால்—வடித்தவெழுத்
தெட்டானைப் போற்று மெழிற்குருகை நாவீறு!
தட்டானுக் கொப்பாமுட் டாள்.

படிப்பை எடுத்திடல்—தங்கமிருக்கும் படிகளுள்ள பையை எடுத்தல்; கல்வியை அடையாதிருத்தல். நகைசெய்ய—ஆபரணம் செய்ய; சிரிக்கும்படி. மடத்தனமும்—மடாதிபதிகளின் பணமும்; மூடத்தன்மையும். எழுத்து எட்டான்—அஷ்டாக்ஷரனை (மஹாவிஷ்ணு).

### திருமகளுக்கும், திருமாலுக்கும், தேருக்கும்

24 அச்சங்கு மேவுதலா லாழிபெற லான்மிகவே
இச்சையலங் கார மிசைந்திடலால்—மெச்சும்
அருமலர்ப் பூஞ்சோலை அமைகுருகூர் வேந்தே!
திருமகள்மா லொப்பாகுந் தேர்.

அ சங்கு—வளையல்; சங்காயுதம். அச்சு அங்கு. ஆழி பெறல்—சமுத்திரம் பெறுதல்; சக்கராயுதம் தரித்தல்; (தேர்) உருளை உடையதாதல். அலங்கு ஆரம்; அலங்காரம்—அழகு; அலங்கரிப்பு.

### திருமாலுக்கும், சிவனுக்கும், பழஞ்சோற்றுக்கும்

25 முன்பானை நாடுதலால் மூதலகோர் கையெடுத்தே
அன்பாக வுள்ளே யமைத்திடலால்—தன்பால்நீர்
மேலுறலால் வண்குருகை வேந்தா! பழஞ்சோறு
மாலரனு மொன்று மதி.

முன்பு ஆனை—கெஜேந்திரம்; இடபத்தை; முன் பானை—பழம்பானை. கையெடுத்தல்—தொழுதல்; கையால் எடுத்தல். தன்பால் நீர்—பாற்கடல்; தன்னிடத்தில் கங்கை; பழஞ்சோற்றில் ஜலம்.

அஞ்சு சிலேடை.

### கொங்கைக்கும், மலைக்கும், சிவனுக்கும், திருமாலுக்கும், நம்மாழ்வார் தங்கப்பல்லக்குக்கும்.

26 பன்னகமேல் மேவுதலால் பற்றிடலால் மாதங்கம்
இந்நிலத்துக் கோடென்று மெய்தலால்—அன்னக்
கொடிசேர் பராங்குசனே! கொங்கைவரை சூலி
நெடியவனின் பல்லக்கு நேர்.

பன்னகம்—பல் நகம்; பலமரம்; பாம்பு; ஆதிசேடன்; பல்லக்கின் மேல் விதானம். மாதங்கம்—மாது அங்கம்; யானை; பார்வதியாகிய மாது; திருமகளாகிய மாது; தங்கப்பூச்சு. கோடு—யானைக்கொம்பு; மரக்கொம்பு; மலைச்சிகரம்; சங்கு; சித்திரரேகை.

## ஊசிக்கும், கோபுரத்துக்கும்.

27 அம்பரத்தை நாடுதலா லாங்கூர்மை சேருதலால்
அம்புவியி னூல்விவர மார்ந்திடலால்—வம்புமகிழ்
மாபுரத்தி லேதிகழு மாறு! நின் னாலயத்துக்
கோபுரத்தை யூசியெனக் கூறு.

அம்பரம்—வஸ்திரம்; ஆகாயம். ஆம் கூர்மை; ஆங்கு ஊர் மை (மை மேகம்). நூல்விவரம்—நூல் செல்லும் துவாரம் (ஊசிக்காது); சிற்பசாஸ்திரமுறைப்படி.

## கொடிமரத்துக்கும், கோபுரத்துக்கும்.

28 ஆடம் பரமேவி யங்கனமு மேற்கொளலால்
ஆடகமே சேர வமைந்திடலால்—நாடும்
அடியவரைக் காக்கு மணிமகிழ் மா! றுவுன்
கொடிமரத்தைக் கோபுரமாக் கொள்.

ஆடம்பரம்—கொடிப்பட்டம் (ஆடு அம்பரம்); பாரிப்பு. அங்கனம்—அன்னப்புள் (அங்கு அனம்); நீருண்ட மேகம் (அம்கனம்). ஆடகம்—தங்கம்; மேடராசி (ஆடு அகம்).

## பாம்புக்கும், கோபுரத்துக்கும்.

29 தேர்ந்தவர்கள் கட்டிடலாற் செய்ய படியதிலே
ஆர்ந்திடலால் வான்மேவி யண்டிடலால்—சேர்ந்தவர்கள்
நல்லபணி யென்கையால் நம்புதுவைக் கோபுரத்தைச்
செல்லுவிடப் பாம்பெனவே செப்பு

கட்டுதல்—தடைகட்டுதல்; கட்டிடமாக்கல். படி—பூமி; (கோபுரப்) படிக்கட்டு. வால்மேவி; வான்மேவி. நல்லபணி—நல்லபாம்பு; நல்லவேலை.

## பாம்புக்கும், சந்திரனுக்கும்.

30 சங்கரனங் கங்கொளலால் தானிலவாய் மேவுதலால்
துங்க விடமருவித் தோன்றிடலாற்—பொங்குபயம்
பெற்றிடலால் நங்கைதவப் பேறே! அமுதகரம்
பற்றுமதிக் கொப்பாம் பணி

அங்கம்—தேகம்; அழகியதலை. நிலவாய்—பூமியில்; நிலவாகி. துங்க விடம்; துங்க இடம். (உயர்ந்தஇடம்) பயம்—பீதி; பாற்கடல். பெற்றிடல்—அடைதல்; பெறுதல்.

### சிவனுக்கும், கடலுக்கும்.

31 வங்கமலை மேவுதலான் மான்மருவிச் சீர்பெறலால்
அங்குமை சேர் வண்ண மமைந்திடலால்—கங்கை
கலந்திடலால் முக்கணற்குக் கார்க்கடலெந் நாளுங்
கலந்திகழ்மார் பா! இணையாங் காண்

வங்கமலை—வெள்ளிமலை; தோணி அலை; மான் மருவி—கையில் மான் பொருந்தி; விஷ்ணு சேர்ந்து. அங்கு உமைசேர்; அங்கு மை சேர் (மை மேகம்; கறுப்புநிறம்). கம் கை கலந்திடல்; கங்கைகலந்திடல்.

### சவளிக்கடைக்கும், கடலுக்கும்.

32 சேலைமிக வேகொளலாற் சீர்முதலை மேவுதலாற்
சாலவுமே சீகாமுஞ் சார்ந்திடலாற்—கோலக்
கசங்கொண் டிடலாற் சவளிக் கடைநீர்
இசையுங் கடலுக் கிணை

சேலை—வஸ்திரம்; மீனை. முதலை-மூலதனத்தை; ஓர் ஜெந்து. சீகரம்—லட்சுமீகாம்; நீர்த்திவலை. கோலக்கசம்—கெஜக்கோல்; அழகான ஆழம்.

### யானைக்கும், கடலுக்கும்.

33 கானு மணி பெற்றுக் கயமென்றும் வாய்ந்திடலால்
நீணிலத்துத் தானையென நேர்ந்திடலால்—சேணிற்
குடமருவு மாடக் குருகூர்வாழ் செல்வா!
கடகரியை யொப்பாங் கடல்

மணி—யானைமணி; இரத்தினம். கயம்—ஆனை; ஆழம். நிலத்துத் தானை—படை; பூமிக்கு வஸ்திரம் (கடல்).

### கோங்கைக்கும், கடலுக்கும்.

34 மாதரங்கஞ் சேருதலால் வண்கலங்கள் மேற்கொளலால்
ஏதமிலாதங்கோல மெய்தலால்—ஓதுங்
கனமுறலா லங்குசத்தைக் கார்க்கடலுக் கொப்பா
மனமதிலே மாறு! மதி

மாதர் அங்கம்; மா தரங்கம் (அலை). கலம்—ஆபரணம்; தோணி. அம் கோலம் (அலங்காரம்); அங்கு ஓலம் (சத்தம்). கனம்—பாரம்; மேகம்.

### கொங்கைக்கும், சீலைக்குடைக்கும்.

35 கையாற் பிடித்திடலாற் காம்புறலால் தையலிடம்
மெய்யாய்த் திகழ்ந்து துணி மேலிடலாற்—செய்யாட்குப்
பங்கயத்தை யொத்த பதிக்குருகை நாவிரு!
கொங்கைநிக ராகுங் குடை

தையலிடம்—மாதரிடம்; தையலுற்ற இடம். மெய்—சரீரம்; நிஜம்.

### கொங்கைக்கும், சாம்பாருக்கும்.

36 காய மருவிக் கனமாப் பருப்பதிலே
வாயு மலிவாசம் மன்னுதலால்—மாயவன்மேல்
தேம்பாகு போன்ற திருவாய் மொழிபகர்ந்தோய்!
சாம்பாரை யொப்பாந் தனம்

காயம்—சரீரம்; பெருங்காயம். பருப்பதில்—பருத்தலில்; அதிலே பருப்பு. மலி வாசம்—நிறைந்த வஸ்திரம்; மல்லியின் வாசனை.

### மத்தளத்துக்கும், மன்மதனுக்கும்.

37 அடிக்குங்கால் நல்லிரத மார்ந்திடலாற் செய்ய
கொடிக்கிணையா வாரணியாக் கொண்டே—மடித்தலைமுன்
மானிடாராற் கொள்ளுகையால் மத்தளத்தை யெஞ்ஞான்றும்
மான்மகனை யொப்பா வழுத்து

அடிக்குங்கால்—அடிக்கும்போது; வீசும் காற்று. இரதம்--இரஸம்; தேர். கொடிக்கிணையாவார் அணியாக்கொண்டு—தோல்வார் நெருக்கமாகக்கொண்டு; மாதரைப் படையாகக்கொண்டு மடித்தலை—மடிமிசை; சாதலை. மானிடாரால்—மனிதரால்; மானை இடத்திலே கொண்ட சிவனால்

### மெத்தைக்கும், மன்மதனுக்கும்.

38 அம்பஞ்சு மேவுதலா லங்கம் படலாலிவ்
வம்புவியி னற்றை யலார்ந்திடலால்—நம்புந்
திருஞான முத்திரைக்கைச் செல்வனே! மெத்தை
திருமால் மகனுந் தெரி.

அம் பஞ்சு; அம்பு அஞ்சு. நல்தையல்-நல்லதையல்; இரதிதேவி.

P. W. D. ஓவர்ஸியர் ஸ்ரீமான் சுப்பராமையரவர்கள் கேள்விக்குப் பதில் (இதுவும் அடுத்த பாடலும்)

### பஞ்சுக்கும், காற்றுக்கும்

39 மெத்தையினு மேவி மிகவாடை யாய்மருவி
சுத்த ககனமதிற் றோன்றிடலால்—நத்திப்
பணவரவாற் கொள்ளுகையாற் பஞ்சுவடகாற்றுக்
கிணையன்றோ? மாறு ! இசை.

மெத்தையில்—பஞ்சணையில்; மேடை வீட்டில். ஆடையாய் வாடையாய். ககனம்—காடு; ஆகாசம். பணவரவால்-பொருள் வரவினால்; படத்தையுடைய பாம்பினால்.

### ரூபாய்க்கும், பேனுவுக்கும்,

40 நல்விருத்திக் கேயு நலனு வுருக்கிடலால்
பல்விதமாச் சீர்மை படிந்திடலால்—கல்வியுளோர்
அத்தமென்றுங் கைக்கொளலால் ஆய்ந்தெழுது கோற்கருவி
சுத்தவெள்ளி நாணயமாச் சொல்.

விருத்திக்கு—அதிகப்படுத்த; தொழிலுக்கு. நலனு உருக்கிடல்—தீயில் நன்றாய் உருக்குதல்; ஸ்டீல்நிப் உருக்கினுல்செய்தல் (நலன் நா உருக்கு இடல்). சீர்மை—சிறப்பு; சிறந்த மை. அத்தம்—பொருள்; கை.

### ஆனைக்கும், வேதத்துக்கும்,

41 மிக்க பொருட்பெறலால் மேலுந் துதிக்கையுடன்
தக்கநல வாரணமாச் சார்ந்திடலால்—பக்கமொடு
பார்ப்பார் பயன்கொளலால் பாரிலிபம் வேதமெனச்
சேர்ப்பா வுரைத்தோனே ! செப்பு.

மிக்கபொருள்—அதிகவிலை; மிகுந்த வேதார்த்தங்கள்.
துதிக்கை—தும்பிக்கை; ஸ்தோத்திரம் செய்தல்.
நல வாரணம்—நல்ல யானை; நல்லவேதம் (ஆரணம்.)
பார்ப்பார்—பேணிப்பார்ப்பவர்; ...

## குதிரைக்கும், வீட்டுக்கும்

42 ஓடிடலாற் கட்டிடமே யுற்றிடலால் மாவென்றும்
நாடிடலால் மேல்மெத்தை நண்ணுதலால்—ஏடவிழும்
தாரார் சடகோபா! தக்கசெல்வர் வீட்டுக்கு
ஏரார் குதிரை இணை.

ஓடிடல்—ஓடுதல்; ஓடுவேய்தல். மா—குதிரை; இலக்குமி. மேல் மெத்தை—சேணம்; மாடி.

இந்நூலாசிரியர் ஒரு சமயம் ஆறுமுகனேரி உப்பளத்திற்கேக நண்பரான ஆப்காரி இன்ஸ்பெக்டர் ஸ்ரீமான் ரெங்கசாமி நாயுடவர்கள் புதுக்காளமேகம் என்று உபசரிக்க, அருகிருந்த ஸப் இன்ஸ்பெக்டர் ஸ்ரீமான் கிருஷ்ணசாமி அய்யரவர்கள் காளமேகம்போலக் கவிசொல்வார் இக்காலத்திலுண்டோவென்று மறுக்க, நாயுடு அவர்கள் இது பெருங்காளமேகமென, ஆனால் இக்கடிகாரத்துக்கும் தோட்டாவுக்கும் சிலேடை சொல்லட்டும் என்று சொன்னவுடனே கூறியது.

## கைக்கடிகாரத்துக்கும், தோட்டாவுக்கும்,

43 அங்கியுள் ளமைந்திடலால் அருமணி கொண்டிடலால்
இங்குபலமுள்ளவரை யெய்திடலால்—எங்கெவரும்
மெய்க்காங்க சாமிமன்னா! மென்மைபெறு கிர்ஷ்ணய்யர்
கைக்கடிகா ரந்தோட்டா காண்.

அங்கியுள் ளமைந்திடல்—சட்டப்பையிலிருத்தல்; உள்ளே தீ அமைந்திடல். அருமணி கொண்டிடல்—பாரும் மணிபார்த்துக்கொள்ளல்; நிறைந்த படைவதுப்பு வைத்திருத்தல் (ஆரும் ஆணி). பல முள் அ (வ்) வரை; பலமுள்ளவரை.

திருச்சி நேட்டிவ் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ஆறுமுக நாயகர் கேள்விக்கு விடை:—

## காவிரியாற்றுக்கும் யோகிகளுக்கும்

44 அங்கங் கருந்தவரை யண்டியுமே வந்திடலால்
எங்கணுமுள் ளாறுகடந் தெய்திடலால்—இங்கெவரும்
கூடகத்தை நீக்குதலாற் கொள்ளிடத்து மேவுதலால்
ஓடு பொன்னி யோகியருக் கொப்பு

அங்கங் கருந்தவரை அண்டியும்—அங்கங்கே குடிக்கவும் மலையை நெருங்கியும்; அவ்வவ்விடங்களிலுள்ள அருமையான தபசிகளைச் சேர்ந்தும், உள் ஆறுகள் தந்து; உள் ஆறு கடந்து (ஆறு—காமக்குரோதாதி உட்பகை ஆறும்). கூடகத்தை—சேர்ந்த பாபத்தை (கூடு அகத்தை); வஞ்சனையை, சேரும் இல்லத்தை கொள்ளிடத்து—கொள்ளிடம் என்னும் கிளை நதியில்; மனம் கொண்ட இடத்தில்.

## கொடிய அதிகாரிக்கும் தீக்கும்.

45 அங்கியென்று மேவிடலால் அண்டினரைக் காய்ந்திடலால்
எங்கணுமே யீரமிலை யென்றிடலால்—சங்கையின்றித்
தேசங் கெடுத்திடலால் தீயவதி காரிகளைத்
தேசிகனே ! தீயெனவே செப்பு

அங்கி—சட்டை; தீ. காய்ந்திடல்—கோபித்தல்; எரித்தல். ஈரம்—அன்பு; குளிர்ச்சி. தேசங்கெடுத்திடல்—தேசத்தைக்கெடுத்தல்; ஒளி வீசுதல் (தேசு அங்கு எடுத்திடல்),

## இட்டலிக்கும் வேசைக்கும்

46 மாடமதிற் சேர்ந்திடலால் மாசசிபோற் காணுதலால்
சூடகங்கொண்டுவிலை தோய்ந்திடலால்—நாடதனிற்
சிட்டரெலா மெச்சவருந் தேவே! நவமான
இட்டலி நல் வேசைக்கிணை

மாடம்-உளுந்து; மேடை. சசி-சந்திரன்; இந்திராணி. சூடகம் கொண்டு-உஷ்ணம் கொண்டு; சூடகம் என்னும் கைவளை அணிந்து. நவமான—புதிதான.

## புகை வண்டிக்கும் வேசைக்கும்

47 சேரவண்டிக் கட்டிடலால் சீராய்ப் பொருள்கொடுத்தோர்
ஆருமே மேலேறி யார்ந்திடலால்—தாரணியில்
ஓட்டமது மேவுதலால் ஊர் வாழ்கணிகையரைக்
கூட்டுபுகை வண்டியெனக் கூறு

சேர் அவன் (அவிடம்) டிக்கட்டு இடல்; சேர அண்டிக் கட்டிடல் ஓட்டமது—அது ஓடுதல்; அதாமது.

## பன்றிக்கும் வேசைக்கும்

48 கட்ட மருந்திடலால் கந்தம் நுகர்ந்திடலால்
திட்டமதாய்க் கோலமென்றும் சேர்ந்திடலால்—சிட்டரிடம்
தென்றிசைக்கோ ணண்டாது தெற்குதித்த மித்திரனே!
பன்றி நிகர் வேசையாம் பார்

கட்ட மருந்திடல்—மலம் தின்னல்; ஆடவரை வசப்படுத்த மருந்து செய்தல். கந்தம் நுகர்ந்திடல்—கிழங்கைத்தின்னுதல்; வாசனை நுகர் தல். கோலம்—பன்றியின் பேர்; அலங்காரம். தெற்கு உதித்த மித்தி ரன்—தென்திசையில் தோன்றின சூரியன். (வகுள பூஷண பாஸ்கரன்) —நம்மாழ்வார்).

## பாம்புக்கும் வேசைக்கும்

49 தந்தவிடம் சேருதலால் தக்கவர் முன் பாடுகையால்
சொந்தமதாப் போகம் கொடுத்திடலால்—அந்தவனை
பற்றுதலால் நல்ல பணங்கொளலால் வேசையரைப்
புற்றரவு கொப்பாப் புகல்.

தந்தவிடம்—பல் விஷம்; (பணம்) கொடுத்த இடம். தக்கவர்முன்பு ஆடுகை; தக்கவர்முன் பாடுகை.

## பனைமரத்துக்கும் பார்வதிக்கும்

50 காதோலை வெட்டுகையால் காண் வயிரஞ் சேருதலால்
மீதாக் குசக்கலச மேவுதலால்—ஆதார
அங்கிக் கணக்க னருங்கரத்தைச் சேர்த்திடலால்
சங்கரியே தாலமரந் தான்.

காது ஓலை—மோதும் ஓலை; காதணி. வயிரம்—மரவைரம்; ஓர் இரத்தினம். குசக்கலசம்—குயவன் செய்கலசம்; குசமாகிய கலசம். அங்கிக்கணக்கன்—சட்டை தரித்த கர்ணன்; தீயான நெற்றிக் கண்ணுள்ள சிவன் (அங்கிக்கண் நக்கன்). கரத்தை—தீர்வையை; கையை.

இந்நூலாசிரியர் அத்தான் ஸ்ரீமான் கோவிந்தமய்யங்கார் கேள்விக்கு விடை:- இதுமுதல் 10 பாடல்கள்

## சூரியனுக்கும் கலவிக்கும்

51 மன்னுமா கத்துறலால் வைகறையிற் சேர்ந்திடலால்
பன்னு மிரதமே பற்றிடலால்—பின்னுமேல்
ஆசைபடிந்திடலால் அத்தை சுதனே! கலவி
தேசிரவிக் கொப்பாந்தெரி.

மன்னு மாகத்து (மாகம் ஆகாசம்); மன்னும் ஆகத்து (ஆகம்—தேகம்). வைகறை—விடியற்காலம்; பள்ளியறை (வைகு அறை). இரதம்—தேர்; இன்பரஸம். மேல் ஆசை—மேல் திசை; அதிக ஆசை.

இது போலுள்ளனவாதலால் 10 பாடல்களும் அச்சில் நிறுத்தப்பட்டன.

*போலீஸ் டிப்டி சூப்பெரின்டென்டு ஸ்ரீமான்*

## R. நாராயணய்யங்கார் கேள்விக்கு விடை.

கலகம்செய் மாதுக்கும், கழுதைக்கும்

52 *கட்டுப்படலா லுட் காழ்படலால் எஞ்ஞான்றும்*
*மட்டில் பெரியமைக்கண் வாய்க்கிடலால்—சிட்டருக்கு*
*நல்லுதவி செய்துவரும் நாராயண நண்பா !*
*சல்லியஞ்செய் மாது கழுதை.*

*காழ்படல்—(நெஞ்சில்) வைரந்தோன்றல்; காழ் காழ் என்று கத்துதல் பெரிய மைக்கண்; பெரியம்மையிடம் (மூதேவி யிடம்).*

ஷை யார் ஒரு சமயம் விருந்து செய்வித்தபோது பாடியது.

53 *இட்டமுடன் நீயெங்கட் கிட்டவிருந் துண்ணவயன்*
*இட்டவிரு கைபோதா தென்றெண்ணி—மட்டில்*
*நலனைநல் லார்க்குச்செய் நாரணனும் நண்ப !*
*பலகை யொடு வீற்றிருந்தோம் பார்.*

*பலகை; பலகை.*

*இது முதல் பாடல்கள் நான்கும், தாசில்தார் ஸ்ரீமான் திருவேங்கடத்தையங்காரவர்கள் கேள்விக்கு விடை:—*

பல்லாரி என்றெடுத்துக் கடப்பை என்று முடித்தது.

54 *பல்லாரியர்கள் பணியும் பராங்குசனைக்*
*கல்லாவென் நெஞ்சே கணமேனும்—பொல்லா*
*அவக்குணத்தை விட்டேநீ யன்பாய்த்தொழுதால்*
*பவக்கடலி னின்று கடப் பை.*

### கடுவாய் என்றெடுத்துப் புலி என்று முடித்தது.

55 கடுவா யரவதனிற் கண்டுயில்வோ ரானா
திடமா தவற்கோர் திருக்காம்—தடமாவில்
ஆடகமாக்கொண்ட வரனார்க்கு நல்லசிரோ
பூடணமே யாமம் புலி.

கடு—விஷம். மாதவனுக்கு ஓர் கண்ணாகும், அம்புலி. பொன் மலையான மகாமேருவை வில்லாகக்கொண்ட சிவபிரானுக்கு அம்புலி தலையாபரணமாக அமைந்துள்ளது.

### சங்கென்றெடுத்துச் சக்கரம் என்று முடித்தது.

56 சங்கணிகைக் கோவியரான் றத்தளிக்க இந்திரனால்
பொங்குமழை முன்னம் பொழியுங்கால்—துங்கமலை
வண்ணக் குடையாக வாய்ந்திடக்காம் பாயதுநங்
கண்ணன் சரோசக் கரம்.

கண்ணனது தாமரைப் பூப்போன்ற கையானது, கோவர்த்தன கிரியைக் குடையாக்க; ஓர் காம்பாயிற்று. சங்கு—வளை.

### சூரங்கணியிலம்மன் கோடையென்று பாடியது.

57 தேசிலங்கை சுட்டதுவுந், தோரசர் கொள்ளுவதும்,
வாசமதா மாந்தர் வசிப்பதுவும்,—ஈசன்
மருங்கி லிருப்பவளும், வான்தருவின் சீரும்,
சூரங்கணியி லம்மன் கொடை.

இலங்கை சுட்டது......குரங்கு
அரசர் கொள்வது......அணி
மாந்தர் வசிப்பது......இல்
ஈசன் மருங்கிலிருப்பவள்......அம்மன்
வான்தருவின் சீர்......கொடை

இது போலுள்ளனவாதலால் 10 பாடல்களும் அச்சில் நிறுத்தப்பட்டன.

*போலீஸ் டிப்டி சூப்பெரின்டென்டு ஸ்ரீமான்*

**R. *நாராயணய்யங்கார் கேள்விக்கு விடை.***

கலகம்செய் மாதுக்கும், கழுதைக்கும்

52 *கட்டுப்படலாலுட் காழ்படலால் எஞ்ஞான்றும்*
*மட்டில் பெரியமைக்கண் வாய்ந்திடலால்—சிட்டருக்கு*
*நல்லுதவி செய்துவரும் நாராயண நண்பா !*
*சல்லியஞ்செய் மாது கழுதை.*

*காழ்படல்—(நெஞ்சில்) வைரந்தோன்றல்; காழ் காழ் என்று கத்துதல் பெரிய மைக்கண்; பெரியம்மையிடம் (மூதேவி யிடம்).*

ஷை யார் ஒரு சமயம் விருந்து செய்வித்தபோது பாடியது.

53 *இட்டமுடன் நீயெங்கட் கிட்டவிருந் தன்னவயன்*
*இட்டவிரு கைபோதா தென்றெண்ணி—மட்டில்*
*நலனோங்கல் லார்க்குச்செய் நாரணனும் நண்ப !*
*பலகை யொடு வீற்றிருந்தோம் பார்.*

*பலகை; பலகை.*

*இது முதல் பாடல்கள் நான்கும், தாசில்தார் ஸ்ரீமான் திருவேங்கடத்தையங்காரவர்கள் கேள்விக்கு விடை:—*

பல்லாரி என்றெடுத்துக் கடப்பை என்று முடித்தது.

54 *பல்லாரியர்கள் பணியும் பராங்குசனைக்*
*கல்லாவென் நெஞ்சே கணமேனும்—பொல்லா*
*அவக்குணத்தை விட்டேநீ யன்பாய்த்தொழுதால்*
*பவக்கடலி னின்று கடப் பை.*

கடுவாய் என்றெடுத்துப் புலி என்று முடித்தது.

55 கடுவா யரவதனிற் கண்டுயில்வோ ரூனு
திடமா தவற்கோர் திருக்காம்—தடமாவில்
ஆடகமாக்கொண்ட வானூர்க்கு நல்லசிரோ
பூடணமே யாமம் புலி.

கடு—விஷம். மாதவனுக்கு ஓர் கண்ணூறும், அம்புலி. பொன் மலையான மகாமேருவை வில்லாகக்கொண்ட சிவபிரானுக்கு அம்புலி தலையாபரணமாக அமைந்துள்ளது.

சங்கென்றெடுத்துச் சக்கரம் என்று முடித்தது.

56 சங்கணிகைக் கோவியரான் தத்தளிக்க இந்திரனால்
பொங்குமழை முன்னம் பொழியுங்கால்—துங்கமலை
வண்ணக் குடையாக வாய்ந்திடக்காம் பாயதுநங்
கண்ணன் சரோசக் கரம்.

கண்ணனது தாமரைப் பூப்போன்ற கையானது, கோவர்த்தன கிரியைக் குடையாக்க; ஓர் காம்பாயிற்று. சங்கு—வளை,

குரங்கணியிலம்மன் கோடையென்று பாடியது.

57 தேசிலங்கை சுட்டதுவுந், தோரசர் கொள்ளுவதும்,
வாசமதா மாந்தர் வசிப்பதுவும்,—ஈசன்
மருங்கி லிருப்பவளும், வான்தருவின் சீரும்,
குரங்கணியி லம்மன் கொடை.

இலங்கை சுட்டது......குரங்கு
அரசர் கொள்வது......அணி
மாந்தர் வசிப்பது......இல்
ஈசன் மருங்கிலிருப்பவள்......அம்மன்
வான்தருவின் சீர்......கொடை

திருச்சியில் 1900-ம்வருஷம் S. P. G. காலேஜ் தலைமைத்
(தமிழ்ப்பண்டிதரா யிருந்த),
ஆ. கா. பிச்சை இபுருஹிம் புலவர் கேள்விக்கு விடை:—
இது முதல் நான்கு பாடல்கள்.

ஸமஸ்தி:— துருக்கனுக்கு ராமன் துணை.

58 பத்தியினால் மண்ணவர்க்குப், பாசத்தால் விண்ணவர்க்குச்
சுத்தகுலந் தோன்றிடலால் துன்னலரைக்—கத்தக்
கருக்கு மிலக்குவற்குக், காண்பரதற் குச்சத்
துருக்கனுக்கு, ராமன் துணை.

துன்னலரைக் கத்தக்கருக்கும் இலக்குவன்—பகைவரைக்கதறும்படிப் பொசுக்கின இலக்குமணன்.

ஸமஸ்தி:— பக்கிரியைக் கண்டாற் பலன்.

59 நிர்த்தயவாய்ச் சோனைமழை நேருங்கா லாயர் நிரை
ஆர்த்தசையு றுதுயரத் தூக்கியகோ—வர்த்தனமாம்
அக்கிரியாற் காத்த அழக னமருமிட
பக்கிரியைக் கண்டாற் பலன்.

இட பக்கிரி—திருமாலிருஞ் சோலைமலை.

ஏழுகம் வரப்பாடுமின் எனப் பாடியது.

60 தீயிற் பொறியின்பேர் தேகத்திற் கேற்றபேர்
வாயுங் கழுகின்பேர் வானின்பேர்—நேயமுடன்
அங்கிலமாம் நன்மொழியில் ஆரையுமே வாவென்னல்
கங்கங்கங் கங்கங்கங் கம்.

| | |
|---|---|
| தீயின்பொறி......கங்கு. | வானின்பேர்......கம் |
| தேகப்பேர்......அங்கம். | இங்கிலீஷில் யாரையும் |
| கழுகின்பேர்......கங்கம். | வா என்றழைத்தல் (Come கம்.) |

ஏழு கம்வரப்பாடியது. (வேறுவிதம்)

61 பாரகமுன் ஈண்ட பரமனகம் சொல்கின்றேன்
ஊரகம் சீர்க் காரகம்கா ஒங்குவனை—நீரகம் தண்
பாடகமில் ஆர்திருமால் பாரியொடு, பாவலவ !
கூடகமென் றேநீ குறி.

பாரகம், பரமனகம், ஊரகம், காரகம், நீரகம், பாடகம், கூடகம், (ஆக ஏழகம்)

ஐந்து துவரப்பாடியது.

62 போசேசா ! சூதாப் பொருந்தும் துதுதுதுது
காசே கருதிடுமிக் காசினியோர் தேசாச்
சிகைக்கணிவார் பாவங்கள் தீர்க்குநல் லோனும்
பகைக்கிடமாம் பூவி லுறும் பார்.

காசினியோர் சிகைக்கணிவார்......போது (பூ)
பாவங்கள் தீர்க்கும்... ... ... சேது
நல்லோன் ... ... ... சாது
பகைக்கிடம் ... ... ... சூது
பூவில் உறும் ... ... ... (பூந்) தாது.

திருவானைக்காவில் 1900—ம்வருஷம் பிரசித்திபெற்றிருந்த
ஞானசித்தரிடம் கற்பதித்த பவித்திரம்
பரிசு பெற்றபோது பாடியது

63 திங்கள் முகஞான சித்தன்பால் வேள்விவளம்
செங்கையிலே சேரெனது சீர்விரலே !—இங்கு
கவித்திறமை செய்தெழுதிக் காட்டியதா லன்றோ
பவித்திரம் நீ பெற்றாய் பயன்.

திருச்சியில் 1900–ம்வருஷம் S. P. G. காலேஜ் தலைமைத்
(தமிழ்ப்பண்டிதரா யிருந்த),
ஆ. கா. பிச்சை இபுறுஹிம் புலவர் கேள்விக்கு விடை;—
இது முதல் நான்கு பாடல்கள்.

ஸமஸ்தி:— துருக்கனுக்கு ராமன்துணை.

58 பத்தியினால் மண்ணவர்க்குப், பாசத்தால் விண்ணவர்க்குச்
சுத்தகுலந் தோன்றிடலால் துன்னலரைக்—கத்தக்
கருக்கு மிலக்குவற்குக், காண்பரதற் குச்சத்
துருக்கனுக்கு, ராமன் துணை.

துன்னலரைக் கத்தக்கருக்கும் இலக்குவன்—பகைவரைக்கதறும்படிப் பொசுக்கின இலக்குமணன்.

ஸமஸ்தி:— பக்கிரியைக் கண்டாற் பலன்.

59 நிர்த்தயவாய்ச் சோனைமழை நேருங்கா லாயர் நிரை
ஆர்த்தசையு றுதுயரத் தூக்கியகோ—வர்த்தனமாம்
அக்கிரியாற் காத்த அழக னமருமிட
பக்கிரியைக் கண்டாற் பலன்.

இடபக்கிரி—திருமாலிருஞ் சோலைமலை.

ஏழுகம் வரப்பாடுமின் எனப் பாடியது.

60 தீயிற் பொறியின்பேர் தேகத்திற் கேற்றபேர்
வாயுங் கழுகின்பேர் வானின்பேர்—நேயமுடன்
அங்கிலமாம் நன்மொழியில் ஆரையுமே வாவென்னல்
கங்கங்கங் கங்கங்கங் கம்.

| | |
|---|---|
| தீயின்பொறி......கங்கு. | வானின்பேர்......கம் |
| தேகப்பேர்......அங்கம். | இங்கிலீஷில் யாரையும் |
| கழுகின்பேர்......கங்கம். | வா என்றழைத்தல் (Come கம்.) |

## ஏழு கம்வரப்பாடியது. (வேறுவிதம்)

61 பாரகமுன் ஈண்ட பரமனகம் சொல்கின்றேன்
ஊரகம் சேர்க் காரகம்கா ஒங்குவள—நீரகம் தண்
பாடகமிவ் வூர்திருமால் பாரியொடு, பாவலவ !
கூடகமென் றேநீ குறி.

பாரகம், பரமனகம், ஊரகம், காரகம், நீரகம், பாடகம், கூடகம், (ஆக ஏழுகம்)

## ஐந்து து வரப்பாடியது.

62 போசேசா ! சூதாப் பொருந்தும் துதுதுதுது
காசே கருதிடுமிக் காசினியோர் தேசாச்
சிகைக்கணிவார் பாவங்கள் தீர்க்குநல் லோனும்
பகைக்கிடமாம் பூவிலுறும் பார்.

காசினியோர் சிகைக்கணிவார்......போது (பூ)
பாவங்கள் தீர்க்கும்... ... ... சேது
நல்லோன் ... ... ... சாது
பகைக்கிடம் ... ... ... சூது
பூவில் உறும் ... ... ... (பூந்) தாது.

## திருவானைக்காவில் 1900–ம்வருஷம் பிரசித்திபெற்றிருந்த ஞானசித்தரிடம் கறபதித்த பவித்திரம் பரிசு பெற்றபோது பாடியது

63 திங்கள் முகஞான சித்தன்பால் வேள்விளாம்
செங்கையிலே சேரெனது சீர்விரலே !—இங்கு
கவித்திறமை செய்தெழுதிக் காட்டியதா லன்றோ
பவித்திரம் நீ பெற்றாய் பயன்.

ஷை ஞானசித்தருடன் அகிலாண்டேசுவரி ஸந்நிதிக்குச் சென்றபோது பாடிய

கலித்துறை.

64 அஞ்சொற் கவிசொல நங்காள மேகற் கருள் புரிந்தாய்
தஞ்சமெனு மடியேற்கு மவ்வாறு தயவுசெய்வாய்
கஞ்சந்தனி னின்று நற்றேன் பெருகு கழனியிலே
அஞ்சந் துயிலுந் திருவானைக்கா நகரம்பிகையே!

திருச்சியில் (1900-ம்வருஷத்தில்) ஓரிடத்தில் ஒரு விபரீதச்செய்கை நடந்ததைப்பற்றி சில நண்பருடன் பேசிக்கொண்டிருந்தபோது

பாடிய விருத்தம்.

65 காரனைய மேனியுறு மாமனுரைக்
காதலுடன் வில்லிபுத்தூர்க் கோதை சேர்ந்தாள்
ஆரமணி காந்திமதி, நெல்லை வாழும்
அப்பனையும் வள்ளி குமாரனையுஞ் சேர்ந்தாள்
பேரிரதி மாப்பிள்ளையைச் சேர்ந்தாள் வாணி
பிதாமகனைச் சேர்ந்தணைந்தா ளிவற்றாலிந்நாள்
நாரியர்கள் கலிகாலத்தியல்பாச் செய்யும்
நடத்தைகளைக் குற்றமெனல் ஞாயமாமோ?

மாமனுரை நெல்லையப்பனை; குமாரனை (முருகனை); மாப்பிள்ளை—இலக்ஷ்மியின் மகனான மன்மதனை. பிதாமகன்—பிரமன். வாணி—ஸரஸ்வதி.



சென்னையிலிருந்து, ஓர் சுந்தரி கஜவாதமுள்ள (பெருங்கால்) தம் கணவருடன் ஸ்ரீரங்கத்துக்கு வந்ததைக்கண்டு பாடிய கலித்துறை.

66 ஓதப்புடுக்குறும் பித்தனையேநம் முமையவளும்
நீதில் படியளக்கும் பெருங்காலனைச் செய்யவளும்
சீதள நீர்க்கர வேதனை வாணியும் சேர்ந்திருந்தால்
மேதினி வாழ்மடவாரை யெவ்வாறு விதிவிடுமே ?

ஓது அப்பு உடுக்கு உறும்பித்தனை—கங்கைநீர், உடுக்கு உள்ள பரமசிவனை. படி அளக்கும் பெருங்காலன்—பூமியை அளந்த திருவிக்கிரமனான நெடியோனை. சீதளநீர்க்கரவேதனை—குளிர்ந்த (குண்டிகை) நீரைக்கையிலுடைய பிரமனை.

திரிசிரபுரம் S. P. G. காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர் ஆ. கா பிச்சை யிபுறுகிம் புலவர் தமது கடனிவிர்த்திக்காக ஆசிரியரைத் தமது இஷ்ட தெய்வத்தின்பேரில் ஓர் கவி பாடும்படி கேட்டுக் கொண்டதற்கிணங்கிப் பாடியது.

## ஆசிரிய விருத்தம்.

67 சீர்மேவு வெண்டிங்கள் சாளரத் தோடுலவு
சிகரமணி மாட நீடு
திரிசிர புரத்துனது சரிதமதை யென்றுமே
சிறுவர்க் கருமருள் செய்தகையோன்
ஏர்மேவு நின்னடித் தாமரையை ஏத்துமடி
யேங்கட்கு மிக்க நண்பன்
ஈடிலா மகமதியன் நாடியே வந்தவர்க்
கேற்றகலை நல்குதாரன்
பேர்மேவு பிச்சை யிபுறுகிமெனு நாவலன்
பேறுபெறு மாணி கடறுாற்
பேதாறு வண்ணங் கடைக்கணித் தன்னுான்
பெருஞ்செல்வ னாக வருள்வாய்

பார்மீதி லேபயக் கடனின்று வெளிவந்து
பைம்பொழிற் றிருவரங்கப்
பதிமேவு பதிமார்பு பதிவாகவே யிலகு
பங்கயச் செல்வி யன்னையே!

உனது சரிதம்—தேவ ஸ்திரீகள் சிறை மீட்டத் தான்சிறையிருந்தவளாகிய உனது ஏற்றஞ்சொல்லும் இராமாயணம். கலை—வித்தை; வஸ்திரம். (சவளிக்கடையுடையவர்) பயக்கடல் நின்று—பாற்கடல் நின்று; பீதிக்கிடமான கடன் நின்று வெளிவந்தவள். திருவரங்கப்பதி—ஸ்ரீரெங்கம் என்னும் திருப்பதியில். பதிமார்பு—பர்த்தாவின் மார்பில் செல்வி—பணக்காரி—அன்னை லோகமாதா—குற்றம் பிரஜைகளிடத்திற் பாராட்டாது பொறுக்கத்தக்கவள் ஒரு மாதத்திற் கடன் நிவிர்த்தியாய் ஆசிரியரை ஆவிநேர்கேண்மை யென்றும் அன்பனென்றும் சாற்றுக்கவிகளில் சொல்லியிருக்கிறார்.

வேம்பத்தூர் சிலேடைப்புலி ஸ்ரீமான் பிச்சுவையரவர்கள் ஆசிரியரைப் பார்க்கத் தென்திருப்பேரையில் வந்திருக்கும்போது (வாயுமகனாகுமனுமான்) என்று ஈற்றடியைச் சொல்லப்

பூர்த்திசெய்த வெண்பா.

68 செந்தழற்கு மித்திரனுந் தேடுபொருட் சுற்றவனுந்
தந்திமுகனேறுவதுந் சார்நீதி—தந்தவனுந்
தாயுமைகோன் பற்றியதுந் தாசரதி தூதுவனும்
வாயுமக னாகுமனு மான்

வாயு—மகன். ஆகு—மனுமான். வாயுமகன்—ஆகும் அனுமான்.

ஷை யார் (மால்வாகனம் நன்மயில்) எனப்பூர்த்திசெய்த
வெண்பா.

69 கோவர்த்தனத்தைக் குடையாய்ப் பிடித்ததுவும்
ஆவலுடன் நாமகள்கோ னண்டுவதும்—மாவலிமை
வேல்வலவ னேறுவதும் வெம்பணியின் சத்துருவும்
மால்வா கனம்நன் மயில்

மால்வாகு—அனம் (அன்னப்புள்) நன் மயில். பணியின் சத்துரு—மால் வாகனம். (கருடன்) மயில்.

ஷெடி பிச்சுவையரவர்களின் குமாரர் மஹாதேவையர் வேண்டுகோளுக்கிணங்கி ஓர் சமயம் பாடியது.

70 பூதேவன் மிக்க பொருட்பாகிற் கேமொழியிம்
மாதேவன் கொண்ட கடன் வட்டியுடன்—மாதேவன்
மைந்தா ! திருச்செந்தூர் வாழ்செட்டீ ! தீர்த்திறுத்தல்
கந்தா நினக்கே கடன்

ஓர சமயம் ஆசிரியரும், அவர் அத்தானும் கருணைகிழங்கு சேனைக்கிழங்கு வாங்கியதில் ஆசிரியரின் ஒரு சேனையை அத்தான் மறைத்து வைத்தபோது பாடியது.

71 திருவனை வென் னத்தை திருமகனே ! யுன்பாற்
கருணை மிகுத்திருக்கக் கண்டுந்—திருவருள்சேர்
நீதானே தந்திரியா நேர்ந்தெனது சேனையையேன்

மதுரை டெக்னிக்கல் ஸ்கூலில் ஒரு சமயம் ஒரு கூட்டத்தார் ஆசிரியரின் சிலேடைகளைக் கேட்டபின் கூடவந்த அத்தானை யாரெனக் கேட்கும்போது

பாடிய விருத்தம்.

72 நல்லதோர் குடும்பன் யார்க்கும் நாவிதனின்சொற்றட்டான்
புல்லர்களிடத்தில் நாடான் பொருந்திய விடையன் மேலோர்
சொல்லுநற் கவிக்கு நெஞ்சத் துருக்கனித் தாணித்தேவன்
இல்லுறு மெனக்கத்தானு மிசைந்தன னறிமின்னீரே

குடும்பன்–நல்ல குடும்பத்தைச்சேர்ந்தவன்; ஓர் தாழ்ந்த ஜாதி. நாவிதன்–நாவில் இதமுடையவன்; அம்பட்டன். பொருந்திய விடையன்–கேள்விக்குத்தக்க விடையளிப்பவன்; ஓர் ஜாதி. நெஞ்சத்து உருக்கன்–துருக்கன். தாணித்தேவன்–பூசான்; ஓர் ஜாதி.

## பெருங்குளம் ஜலதரங்கம் அப்பாத்துரை அய்யங்கார் விருப்பப்படி அத்தானுக்கு வேடிக்கையாய்ப் பாடிய வெண்பா.

73 ஒருபாட்டில் தேனமைத்தே னுன்றனக்கா லின்று
வருபாட்டை நோக்கத்தை மைந்தா!—குருபாதம்
வந்தித்தேன் உய்ந்தேன் மகிழ்ந்தேன் உனைப்போலச்
சிந்தித்தேன் மாறன் பாத் தேன்.

ஒரு பாட்டில்—ஒரு கவியில்; கண்ணாடி பாட்டிலில். வருபாட்டை—வரு கவியை; வரும்பாதையை. தேனெனும் சொற்கள் அமைந்திருத்தல்.

## கொழுமடை யென்னும் ஊரிலிருந்து வந்து கர்ணம் வேலைபார்த்து வந்த ஒருவன் ஆசிரியருக்கு நீதியின்றி சிவாய்மா ஏற்படுத்த அதற்காக ஸ்ரீவைகுண்டம் தாசில்தார் ஸ்ரீமான் கிருஷ்ணய்யரவர்களிடம் கூறியது.

74 தென்பேரை யூரிற் சிவாய்மா நீதியின்றி
யென்பாற் கொழுமடைய னீந்தனனால்—துன்போற்
புவிராயர்க் கல்லாற் புகழ்கிருஷ்ணா மன்னா!
கவிராயர்க் கேற்றதோ? காண்.

சிவாய்மா—(சிப்பாய்) மா—யானை: குதிரை. தெண்டத்தீர்வைக்கு உரியது.

## ஓர் நண்பர் மதுரைத் தமிழ்ச்சங்கத்தா ரொரு வருஷத்திய பேப்பரைக் காண்பித்து அதிலிருந்த (கரத்தாற் கடந்தார்கடல்) என்னும் ஈற்றடியை வைத்துப் பூர்த்தி செய்யவேணுமென்றபோது பாடிய வெண்பாக்கள்.

75 அலைமருவு நீரருந்து மம்பிருந்துங் கானில்
அலையுங் கவிக்குலங்கொண் டந்நாள்—மலைநி
கரத்தா லணைகட்டிக் காண்சீதை நாய
கரத்தாற் கடந்தார் கடல்.

மலை நிகரம்—மலைக்கூட்டம். சீதை நாயகர் அத்தாற் கடந்தார் கடல்.

இதுவுமது.

76 தப்பிதமாஞ் செய்கைச் சமணர் கலைக்கட்டி
அப்பதனிற் கொல்லவினைத் தாழ்த்துங்கால்—அப்பர்
காத்தாற் றெழுதாணைக் கல்மிதப்ப அஞ்சக்
காத்தாற் கடந்தார் கடல்.

கலை (கல்லை.) அப்பு அதனில்—கடல்நீரில். அஞ்சகரத்தால்—அஞ்சு அக்கரம் (பஞ்சாட்சரம்).

பெருங்குளம் ஸ்ரீமான் சுப்பையர், மாயக்கூத்தன், சங்கரன், நாராயணன், மஹாதேவன், இவர்களுடன் பேசிக்கொண்டிருக்கையில் அனைவோர் பேரையும் அமைத்துப்பாட அன்னார் கேள்விக்கிணங்கிப்பாடியது

நாரைவிடுதூது.

77 மாதேசுப் பையாவில் மாயக்கூத் தாடினான்
ஆதாரச் சங்காவ மன்று செய்தான்—போதோடு
நாரா யணற் குளந்தை நாதனெனு மாதேவன்
வாரா னோ? நீயறிந்து வா

மாதே சுப்பையாவு-மிக்க தேசும் விடப்பையுமுடைய காளியனென்னும் பாம்பு. (போரில்) சங்கு அரவம்—சத்தம். நாராய் அணல்-அண்ணல் அண்ணல்-பெருமையுற்ற குளந்தை நாதன் எனும் மாதேவன்—திருக்குளந்தை யென்னுந் திவ்ய தேசமாகிய பெருங்குளத்துக்கு நாதனான மா தேவன்.



கோர்ட்டில் ஒரு சமயம் ஒரு கேஸ் அநீதியாகத் தீர்ப்புச்செய்த பொழுது பாடிய கலித்துறை.

78 கொல்லத்தியையு முனமேழ்வண் ணானையுங் கொன்றகண்ணன்
செல்லக்கரத்திற் சுடராழி நல்வளை சேர்ந்ததுவும்
வில்லடிபட்ட சிவனார் காத்தில் விலங்குற்றதுந்
தொல்லுலகோர்செய் யநியாயத்தீர்ப்புக்குத் தொந்தமன்றே

கொல் அத்தி—யாரையும் கொலைசெய்ய வல்ல கம்ஸனது பட்டத்து யானை (குவலயா பீடம்). எழ்வண் ஆன்—பின்னைப் பிராட்டியைத் திருமணம் செய்வதற்காக மதித்த எழ் விடைகளை (க்கொன்றான்). ஆழிவளை-மோதிரம். காப்பு; சக்கரம் சங்கு. அருச்சுனன் கையால் வில்லடிபட்ட சிவன்—பாசுபதாஸ்திரம் பெறுதற்காகத் தவம்செய்யும்போது வேடரூபியாக வந்த பரமசிவன். விலங்கு—தளை; (மிருகம்) மான். அநியாயத் தீர்ப்புக்கிவை அன்றே தொந்தம்—ஸம்பந்தம்.

ஸ்ரீவைகுண்டம் தாசில்தார் ஸ்ரீமான் தர்மரங்கராஜா அவர்கள் விருந்தாகப் பெருமாள் ஸந்நிதியில் ஆசிரியரும், தமையனாரும், சாப்பிட்டு வந்தபின்ஷையார் முன்னிலையில் பாடிய

விருத்தம்.

79 புங்கவ! தன்மரங்க பூப!நின் னுதவியாலே
பொங்கலில் நாடிக் கோயிற் போந்தனஞ் கடியலங்கல்
தங்குதேன் குழற்பூமாது சார்ா வணையான் றன்னை
யிங்கித வடைச் சொல்லாலே யெத்தியுட்கொண்டோம் யாமே

பொங்கு அலில்—அல்லில். இரவில்; பொங்கலில். கடி—வாசனை அலங்கல்—மாலை. தங்கு தேன்குழல்—வாசனைக் கூந்தலையுடைய, பூமாது-திருமகள்; பூதேவி. தேன்குழல் என்னும் பலகாரம். அவணையான் —அரவணை— சர்க்கரைப்பொங்கல். இங்கித அடைச்சொல்—அடைமொழி (வடை) பெருமாளையும் உட்கொண்டோம் மேற்கண்ட பொங்கல், முதலானவற்றையும் உட்கொண்டோம்.

ஷடி யாரிடம் திருவரங்கச் சிலேடைமாலையை அச்சிட்டுத்தருவதற் காகப்பாடிய வெண்பா.

80 முன்னந் தராவரங்க மூர்த்திக் கொருமாலை
இன்னிரதமென்ன வியம்பினேன்—உன்னி
அருமையுட னத்தை நின்பா லச்சியற்ற வந்தேன்
தருமரங்கன் நீயான தால்

நந்து—சங்கு. அரா—ஆதிசேஷன், இவற்றையுடைய அரங்கமூர்த்திக்கு முன்னம் தரா-கொடுக்காத அரங்கமூர்த்திக்கு. இன்னிரதமென்ன-இரஸ மென்ன; தேரென்ன. அச்சியற்ற (புஸ்தகமாக்க. (தேர் அச்சில்லாவிடில் ஓடாது அச்சு தேருக்கு அவசியம்.) தரும் அரங்கன்—கொடுக்கும் அரங்கன்; தர்மரெங்கன்; அவன் தராவரங்கன்; நீதரும் அரங்கன்.

சென்னைக்கவர்னர் கௌன்ஸலில் முக்கிய அங்கத்தினரான ஸ்ரீமான் சிவஸ்வாமி அய்யரவர்கள் திருச்செந்தூருக்கு விஜயமாகும் போது தென்திருப்பேரையிற் சந்தித்துப் பாடிய

வெண்பா.

81 நான்மூன்று நேத்திரத்தா னான்மூன்று நேத்திரத்தா
னான்மூன்று சேர்ந்தவிரு நற்கரத்தா—னான்மூன்றோ
டைந்தமையு மக்கரத்தா னாலென் சிவசாமிச்
சுந்தர! நிற்கென்றுஞ் சுபம்

நான் மூன்று நேத்திரத்தானால்—முருகனால். மூன்று நேத்திரத்தானால்—பரம்சிவனால். மூன்று சேர்ந்த இருநற்கரத்தானால்—ஐங்கரனால். மூன்றோடு ஐந்தமையும் அக்கரத்தானால் அஷ்டாட்சரனான மஹாவிஷ்ணுவால்-என்றும் சுபம்.



ஓர் நண்பர் கேள்விக்கிணங்கி அம்பட்டனைப்பற்றிச்
சிறப்பித்துப்பாடியது

விருத்தம்.

82 பண்டிதனென்றேகலைதேர் பாவலன் பேருடனம்
பட்டனென்றே கடவுள்தொடு மறையவன்றன் பேரும்
எண்டிசையு நாவிதனென் றெல்லார்க்கு நல்லான்
என்று பொருட்படும் பெயரு, மிசைந்து மெயரிடத்தும்
அண்டியுங்கள் குடிமகனென் றஞ்சாமற்சொல்வான்
அவனிபர் யாரும் பணிய ஒருகுடையாண்டுலகிற்
றெண்டனைசெய் மன்னரையுஞ் சிரங்குனியச்செய்தால்
சிரைக்குந் தொழிலுடையவன் சீருரைக்கவல்லாரெவரே?

இராஜவல்லிபுரம் ஸ்ரீமான் முத்துசாமியாபிள்ளையவர்கள்
(வள்ளல்) தென்திருப்பேரைக்கு வந்திருந்தபோது பாடிய

கலித்துறை.

83 சந்தனந் தென்றனிலவே யிவட்குத் தழலென்பதைச்
சந்தனஞ் சொல்லிவா வில்லைகாண் முத்துசாமி கைக்கஞ்
சந்தனங்கண் மிசைமேவாத தாள்மலர்ச்சாயகவ
சந்தனம் பார்த்துநல் மெய்துலையானதித் தையலுக்கே

சில பெரியதலை நகர்களை யமைத்துப் பாடிய விருத்தம்

தாயிரங்கல்.

84 எழிற்கஞ்சம் போல்விழியா ளுன்றன் காதை
யிங்கோதா வரிகிருஷ்ணா வென்றான் பின்னும்
பழிக்கஞ்சா மதன்மலரம் பம்பா யேவப்
பாரம்மா தஞ்சாவூர் மதிக்குச் சோர்ந்தாள்

கொழுத்தவளித் துளவத்தொங் கற்கத்தாவே!
கூடவிலே இவளுடனே கூடல் செய்வாய்
பழுத்துதிரு நெல்வேலி சிந்தும் பங்கப்
பழனஞ்சூ ழனந்தபுரப் பதியுள்ளானே!

கஞ்சம்—தாமரை: ஓர் ஜில்லா. காதை—சரித்திரம். இங்கு ஓதா—ஓதி. அரி கிர்ஷ்ணு என்றாள். மலர் அம்பம்பாய் எவ. பார்—பாரில். அம்மாது அஞ்சா-அஞ்சி. ஊர்மதிக்கு—நகரும் சந்திரனுக்கு. துளவத்தொங்கல் கத்தாவே. கூடு அலிலே (அல்லில்)—இரவில். கூடல்—சேர்தல். பழுத்து உதிரு நெல் வேலி சிந்தும் பழனம்—வயல். சூழ் அனந்தபுரப் பதியுள்ளானே கூடல் செய்வாய்.

திருவனந்தபுரம் பாடசாலையில் ஆசிரியர் வடமொழி கற்குங்காலத்தில் வலியமேலெழுத்து ஸ்ரீமான் திரவியம் பிள்ளை அவர்களைப் பார்க்கப் போனபோது முதலில் டெயார் குமாரர் லெட்சுமணை பிள்ளையைப் பார்த்தவுடன் (1888-ஆம்) பாடிய

கலித்துறை.

85 ஆடக வாடையுடுத்தோன் றுயிலு மனந்தபுரப்
பாடக சாலையிற் கீர்வாண வித்தை பயிலுகின்றேன்
நாடவருந் தென்றன் மீதினிலே மிகுநட்பு வைப்பாய்
தாடகை வென்றவன றம்பியின் நாமந் தரித்தவனே!

டெ லெட்சுமணபிள்ளையுடன் அவர் தந்தை ஸ்ரீமான் திரவியம் பிள்ளையைப்பார்த்துப் பாடிய

விருத்தம்.

86 உத்தமமா மிவ்வலிய மேலெழுத்தாம்
உத்தியோகத்தை யெளியோர்கட் கீந்தால்
அத்தமெலாம் வஞ்சகமா யபகரிப்பார்
அனுகூலஞ் செய்யார்க ளென்றே நெஞ்சில்

இத்தரணியோர் புகழுங் கோளேந்த்ரன்
எண்ணியே யிவ்வேலைக் கருகனுக
வித்தையுளோர்க் கிட்டமுள திரவியோனை
விதித்தனனே நன்மைபெற வேண்டித்தானே

திருவனந்தபுரம் மஹாராஜா காலேஜில் 2-வது தமிழ்ப்பண்டிதரா யிருந்த வைக்கில் சாமிநாதபிள்ளையவர்கள் சைவக்கழகத்தில் பெரியபுராணம் வாசித்து அர்த்தம் சொல்லும் சொற்பொழிவு கண்டு பாடிய

வெண்பா (1894-வருஷம்)

87 ஓரங் கலவாம லுண்மையாய்ப் பாமருஞ்
சாரங்க பாணி தனையுணரச்—சீரங்கத்
தத்துவத்தைச் சொல்வதற்குச் சாமிநா தன்போல்வார்
இத்தலத்தி யான்கண் டிலன்

சாரங்கம்—மான்; திருமால்வில். சீரங்கத்தத்துவம்—சீரான வேதாங்க உண்மை; ஸ்ரீரங்கத்தின் உண்மைப்பொருளை.

திருவாங்கூர் ஹைக்கோர்ட்டு ஜட்ஜி ஸ்ரீமான் K. G. சேஷய்யர் அவர்கள் லெட்டருக்குப் பதிலெழுதும் லெட்டரில் முதலாவது எழுதிய வெண்பா.

88 சீரியரி லேழுதல்வர் சேர்கரி லேகடையர்
நேருமதி கார நிலைநடுவர்—பாரிவரென்
றோதும் புகழோங்கு முத்தமச்சே டண்ணலின்
பாதந் தொழுதுவிணைப் பம்

கடையம் என்னும் நகர் லெடியாரூர்.



திருவாங்கூரில் போலீஸ் ஸூப்பிரன்டென்டு யாழ்ப்பாணம் ஸ்ரீமான் பொன்னம்பலம் பிள்ளையவர்களிடம் பாடியது
கலித்துறை. (1892–ல்)

89 முன்னம்பல மன்மதனை வெல்வெள்ளி முதுமலையோன்
பொன்னம் பலமு முடையானென் றுரும் புகழ்ந்திடவே
பொன்னம்பல மன்ன! நின்னகந்தன் னிற்பொருந்தினன்மா
சொன்னம்பலநற் புலவோர்க் களிக்குஞ்சு சீலவனே!

திருவனந்தபுரம் போலீஸ் இன்ஸ்பெக்றர் ஸ்ரீமான் சாமி ஐயாவர்கள் முன்புக்கு சில ராகங்களை யமைத்து அடைமொழியின்றிப் பாடிய கலித்துறை (1894–ல்)

90 ஆரபிமோகனம் நீலாம்பபுரி சங்காராபரணம்
பூரிகல்யாணி பிலஹரிதோடி பூபாளமசா
வேரி சௌராஷ்டிர மானந்த பைரவி பாசுகே
தாரபதுளை யடாணு முகாரி நாட்டை கெண்டையே

இதுவுமது வெண்பா.

91 வராளிகலி யாணி மணிரங்கு பந்து
வராளி,கமாசு புன்னாக—வராளிதனி
யாசி, காம் போதி யமுனா கலியாணி
சீ சுருட்டி நாட்டைக் குறிஞ்சி

சில ஊர்களை அமைத்து அடைமொழியின்றிப் பாடியது
வெண்பா.

92 மதுரைதிரு நெல்வேலி மைசூர் கடப்பை
புதுவைசே லங்கோயம் புத்தூர்—மதுராந்
தகம்மலையா ளங்கொச்சி தஞ்சாவூர் டில்லி
துகிலிமுக வைதிருச்செந் தூர்

ஆசியர் சிதம்பரம்போயிருக்கும்போது மீனாட்சி தமிழ்க்காலேஜில் பிரின் ஸிபாலாயிருந்த மஹாமஹோபாத்தியாயர் டாக்டர்-ஸ்ரீமான்-உ. வே. சாமிநாதையரவர்கள் மற்றும் உபாத்தியாயர்களையும் மாணவர்களையுங் கூட்டிவைத்து ஆசிரியர் சிலேடைகள் முதலான பல பாடல்களைக் கேட்பிக்கச்செய்த பிறகு இம்மாணவர்களுக்கு அனுக்கிரஹமாக ஓர் கவி சொல்ல வேண்டுமெனப் பாடிய

**வெண்பா.**

93 வாசித் தலைமருவு மாலருளார்ந் தித்தில்லை
வாசித் தலைமருவு மாணவர்கள்—நேசித்தே
அக்கரையா வாசா னருளாற் கலைக்கடலின்
அக்கரையைக் காண்பா ரறிந்து

வாசித்தலை—குதிரைத்தலை; படித்தலை. (ஹயக்கிரீவ மூர்த்தியாயதிரு மால்) (ஹயக்கிரீவர் உபாஸனையே கல்விக்கு முக்கியம்.)

94 மூவாத கீர்த்தியுள மூன்குடுமி யந்தணரோர்
மூவா யிரவருறு மூதூரில்—தேவா!
பணிமே லிலகும் பரம! நின் றாளைப்
பணியுமடி யேனையுங்கண் பார்.

பணி மேலிலகும்பரமன்—நடராஜன்: பணிமேல்—ஆதிசேஷன் மேல் இலகும்ப ரமன்—கோவிந்தராஜன்.

95 நீண்ட வரவ நெடும் பரியங் கஞ்சாய்ந்து
தாண்ட வங்காண் தில்லைச் சபாபதியே!—மீண்டுமமன்
பாசம் விடுங்கால் பதுமையொடு கோவிந்தா!
பாசம் விடாதெனைக்கண் பார்

பதுமை—இலட்சுமி.



96 கஞ்ச மலர்புரையுங் கண்ணனுங் கண்ணனுடன்
வெஞ்சமர்செய் போதுவெருண் டோடினை நீ—அஞ்சுமுக !
அந்தகனை முன்னுதைத்த வாற்றலுனக் கேற்றந்தான்
சந்தமைந்த தில்லை நடே சா !

அந்தகன்—குருடன்: நமன். பாணாசுர யுத்தத்தில் தாமரைக்கண்ணனுன கண்ணனுடன் போர்புரியும்போது ஓடினை.

அம்பாசமுத்திரம் தீர்த்தபதி ஹைஸ்கூல் தலைமை உபாத்தியாயர் B. A., L. T. ஸ்ரீமான் சதாசிவமய்யரவர்களை ஆசிரியரின் தம்பியும் டை ஸ்கூல் சித்திரப்போதகாசிரியரும் உதவித்தமிழ்ப் பண்டிதருமாகிய S. நம்பி அய்யங்காருடன் பார்க்கப்போன போது பாடிய

## விருத்தம்.

97 வெள்ளரிக்கா யூருணியில் வெகுநாளாயிருந்தும்
மிடித்தாபந் தீராமல் மிகுத்தபுனற்கால் சேர்ந்
துள்ளமையும் பாளையங்கோட்டைப் பதியிற் பலநாள்
உற்றிருந்துங் காணுமற் பெருங்குளத்திற் சிலநாள்
தள்ளியபின் வைகைநதி சார்மானு மதுரை
சார்ந்து மப்பாலிந்த வம்பாசமுத்திரத் தென்தம்பி
தெள்ளுதமிழ் நன்குணர் நின் அன்பினையே நம்பிச்
சேர்ந்தனன் சதாசிவனே ! காத்தலுன்றன் கடனே

மிடித்தாபம் தீர்க்க—வறுமைத் தாபந்தணிக்க. வெள்ளரிக்காய் ஊருணி. வளங்கொண்ட காலமைந்தபாளையங்கோட்டை பெருங்குளம் வைகைநதி வளமுள்ளமானுமதுரை அம்பாசமுத்திரம். அதாவது ஊருணி, கால், குளம், நதி, சமுத்திரம், முறையே நீர் பெருக்குள்ள இடங்கள். மேற்கண்டவை ஒவ்வொரூர்.



ஸ்ரீவானமாமலை மடம் 24-வது பட்டம் சின்னப்பட்டர்பிரான் ஸ்வாமி சந்நிதியில் சால்வைகள் பெற்றவுடன் பாடிய

வெண்பா.

98 இருசால்வை கற்றோர்கட் கீவரோ? வேந்தர்
இருசால்வை யென்பரலா லீங்கு—விரைசாரும்
மட்டவிழ்பூஞ் சோலை வாமங்கை மாநகர்வாழ்
பட்டர்பிரான் மாமுனிபோற் பார்த்து

ஷை மடத்தைப்பற்றிப் பாடியது.

99 பாவலர்கொண் டாடுமடம் பார்ப்பார் புகழுமடம்
சீவரமங் கைக்கிலமாச் சீர்த்தமடம்—மேவச்
சிரமங் களையுமடஞ் செல்வமட மெங்கள்
வரமங்கை யோகி மடம்

100 கவ்வையணு காதமடங் காவலர்கள் நாடுமடம்
எவ்வருணத் தாரு மிறைஞ்சுமடம்—செவ்வைமலர்க்
காமனுற வஞ்சுமடங் காசினியி லேவான
மாமலைவாழ் யோகி மடம்

கவ்வை—பழிச்சொல். மலர்க்காமன்—மலர் அம்புள்ள மன்மதன்.

ஸ்ரீ வதரியாச்சிரமம்வரை உத்தர யாத்திரை செய்து திரும்ப ஊருக்கு எழுந்தருளும்போது ஸ்ரீ வானமாமலைமடம் 25—வது பட்டம் சின்னக்கலியன் ராமானுஜஸ்வாமி ஸந்நிதியில் விண்ணப்பம்

செய்த ஆசிரிய விருத்தம்.

101 சீர்கொண்ட தென்திரு வனந்தபுரமால்தனைச்
சேவித்து மூல நிருபன்
சிரந்துனித் தேத்திடப் 'பேசுமின்'' பாசுரச்
சீர்மையை விளக்கி மாறன்

செப்புமாறன்வினை முதற்பதிகள் தொழுதுமே
சீத யாதவ கிரிதனிற்
சேர்ந்து திருநாரணற்கா வாயுறக்கமில்
தேவர்தொழு வதரிமேவி
ஏர்கொண்ட நாரணன் பாதமா மலர்தன்னை
யிதயமல ரோடிருத்தி
இராமனகர் வடமதுரை நல்விருந்தாவனம்
ஏதமில்செக நாதமும்
எய்தியேதென் கலைக் குரியவடவெல்லையா
யேய்ந்ததிரு வேங்கடத்தில்
எந்தையலர் மேன்மங்கை சிந்தையு மகிழ்ந்திட
இறைஞ்சியே பூதூர்தனிற்
பேர்கொண்ட வெதிராஜ கேசரியை வாழ்த்திப்
பெருங் கோவலூர் வணங்கிப்
பெம்மானரங்கநக ரெம்மானையுந் தொழுது
பிறைதவழு சோலை மலைமேற்
பிறங்குதோளழகனைத் துதிசெய்து புதுவையின்
பெருமையாச் சொன்னவண்ணம்
பெரியதோரக்கார வடிசில் செய்வித்தபின்
பெண்கோதையைப் பணிந்து
கார்கொண்ட முகிலணவு மணிமாட கோபுரக்
கவின்மேவு வாமங்கையிற்
காவலர்கள் நாவலர்கள் கனவான்கள் தனவான்கள்
கைதொழுது வாவேற்கவே
கனகமுறு சிவிகையி லெழுந்தருளி வாமங்கை
காந்தனரு ளார்ந்துபதிசேர்
கலியனெனு முனிவனிரு பதமலர் வணங்குவோங்
கலிநலியு மலியு நலமே.



ஷை ஸ்ரீ ஸ்வாமி ஸந்நிதியில் ஸ்ரீபாத தீர்த்தம் ஸ்வீகரித்தவுடன்

பாடிய வெண்பா.

102 சூரியமுட் கொண்டே குவலயத்தோர் தாள்தைத்த
வீரிய முள்ளை விலக்கிடலால்—பாரதனில்
மாபா தகந்தீர்க்க வாரு சலமுனிவன்
மாபா தகந்தான் மருந்து

மா பாத கம்—ஸ்ரீபாததீர்த்தம்.

ஷை ஸ்ரீஸ்வாமி அவர்கள் 3-வது தடவல் உத்தரயாத்திரையாய் கும்பகோணத்துக்கடுத்த நாதன்கோயி லென்னும்நந்திபுரவிண்ணகரத்தில் எழுந்தருளியிருக்கும்போது விண்ணப்பம் செய்த பாடல்

சந்த விருத்தம்.

103 எந்தமத மண்டினரு நின்சிவிகை கண்டது
மெழுந்துபணி தன்மையமரும்
எந்தைவர மங்கைமுனி சிந்தையொடு வந்துதொழு
மிந்திரையி னண்ண லுறையூர்
கந்தமக ரந்தவர விந்தமது வுண்டளியு
கந்துமல ரன்னகரமேல்
நந்தமரு மங்கையர் குந்தளமடைந்துபுரல்
நந்திபுர விண்ணகரமே.

ஷை ஸ்வாமி ஸந்நிதியில் முன்பெற்ற சால்வை பொட்டு விழுந்ததற்காகப் பாடிய

கலித்துறை.

104 சீரமங்கை கூப்பிக்கலியனைப் போற்றித் திரும்பியயாம்
வாரமங்கையாரிய ! நின் சேவை கண்டு மனமகிழ்க்
தாரமங் கண்ணுயிரம் வேண்டுமென்றென்னைத் தம்பியனுடை
அரைமன்னு சால்வைகண் ணுயிரம்பெற்ற ததிசயமே !

திருவாலி திருநகரி திருமங்கை ஆழ்வார் உத்ஸவத்திற்குப்போய் ஷை ஆழ்வாரான கலியனைப்போற்றித் திரும்பிய யாம்.

மேற்படி பாடலைக் கேட்டுகந்து, உடனே ஓர் புதிய உயர்தரமான சால்வை சாதித்தருளப், பெற்ற வுடன் பாடிய

**வெண்பா.**

105 பார்த்தவுடன், யாருமெனைப் பாவலனென் றெண்ணிடவும்
வார்த்தைசொலு முன்னும் மதிப்பளிக்கும்—பார்த்தோர்
புகழும் வாமங்கைப் புங்கவனும் யோகி
மகிழ்வுடனே தந்தருள்சால் வை

106 கற்ப தருவென்கோ? கடவுட் பசுவென்கோ?
மற்பொருதோள் மாலன்ன மஞ்செஙன்கோ?—விற்பனர்க்கு
வள்ள லெனநல்கு வானு சல முனிபால்
உள்ள வுதாரமதை யோர்ந்து

107 கங்கை சுதனென்கோ ? காற்றின் சுதனென்கோ?
நங்கை சுதனென்கோ ? நல்லவர—மங்கைதனில்
அஞ்சு புலன்றனக்கே யஞ்சுபுல னைச்செய்த
எஞ்சலிலா மாமுனியை யீங்கு

கங்கை சுதன்—பீஷ்மர். காற்றின் சுதன்—அனுமார், நங்கை சுதன்—நம்மாழ்வார்.

ஆழ்வார்திருநகரியில் திருவிசாகத் திருமஞ்சனம் சேவிக்கும்போது பாடிய வெண்பா.

108 அஞ்சுமுக னாறுமுக னைமுகன் மான்மதப்பொட்
டஞ்சுமுகன் சேர்ந்திடு மெவ்வாலயத்தும்—மஞ்சனச்சீர்
செம்மைமகிழ் மாறன் திருவிசா கம்போல
இம்மகியி லெங்கு மிலை

மான் மதம்—கஸ்தூரி. அம் சுமுகன்.



## நம்மாழ்வார் தீர்த்தவாரி மகிமையைப் பாடியது.

109 மாசி விசாகம் வசந்தரிது வாஞ்சீர்வை
காசி விசாகங் கவின்குருகூர்த்—தேசிகனோ
டச்சங்க தீர்த்தநீ ராடுபுனி தர்க்குமிக்கார்
எச்சகத்து மொப்பா ரிலர்

110 முக்கிண்ணித் தீர்த்தருமே மோதிமகிழ் மாறன்முன்
மக்களுடன் மேல்வீழ்ந்து மண்டிமிதிக்—குக்கிரத்தைப்
பார்த்தவர்க ளேன்பழியார்? பாவாடை யன்னமதைப்
பூர்த்திவிகி யோகஞ்செய் போது

போலீஸ் டிப்டி ஸூப்ரண்டு ஸ்ரீமான் R. நாராயணய்யங்காருடன் தெப்ப உத்ஸவம் (1—3—1929–ல்) ஸேவிக்கும்போது பாடியது.

### கலித்துறை.

111 பொருட்டிறத்தாற் றெய்வப் புஷ்பகம்போலப் பொருந்து தெப்பத்
தருட்டிரு நாரணற் காளரய தொண்ட ரகமகிழத்
தெருட்டிற மேறுந் திருவாய் மொழியெனுந் தேனளித்தோன்
இருட்டினு மாதவன்போற் றிகழ்ந்தானிவ் விருட்டினுமே!
இருள்தினும் (தின்னும்) ஆதவன்போல்.

இது முதல் ஐந்துபாடல்கள் ஆசிரியரின் சகோதாரும் நேட்டிவ் டாக்டருமான அ. கிருஷ்ணய்யங்கார் திருச்சியில் 1912–ம்வருஷத்தில் கேட்ட கேள்விக்கு விடை:—

### கடைதலைப்பூட்டு வெண்பா.

112 சீதாற்குத் தோலாடை தீக்காற்குப் பொன்னாடை
மாதவற்குச் செங்கையிலே மான்மழுகங்—காதாற்கு
அத்தமதிற் சங்கமைபு மாயனுக்கு மானமையும்
பித்தாற்குப் பூமாது பெண்டு

பூமாது பெண்டு சீதாற்கு என்று கூட்டிப் பொருள் கொள்க.

## காவேரியில் கல்மிதக்கப்பாடியது

113 குங்குமம்பூ மாலைகனி கொண்டுவந்து நாதருடன்
பொங்குபுனற் காவிரியைப் பூசித்தே—யிங்குதுலா
நன்மதியா மின்றண்ணு! நாரியர் நீ ராடவலங்
கன்மிதந்து போவதுநீ காண்

## அட்டமியில் அமாசை வரப்பாடியது.

114 வட்ட மதியிரவி வாய்கண்ண ளுங்கண்ணன்
சிட்டன் வசுதேவன் சீரகத்தில்—அட்டமியில்
தானவதா ரஞ்செய,வத் தன்மையுணர் சீரியர்கள்
ஏனுரையா ரன்றுவா வென்று?

## இதுவுமது.

வைக்கமதி லட்டமியில் வானவரும், மானவருஞ்
சிக்கம் பிறைசூடு தேவனையே—தக்க
தினகரனை முன்னிட்டுச் சேவித்தா ரந்தத்
தினமதையு வாவென்பேன் தேர்ந்து

ஆகாசத்தில் தாமரை பூக்கப்பாடியது

## கலித்துறை.

115 அப்பாந்தா மரைபூத்தன வென்னு மதிசயங்கேள்
குப்பாநல் வாரணம் மூலமென்றே தனைக்கூப்பிடுங்கால்
தம்பியைக் காக்க விண்புள்ளாரசே றித்துலங்கரியின்
அம்பகம் பாதகரமுக கஞ்சமலர்ந்தனவே



ஓர் நண்பர் கேள்விக்குக் கையிற் கடலடங்கப்பாடியது

### வெண்பா.

116 செந்திற் கடற்கரையிற் சேர்ந்திடுமென் னண்ப! வெனைச்
சந்தித்துக் கேட்டதற்குச் சாற்றுகின்றேன்—சந்ததமும்
மையணுகு சோலை மலயமதில் வாழ்முனிவன்
கையிலடங் கிற்றிக் கடல்

### இதுவுமது.

117 தென்பேரை யூரிற் றிருவாய் மொழித்திருநாள்
அன்பா!—நீ சேவிக்க அண்டுவையேல்—முன்பேநம்
பார்ப்பார் கரத்திற் பலகடலை யாங்கமைப்பப்
பார்ப்பாயக் காலம் பணிந்து

திருநெல்வேலி மாணவர் தமிழ்ச்சங்கக் காரியதரிசி
C. S. இராமலிங்கம்பிள்ளையவர்கள் முன்புக்கு பாடிய

### வெண்பா.

118 கம்பரது வீட்டுக் கட்டுத்தறியும் பாச்சொலுமென்
றிம்பர் மொழித விராமலிங்க !—நம்பு
புலவனெனு மென்பாற் பொருந்திய விப் போர்வை
புலவர்கோ னாகியதிப் போது

புலவர்—வித்வான்கள்; தேவர்கள். புலவர்கோன்—தேவேந்திரன். (ஆயிரங்கண் ணாயிற்று.)



ஷை பிள்ளையவர்கள் ஆசிரியரைப்பார்த்து இன்று தை அமாவாசை ஆனதால் கோயிலில் பத்ரதீபம் பார்க்கப்போவோமென்று ஆசிரியரைப் பார்த்துச் சொன்னபோது பாடியது.

119 நெல்வேலி யூரார்க்கு நித்த மமா வாசையென்றே
சொல்வே னிராமலிங்க தூயகுணச்—செல்வா ! கேள்
கோவூர் திவாகரனைக் கூறுமெழிற் காந்திமதி
ஆவிமெய்போ லென்றுமொன்ற லால்

கோவூர் திவாகரனை—ஆகாசத்தில் நகரும் சூரியனை; கோவூர்தி வாகு அரனை—ரிஷபவாகனனான அழகிய நெல்லை அப்பனை. காந்திமதி—கிரணத் தோடுகூடிய சந்திரன்; காந்திமதி அம்மாள். உடலும் உயிரும் போலச் சேருகையால்; நித்தம் அமாவாசை யென்பேன். (சூரியனும் சந்திரனும். சேருகிறதினம் அமாவாசை,)

ஷை பிள்ளையவர்களுடன் கோயிலுக்குப் போன இடத்தில் பாடியது.

120 மாவிந்தை நெல்லைநகர் வைணவன் வைணவர்க்குக்
கோவிந்த ராஜனெனுங் கோலத்தான்—மேவுந்தம்
நெஞ்சினிலைப் பார்க்கப்ப னீணிலத்தி லேழையராய்த்
தஞ்சமடைந் தார்க்கவன் தாதா

வைணவன்-வேணுவினின்று வந்தவன். (தத்திதாந்தம்) வைணவர்க்கு நெல்லைக்கோவிந்தராஜன். நினைப்பார்க்குநெல்லையப்பன். தஞ்சமடைந் தார்க்கு அவன்தாதா—உதாரன்; பிரமன். மும்மூர்த்தியாகப் பாடியது.



1913-ஆ டிஸம்பரில் நடைபெற்ற திருநெல்வேலி மாணவர் தமிழ்ச் சங்க 3-வது வருஷோத்ஸவத்தில் ஷெயூர் சித்திரப் போதகாசிரியரும் ஆசிரியருக்கு ஆருயிர் நண்பருமான ஸ்ரீமான் தொண்டைமான் முத்தையா அவர்கள் உண்மையைப்பற்றிப் பேசியபோது

பாடிய வெண்பா.

121 உண்மையிலா னென்ற னுயிர்த்துணைவன் முத்தையா
உண்மை விடயமெடுத் தோதினன்—வண்மைமிகு
நெல்லைமா னுக்கரவை நேர்ந்தபெரி யோரமுதாம்
நல்ல மழை யென்ன நயந்து

உண்மையிலான்—உள்கறுப்பில்லாதவன். உண்மையிலான் உண்மையைப்பற்றிப் பேசியது ஆச்சிரியமென்னும் தோற்றம்.

திருநெல்வேலி ஹைக்கோர்ட்டு வக்கீல் ஸ்ரீமான் சாது கணபதி பந்தலு அவர்களோடு நதியில் நிலாவில் பேசிக்கொண்டிருக்கையில் நிலவைப்பற்றி அன்னார் வேண்டுகோளின் பேரில் பாடியது

122 வாதமதா லெந்த வழக்கினையும் வெல்லுமுன்றன்
போதமதா லுண்டாம் புகழினையே—மேதினியோர்
சந்திரிகை யென்றுரைப்பார் சாது கணபதியாம்
சந்திரனே! இச்சொல் தகும்

இதுவுமது

123 மாசனுகா வுன்றன் மதியே மதியென்று
காசினியில் யாருங் கழறுவதை—மாசுமதி
தானுணர்வான் வந்தடைந்தான் சாது கணபதியே!
வானிரவு வாய்ந்துநில வாய்



1929-ம் வருஷத்தில் சென்னைக்கடற்கரையில் லெக்ஸிகன் ஆபீசரும் ஆசிரியருக்கு நண்பருமான திருநெல்வேலி B. A., B. L., வையாபுப் பிள்ளையவர்களோடு உலாவிக்கொண்டிருக்கும் போது கடற்கரையில் பொருத்திய லயிட்டைப் (விளக்கை) பார்த்துப் பாடியது

124 சென்னைக் கடற்கரையிற் சேர்ந்திடுமிம் மின்சாரம்
மின்னியொளி வீசிவ் விளக்கினணி—இந்நிலமின்
மெய்யா மருங்கிலணி மேகலைபோற் காண்பது பார்
வையா புரிமன்ன வா!

கடல் பூமிக்கு வஸ்திரமாகவும் அதன்மேல் திகழ்விளக்கணி ஒட்டியாணம்போற் காண்பது பார்.

திருவானைக்காவில் 2-வது தடவல் பாடிய வெண்பா.

125 ஈண்டரங்கன் தாளே யெதிர்நோக்கு மானைக்காப்
பாண்டரங்க! பித்தனெனப் பாரினுனை—வேண்டியநற்
பாவலருங் கூடப், பகர்ந்திடினு மூர்மெச்சு
நாவலனீ யென்றுரைப்பன் நான்

நாவலன்—வித்துவான்: நாவல் மரத்தடியிலிருப்பவன் (ஜம்புகேச்வரன்) "குடைதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி, துயில்பவன் அரங்கன்" திருவானைக்காச் சிவன்கோயில் மேற்கு நோக்கியிருத்தலால் அரங்கன் திருவடியையே எதிர் நோக்கல். "பித்தாபிறைசூட" என்றனர்; சமயக்குரவர்.

திரிசிரபுரம் உச்சிப்பிள்ளையார் பேரில் விருத்தம்.

126 தேங்கமழ் மலர்ப்பூஞ் சோலைத் திரசிரபுரவெற்புச்சி
ஈங்கமை நன்மதஞ்சே ரிபமுகமுடையான் யார்க்கும்
ஆங்களி கொள்வாங்க ளருளினும் மதம்வேறாய
ஆங்கிலக் கொடியா னென்றே யவன்றனைச் சொல்லார்யாரே?

ஆங்கிலக்கொடி ஷை பிள்ளையார் கோவில் விமானத்தின்மேல் அமைக்கப்பட்டிருப்பது குறித்து.

திருவாரூரில் தேரெரிந்த இடத்தைப்பார்த்துக் கூறிய
வெண்பா.

127 தேவரிறை வன்வனத்தைத் தீக்குணவா யன்றளித்த
தேவன்போ லாரூர்த் தியாகேச!—பாவகற்குன்
பேரிரத மீந்தனையோ? பித்தா! புராந்தகனே!
பாரிரதத் தாசை படிந்து

பாவகற்கு—அக்கினிக்கு.
முப்புரம் எரிக்குங்காலத்தில் பார் இரதமாக இருந்தது.

ஷை யூர் கோயில்முன் பாடியவை.

128 ஆரூரோ வூராம், அமைந்திடுமூ ரொற்றியூர்
ஊரூரா யோட்டிவிரந் துண்டவனைக்,—காராடு
வெள்ளா டெனக்கழறு மேதினியோ ரேன்மொழியார்?
எள்ளாத் தியாகேச னென்று.

ஷை

129 தங்கத்தனு வுடையான் சார்ந்திடுபொன் னம்பலத்தான்
பொங்குகதிர் வெள்ளிப் பொருப்புடையான்—துங்கமணி
வாய்ந்திடுமா ரூரானை மாநிலத்தோர் வாழ்த்தறதும்
ஏய்ந்திடுதி யாகேச னென்று

தங்கத்தனு—பொன்னார்மேனி; மேருவில். வெள்ளிப்பொருப்பு—கைலை மலை.

திருப்புல்லாணியில் தாயார்பேரில்.

130 இத்தலத்தி லன்பர்க் கினிய வசனி குணப்
பத்த ரிடராம் பணிக்கசனி—பத்தியிலாத்
தியார்க்கு மிக்கசனி தென்திருப்புல் லாணியில்வாழ்
தாயாம் பதுமா சனி

## காளமேகம் பாடியது.

131 " மீனமுக மாமைமுகம் மேதினியெல் லாமிடந்த
ஏனமுகஞ் சிங்கமுக மென்னுமல்—ஞானப்
பழகரென்றும் பண்பரென்றும் பாரதனினிற்கிங்
கழகரெனும் பேரிட்டார் ஆர் "

மதுரையில் ஓர் நண்பர் ஷை பாடல் மாதிரி அழகிய சொக்கருக்குப்
பாடவேண்டுமெனப் பாடிய விருத்தம்.

131-A செஞ்சடையன் குறைமதியன் தீக்கட்பாலன்
சிரங்கைக்கொண்டோன் பெருவேதனையே யுற்றான்
அஞ்சுமுகன் கரித்தோலன் விலங்குக்கையன்
அரவணிந்தோ னெப்பொழுது மழுகையார்ந்தோன்
நஞ்சருந்தி நாடுபுரஞ் சுட்டபித்தன்
நக்கனெனத் தோன்றுகயற் கண்ணிநாதற்
கெஞ்சலிலாத் தென்மதுரை நகரந்தன்னில்
எழிற்சொக்க னென்று பெயரிட்டார் யாரே?

இச்செய்யுள் நிந்தாஸ்துதி, விஜயஸ்துதி யென்றும் கூறுவர்; அணி யுணர்ந்தோர் வஞ்சப்புகழ்ச்சியணி யென்பர்.

குறைமதி—அற்ப புத்தி: பாதிச்சந்திரன் தீக்கட்பாலன்—கொடிய கண்ணுடைய பையன்: நெருப்புக்கண் அமைந்த நெற்றியுடையவன். சிரங் கைக்கொண்டோன்—சிரங்குநோயுடையவன்: பிரமன் கபாலம் கைக்கொண் டவன். பெருவேதனையே யுற்றான்—பெருந்துன்பமுடையவன்: மூங்கி லில் உற்றவன். அஞ்சுமுகன்—பயப்படும்படியான முகன்: ஐம்முகன். கரித் தோலன்—கறுப்புத்தோலுடையவன்: யானைத்தோலைப் போர்த்தினவன். விலங்குக்கையன்—கையில் தளையுடையவன்: மானைக் கையிலுடையவன். எப்பொழுது மழுகையார்ந்தோன்—அழுகையார்ந்த உருத்திரன்: மழு கை யார்ந்தவன். நாடுபுரம் சுட்ட பித்தன். நாடுகின்ற புரத்தை; முப்புரத்தை யெரித்தவன். நக்கன்—ஆடையில்லாதவன்: திக்குகளை ஆடையாகவுடைய வன். கயற்கண்ணிநாதன்—மீனாட்சிநாதன். எழிற்சொக்கன்—அழகிய சொக்கனென்று; சுந்தரேசனென்று பெயரிட்டார் யாரே ?

## திருமாலிருஞ்சோலைமலை அழகர்பேரில் வெண்பா.

132 கலையழகா ! மெய்யழகா ! கையழகா ! சோலை
மலையழகா ! வாயழகா ! மாவாழ்—மலர்போல்
திருக்கழகா ! வெண்ணை யுன்றன் சேவைதந்தாளாமற்
கருக்குழிக்கா ளாக்கலழ கா !

திருக்கு—கண்.

## கூடல் அழகர்பேரில் வெண்பா.

133 அழகாகா நெஞ்சே ! யனுதினமுங் கூடல்
அழகா ! கா வென்றவன்றாட் காளாப்—பழகாமல்,
கா ! கா ! வென் றேதிரிகா கம்போற் சேர்ந் தற்பரையே
கா ! கா ! வெனச்சொல்லுகை

## திருமோகூரில்

134 வாசமலர்ச் சோலை தடம் மன்றியிளந் தென்றனிதம்
வீசிடுமோ கூர்க்காள மேகமென்றன்—மாசில்
மனக்க மகிழ்ந்துறலால் மானவருள்தேர்ந்தோர்
எனக்காள மேகமென்பா ரிங்கு

## கன்னியா குமரியில்

135 கொங்கு கமழுங் குமரிக் கடல்மூழ்கி
அங்கு மரியி னடியிணையாஞ்—செங்கமலம்
என்ற னிதயத் திருத்தினேன் பாவமெலாம்
பொன்றி யொழிந்திடவப் போது

அம்குமரியின்; அங்கும் அரியின்.



திருச்செந்தூரில் தாசில்தார் ஸ்ரீமான் திருவேங்கடத்தையங்கார் அவர்களுடன் கந்தசஷ்டியில் சூரஸம்ஹாரம் பார்க்கும்போது பாடிய கலித்துறை.

136 மாறனை வென்ற குமாரனை வள்ளிதெய்வானை யிரு
தாரனை நாலுமுத்தா ரனை மெய்தனிற் றக்கவலங்
காரனைச் சூரசங்காரனை வெய்ய கபடருக்குத்
தூரனைச் செய்ய செந்தூரனை நாடித்துதிமனனே!

கலி விருத்தம்.

137 புனமேவிய தினைக்காத்திடு நயனும்புய வளிபால்
மனமேவிய மயல்மீறிடு குகனூர்கர வடிவேல்
தினமேயவர் பததாமரை திரமேயெனு மடியார்
அனைவோர்வினை பிணியாவையு மடிவேர்கெலி விடுமே

ஷை தாசில்தாரவர்களுடன் ஷையூர் ரெங்கநாதனைச் சேவிக்கும் போது பாடிய வெண்பா.

138 நீதுவனஞ்சென்ற சிரமுறச் செந்தூரில்
ஆதரவாக் கண்டுஞ் சரங்கேச! —மாதலனும்
பந்துவெனும் நீயும் பதுமையுங்கண் பார்த்தருளக்
கந்தனுக்கேன் சீர்மைபெரு காது?

1925–ம் ஹு ஆசிரியர் பேப்பர் பார்த்து சிதம்பரத்திலிருந்து எழுதி T. K. C. க்கு அனுப்பிய விருத்தம்.

139 தில்லைவாழு மாதவன் திருவுளத்தினன்பினால்
நல்லவன் குமாரசாமி நண்பனோடு நிற்குமே
அல்லலின்றி மெய்பரா யமைந்த தோர்ந்துகந்தனன்
செல்வமா வளர்ந்திடுஞ் சிதம்பரேச நண்பனே!

உமாதவன்—மாதவன், நடராஜன்; கோவிந்தராஜன்.

ஷை ஸ்ரீமான் T. K. சிதம்பரநாதமுதலியாரவர்களோடு
பேசிக்கொண்டிருக்கையில் கூறிய வெண்பா.

140 சீரிசையிங் கோங்குஞ் சிதம்பரநா தன்தனுவில்
சாருங் குணமொன்றே, தக்ககுணம்—பாரில்
இழுக்கை யடையு மிரவிகுல ராமன்
கொழுக்கைத் தனுவின் குணம்.

தனு—சரீரம்; வில். இழுக்கை—குற்றத்தை; இழுத்தல். குணம்—நற்குணம்; வில்லில் பூட்டும் நாண்.

(ஓர் சமயம் தம் வீட்டுவேலைக்காரன் பிச்சக்கோனைப் பார்த்துக் கூறிய சொற்கள் ஓர் வெண்பாவாக அமைந்தன காண்க)

வெண்பா.

141 காலம் குளிர்காலம் காங்கையுறு தேகமெனக்
காலமென வாடை அடிக்கிறது—நீலப்
பெரிய விரிப்புதறிப் பின்புவிரி, பிச்சா!
விரியை யெடுத்து விடு.

ஆலம்—விஷம். விரி—திரை.

அம்மானை ஸ்ரீவைகுண்டம்.

142 வாரி நலப்பொருளை வைகுந்தம் வாழ்திருமால்
சீரிய பொன் ஞெடையுறும் செல்வன்காண் அம்மானை
சீரிய பொன் ஞெடையுறும் செல்வனே யாமாகில்
காரிகையாராடை கவர்வனோ ? அம்மானை
கள்ளப்பிரான் தான் கவராரோ ? அம்மானை



### திரு வரகுணமங்கை.

143 மானேமுன மெய்த வரகுண மங்கைத் திருமால்
கானிற் பலவுயிரைக் காய்ந்தனன்காண் அம்மானை
கானிற்பல வுயிரைக் காய்ந்தனனே யாமாகில்,
தானுமொரு வேடனெனச் சார்ந்தனனோ ? அம்மானை
தான் வேடன் தந்தை தவவேடன் அம்மானை
வேடன்—வேள்தன். தவவேஷன்.

### திருப்புளியங்குடி.

144 பூசுரர்க ளேத்தும் புளிங்குடி வாழ் மாயவனைக்
காய்சினவேந் தென்றே கழறுவாரம்மானை
காய்சினவேந் தென்றே கழறுவாராமாகில்,
காசினியோர்க்குக் கருணை காட்டுவனோ? அம்மானை
கரங்குவித்தோர்க்குக் கருணைகாட்டுவன்காண் அம்மானை.
கரங்குவித்தல்—கைகூப்புதல்; வரிப்பணம் கொட்டுதல்.

### திருத்தொலைவில்லிமங்கலம் (இரட்டைத்திருப்பதி)

145 தோற்றுமணிமாடத் தொலைவில்லி மங்கல மால்
ஆற்றினடுவில் அமர்ந்தனன்காண் அம்மானை
ஆற்றினடுவில் அமர்ந்தனனே யாமாகில்
ஆற்று வெள்ளங் கண்டமட்டு மண்டாதோ ? அம்மானை
அண்டுமென நாவாய் அடைந்துகந்தான் அம்மானை
நாவாய்—தோணி; திருநாவாய் என்னும் க்ஷேத்திரம்

### திருக்குளந்தை (பெருங்குளம்)

146 " கொண்ட லெனவாழ் மாயக்கூத்தன் திருமுகத்தைப்
புண்டரிக மென்றே புகல லாம் அம்மானை
புண்டரிக மென்றே புகல லாமாமாகில்,
வண்டணுகு செங்கமலம் வாடாதோ ? அம்மானை
வாடுமோ? பெருங்குளத்தில் வாழ்ந்தக்கால் அம்மானை "
புண்டரிகம்—தாமரைப்பூ.

தென்திருப்பேரை.

147 பூந்துளவன் தென்பேரைப் புங்கவன் மண் மாவலிபால்
ஏந்துகரத்தானு மிரந்தனன்கா ணம்மானை
ஏந்துகரத்தானு மிரந்தனனே யாமாகில்,
மாந்தர் பெருங் கன்னனினை வாழ்த்துவரோ? அம்மானை
வாழ்த்தல் படியளக்க வாய்ந்ததனு லம்மானை

திருக்கோளூர்.

148 ஈசனிரப்பொழித்த வெங்கள் வைத்தமாநிதி மால்,
பாசமற்ற பொல்லாப் பழியறியா ரம்மானை
பாசமற்ற பொல்லாப் பழியறியாராமாகில்,
கூசாமல் மாமனைமுன் கொல்லுவதேன்? அம்மானை
கொல்லாரோ? கோளூரிற் குடியிருந்தால், அம்மானை

திருக்குருகூர் (ஆதிநாதர்பேரில்.)

149 சேக்கைக் குருகூர்த் திருச்சங்கணித் துறையில்
கோக்குந் தாளம் கொழிக்குமா றம்மானை
கோக்குந்தாளம் கொழிக்கு மாறுமாயின்
தாக்குவடமா மாற்குச் சாத்தாரோ? அம்மானை
தானே முத் தாரனைச் சார்ந்தனன்காண் அம்மானை

முத்தாரன்—முத்து ஆரன்; ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவியான மூன்று தேவி. மாலை உடையவன்.

வானமாமலை.

150 மிக்கவெண்ணெய் மேனி மிளிர்தெய்வ நாயகனைத்
தக்க மலைவிளக்காய்ச் சாற்றலாம் அம்மானை
தக்க மலைவிளக்காய்ச் சாற்றலா மாமாகில்,
சொக்கமையு மவ்விளக்கைத் தூண்டுவாரார்? அம்மானை
தோதாத்திரி யமைந்தால் தூண்டுவதேன்? அம்மானை
தோதாத்திரி—வானமாமலை.

## திருக்குறுங்குடி.

151 பாடற் பாகாலன் பா மதுவைக் கொள் நம்பி
வேடக் குகன்மதுவை வேண்டியுண்டான் அம்மானை
வேடக் குகன் மதுவை வேண்டியுண் டானுமாகில்,
ஈடில் லகிரிதலைக் கேறுதோ? அம்மானை
ஈங்கு குறுங்குடியற் கேறுமோ? அம்மானை

## விடு கதைகள்.

152 முன்னெழுத்துத் தேவதரு, நடுமூங்கில்; பின்பு, ரியாம்,
மூன்றுஞ்சேர்ந்தால்,
நன்னதியாம்; முதலெழுத்து நீங்கின், மனத்தின் பேரம்,
நடுவே நீங்கின்,
கன்னனிகர் வள்ளலொன்றும்; மகிழ்மாறன் தந்தையுமாம்,
கடையே நீங்கின்,
உன்னதச் சோலையை விளித்தல், காவேரிரங்க! இதை
உணர்வாய் நீயே,

(விடை, காவேரி)

153 முன்னொரு மூன்றெழுத்தாய்ச் சிவன்பேராகும்
முதலெழுத்து, கடவுளைப்பார்த்துரைப்பதாகும்
மன்னுகடை, பரியின்பின் பாதியாகும்
மத்தி, திரு; வாசி; கரி; மரத்தொன்றும்
முன்னெழுத்து நீங்கின், மழை; மத்தி நீங்கின்,
மூதுலகிற் சனியின்பேர், அந்தம் நீங்கின்,
கன்னனுள மன்மதனை விளித்தலாகும்,
காமாரியன்ப! இதன் கருத்தோர் வாயே
காமாரி—(காம அரி) சிவன். திரு—இலக்குமி. வாசி—குதிரை.
கரி-யானை. மரம்—மாமரம். காரி—சனி.

(விடை—காமாரி)

154 முன்னொரு பாவின் போரம், முதலெழுத்தில்லாவிட்டால்,
நன்னயவித்தின் போரம்; நடுவெழுத்தில்லாவிட்டால்,
கன்னலின் சரிதைப் போரம்; கடையெழுத்தில்லாவிட்டால்,
பன்னலிற் குரங்கின் போரம்; பாவின் பேர் விளம்புவீரே

(விடை—கவிதை)

155 முன்னொரு பாவின் போரம் முதலெழுத்தில்லாவிட்டால்,
இந்நிலத்தேவற் போரம் இடையெழுத்தில்லாவிட்டால்
சொன்னவோ ராயுதப் பேர் தொலையெழுத்தில்லாவிட்டால்,
கன்னலின் பாவின் போரம் கவிதைப் பேரறிமின் நீரே!

(விடை—கவிதை) விதை, கதை, கவி.

156 முன்னமோர் மரத்தின் போரம் முதலெழுத்தில்லாவிட்டால்,
நன்னய விளக்குக் கேற்கும் நடுவெழுத்தில்லாவிட்டால்
சொன்னய மனைவி போரம் தொலையெழுத்தில்லாவிட்டால்,
மன்னிய பங்கின் போரம் மரத்தின் பேர் விளம்புவீரே!

(விடை—பாதிரி) திரி, பாரி, பாதி

157 ஸ்ரீவைகுண்டம் வைக்கீல் ஸ்ரீமான் பொன்னம்பலநாத முதலியாரவர்கள் ஒருநாள் இரவில், பெருமாள்கோவிலில் சாப்பாடு செய்வித்ததில் அவர்களிடம் பாடிய வெண்பா.

தங்கலிலே மண்ணுண்டான் சந்நிதியின் மேவியநே
கங்கலுடன் நெய்சர்க் கரை சேர்ந்த—பொங்கல்
பரிந்துண்டேன் பொன்னம்பலநாத நண்பா!
விரிந்த வுவகை மிகவே

(தங்கு அல்லிலே, அநேகம் கல்லுடன்.)



158 படித்தவனும் பொன்னம் பலநாத ! நின்னை,
படித்தும் படியா தவனு—எடுத்துரைப்பேன்
செய்யா ளருள்சேரித் திண்புவியோர் சொய்பழத்தைக்
கொய்யாப் பழமெனவுட் கொண்டு
படியாதவனுக; படி ஆதவனுக (ஆதவன்—சூரியன்.)

சென்னை மாகாணக் கவர்னர் கோஷன் பிரபு துரையவர்கள்.
1926–ம் ௵ தூத்துக்குடியில் விஜயம் செய்தபோது ஷெயார் முன்னிலையில் பாடிய விருத்தம்.

159 உத்தமநற் சிந்தைசொல் செய்கை கொண்டே
உபகாரகுணத்தாலு மன்பினுலும்
எத்தலத்தும் மாந்தருளம் கவருந்தன்மை
இசைந்திருப்ப தோர்ந்துமதிக் கோஷ ! நின்னைக்
கத்துகடற் சென்னையெனு மாகாணத்தில்
கவர் நராதிபனுச் செய்வேந்தர் வேந்தும்
இத்தலத்துன் வரவுகந்தோர் யாரும், நீயும்
இனிது மனை மக்களுடன் வாழ்க! வாழ்க!
கவர் நராதிபன் (வினைத்தொகை.) கவர்நர் ஆதிபன் (பண்புத்தொகை)

ஷெ கவர்னர் ஆசிரியரைமெச்சிக் கைகுலுக்கியதைப்புகழ்ந்து சில அதிகாரிகள் பேசிக்கொண்டிருக்கையில் பாடிய கைச்சிறப்பு.

160 அன்றளயனுர் பொருத்தியகை;
அப்பால் சிவனுர் திருத்தியகை;
பொன் ஞர் மகுடஞ் சார்ச்சாசன்
புனைநாள் விருதுப் பூணணிகை;
பின்னுள் கோஷனெனுங் கவர்னர்
பிடித்துள் ளுகந்தே குலுக்கிய கை;
எந்நாளும் மாலடியாரை
இனிது தொழுங்கையென்கையே !

சிவனுர் திருத்தியகை:— ஓர் சமயம் ஆசிரியர் கைமுறிந்த போது சிவனுர் என்னும் முடவைத்தியன் சீர் திருத்திய கை.

ஆழ்வார்திருநகரியில், ஸ்ரீ நம்மாழ்வார் மங்களாசாஸநத்திற்காக
11—12—1934-ல் எழுந்தருளிய காஞ்சிபுரம், பிரதிவாதி
பயங்கரமடாதிபதி ஜகத் குரு, ஸ்ரீ அநந்தாச்சார்ய ஸ்வாமிகள்
ஸந்நிதியில் விண்ணப்பம் செய்த ஆசிரிய விருத்தம்.

161 சீர்கொண்ட விபகிரியில் வாழண்ணர் மரபினில்,
செனித்திலகு திண்கேசரி;
திரமிடம், வடமொழி, நவீந்தி, மாராட்டிரம்,
தெலுங்காங்கி லங்கமென்னும்
பேர்கொண்ட விவையெலாம், நன்குணர்ந்தங்கங்கு
பிரசங்கமாரி பொழிவோன்;
போாதிசேடனே யபராவதாரமாப்
பேருலகில் வந்துதித்தோன்;
தார்கொண்ட சடகோப எதிராஜ வரயோகி
சந்ததந்திகழு நெஞ்சன்;
தாரணியி லொப்பாரு மிக்காரு மிலையென்ற
சகலகலை தேர்ந்த மதியோன்;
ஏர்கொண்ட லோககுருவெனு மநந்தாசார்யன்;
எழுந்தருளு நல்வரவினால்
இன்று குருகாபுரியிலொன்று மடியேங்களுளம்
இன்பமுற வெல்லையிலையே !

கேசரி—மகிழம்பூமாலையணிந்த நம்மாழ்வார், (கேசரம்—மகிழ்); இபகிரி
ஹஸ்திகிரி (என்னும் காஞ்சிபுரத்தில் உதித்த) சிங்கம்.



ஸ்ரீ மஹா மஹோபாத்தியாயர் தாக்ஷிணாத்ய கலாநிதி
டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களின்
6—3—1935-ல் எண்பதாம்பிராய நிறைவு விழாவில் இயற்றிய
பன்னிருசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்.

162 சீர்மேவு வேதியர் குலப்பாவையிற் கலைத்
திங்களென வந்துதித்தோன்
செந்தமிழ்க்கலையினைக் கரைகண்ட கத்தியன்
சேடனிரு விசாகான்றோன்
தார்மேவு தமிழணங் குக்குமணிமேகலைச்
சங்கநூலணி தரித்தோன்;
சாருமவளானனத் திலகமெனவாய்ந்தவன்;
தன்குருவின் மகிமை மொழிவோன்;
பார்மேவு மாசாற் பெரியரால் விருதாய
பட்டங்களுற்ற புகழோன்;
பதிறுகலைமதியை யாயிரங்கண்டவன்;
பாஞ்சுட ரிலங்கு நெஞ்சன்;
ஏர்மேவுசாமிநா தையரெனுமபிதானன்
எண்பதாம்பிராய நிறைவாம்
இன்றுநிறை மன்றுளினி லொன்று யாமின்பமுற்
றிறைஞ்சினமனாடியையே.

இருவிசாகர்:—

(முருகன், நம்மாழ்வார்.)



ஆழ்வார்திருநகரியில், வானமாமலை ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமிக்கு
10–6–35–ல் நடைபெற்ற சதாபிஷேக மஹோத்ஸவத்தில்
இயற்றிய

## ஆசிரிய விருத்தம்.

163 திருவருள மாலையனதாலயத் தன்புடன்
சீர்மணிய வேலைபார்த்தோன்;
சீதான் சடகோப வெதிராஜ கூரேசர்
செய்யகுரு வாழுநெஞ்சன்;
திருமலைப் பேர்ச்சுதன் மற்றுமுன் புதல்வரும்
செய்சதாபி ஷேக நன்னாள்
சேரு மீரைந்துநா ளிருமறைகளரிகதைகள்
ஸ்ரீபாஷ்ய ழும்முழங்க
அருசெவியினுண் டுளம் பூரித்த வன்; ஞான
ஆசார்ய திலகரான
அண்ணங்காராசார்ய னேய்ந்தநன் னாச்சார்யன்
ஆசிபெறு மகிமை யாளன்;
மருவுகலை நிறைமதியை ஆயிரங்கண்டவன்;
வானமாமலை யாதியில்
மன்னுமெஞ் சீநிவாசப்பெயர் கொளந்தணன்;
மலரடி வணங்கு வாமே

ஆழ்வார்திருநகரியில், காஞ்சிபுரம் பிரதிவாதி பயங்கரம்
மஹாவித்வான் ஸ்ரீமான் அண்ணங்காராச்சார்ய ஸ்வாமியின்
பிரசங்கமுடிவில் கூறிய

## வெண்பா.

164 சாற்றவொணு மான்மியங்கொள் மங்கலாசாஸநத்தின்
ஏற்றமெனு மின்சுவையீங் கீந்தனரால்—ஆற்றலுடன்
எண்ணெண் கலைதேர்ந் திலகுமெழிற் கச்சிநகர்
அண்ணங்க ராசாரி யார்.

### இதுவுமது.

165 அண்டுபுக முண்ணங்க ராசார்ய னின்மொழியாம்
கண்டிரசங் கொள்காதே காதாகும்—பண்டிதர்காள் !
ஆகாது போகா தழுகா தொழுகாது
வேகாது மற்றவை பூமேல்.

### சங்கரன்கோயில் தாசில்தார் ஸ்ரீமான் திருவேங்கடத்தையங்கார் அவர்களுடன் கோயிலுக்குப் போயிருந்த சமயத்தில் பாடிய வெண்பாக்கள்.

### சங்கரன்கோவில்.

166 தேகத்தோர் கோமதியைச் சென்னியிலோர் கோமதியைப்
பாகத்தோர் மாலை பணிமாலை—ஆகத்தே
பூண்டிலகு சங்கரனே ! பூதேச தில்லைநகர்த்
தாண்டவ ! யாம் வேண்டுவரம் தா.

கோமதி—அம்பாள் பெயர் ; ஆகாசத்திலுள்ள சந்திரன். பாகத்து ஓர் மாலை—ஒரு பாகத்தில் மகாவிஷ்ணுவை. பணிமாலை-சர்ப்ப ஆரம்.

### சங்கரநாராயணர் கோயிலில்.

167 மான் மழுசங் காழி வளையும் சடைமகுடம்
தேன்மருவு கொன்றை திருத்துளவம்—வான்மருவு
பொங்காவம் துங்கமணி பூண்டவ! யாம் வேண்டுவரம்
சங்கரநா ராயணா! நீ தா.

### அம்பாள் ஸந்நிதியில்.

168 திருவேங்கடத் தானைச் சீர்க்கவியோ ரன்பன்
உருவே யிரண்டுமொன்றென் றேதல்—பொருவுமிவண்
சங்கரியோர் பாகனது தையலே ! கோமதியே !
சங்கரியே ! வேண்டுவரம் தா.

கலித்துறை.

169 போசன் திருமலை ராசனுங் காளத்திப்புண்ணியனும்
பாசமிருந்த புகழ்சிதக்காதியும் பாருலகில்
ஆசுகவிப் புலவோர்க் களித்தா ரவர்போன்றவனும்
ஓசையுளான் திருவேங்கடத்தா னிங்கொருவனுமே !

170 வாரிதி நீரை நிதமே பருகு வடவையெனக்
காரியம் பார்த்துண்பர்தம் வயிறாரக் கயவரென்போர்
பாரியமேக மனதிருவேங்கடப் பார்த்திபன்போற்
சீரிய ரீந்து புலவோரை நாளும் சிறப்பிப்பரே.

ஓர் சமயம்ஆசியர்க்கு அநீதியாய் தீமை விளைவித்தற்காகக்
கோபத்துடன் ஓர் கர்ணன்பேரில் பாடிய

கலித்துறை.

171 போவாய் சிறையிற் புகுவாய் நரகிற் புழுக்குடையச்
சாவாய் குலத்துடன் சீரழிவாயித் தரணிமிசை
தேவாதி தேவ னருளின்றி யேபெருந் தீங்கினுக்காள்
ஆவாயென் னன்றிமறந்தே வினைசெய் யழகப்பனே !

இக்கவி சொன்ன தினத்திலே ஷை கர்ணனுக்கு மனைவி யிறந்தா ளென்று தந்திவரவும் பின்னர் வேலையுந்தொலையவும் அப்பால் ஆசிரியரை ச்சரணாகதி பண்ணி ஷை பாடலை மாற்றவேண்டுமென வேண்டியதன்மேல்

பாடிய கலித்துறை.

172 போகாய் சிறையிற் புகாய்வெந் நரகிற் புழுக்குடையச்
சாகாய் குலத்துடன் சீரழியாயித் தரணிமிசைச்
சீகாயமாய னருளொன்றியேபெருந் தீங்கினுக்காள்
ஆகாயென் னன்றி மறந்துபின்னோர்ந்த வழகப்பனே!



(28—12—1935)ல் நடந்த காங்கிரஸ் பொன்விழாவில் பாடிய வெண்பா.

173 காந்திமதியுங் கனசங் கருமம்படிந்து
சாந்த விதியென்றுஞ் சார்ந்துமே—ஏந்துபுகழ்க்
காங்கிரசு மூன்று கடவுளர்போல் வாழ்க நிதம்
ஈங்குபெரு வென்றியுட னேய்ந்து.

காந்திமதி–சிரணசந்திரன்; காந்திஜியின் புத்தி சங்கம்–சங்கு; சபைகள். விதி–பிரமன்; சட்டம். மும்மூர்த்திபோல் நிதம் வாழ்க.

174 பஞ்சப் பதமொன்றே பாரோ ரிகழாமல்
வஞ்ச வினைவொழித்தே மாந்தர்காள்—எஞ்சலின்றி
ஆங்கில ரால் நன்மை யடைய விரும்புவிரேல்
காங்கிரசை யாதரியுங் கள்

ஆசிரியர் சுபத்திரா பரிணயமென்னும் நூலியற்றி யெழுதிவைத் திருந்த புஸ்தகம் தவறிவிட்டதால்
ஏதோ ஞாபகத்திலிருந்த சில பாடல்கள் எழுதலாயின

காப்பு.

175 செய்ய சுபத்திரையின் சீர்வதுவை வெண்பாவாச்
செய்யவரு ணங்கமலத் தேன்பாயுஞ்—செய்யதனில்
நற்குருகு முத்ததனை நத்தியெடுத் தொக்கி யுமிழ்
பொற்குருகை நாதனடிப் போது

அவையடக்கம்.

176 நன்னூலி லேனும் நயஞ்சிறிது மோராமல்
இந்நூ லினையா னியம்புவதாற்—றென்னூற்
புலவீ ரினத்தும் புதல்வர் மழலை
நலமெனவே கொள்வீர் நயந்து

177 உத்தரையின் செம்ம லுவந்தே சுபத்திரையாம்
உத்தமியின் மன்ற லுலகின்கண்—சித்தமொடு
கேட்க விரும்புகிறே னென்றான் கிளிமுனிபால்
தாட்கமலம் போற்றியே தாழ்ந்து

178 பத்தியுடன் கேட்கும் பரிட்சித்துக் கம்முனிவன்
சுத்த குலமின் சுபத்திரையை—யித்தலத்தில்
மாகதையைக் கொண்டோன்பின் வந்தோன் மணம்புரிந்த
மாகதையைச் சொல்வான் மகிழ்ந்து

நூல்.

தீர்த்தயாத்திரைக்காண்டம்.

179 இந்திரைதன் மந்திரம் போலெண்ணியே வைகுமெழில்
இந்திரப்பி ரஸ்த மெனுநகரம்—இந்த
நிலமின் மலர்முகம்போல் நேர்ந்தகுரு நாட்டில்
திலகமென வாய்ந்ததே சேர்ந்து

180 நேரிற் சரணமெனும் நீதிநிருபருடல்
ஆருயிரைக் காக்கும் அருளுடையான்—போரிற்
காத்திற் சிலையெடுத்தாற் காணரிகள் மைந்தர்
சிரத்திற் சிலையெடுப்பார் சேர்ந்து

சிலை—வில். கல்.

181 ஆறுங்கலையோ ரறுபத்து நாலுளவாற்
பேரிசையைத் தன்குருவாற் பெற்றிடலால்—நேரினுறு
மாசிலையாற் போகிவெகு மானிக்கையா லிந்த
மாசிலையாற் கிடோ மதி

சநதிரன் விருத்தியக்ஷமான பதினாறு கலையுடையவன். குருவால் சாபமுற்றவன். மாசு—களங்கமுடையவன். போகியால்—இராகு வெனும் பாம்பினால் பிடிக்கப்பட்டவன் அருச்சுனன்—64 கலையுளான் குருவால்—துரோணர் கிருபர் முதலானோரால் கீர்த்தி பெற்றவன். களங்கமில்லாதவன். போகி—இந்திரனால் வெகுமானிக்கப்பெற்றவன். மா—சிலை காண்டீபம்.

182 பம்பரம்போற் சுற்றிப் பவமாங் கடலாழ்ந்த
இம்பரெலாம் நற்கரையி லேறுதற்கா—நம்பும்
இருங்கலமோ வென்று ளிராம னணையை
அருங்கலவை மார்ப னடுத்து

பிரபாச தீர்த்தம் ஆடியபின்

183 பலவலவ னூரும் பரவைசூழ் வையத்
தலவலவன் பின்தோன்றும் அண்ணல்—நலமருவும்
அத்தான் நினைத்த அரைக்கணத்திற் றுறுமகிழ்ந்
தத்தானஞ் சேர்ந்தா னடுத்து

184 அப்பம் பணியார மார்ந்தோற்கு மெட்டானைச்
செப்பளிமொய்த் தோசைசெயுந் தேன்குழலுந்—துப்பனைய
வண்ண முறுக்கிதழும் வாய்ந்த சுபத்திரையின்
கண்ணிபெறு வோன் துதித்தான் கண்டு

இதில் பலகார வகைகள் தோற்றம்

185 கடலை யகழியெனக் காணந் துவரை
யுடையவனே! வாளெனல் லொளிபோற்—படைநேமி
உற்றவனே ! யோகியரிங் கோதுமைவண்ணா! வருளாய்
பற்றினரைக் காக்குமெனண் பா.

சில தானிய வகைகள் தோற்றம்.



## பர்வதகாண்டம்.

### இரைவத பர்வதத்தைப்பற்றி வர்ணித்தல்

186 கவணரவேற் கண்மடவார் வீசுங் கலெட்ட
ருவிணிலுதி வான் வேந்த னுற்றுத்—தவழுஞ்
சிகாமதில் தேவர்முனி சீப்பிஞ்சி நீரந்
நகமதிலே சேரும் நயந்து

கவண் அரவேற்கண்மடவார் வீசும் கல் எட்டு அருவிணில்—விண்ணில் உதியாநின்ற வான்—பெரிய வேந்தன் சிகாமதில் தேவர் முனி சீப்பிஞ்சி நீர் அந்நகமதில் சேரும். கவணர் கலெட்டர் திவான் வேந்தன் முனிசீப்பு இஞ்சினீர் சீப்பிஞ்சினீர் இவ்வதிகாரிகள் பெயர் தோற்றம்.

187 நெய்தலுடன் சாரஸமும் நேர்ந்தகுளத் தன்னங்கள்
எய்துமின் பச்செடிசே ரெப்புறத்தும்—மைதவழும்
தூசாம்பா ராவாரஞ் சூழ்புவியாள் வேந்தா! வத்
தேசார் பருப்பதத்தின் சீர்

நெய்தல்-ஆம்பல். சாரஸம்—தாமரை. குளம்-பர்வதமடு. அன்னங்கள்—அன்னப்பட்சிகள் எய்தும் இன்பச்செடிசேர் மை-மேகம் தவழும், தூசாம் பாராவாரம்—சமுத்திரம் வேந்தா—பரிட்சித்து மஹாராஜனே ! பருப்பதத்தின் சீர்

நெய் ரஸம் குளம்—சர்க்கரை அன்னம்—சோறு பச்செடி சாம் பார் பருப்பு இந்த ஆகார வகை தோற்றம்.

188 மாத ரயிற்கண் மடவா ரொடு சிலரப்
பாதை மயிலெலாம் பார்த்துகந்தே—ஆதாவாய்த்
தந்தியின்மேல் தாம்பெற்ற பாலரையும் வைத்து வந்தார்
அந்த வரையி லடுத்து

ரயில் மயில் தந்தி தபால் தோற்றம்.

189 அந்தப் புரந்தனிலு மந்தப்புர மாந்தர்
அந்தப் புரந்தனி லும் அண்டுவதை—இந்தத்
திரைகடல்சூழ் பாரிற் சிறந்த சுக, மென்றே
உரையாதார் யார்தா முளர்

அந்தப்புரம்—ராஜஸ்திரீகள் வசிக்குமிடம்; அழகிய சரீரம்.
சுகம்—கிளி; சுகம்.

190 உண்டிலை யென்றே யுரைக்கின்ற சந்தேகம்
வண்டு விழியார் மருங்கிலே—அண்டித்
தரித்தங் கிராததுவுந் தாழ்மை யளிக்குந்
தரித்திரமெ னுந்தகைமை தான்

191 மருமலரோன் பற்குனற்கு வண்ணமிகச்செய்தான்
உருவிலியாம் பேரைச் யொழிக்கத்—திருமகள்சேய்
பார்த்தன் வடிவாப் படிதனில்வந் தானென்று
பார்த்தவர்க ளெண்ணும் படி

192 ஒன்னார் மனைவியர்க ளொண்களத்தி லேதிகழும்
அந்நாண லரிலீ தறுபடா—தந்நாளிற்
பார்த்தன் களத்திற் பகழியொடு காதளவும்
போர்த்தனுவில் நாணிழுக்கும் போது

களம்—கழுத்து: யுத்தகளம்.

193 தனுவோ டிலகுந் தனஞ்செயனை நோக்கில்
முனையும் புரவலர்க்கும் மோகங்—கனிவான
மானேர் விழியார்க்கும் வாய்ந்திருந்த தானையெலாந்
தானே கலையுந் தளர்ந்து

தனு—வில் (காண்டீவம்) சரீரம்; தானை—படை; வஸ்திரம்.

அருச்சுனச் சந்யாசியைப்பார்த்து சுபத்திரை கேட்கிறள்.

194 சித்தமதி லோரையங் கொண்டேன்யான் சீரியரே!
அத்தை யறிந்தே யகமகிழ—நத்தியெனைப்
பாரியா யெண்ணிவரும் பர்த்தா நீ ரென்றனக்கு
நேரீ லுரைப்பீர் நினைந்து

பதில்.

195 ஆதியுள நாற்சீரு மந்தத்து முச்சீரும்
மாதரசே! மாற்றிடினீ மற்றுள்ள—பாதத்தின்
அத்தத்தால் முன்பாவி லையந்தீர் வாயென்றான்
அத் தத்தை முன்பார்த்த னன்று

சித்தமதிலென்னும் ஆதிநாற்சீரும், நேரிலுரைப்பீரென்னும் அந்தத்து முச்சீரும், மாற்றிடில்; அத்தை—அத்தையாகிய குந்திதேவி அகமகிழ என்னைப்பாரியா யெண்ணிவரும் பர்த்தா நீரென்றனக்கு.
(என்பது பதில்)

சுபத்திரை தெரியாதவள் போலிருக்க.

196 நானே கிரீடி நலமாக நீயுமெனைத்
தானே, கிரீடியெனச் சாற்றியே—தானேநன்
முத்திறைஞ்சேர் முலையாளைக் கள்ளவெதி
முத்தினான் செய்ய முகத்து

(சந்திரோ பாலம் பனம்)

197 வித்தை புணர்ந்தோரு மித்திரனை வெய்யவனென்
றித்தலத்திற் கூற லிழிவென்றாள் —சித்தசவேள்
பூக்கணையால் துன்பமுறும் பூவையளைத் தன்கரத்தால்
தாக்குஞ் சசியைத் தவிர்த்து

198 மேயுங் கருந்தகரை வெண்டகரென் றங்கொலைசெய்
திய மறவரையுந் தேவரென்றும்——நேயமுடன்
கூறும் புவியோர் குளிர்மதியென் றேனுரையார்?
நீறுசெய்தி யன்ன நினை

(பரிணய காண்டம்.)

199 அம்பஞ் சுளான்றேவி போன்றாட் கடியிணையிற்
செம்பஞ் சணிந்தனளோர் சிற்றிடையாள்—கொம்பனையாய்!
கோதிலா நின்தாட்கும் கொண்கனுக்கு மீங்கதிகம்
ஈதிரா கஞ்செய்யு மென்று

இராகம்—சிவப்பு; ஆசை.

200 முற்று முணர்விசயன் முட்டியள வேனுமிடை
யுற்றிருக்க லாமிவட்கென் றாகிப்பான்—மற்றொருத்தி
நங்கை சுபத்திரைக்கு நல்லமணி மேகலையை
அங்கையினாற் பூட்டினா ளாங்கு

201 செய்ய வளையுந் திருவா ழியுமவடன்
கையி லணிந்தோர் கருங்குழலாள்—தையலே!
ஒப்பிலா மாயோனைக் கொப்பாக வுன்காத்தைச்
செப்பலா மென்றாள் சிரித்து

வளை—சங்கு; கைவளை. ஆழி—சக்கரம்; மோதிரம்.

202 தங்க வரையழகைத் தாமே கவர்ந்தனவிக்
கொங்கைகளென் றெண்ணியோர் கொம்பனையாள்-அங்குவரை
மச்சமுங் கண்டு வரும்பின் பயமென்றே
கச்சணிந்தா ளக்காரி கைக்கு

வரை—மலை; வரைந்திருக்கின்ற மச்சரேகை; மச்சமும்—கவர்ந்தபொருளும். பயம்—பால்; பீதி; வருமென்றே கச்சணிந்தாள்; பால்வரும் என்பதற்கு-புத்திரவதியா யிருப்பாள்.



203 முத்தாரங் கன்னன் மொழியா ள்தனக்கணிந்தே
யித்தாற் குருகூ ரெழில்மாலை—ஒத்தாய் நீ
என்றே புகன்றாளவ் வேந்திழையைத் தானோக்கி
அன்றோ ரிகுளை யடுத்து

குருகூர் ஆதிநாதனுக்கு விக்ரஹத்தில்-ஸ்ரீ பூமி நீளை என்னும் முத்தாரம். இகுளை—தோழி.

204 வாளிபோற் கண்ணாட்கு வள்ளைவா யொண்டாள
வாளி புனைந்தோர் மடமாதிவ்—வாளியிவள்
கண்ணொளியா னன்றாய்க் கறுக்கின்ற தென்றணிந்தாள்
வெண்வைரத் தோடும் விரைந்து

205 மருங்கு வளைய வளர்முலையி னாட்குக்
கருங்குவளை போன்றவிரு கண்ணில்—நெருங்கிப்
புதியமை தீட்டினளோர் பூங்குழலா ளன்று
வதுவைநா ளென்றே மதித்து

206 மட்டு நிறைந்த மலர்க்கணையான் றன்னேமுனம்
அட்டகுளக்கண்ணென் றையுறவே—பொட்டிட்டாள்
கொற்ற விசயன்பாற் கொண்ட மயலாட்கு
மற்றொருத்தி மின்னாள் மகிழ்ந்து

207 சுகந்த மலருடனே சூடாமணியுஞ்
சகந்தருநல் லுந்தியுளான் றங்கைக்—குகந்தொருத்தி
சூட்டியுமற் றோரவையேன் சூட்டவில்லை யென்றுரைப்பார்
காட்டளிகள் மொய்த்திடவே கண்டு



208 அந்தணர்க ளாசிசொல ஆம்பல் லியமுழுங்கப்
பைந்தொடியார் யாழொலிபோற் பாடவே—சுந்தரஞ்சேர்
மங்கைமலர்க் கை பற்றி மங்கலிய நாண்பூட்டித்
தங்குவகை கொண்டான் பார்த் தன்

209 விற்பிடித்த கையால் விசயன் மணிவிசாண்
கற்பிடித்து வைத்தானக் காலத்திற்—பொற்பதத்திற்
பூட்டுஞ் சிலம்பே புலம்பினமென் றாண்மலர்க்கு
வாட்டமுறு மென்றே மருண்டு

கல்—அம்மி.

210 மங்கலியம் பூண்ட மடமான் சுபத்திரையும்
வெங்கனலி லிட்டனணல் வெண்பொரிகள்—அங்கவைநம்
பார்மடந்தை யாசி பகரச்செவ் வாய்திறந்த
சீர்மையெனத் தோன்றினவே சேர்ந்து

211 சுபத்திரைசே ரானந்தத் தொல்கடலில் மூழ்கிச்
சுபத்திரைபாற் பார்த்தன் சுகித்தான்—நபத்தில்
இரவினிரு ளோட்ட விரதத்தி லேறி
இரவியும் வந்தா னெழுந்து

நபத்தில்—ஆகாசத்தில்.

கண்ணபிரானுதவியால் அருச்சுனன் சுபத்திரையை மணந்து தன்னூருக்கு மனைவியுடன் சேர்ந்த பிறகு அயலிடம் போயிருந்த பலராமன் தெரிந்து வந்து பார்த்தனைத் தொலைத்து விடுகிறேனென்று சினந்தெழும் போது

கண்ணபிரான் கூறல்.

212 கொற்றத் தனஞ்செயனைக் கூடி யுலோகமெலாம்
வெற்றி பெற முயன்றால் வெல்லுமோ? நற்றமைய!
அம்புவி யில்துங்க வரியோ டிகல்புரியச்
சம்புவினு லாமோ? நீ சாற்று

தனஞ்செயன்—அருச்சுனன்; அக்கினி. உலோகம்—உலகம்; பஞ்லோகம். அரி—சிங்கம்—மஹாவிஷ்ணு. சம்பு—நரி; சிவன்.

புனல் விளையாட்டில்

213 மீனேர் விழியாடன் மெல்லியதா மாலைதனைத்
தானே நனைத்துத் தனஞ்செயனும்—மானே!
கலையெங்கே யுற்றதெனக் காரிகையும் நீதான்
கலையென்றே புல்லினுள் கண்டு

மானுக்குக்கலை புருஷமிருகம்—

214 வாரிசத்தைக் கொய்தேயம் மைக்கண்ணாள் முன்னிலையிற்
சீரியனுங் காட்டச் சிறுமியுமவ்—வாரிசத்தைக்
கார்க்குவளை யென்றிடவக் காளை நகைத்தவுடன்
சீர்க்கமல மென்றாள் தெரிந்து.

மைக்கண்ணின் ஒளியால் கருங்குவளை யென்ன நகைத்தவுடன் பல்லொளியால் கறுப்பு மாறிவிட்டது.

## 25—வது பட்டம்.

வானமாமலை " சின்னக்கலியன் ராமாநுஜ ஸ்வாமி " திருநாட்டுக் கெழுந்தருளின தினத்தில் பாடிய விருத்தம்.

215 திகழுசிரீ முகவருடச் சிங்கமாதத்
தினகரநாளிருட்பக்கச் சட்டியின்பாப்
பகர்கலியனுடு வமையு நன்னாள் தன்னிற்
பகனடுவிற் பரவாசு தேவனார்தம்
நிகரினகர் வரவிடுத்த சிரீமுகந்தான்
நிகழ்வருடமென்றெண்ணிக் கலியனென்னும்
புகழ்முனிவன் திருமாலார் யாவும் போற்றிப்
புக்கான் விண்ணூர் மாலைப் போற்றத்தானே

ஸ்ரீமுகம்—கடிதம்; ஓர் வருஷம். இன்பா பகர் கலியன் உடு= இனிய திருமொழி செய்த திருமங்கையார் நக்ஷத்திரமான கார்த்திகை.

## சித்திரகவிகள்.

### ஸ்ரீ வில்லிபுத்தூர் வடபத்திர சாயி பேரில் நடுவெழுத்தலங்காரம்

### ஆசிரிய விருத்தம்.

216 அண்டரம் போதியை ததிமதிக்குங்கருவி
அரிதான வோர்மரம்வேள்
அளவிலா வித்தைதனை யன்பாயளித்தகுரு
ஆலயமிவற்றி னடுவிற்
கண்டநல் வரிசினக்குப் பெயர்தரித்தினிக்
காண்குநானென்கெழுத்தைக்
காண்டவனுக் கூர்ந்து பெண்வடிவமாச்செய்து
கண்வளர்ந்தட்டுமாலை
கொண்டவ கலத்திலே வைத்தெய்து மேய்த்திடக்
கோலவத் தத்தெடுத்தாய்
கோகன னிரணிய வினயகன் வாசவன்
கூடியே போற்ற மடுவில்
அண்டச மறுத்த ருளினாலானை காத்தவா!
அடியேனை யாட்கொள்ளுவாய்.
ஐந்தரு நிகர்த்ததரு வெங்குநிறை தென்புதுவை
ஆதியே! யமரரேறே!

(அண்டர்—தேவர். அம்போதி—கடல். ஐ—கபம். ததிமதிக்கும் கருவி-மத்து ஓர் மரம் பாதிரி. வேள்—மாரன். குரு—ஆசான். ஆலயம்-கோயில். பரி. யாயப்பதங்களின் நடுவெழுத்துக்கள் (வடபத்திரசாயி) நானென்கெழுத்து தேர், கல், கம், மது. பாரி, மான், ஆன், கோல். காண்டவனுக் கூர்ந்தது தேர்; பெண் வடிவமாகச்செய்தது கல், கண்வளர்ந்தது கம்—ஜலத்தில்; அட்டது மதுவென்னும் அசுரன், திருமார்பில் வைத்தது பாரி—எய்தது மான். மேய்த்திட ஆன், அத்தத்தெடுத்தது கோல். இரணியவில் நாயகன்—மேருவை வில்லாகவுடைய பரமசிவன். அண்டசம்—முதலை அருளினால் ஆனை காத்தவா.)

## சித்திரகவிகள்.

## திருவேங்கடமுடையான்பேரில்

### மாலை மாற்று.

217 *நேதநாதிப! சீரகயாதவா!*
*கீதமோகன வாடவ! மாதவா!*
*வாதமா வடவா னகமோதகீ!*
*வாதயாகர சீபதிநாதனே!*

நே—அன்பு. வடவால் நகம் (வால்—பிரகாசம். நகம்—மலை பிரகாசமான வடமலை;) திருவேங்கடமலை.

## ஸ்ரீரெங்கநாதன் பேரில் நிரோஷ்ட வெண்பா.

218 *அரங்கத் தணையிலண்டியே யண்டர்*
*தரங்கக் கடற்று ரணியார்—சிரங்களிருல்*
*எத்திடநன் னித்திரைசெய் பெந்தாயடியேனைக்*
*காத்திடலே நின்றன் கடன்*

நிரோஷ்டம்—உதடு ஒன்றோடொன்று ஒட்டாமலும், குவியாமலுமுள்ள எழுத்துக்களான, உ ஊ—ஒ—ஓ—ஔ டி உயிர்மெய்யெழுத்துக்களும் ம—ப வ. இவ்வெழுத்துக்களும் வாராமல் பாடுவது.

### தென்திருப்பேரை மகரநெடுங் குழைக்காதர்பேரில்

A. முமமண்டில வெண்பா.

219 *மாதவா! பேரன்பா! மாயா! தென்பேரையில்வாழ்*
*சீதா! வில் மாரனெனுஞ் சேயின்றேய்!—மாதயவாய்ச்*
*சீரியரை நாயேனுஞ் சேர்வான் முன் ஞானினிலைப்*
*பாரினையுண் வாயா! கண் பார்*

B. *பேரன்பா மாயாதென் பேரையில்வாழ் சீதா! வில்*
*மாரனெனுஞ் சேயின்றேய்! மாதயவாய்ச்—சீரியரை*
*நாயேனுஞ் சேர்வான்முன் ஞானினிலைப் பாரினையுண்*
*வாயா! கண் பார்! மாத வா!*

C. மாயா! தென் பேரையில்வாழ் சீதர! வில் மாரனெனுஞ்
சேயின்றேய்! மாதயவாய்ச் சீரியரை—நாயேனுஞ்
சேர்வான்முன் ஞளினிலிப் பாரினையுண் வாயா! கண்
பார் மாதவா! போன் பா!
இதனைத் திரிபங்கி யென்றும் சொல்வார்

### அஷ்ட நாகபந்தம்.

வெண்பா.

220 சீதரா! மாலே! திருவனந்த மாபுர
மாதவா! மாயா! வரதா! தா—மோதரா!
மூலனே! வாழுமோர் மான்முத்தி யேதாநீ
வாலரா மஞ்ச வா!

### கமலபந்தம்.

221 சால நலசிலத் தனிச்சார்ஜாசர்கோன்
கோலவெளிவிழாக் கொண்டாற்போல்—ஞால
மினு மிருபத் தைந்தாண்டாண் டெங்குஞ்சீ ரோங்கிக்
கனிவு மிகவே வாழ்க

இரு பத்தைந்து—இரு பத்தைந்து—ஈனாய்பது—நூறு.

### சுழிகுள பந்தம்

222 தேய தூல நலாகனே!
நேக லாபம யூரனே!
நேர யூக சுரேசனே!
நேசரே துதி தூயனே!.



## வானமாமலை மடம் 23-வது பட்டம்
## சடகோபராமாநுஜஸ்வாமி பேரில்
## இரத பந்தம்

வெண்பா.

*உள்ளுற்றூர்க் கென்றுளு மோதுபா மானந்தங்*
*கொள்வதும லாற்சிரிங் கோங்கிடுமால்—வெள்ளைப்*
*படையோன்றன் கந்தப் பதமலர்க்கோர் தொண்டன்*
*சடகோப யோகிவான் றுள்.*

*என்றுளும்—(எல்நாளும்) சூரியன் உள்ளளவும்*
*வெள்ளை—சங்கு.*

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ச | | | | | | | | | | |
| ன் | ட | ண் | | | | | | | | |
| ர் | க் | கோ | ர் | தொ | | | | | | |
| ல | ம | த | ப | ப் | த | ந் | | | | |
| ளை | ப் | ப | டை | யோ | ன் | ற | ன் | க | | |
| ள் | வெ | ல் | மா | டு | கி | ங் | கோ | ங் | ரி | சி |
| த | ங் | கொ | ள் | வ | து | ம | லா | ற் | | |
| ந் | ன | மா | ர | ப | து | மோ | | | | |
| க் | கெ | ன் | று | ளு | | | | | | |
| ர் | றூ | ற் | | | | | | | | |
| உ | ள் | ளு | | | | | | | | |

## திருவாங்கூர் மூல மகாராஜாப்பேரில்
## கோமூத்திரிகாபந்தம்.

சேரனே! யனதான சுசிலனே!
ஆரநேய வுதார சுவேலவா!
வீரநீதி சமூக நமீசகா!
கோளாதிப மூலநரேசனே!

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சே | ர | னே | ய | ன | தா | ன | சு | சி | ல | னே |
| ஆ | ர | நே | ய | வு | தா | ர | சு | வே | ல | வா |
| வீ | ர | நீ | தி | ச | மூ | க | ந | மீ | ச | கா |
| கோ | ர | ளா | தி | ப | மூ | ல | ந | ரே | ச | னே |



ஸ்ரீ

கம்பநாட்டாழ்வார் இயற்றியருளிய

# சடகோபரந்தாதி



திருவல்லிக்கேணி

வை. மு. சடகோபராமாநுஜாசாரியரும்

சே. கிருஷ்ணமாசாரியரும்

இயற்றிய உரையுடன்

மூன்றாம்பதிப்பு.

சென்னை:

ஆர். ஜீ. அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

ஸ்ரீமுக௵ [1934.]

விலை அணு - 12

ஸ்ரீ

கம்பநாட்டாழ்வார் இயற்றியருளிய

# சடகோபரந்தாதி



திருவல்லிக்கேணி

வை. மு. சடகோபராமாநுஜாசாரியரும்

சே. கிருஷ்ணமாசாரியரும்

இயற்றிய உரையுடன்

மூன்றாம்பதிப்பு.

சென்னை:

ஆர். ஜீ. அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

ஸ்ரீமுக௵ [1934.]

விலை அணா - 12

# கம்பர் வரலாறு.*

கம்பர், சோழநாட்டிலேதிருவழுந்தூரில் நான்காம்வருணத்திற்பிறந்தவர். இவரது சமயம், வைஷ்ணவமே.

இவர், இளமையில் தந்தை இறந்ததனால், போஷகரில்லாமல் தாயுடன் திருவெண்ணெய்நல்லூரிற்சடையப்பவள்ளலிடஞ் போய்ச்சேர்ந்து, அவரால் ஆதரிக்கப்பெற்று, அவர் வீட்டுப்பிள்ளைகட்குப் பாடசாலைக்குப் புத்தகமெடுத்துக்கொண்டு போகின்றவராய் அவர்களுடன் படித்துவந்தனர். இவர்க்குச் சரசுவதீகடாக்ஷமும், கம்பரென்னும் பெயரும் உண்டானதைப்பற்றி, ஒரு கதை உண்டு: அவர் அங்ஙனம் பள்ளியிற் படித்துவருநாளில், உபாத்தியாயர், தமக்கு வைரபுரமென்னுங் கிராமத்தி லுள்ள கம்பங்கொல்லை தினைக் கொல்லைகளைக் காப்பதற்காகத் தம்மிடத்திற் படிக்கும் பிள்ளைகளைத் தினம் ஒவ்வொருவராக அனுப்பும் முறைப்படி ஒருநாள் இப்பிள்ளையை அனுப்ப, இவரும் அன்று காலைதொடங்கிக் கொல்லையிற்காத்துவந்து, நல்லவெயிலில் நித்திரைவந்ததனால், அக்கொல்லையினருகிலிருந்த காளிகோயிலிற் போய்ப் படுத்துத் தூங்கினர். தூங்குகையிற் கொல்லையில் ஒருகுதிரை வந்து மேய்வதாகக் கனாக்கண்டு எழுந்து பார்க்க, கனவிற்கண்டபடியே பயிரை அவ்வூராள்வோனாகிய காளிங்கராயனது குதிரை மேயக் கண்டு, அதனைத்துரத்தியும் அது போகாமையால் அஞ்சி நடுங்கிக் காளிகோயிலுக்கெதிரே போய் நின்று புலம்பினார். அதுகண்டு காளி கருணைகூர்ந்து பிரசன்னையாகி, 'பிள்ளாய்! அழாதே: உன் நாவை நீட்டு' என்றாள். இவர் அங்ஙனமே நீட்ட, தேவி அதிற் பீஜாக்ஷரத்தையெழுதி அனுக்கிரகித்தனள். பின்பு இவர் மீண்டுங்கொல்லையிற் போய்ப் பார்க்க, குதிரை அங்கேயே மேய்ந்துகொண்டிருந்தது. அப்பொழுது காளிகாதேவியின் அநுக்கிரகத்தாற் சரஸ்வதீகடாக்ஷம் பெற்ற இவரது வாக்கினின்று, அதுகண்ட கோபத்தால், தற்செயலாக, "வாய்த்த வயிரபுர மாகாளி யம்மேகேள், காய்த்ததினைப்புனத்துக் காலைவைத்துச்—சாய்த்துக், கதிரைமாளத்தின்றகாளிங்கராயன், குதிரை மாளக் கொண்டுபோ" என்று ஒருகவி உண்டாயிற்று. அங்ஙனம் இவர்பாடியவுடன் அக்குதிரை கீழ்விழுந்துஇறந்தது. அதனைக்கேட்டறிந்த உபாத்தியாயர் ஓடி வந்துபார்த்து, அதிகாரியின்கோபத்திற்கு ஆளாவோமே யென்று கலக்கமுற, இவர், முன்பாடிய வெண்பாவின் நான்காம் அடியை "குதிரைமீளக் கொண்டுவா" என்றுதிருப்பிப்பாட, மாண்டகுதிரை மீண்டெழுந்தது. காளிங்கராயன் இதனைக் கேள்வியுற்று, அக்காலத்தில் அரசுசெலுத்தி வந்த குலோத்துங்கனென்னுஞ் சோழனுக்கு அறிவிக்க, அவன் அச்சிறுவனைத் தான் பார்க்கவேண்டுமென்று வருவித்தனன். அங்ஙனமே இவர் கோலுங் கையுமாய்ப் போய்நிற்க, அவன், †'இக்கம்பனா அங்ஙனஞ்செய்தவன்?' என்றனன். இதனாலும், கம்பங்கொல்லையைக் காத்ததனாலும், இவர்க்குக் கம்பர் என்று பெயராயிற்று: இதற்கு வேறு சில காரணமுங் கூறுவர். இவர் பின்பு சோழராஜனது சம்ஸ்தான வித்துவான்களுக்குத் தலைவராகி இராசசபைக்கு நாள்தோறுஞ்சென்று சமயோசிதமாகப் பலகவிகள்பாடிப் பிரசங்கிக்கத்தலைப்பட்டு 'கவிச்சக்ரவர்த்தி' என்று பேர்பெற்றுப் புலமைசெலுத்தி வந்தனர். இவர்க்கு அம்பிகாபதியென்று ஒருமகன்பிறந்து, அவனும் சிறந்தவித்வானாகி இவரோடு ராஜசபைக்கு நாடோறும் போய்ப் பெருமை பெற்று வந்தனன்.

கம்பர் இராமாயணம்பாடியது, சடையப்பவள்ளலின் பெருமுயற்சியால்; எங்ஙனமெனின்,—அவர் மகாகவியாகிய கம்பரது புலமை விளங்குமாறு இவரை ஒருபிரபந்தம் பாடச்செய்யவேண்டுமென்று சோழராசனுக்கு அறிவிக்க, அவன் தனியே ஒருவரைப் பாடச்செய்தலினும் இருவரை ஒருசேரப்

---

* இவர்வரலாற்றைப் பலர் பலவாறு வழங்குவாராயினும், பிற்காலத்துப் பிரசித்தமாக வழங்குகிறபடி மிகச்சுருக்கமாக இங்குக் குறிக்கப்படுகிறது.

† கம்பன் - கம்புடையவன்; கம்பு = கொம்பு: உலகவழக்கு.

பாடும்படி செய்தாற் புலமைத்திறம் நன்குவிளங்கு மென நினைத்து, கம்பர் ஒட்டக்கூத்தர் இருவரையும் 'ஸ்ரீராமசரித்திரத்தைத் தமிழ்ப்பாவினூற் பாடி முடிக்கவேண்டும்' எனக் கட்டளையிட்டனன். கம்பர் பலநாள் பாடாமலிருந்து, ஒட்டக்கூத்தர் சுந்தரகாண்டம்வரை பாடி முடித்து யுத்தகாண்டம் பாடுகிறபோது, மறுபடி அரசனால் ஏவப்பட்டு, இராமாயணம்பாடினார். பாடுகையிற் பிரதிதினம் இராப்பொழுதில் வடமொழிப்புலவர்களை வைத்துக்கொண்டு வால்மீகம் அத்யாத்மம் போதாயனம் முதலிய ராமாயணங்களையும், பல புராணங்களையும் ஆராய்ச்சிசெய்து, பகற்பொழுதில் நாளொன்றுக்கு எழுநூறுபாடலாக யுத்தகாண்டம்வரை ஆறுகாண்டமும் பதினாயிரத்துச் சொச்சம் பாடல்களாற் பதினைந்துநாளிற் பாடிமுடித்தனர். அங்ஙனமிருக்கையில் ஒருநாள், கம்பர், ஒட்டக்கூத்தர்வீட்டு வாயிலின்வழியே போகையில், அவர் தமது இராமாயணம் கம்பராமாயணத்திற்குமுன் தலையெடாதென அறிந்து அதனைக் கிழித்தெறிந்துகொண்டிருக்க, கண்டு, அவ்விடஞ்சென்று, அதற்குள் யுத்தகாண்டம்வரை கிழிபட்டுப்போகவே, மிச்சமான உத்தரகாண்டத்தைக் கிழியாது வைத்திருக்க வேண்டிக்கொண்டார்; அதுவே, கம்பராமாயணத்திற்கு ஏழாவதுகாண்டமாக வழங்கலாயிற்று. கம்பர் இராமாயணத்தை ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றக்கருதி அங்குச்சென்று ஸ்ரீவைஷ்ணவசமயாசாரியரான ஸ்ரீமந்நாதமுனிகளின் அநுமதிப்படிஒருமண்டப கைங்கரியஞ்செய்து முடித்துச் சுபதினத்திலே அரங்கேற்றத் தொடங்குகையில், நம்பெருமாளாகிய ஸ்ரீரங்கநாதன் அர்ச்சகமுகமாக ஆவிர்ப்பவித்து 'நீ நம்சடகோபனைப் பாடினையோ? பாடினால்தான் நாம் உனது ராமாயணத்தைத் திருவுள்ளம்பற்றுவோம்; இல்லாவிடின் அது நமக்கு அங்கீகாரமாகாது' என்று அருளிச்செய்ய, அங்ஙனமே கம்பர் நூறுகட்டளைக்கலித்துறையிற் சடகோபரந்தாதியைப் பாடினர். பின்பு, இராமாயணம், நாதமுனிகள் திருவோலக்கத்திலே மோட்டழகியசிங்கர் சிரக்கம்பஞ் செய்யுமாறு அரங்கேற்றப்பட்டது. அக்காலம் முதலியவற்றை

"எண்ணிய *சகாத்த மெண்ணூற் றேழின்மேற் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய விராம காதை பங்குனி யத்த நாளிற்
கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றி னானே" எனக் காண்க.

இவர்செய்த நூல்கள் - இராமாயணம், சடகோபரந்தாதி, ஏரெழுபது, சிலையெழுபது, திருக்கைவழக்கம், சரசுவதியந்தாதி முதலியன.

இவர்காலத்து வித்துவான்கள் - புகழேந்திப்புலவர், ஒட்டக்கூத்தர், ஔவை முதலியோர்.

இவர் சரித்திரவிவரத்தைத் தொண்டைமண்டலசதகம், தமிழ்நாவலர் சரிதை, பாண்டிமண்டலசதகம், சோழமண்டலசதகம், விநோதரசமஞ்சரி, புலவர்புராணம் முதலிய நூல்களிற் காணலாம்.

"வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோர் சயங்கொண்டான் விருத்தமென்னு
மொண்பாவி லுயர்கம்பன் கோவை யுலா வந்தாதிக் கொட்டக்கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள் வசைபாடக் காளமேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா லொருவர் பகரொணாதே" என்பதனால், இவர் விருத்தம் பாடுதலில் மிகச்சிறந்தவரென விளங்கும்.

'கம்பன்வீட்டுக் கட்டுத்தறியுங் கவிசொல்லும்', 'கல்வியிற் பெரியவன் கம்பன்' என்ற பழமொழிகள் இவரது கல்வித்திறத்தை மெச்சிவழங்கியன.

---

* சகாத்தம் - சாலிவாகன சகாப்தம்; இப்பொழுது நடப்பது, ௧அ௨௰ ஆகவே, கம்பர்காலம் இப்பொழுதைக்கு ஆயிரம்வருஷங்கட்குமுன்பு என்பர்.

ஸ்ரீ

# ஆழ்வார் நூற்றந்தாதி

என்கிற

# சடகோபரந்தாதி.

சடகோபரது அந்தாதி என விரியும்; சடகோபர்விஷயமாக அந்தாதித் தொடையாற் பாடப்பட்ட தொரு பிரபந்தம் என்பது பொருள்: இத்தொடர்மொழியில் தொக்குநின்ற ஆறும்வேற்றுமையுருபின் பொருளாகிய சம்பந்தம், விஷயமாகவுடைமை; விஷ்ணுபுராணம், விநாயகரகவல் என்பவற்றிற்போல. சடகோபரைப்பற்றிய அந்தாதி என விரித்தால், இரண்டாம் வேற்றுமையுருபும் பொருளும் உடன்தொக்க தொகையாம்.

'சடகோபர்' என்பது - ஸ்ரீவைஷ்ணவமதத்திற் சிறந்த மெய்யடியார்களென்று கொண்டாடப்படுகிற ஆழ்வார்கள் பன்னிருவரில் ஐந்தாமவரான நம்மாழ்வாரது திருநாமங்களி லொன்று. பாண்டியநாட்டில் தாமிரபர்ணி நதிதீரத்தி லுள்ளதான திருக்குருகூரில் வேளாள வருணத்தவராகிய திருவழுதிவளநாடரென்பவரது சந்ததியிலே காரியென்பவர்க்கு உடையநங்கையார்திருவயிற்றில், திருவவதரித்த இவர் பிறந்தபொழுதே தொடங்கிஅழுதல் பால்குடித்தல் முதலிய குழந்தைச்செய்கை யொன்றையுங் கொள்ளாமலே வாட்டமின்றிப் பரிபூர்ணராய் வளர்ந்துவருகிற ஆச்சரியத்தைத் தாய்தந்தையர் கண்டு இவரை அத்திருப்பதியிலுள்ள திருமாலின் திருக்கோயிலிற் கொண்டுபோய் விட, இவர் அங்குஇருந்த ஒருபுளியமரத்தின்கீழ்ச் சென்று வீற்றிருந்து பதினாறுபிராயமளவும் கண்திறவாமல் மௌனமாக எழுந்தருளியிருந்தபின்பு, மதுரகவிகள் இவ்வாழ்வாருடைய மகிமையை யறிந்து வந்து அடைந்து அடிமைத்தொழில் செய்துவருகையில், ஆழ்வார் இருக்கு யசுர் அதர்வணம் சாமம் என்ற நான்குவேதங்களின் சாரார்த்தங்கள் முறையே அமையத் திருவிருத்தம் திருவாசிரியம் பெரியதிருவந்தாதி திருவாய்மொழியென்னும் நான்குபிரபந்தங்களை அருளிச்செய்து உலகத்தை உய்வித்தனரென்று வரலாற்றின் சுருக்கம் அறிக. கர்ப்பத்திலிருக்கிறபொழுது ஞானமுடையனவாயிருக்கின்ற குழந்தைகளைப் பிறந்தஉடனே தனது ஸ்பரிசத்தால் அஜ்ஞானத்துக்கு உள்ளாக்கி அழுதல் அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடுந் தன்மையதான சடமென்னும் வாயு, இவ்வாழ்வார் அவதரித்தபொழுது இவரையும் தொடுதற்கு வர, அப்பொழுது இவர் அதனை உங்காரத்தால் ஒறுத்துஓட்டி யொழித்ததனால், சடகோபர் என்று இவர்க்குத் திருநாமமாயிற்று: எம்பெருமானுடைய திவ்யமங்கள குணகணங்களாகிய அமுதவெள்ளத்திலே முழுகி மிகவும்ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திடுபவராதல்பற்றி 'ஆழ்வார்கள்' என்று பெயர்பெற்ற பரமபாகவதர்களில் இவர் பிரதானராதலால், 'ஆழ்வார்' என்பது இவர்க்குச் சிறப்புப்பெயராக வழங்கும். மாறன், பராங்குசன், வகுளாபரணன், திருநாவீறுடையபிரான், திருக்குருகூர்நம்பி, குருகைப்பிரான் முதலிய திருநாமங்களும் இவர்க்கு உண்டு.

அந்தாதி - அந்தத்தை ஆதியாகவுடையது, அன்மொழித் தொகை; வடமொழித்தொடர், தீர்க்கசந்தி: அந்த ஆதி எனப் பிரிக்க. அந்தாதியாவது- முன்னின்ற செய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்துவருஞ் செய்யுளின் முதலாக அமையும்படி பாடுவது; இங்ஙனம்பாடும் நூலினது ஈற்றுச்செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையவைத்தல், மண்டலித்த லெனப்படும். இது, தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்றும். பதிற்றந்தாதி, நூற்றந்தாதி என்ற வகைகளில் இந்நூல், நூற்றந்தாதியாம்; அதாவது - நூறுவெண்பாவினாலேனும், நூறு கட்டளைக்கலித்துறையினாலேனும் அந்தாதித்தொடையாற் கூறுவது. இந்நூல் - அந்தாதித்தொடையா லமைந்த நூறுகட்டளைக் கலித்துறைகளை யுடையது. சொற்றொடர்நிலைச்செய்யுள் பொருட்டொடர் நிலைச்செய்யுள் என்ற வகையில், இது, சொற்றொடர்நிலை; "செய்யுளந்தாதி சொற்றொடர் நிலையே" என்றார் தண்டியலங்காரத்தும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளியலில் "விருந்தேதானும்,புதுவது கிளந்த யாப்பின்மேற்றே" என்பதனால், 'விருந்துதானும் பழங்கதைமேலதன்றிப் புதிதாகத் தாம்வேண்டியவாற்றால் தொடுக்கப்படுந் தொடர்நிலை மேலது' என்று கூறினமையின், இந்நூல், அங்ஙனங்கூறிய விருந்தாமென்று உணர்க. அச்சூத்திரவுரையில் அந்தாதியும் கலம்பகமும் முதலாயின உதாரணங் காட்டப்பட்டுள்ளவாறுங் காண்க. இனி, இதனைச் சிறுகாப்பியத்துள் அடக்குவர் பிற்காலத்தார். இப்பிரபந்தம், தோத்திரரூபமானது.

---

## சிறப்புப்பாயிரம்.

க. தேவிற்சிறந்ததிருமாற்குத்தக்கதெய்வக்கவிஞன்
பாவிற்சிறந்ததிருவாய்மொழிபகர்பண்டிதனே
நாவிற்சிறந்தவம்மாறற்குத்தக்கநன்னாவலவன்
பூவிற்சிறந்தவாழ்வான்கம்பநாட்டுப்புலமையனே.

(இதன்பொருள்.) தேவில் - (பிரமன் ருத்திரன் இந்திரன் முதலிய) தேவர்களனைவருள்ளும், சிறந்த-மேம்பட்டவனான, திருமாற்கு-ஸ்ரீமந்நாராயணனுக்கு, தக்க - தகுந்த, தெய்வம் கவிஞன் - தெய்வத்தன்மையுள்ள கவி பாடவல்ல புலவன், பாவில் சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதனே - எல்லாப்பாடல்களிலும் மேம்பட்ட திருவாய்மொழியென்னுந் திவ்வியப்பிரபந்தத்தைத் திருவாய்மலர்ந்தருளிய ஞானபண்டிதரான நம்ஆழ்வாரேயல்லது வேறில்லை; (அவ்வாறே), நாவின் சிறந்த அ மாறற்கு தக்க நல் நாவலவன் - (அங்ஙனம்பாடவல்ல) நாவினாற்சிறந்த அச்சடகோபர்க்குத் தக்க கவிபாட வல்ல சிறந்தபுலவன், பூவில் சிறந்த ஆழ்வான் கம்பநாட்டுப் புலமையனே - இந்நிலவுலகத்திற் சிறந்த கம்பநாட்டாழ்வாரென்னும் வித்துவானேயல்லது வேறில்லை; (என்றவாறு.)

தேவாதிதேவனான திருமாலின் வைபவத்துக்கு ஏற்றபடி கவிபாடவல்லவர் சடகோபரே; அச்சடகோபருடைய வைபவத்திற்கு ஏற்றபடி கவிபாட

வல்லவர் கம்பநாட்டாழ்வாரே என்பது கருத்து. ஏகாரமிரண்டும் - பிரிநிலையோடு, தேற்றம். இச்செய்யுளில் முன்னிரண்டடியை உபமானமாகவும், பின்னிரண்டடியை உபமேயமாகவுங் கொண்டு எடுத்துக்காட்டுவமையணியென்னலாம். திருமால் - திருமகள்கொழுநனான ஸ்ரீமகாவிஷ்ணு. தேவிற்சிறந்த திருமால்—"பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்பூநதம், ஆவிற்கு அருமுனியா யானைக்கு அமரரும்பல், தேவில்திருமா லெனச்சிறந்ததென்பவே" என்றார் கவிசாகரப்பெருந்தேவனாரும். தெய்வக்கவிஞன்-எல்லாப் பொருளையும் உள்ளபடி உணர்ந்து அங்ஙனமே உரைக்குந் திவ்வியஞானத்தையுடைய கவி; பரதேவதையான திருமாலின் திருக்கல்யாண குணங்களையே பாடுங் கவி.

ஆழ்வாரை "தெய்வக்கவிஞன்' என்றற்கும் திருவாய்மொழியை 'பாவிற்சிறந்தது' என்றற்கும் ஏற்றதொரு வரலாறு வருமாறு:—நம்மாழ்வாரது சிஷ்யரான மதுரகவியாழ்வார், அச்சடகோபர் திருநாட்டையலங்கரித்த பின்பு, அந்த ஆசிரியரைப் பிரிந்ததற்கு மிக இரங்கி அரிதில் தேறி அர்ச்சாரூபமான ஆழ்வார் விக்கிரகத்தை எறியருளப்பண்ணி ஆழ்வாரவதாரஸ்தலமான திருக்குருகூரென்னுந் திருநகரியிலே பிரதிஷ்டை செய்து, அந்தத் திவ்விய மூர்த்திக்கு நித்திய நைமித்திக உத்ஸவங்களையெல்லாம் சிறப்புற நடத்திக் கொண்டு வந்தார். அத்திருவிழாக்களில் 'வேதந்தமிழ்செய்தமாறர் வந்தார்,' 'திருமாலுக்குஉரிய தெய்வப்புலவர் வந்தார்', 'அளவிலாஞானத்து ஆசிரியர் வந்தார்' என இவைமுதலாக அநேகவிருதுகளைக் கூறித் திருச்சின்னம் ஒலிமுழங்குதலைக் கேள்வியுற்றவளவிலே, மதுரைச் சங்கத்தாரது தூண்டுதலால் அவர்கள் மாணாக்கர்கள் வந்து எதிரிட்டு 'உங்கள் ஆழ்வார் பக்தரேயன்றிப் பகவானல்லரே: அவர் சங்கமேறிய புலவரோ? அவர் பாடிய திருவாய்மொழி முதலியன சங்கமேறிய செய்யுளல்லவே: அவரை வேதந்தமிழ்செய்தவ ரென்று சிலாகிப்பது தகுதியோ?' என்று பல குதர்க்கம் பேசி விருதுகளைத் தடுத்திட்டனர்; அதற்கு மதுரகவிகள் மனம்பொறாது வருந்தி 'இவர்கட்குக் கர்வபங்கமாம்படி தேவரீர் செய்தருளவேண்டும்' என்று ஆழ்வாரையே பிரார்த்திக்க, சடகோபர் ஒரு கிழப்பிராமணவடிவத்தோடு வந்து திருவாய் மொழியில், "கண்ணன்கழலிணை, நண்ணும்மனமுடையீர், எண்ணுந் திருநாமம், திண்ணம்நாரணமே" என்ற பாசுரத்தின் முதலடியை ஒரு சிற்றேட்டில் எழுதிக்கொண்டுபோய்ச் சங்கப்பலகையில் வைத்திட்டால் அவர்கள் செருக்கு அடங்கும்' என்று கூறியருளினார்; அந்நியமனத்தின்படியே சடகோபபக்தர், கண்ணன்கழலிணையை யெழுதிய எட்டை யெடுத்துப்போய் வைத்திட்ட மாத்திரத்தில், சங்கப்புலவர்கள் ஏறியிருந்த பலகை பொற்றாமரைப் பொய்கையில் மூழ்கித் தன்மேலிருந்த புலவர்களையெல்லாம் நீரில்வீழ்த்தி உடனே எழுந்து தன்மீதுவைத்த சிறுமுறியை மாத்திரம் ஏந்திக்கொண்டு மிதந்தது; அப்பொழுது நீரில்விழுந்து அமிழ்ந்து தடுமாறி எழுந்து மெல்லநீந்திக் கரை சேர்ந்த சங்கப்புலவர்கள், சகலவேதசாஸ்திரங்களையும் பிறர்கற்பியாமல் தாமேயுணர்ந்த பகவதம்சமான ஆழ்வாருடைய தெய்வீகபாண்டித்தியத்தை யுணர்ந்து இறுமாப்பு ஒழிந்து, தாம் முன்பு அபசாரப்பட்டதற்கு அநுதாபமுற்று,

அதனைக்ஷமிக்கும்பொருட்டு அவரது மகிமைதங்கியபிரபாவத்தைக் குறித்துத் தோத்திரமாகத் தனித்தனி ஒவ்வொருபாடல்பாடி வெளியிடுபவரானார்கள்; அங்ஙனம் வெளியிடுகையில், அப்பாடல்கள் யாவும் "சேமங் குருகையே செய்ய திருப்பாற்கடலோ, நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமம், துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு; முளவோ பெருமானுனக்கு" என்ற இப்பாடல்வடிவாகச் சிறிதும் வேற்றுமை யின்றி ஒற்றுமைப்பட்டிருக்கக் கண்டு அவர்களனைவரும் 'இதுஎன்ன அற்புதம்! இதுவும் ஆழ்வாரது தெய்வத்திருவருளே' என்று அதிசயப்பட்டு, "ஈயாடுவதோ கருடற்கெதிரே இரவிக்கெதிர் மின்மினி யாடுவதோ, நாயோடுவதோ வுறுமிப்புலிமுன் நரிகேசரிமுன் நடையாடுவதோ, பேயாடுவதோ வழகூர்வசிமுன் பெருமான்வகுளாபரணன்னருள்கூர்ந், தோவா துரையாயிரமாமறையின் னொருசொற்பொறுமோ வுலகிற்கவியே" என்பது முதலாகச் சிற்சிலகவிகள்பாடிப் புகழ்ந்து அன்றுமுதல் ஆழ்வார்க்கு விருதுகூறல் முதலிய சகலவைபவங்களையும் முன்னிலும் பலமடங்கு மிகுதியாக நடப்பித்துவந்தார்கள் என்பதாம்.

ஆழ்வார் பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பால்குடித்தல் முதலிய லோகவியாபாரம் ஒன்றுமின்றி உலகநடைக்கு மாறாக இருந்ததனால்,இவர்க்கு 'மாறன்' என்று திருநாமமாயிற்று; வலியவினைகட்கு மாறாக இருத்தலாலும், அந்நியமதஸ்தர்களை அடக்கி அவர்கட்குச் சத்துருவாயிருத்தலாலும், பாண்டியநாட்டில் தலைமையாகத்தோன்றியதனாலும் வந்த பெயரென்றலுமுண்டு. கம்பநாட்டுப்புலமையன் - கம்பநாட்டில் தோன்றிய புலவன்; "கம்பநாட்டாழ்வான்கவி," "தெய்வப்புலமைக்கம்பநாட்டாழ்வார்," "கம்பநாடன்," "கம்பநாடுடையவள்ளல்" என்பனவுங் காண்க. இவர், ஆழ்வார்கள் பன்னிருவரி லொருவரல்லராயினும், அவர்கள்போலப் பக்தியிற் சிறந்தவரென்பது பற்றி, ஆழ்வார் என்று வழங்கப்பட்டனர். இப்பெயரால் மற்றுஞ்சிலபக்தர்களை வழங்குவதை, பரதாழ்வான் சத்துருக்கனாழ்வான் பிரகலாதாழ்வான் கஜேந்திராழ்வான் சுதரிசனாழ்வான் கூரத்தாழ்வான் வில்லிபுத்தூராழ்வார் முதலிய பெயர்களிலுங் காண்க. அன்றியும், நம்மாழ்வார்விஷயமாக 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்ற பதிற்றந்தாதியைப் பாடிய மதுரகவிகளை 'மதுரகவியாழ்வார்' என்றல்போல, நம்மாழ்வார்விஷயமாக 'சடகோபரந்தாதி' என்னும் நூற்றந்தாதியைப் பாடிய கம்பநாடரையும் 'கம்பநாட்டாழ்வார்' என்று சொல்லத்தகும்; "மன்றேபுகழுந்திருவழுந்தூர்வள்ளல்மாறனைமுன், சென்றேமதுரகவிப்பெருமாள் தென்தமிழ்த்தொடையில், ஒன்றேபதிகமுரைத்தவன்பொன்னடியுற்றுநின்றான், என்றேபதிகம்பதிகமதாக விசைத்தனனே" எனஇந்நூலினிறுதியில்வருஞ் சிறப்புப்பாயிரச்செய்யுள்கொண்டும், மதுரகவியாழ்வாரும் கம்பநாட்டாழ்வாரும் ஒருபுடையொப்புமையுடையராதலுணர்க. மற்றும், ஸ்ரீராமபக்தியை மிகுதியாகவுடைமைபற்றிப் பரதன் 'பரதாழ்வான்' என்று வழங்கப்படுதல்போல, ஸ்ரீராமபக்தியை மிகுதியாகவுடைய கம்பநாடரும் 'கம்பநாட்டாழ்வார்' என்று வழங்கப்படுதற்கு ஏற்றவராவர். இனி, வாழ்வான் என்று எடுத்து, நிலவுலகத்துச் சிறந்த வாழ்வையுடையவரென்றலும் ஒன்று.

'தேவ' என்ற வடமொழி, தமிழில் 'தே' என்று சிதைந்துவழங்கும்; இதனைத் தமிழ்மொழியே யென்பாரு முளர். 'தே' என்ற ஓரெழுத்தொருமொழியின்மேல், 'இல்' என்ற எழனுருபு சேரும்போது, இடையில் வகரவுடம்படுமெய்பெற்று 'தேவில்' என்று நின்றது; "ஏமுன் இவ்விருமையும்" என்றார் நன்னூலார். திருவாய்மொழி - மேன்மையான வாய்மொழிகளினாலாகிய பிரபந்தம்; அடையடுத்த கருவியாகுபெயர். நாவிற்சிறந்தமாறன் - 'திருநாவீறுடையபிரான்' என்று ஆழ்வார்க்கு ஒரு திருநாமமிருத்தலுங் காண்க. நாவலவன்-கவிபாடுதல் பிரசங்கஞ்செய்தல் முதலிய நாவின்வல்லமை யுடையவன். புலமை - கல்வித்தேர்ச்சி: அதாவது - பலவேறுவகைப்பட்ட நூலுணர்ச்சிகளை யெல்லாம் ஒருங்கே கொண்ட பேரறிவுடைமை; பாண்டித்தியம்: அதனையுடையவன், புலமையன்.

இக்கவி, அபியுக்தரி லொருவர் செய்தது. இது, வைஷ்ணவசம்பிரதாயத்தில் 'தனியன்' எனப்படும். (நூலினுள் அடங்காது தனியே பாயிரமாய் நிற்றல்பற்றியது, அப்பெயர்: 'அன்' விகுதி - உயர்வுப்பொருளது.) அடுத்த மூன்றுசெய்யுள்களும் இவ்வாறே. (க)

உ. ஆரணத்தின்சிரமீதுறைசோதியையந்தமிழாற்
பாரணஞ்செய்தவனைக்குருகூரனைப்பற்பலவா
நாரணனாமெனவேத்தித்தொழக்கவிநல்குகொடைக்
காரணனைக்கம்பனைநினைவாமுட்களிப்புறவே.

(இ - ள்.) ஆரணத்தின் சிரம்மீது - வேதமுடிவிலே, உறை - பொருந்திய, சோதியை-பரஞ்சோதிஸ்வரூபியான ஸ்ரீமந்நாராயணனை, அம் தமிழால்-அழகிய தமிழ்ப்பாசுரங்களினால், பாரணம் செய்தவனை - பாடியநுபவித்தவரான, குருகூரனை-திருக்குருகூரில் அவதரித்தவராகிய நம்மாழ்வாரை, பல்பல ஆ - பலபலவகையாக, நாரணன் ஆம் என ஏத்தி தொழ - அந்த நாராயணமூர்த்தியே யாவரென்று துதித்து (அனைவரும்) வணங்கும்படி, கவி நல்கு - கவிபாடிய, கொடை கார் அணனை - அருட்கொடையினால் மேகத்தைப்போல்பவராகிய, கம்பனை - கம்பநாட்டாழ்வாரை, உள் களிப்பு உற - மனத்தில் ஆனந்தம் உண்டாகி மிகுமாறு, நினைவாம் - (எப்பொழுதும்) சிந்திக்கக்கடவோம், (யாம்); (எ - று.)

வேதத்தின்பிரிவு இரண்டனுள், யாகம்முதலிய கிரியைகளைக் குறிப்பதான கர்மகாண்ட மெனப்படுகிற பூர்வபாகம் தவிர, பகவானைக்குறித்ததாய் உபநிஷத் என்றும் வேதாந்தம் என்றும் பெயர்சொல்லப்படுகிற ப்ரமகாண்டமாகிய உத்தரபாகம், 'ஆரணத்தின்சிரம்' எனப்பட்டது. அவ்வுபநிஷத்துக்களில் நன்குபிரதிபாதிக்கப்படுகிறவனும், சூரியன் முதலிய சுடர்களின் ஒளியெல்லாவற்றினும் மேம்பட்ட ஒளிவடிவமாயுள்ளவனுமான கடவுளென்பார் 'ஆரணத்தின் சிரமீதுறைசோதி' என்றார்; "வேதாந்தவிழுப்பொருளின் மேலிருந்த விளக்கு" என்றார் பெரியாழ்வாரும். 'தமிழ்' என்பது - இங்கு, அப்பாஷையிலாகிய செய்யுள்கட்கு ஆகுபெயர். அவற்றிற்கு அழகு - சுருங்கச்சொல்லல் முதலியன. "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம், கண்ணனெம்பெருமான்" என்னும்படி, ஆழ்வாரெம்பெருமானைத்

தியானித்துக் கவிபாடித்துதித்து ஆனந்தமனுபவித்தலையே தமக்குத் தாரக போஷக போக்கியங்களாகக் கொண்டு வளர்ந்தவராதலால், 'சோதியை யந் தமிழாற் பாரணஞ்செய்தவன்' என்றார். இத்தொடர்க்கு - எம்பெருமானைத் தாம்பாடும் இனியபாடல்களாகிய அமிருதத்தைக்கொண்டு திருப்தி செய்வித்தவரென்றும் பொருள் கொள்ளலாம். குருகூரன் - திருவவதாரஸ்தலத்தினால் வந்த பெயர்; குருகூர் - நூற்றெட்டுத்திருமால்திருப்பதிகளுட் பாண்டியநாட்டுத்திருப்பதி பதினெட்டில் ஒன்று. செய்தவனை, குருகூரனை என்று விசேஷணம் விசேஷ்யம் என்ற இரண்டிலும் வேற்றுமையுருபு விரித்தது, வடமொழிநடை: காரணனை, கம்பனை என்றவிடத்தும் இது காண்க. பற்பலவா-ஆழ்வாரைச் சிறப்பித்தும், திருவாய்மொழியைச் சிறப்பித்தும், அது கற்றோரைச் சிறப்பித்தும், தலைவன்கூற்றாகச் சிறப்பித்தும், தலைவிகூற்றாகச் சிறப்பித்தும், தாய்கூற்றாகச் சிறப்பித்தும், தோழிகூற்றாகச் சிறப்பித்தும் பிறவகைகளாற் சிறப்பித்தும் இப்படி பலபடிகளாக என்க.

ஆழ்வாரைப் பகவானுடைய அம்சமென்று பாத்மபுராணம் கூறுகின்றதற்கு ஏற்ப, 'நாரணனும்' எனப்பட்டது; "நாராயணனுவடியேனுடுந்தமிழ்வேத பாராயண சடகோபா" என்பர் பிள்ளைப்பெருமாளையங்காரும். 'அணவுபவன்' என்றது, 'அணன்' என்று விகாரப்பட்டு நின்றது; 'அந்தணர்' என்பதற்கு-ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'அந்தத்தை அணவுபவர்' என்று விரித்துக் காரணப்பொருளுரைத்தது இங்கு ஒப்புநோக்கத்தக்கது. கொடைக்காரணன்-"கைம்மாறுவேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோவுலகு" என்றபடி மேகம்போலப் பிரதியுபகாரத்தை விரும்பாமல் வரையாது கொடுக்கும் ஞானவண்மையை யுடையவ னென்க; "காரணக்கொடையான் கம்பன்" என்ற கம்பராமாயணச் சிறப்புப்பாயிரமுங் காண்க: இனி, கொடைக்காரணன் என்பதற்கு-கொடைக்குக் காரணமானவன் [அதாவது - கொடையைச் செய்பவன்] என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று. 'நினைவாம்' என்ற தன்மைப்பன்மை, உலகத்தாரை உளப்படுத்தியது. 'கம்பனை நினைவாம்' என விரித்தல்விகாரம் பெற்ற பாடமும் உண்டு; அது, ஓசைநயத்துக்குச் சிறக்கும். (உ)

ஈ. நஞ்சடகோபனைப்பாடினையோவென்றுநம்பெருமாள்
விஞ்சியவாதரத்தாற்கேட்பக்கம்பன்விரைந்துரைத்த
செஞ்சொலந்தாதிகலித்துறைநூறுந்தெரியும்வண்ண
நெஞ்சடியேற்கருள்வேதந்தமிழ்செய்தநின்மலனே.

(இ - ள்.) வேதம் தமிழ் செய்த நின்மலனே - வேதங்களைத் தமிழ்த்திவ்வியப்பிரபந்தங்களாக அருளிச்செய்த குற்றமற்ற ஸ்வாமி!—நம் சடகோபனை பாடினையோ என்று - 'நம்ஆழ்வாரைத்துதித்துப் பிரபந்தம் பாடினையோ?' என்று, நம் பெருமாள் விஞ்சிய ஆதரத்தால் கேட்ப - ஸ்ரீரங்கநாதன் மிக்க அன்புகொண்டு வினவியருள, (அதனை யநுசரித்து), கம்பன் விரைந்து உரைத்த - கம்பர் விரைவாகப்பாடின, செம் சொல் அந்தாதி கலித்துறை நூறும் - செந்தமிழ்ச் சொற்களாலான அந்தாதிப்பிரபந்தத்திலுள்ள நூறுகட்டளைக் கலித்துறைகளையும், தெரியும் வண்ணம் - அறிந்து கொள்ளும்படி,

அடியேற்கு நெஞ்சு அருள் - தாசனுன எனக்கு மனப்பரிபாகத்தை அளித் தருள்வாயாக; (எ - று.)

என்று அபிவுக்த ரொருவர் ஆழ்வாரைப் பிரார்த்திக்கிற வகையாக இந்நூற்குப் பாயிரம்பாடின ரென்க; அடுத்தசெய்யுளும் இத்தன்மைத்தே: "எங்கள்கதியே இராமாநுசமுனியே, சங்கைகெடுத்தாண்ட தவராச - பொங்குபுகழ், மங்கையர்கோ னீந்த மறையாயிரமனைத்தும், தங்குமனம் நீ எனக்குத்தா" என்ற பெரியதிருமொழித்தனியனும் இவ்வகை வாய்பாடு அமைய இருத்தல் காண்க.

நம்சடகோபனைப்பாடினையோ வென்று நம்பெருமாள் வினவிய ஆதரத் தாற்கேட்ட விவரம், கம்பர்வரலாற்றிற் கூறப்பட்டது. சடகோபர் நம்பெருமாளால் 'நம்ஆழ்வார்' என்று அபிமானித்து விசேஷகடாக்ஷஞ் செய்யப்பட்டு மற்றையாழ்வார்களனைவரினும் உயர்வுபெற்றதனுல், 'நம்மாழ்வார்' என்று பெயர்பெற்றனர்; 'நம்பெருமாள்' என்ற பெயரும் உயர்ச்சியை விளக்கும்: "நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை, யென்ப ரவரவர்தம் ஏற்றத் தால்" என்ற உபதேசரத்தினமாலையைக் காண்க. பெருமாள்=பெருமான்: பெருமையுடையவன்; இதில், பெருமையென்ற பகுதி ஈற்று ஐகாரம் மாத் திரம் கெட்டு 'பெரும்' என நின்றது: 'ஆன்' என்ற ஆண்பால்விகுதி 'ஆள்' என ஈறுதிரிந்தது; 'ஆள்' என்ற பெண்பால் விகுதியே சிறபான்மை ஆண்பாலுக்கு வந்ததென்றலு மொன்று: அன்றி, பெருமையை ஆள்பவனெனக் கொண்டால், 'ஆள்' என்ற வினைப்பகுதி கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்து கெட்ட தென வேண்டும். 'வேதம்' என்பது-(அறியவேண்டுமவைகளையெல்லாம்) அறிவிப்பதுஎன்று காரணப்பொருள்படும். 'விரைந்துஉரைத்த' என்றதனுல், இவ்வந்தாதி ஆசுகவியாகப் பாடப்பட்டதென்பது போதரும். அடியேன் - அடிமையென்னும் பண்பினடியாப் பிறந்த தன்மை யொருமைக் குறிப்பு வினையாலணையும்பெயர்.

இப்பொழுதைக்குச் சற்றேறக்குறைய ௬௦௦ - வருடங்கட்குமுன்பு இருந்த ஸ்ரீபிள்ளைலோகாரியசீயர் தாமியற்றிய உபதேசரத்தினமாலைவியாக் யாநத்தில் மேற்காட்டிய "நம்பெருமாள் நம்மாழ்வார்" என்றதொடக்கத்துப் பாசுரத்தின்கீழ் இச்செய்யுட்பகுதியை யெடுத்து மேற்கோள்காட்டியுள்ளதனுல், இத்தனியன்அக்காலத்திலேயேபிரசித்தமாகஇருந்ததென்று அறியலாம்.

௪. நாதனரங்கனயந்துரையென்னநற்கம்பனுன்றன்
பாதம்பரவியபைந்தமிழ்நூறும்பரிவுடனே
யோதும்படியெனக்குள்ளந்தனையருளோதரிய
வேதந்தமிழ்செய்தமெய்ப்பொருளேயிதென்விண்ணப்பமே.

(இ - ள்.) ஓது அரிய-ஓதியுணர்தற்கு அரியனவான, வேதம் - வேதங்களின் ஸாரார்த்தங்களை, தமிழ் செய்த - தமிழ்த் திவ்யப்பிரபந்தங்களாக அருளிச்செய்த, மெய்பொருளே - உண்மையான பரம்பொருளே!—நாதன் அரங்கன் - ஸ்ரீரங்கநாதன், நயந்து - விரும்பி, உரை என்ன - (நம்சடகோ

பனைப்)பாடு' என்று நியமித்தருள, நல் கம்பன்-சிறந்த கம்பநாட்டாழ்வார், உன்தன் பாதம் பரவிய - உன்னுடையதிருவடிகளைத் துதித்த, பைந் தமிழ் நூறும் - பசுந்தமிழ்ச்சொற்களால் தொடுத்த நூறுபாசுரங்களையும், பரிவுடனே ஓதும்படி-அன்போடு கற்றுஉணரும்படி, எனக்கு உள்ளந்தனை அருள் - அடியேனுக்கு மனப்பரிபாகத்தை அளித்தருள்வாய்: இது என் விண்ணப்பமே-இதுவே (உன்பக்கல்) அடியேன் செய்யும் விஞ்ஞாபநம்; (எ - று.)

"சொல்லின்தொகைகொண் டுனதடிப்போதுக்குத் தொண்டுசெய்யும், நல்லன்பரேத்துமுன்நாமமெல்லா மென்றன்நாவினுள்ளே, அல்லும் பகலுமமரும்படிநல்கு அறுசமயம், வெல்லும்பரம விராமாநுச விதென்விண்ணப்பமே" என்ற இராமாநுசநூற்றந்தாதித்தனியன் இவ்வகைவாய்பாடு அமைய இருத்தல் காண்க.

நாதன்அரங்கன் - யாவர்க்குந்தலைவனும் ஸ்ரீரங்கத்திற்கோயில்கொண்டு எழுந்தருளியிருப்பவனுமான நம்பெருமாள். நற்கம்பன்-ஞானத்திலுங்குணஞ் செயல்களிலுஞ் சிறந்த கம்பன். செந்தமிழை 'பைந்தமிழ்' என்றல், ஒரு வகைக்கவிமரபு. தமிழுக்குப் பசுமை - இனிமையுமாம். ஆழ்வார் பகவானது அம்சமாதலால், அவரை 'மெய்ப்பொருளே' என்று விளித்தார். விண்ணப்பம் - விஜ்ஞாபநம் என்ற வடசொல்லின் சிதைவு. (சு)

---

# சடகோபரந்தாதி.

## நூல்.

க. வேதத்தின்முன்செல்கமெய்யுணர்ந்தோர்விரிஞ்சன்முதலோர்
கோதற்றஞானக்கொழுந்தின்முன்செல்கருணங்கடந்த
போதக்கடலெங்கடென்குருகூர்ப்புனிதன்கவியோர்
பாதத்தின்முன்செல்லுமேதொல்லைமூலப்பரஞ்சுடரே.

(இ - ள்.) தொல்லை - பழமையானதாயும், மூலம் - (எல்லாவற்றிற்கும்) மூலகாரணமாயும், பரம் - (எல்லாவற்றிற்கும்) மேலானதாயுமுள்ள, சுடர் - ஜ்யோதிஸ்வரூபமாய் விளங்குகிற ஸ்ரீமந்நாராயணன்,—வேதத்தின் முன் செல்க - வேதங்களைக்கடந்துசென்றாலுஞ் செல்லட்டும்; மெய் உணர்ந்தோர்- தத்துவங்களையாராய்ந்து அறிபவர்களான முனிவர்களும், விரிஞ்சன் முதலோர் - பிரமன்முதலான தேவர்களுமாகிய அனைவருடைய, கோது அற்ற ஞானம் கொழுந்தின் முன் - குற்றமற்ற ஞானத்தின்முடிவைக் கடந்து, செல்க-சென்றாலுஞ்செல்லட்டும்; குணம் கடந்த போதம் கடல் - எண்ணளவு கடந்த ஞானம் நிறைந்த கடலாகிய, எங்கள் தென் குருகூர் புனிதன் - அழகிய திருக்குருகூரில் அவதரித்த பரிசுத்தமூர்த்தியான நம்மாழ்வார் அருளிச் செய்த, கவி - பாசுரத்தினது, ஓர் பாதத்தின் முன் - ஓர் அடியைக் கடந்து, செல்லுமே - செல்லமாட்டுவனோ? [செல்லமாட்டான் என்றபடி]; (எ - று.)

ஸ்ரீமந்நாராயணன் சடகோபருடைய கவியின் ஒருபாதத்தைக் கடக்க மாட்டான் என்பதற்குத் திருஷ்டாந்தமாக, கீழ் "தேவிற்சிறந்த" என்ற பாயிரச்செய்யுளி னுரையிற் காட்டிய "கண்ணன் கழலிணை" என்ற அடியைப் பற்றிய வரலாற்றைக் கூறுவர். ஆழ்வாரருளிச்செய்த திருவாய்மொழி முதலிய திவ்வியப்பிரபந்தங்களிலுள்ள ஒவ்வொருசெய்யுளின் ஒவ்வோர் அடியும் ஸ்ரீமந்நாராயணனுடையதிவ்யஸ்வரூபத்தை ஐயந்திரிபற நன்குஉணர்ந்து தெளிவாக வெளியிடுதலால், அப்பரமன் அதனைக்கடந்துசெல்லமாட்டாது அதனுள்ளே அடங்கிநிற்பன் என்பதாம். பரமாத்மஸ்வரூபத்தைமுற்றமுணர்ந்து தெரிவித்தலில் ஆழ்வார்க்குஉள்ளஞானாதிசயத்தை விளக்கியபடியாம். அந்தத் திவ்வியஞானத்தின் வரம்பின்மை விளங்கவே, 'குணங்கடந்த போதம்' என்றார் எண்ணிலாக்காட்சி [அநந்தஞானம்] என்றபடி. குணம்-எண்கூட்டிப் பெருக்குதல். 'போதக்கடல் - நீர்நிறைந்த கடல்போல ஞானம் நிறைந்த கடல் என்க. இனி, 'குணம்கடந்த' என்பதற்கு-கருணைமுதலிய சாத்துவிககுணங்களின் முடிவெல்லையில்நின்ற வென்று உரைப்பினும் அமையும்; "குணமென்னுங்குன்றேறி நின்றார்" என்றாற்போல. அருள், ஐம்பொறியடக்கல், தவம், பொறுமை, மெய்யுணர்வு, மேன்மை, மௌனம், வாய்மை என்ற எட்டும் சாத்துவிககுண மெனப்படும். இனி, 'குணங்கடந்த, என்பதற்கு-காமம் கோபம் முதலிய இழிகுணங்க ளில்லாத என்று உரைப்பாரு முளர்; பரமாத்மாவை 'நிர்க்குணன்' என்றாற்போல. குணங்கள் தந்த என்று பதம்பிரித்து, (எம்பெருமானுடைய அடியவர்க்கெளிமைமுதலிய) திருக்கல்யாணகுணங்களைச் சொ

ல்லிவெளியிட்டுதவிய என்றலும் ஒன்று. 'புனிதன்கவியோர்பாதம்' என்றது, திருவாய்மொழியின் முதற்பாசுரத்தின் முதலடியான "உயர்வறவுயர்நலமுடையவன் யவனவன்" என்றதை என்பர் ஒருசாரார்; அதிலே பரப்பிரஹ்மஸ்வரூபம் அடங்கியிருத்தல் காண்க.

பரமாத்மாவினுடைய ஸ்வரூபத்தை நாடிச்சொல்லிக்கொண்டே சென்ற வேதம் அதன்முடிவு தனக்கு எட்டாமையால் மீண்டதென்பது, அவ்வேதஞ்சொல்வதனாலேயே தெரிகிறது; ஆகவே, 'வேதத்தின்முன்செல்க' என்றது அமையும்: கோயில்களில் உத்ஸவங்கண்டருளுகிறபொழுது எம்பெருமான் நடுவேஎழுந்தருள, வடமொழிவேதம் அவனை எட்டமாட்டாது நாடித்தொடர்ந்து செல்லுதற்கு அறிகுறியாக எம்பெருமானுக்குப்பின்னே பாராயணஞ்செய்யப்பட்டுவருதலும், தமிழ்வேதமாகிய திவ்வியப்பிரபந்தம் அவனது சொரூபத்தை யுணர்ந்து முன்செல்லுதல் தோன்ற முன்னே ஓதப்படுதலுங் காண்க; "தொடர்ந்தாரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூதுநடந்தான்" என்ற சிலப்பதிகாரத்தையும், "கடந்தஞானியர் கடவுளர் காண்கலாக்கழலிணை சிவப்பேறத், தொடர்ந்தநான்மறை பின்செலப் பன்னகதுவசன்மாநகர்த்தூது நடந்த நாயகன்," "ஊரலும் வேதமுந் தொடர," "சாருடனே, முனிவர்களுஞ் சுருதிநான்கும், தேடுகின்றபதஞ்சிவப்பத் திருநாடுபெறத்தூதுசெல்ல" என்ற வில்லிபுத்தூரார் பாரதத்தையும் நோக்குக. முன்-இடமுன். இனி, வேதத்தின்முன்செல்க என்பதற்கு - வேதத்தினது முதன்மை கழிக என்று உரைப்பாருமுளர்; பிறவற்றிற்கும் இவ்வாறே. மெய்யுணர்ந்தோர் - பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களாலன்றி உண்மையால் ஆய்ந்து உணர்பவர். திருமாலின் திருநாபிக்கமலமலரினின்று தோன்றியவன் படைத்தற்கடவுளாதலால், விரிஞ்சனை முதலாகக் கூறினர். "பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரியவித்தகன்" ஆதலாலும், "தனக்கும் தன்தன்மையறிவரியான்" ஆதலாலும், மெய்யுணர்ந்தோர் விரிஞ்சன் முதலோர் கோதற்றஞானக்கொழுந்தின்முன் செல்வன்; "ஆரேயறிவாரனைத்துலகுமுண்டுமிழ்ந்த, பேராழியான்தன் பெருமையைக் - கார்செறிந்த, கண்டத்தானெண்கண்ணான் காணான்" என்று திருமழிசையாழ்வார் அருளிச்செய்தமையுங் காண்க "ஓதியோதியுணருந்தொறுமுணர்ச்சியுதவும், வேதம்வேதியர் விரிஞ்சன்முதலோர்தெரிகிலா, ஆதிதேவரவரெம்மறிவினுக்கறிவரோ" என்றார் இராமாயணத்திலும். மெய்யுணர்ந்தோர் என்பதை விரிஞ்சன்முதலோர்க்கு அடைமொழியாக்கினும் அமையும். தொல்லை - அநாதி. தொல்லைமூலம் - ஆதிமூலம்.

தென்குருகூர் - தென்னாடாகிய பாண்டியநாட்டிலுள்ள குருகூர் எனினுமாம். செல்லுமே, ஏ - எதிர்மறை. 'செல்லுமோர்' என்றும் பாடமுண்டு.

எல்லாநூல்களும் மங்கலமொழி முதல்வகுத்துக்கூறவேண்டுவது மரபாதலால், 'வேதம்' என்று தொடங்கினர். (க)

உ. சுடரிரண்டேபண்டுமூன்றாயினதுகடீர்ந்துலகத்
திடரிரண்டாய்வரும்பேரிருள்சீப்பனவெம்பிறப்பை
யடரிரண்டாமலர்த்தாளுடையான்குருகைக்கரசன்
படரிருங்கீர்த்திப்பிரான்றிருவாய்மொழிப்பாவொடுமே.

(இ - ள்.) சுடர் - ஒளிகள்,—பண்டு - முன்பு, இரண்டே - இரண்டேயிருந்தன; (பின்பு),—துகள் தீர்ந்து - குற்றமில்லாமல், உலகத்து இடர் இரண்டு ஆய் வரும் பேர் இருள் சீப்பன - உலகத்தில் இருவகைப்பட்ட துன்பங்களாய்வருகிற பெரியஇருளை நீக்குபவையான, எம் பிறப்பை அடர் இரண்டு ஆம் மலர் தாள் உடையான் குருகைக்கு அரசன் படர் இருங் கீர்த்தி பிரான் திருவாய்மொழி பாவொடும் - எமது பிறவித்துன்பங்களையழிக்கின்ற தாமரைமலர்போன்ற இரண்டு திருவடிகளை யுடையவரும் திருக்குருகூர்க்குத்தலைவரும் பரவிய மிக்ககீர்த்தியையுடைய பெருமானுமாகிய நம்ஆழ்வாருடைய திருவாய்மொழிப்பிரபந்தத்தின் பாசுரங்களோடு(கூடி), மூன்று ஆயின - மூன்றாய்விட்டன; (எ - று.)

சுடர் பண்டுஇரண்டே: (பின்பு) பேரிருள் சீப்பனவான திருவாய்மொழிப்பாவொடும் மூன்றாயின என்க. சூரியன் சந்திரன் என்ற இரண்டு சோதிகளையும் 'இருசுடர்' என்றும், அவற்றோடு அக்கினியையுங்கூட்டி 'முச்சுடர்' என்றும் உலகத்திற் சாதாரணமாக வழங்குவார்கள்; அங்ஙனம் ஸாமாந்யமாகக்கூறப்படும் பொருளன்று, இங்குக் குறிக்கப்பட்டது. இங்கு, விசேஷமாக 'சுடர் இரண்டே பண்டு' என்றது - இராமபிரானையுங் கண்ணபிரானையும் குறித்தது. "பல்லாயிரமிருள்கீறிய பகலோனெனவொளிரும், வில்லாளன்" என்பதுமுதலிய இடங்களில் இராமனைச்சூரியனென்றமை காண்க. 'உலகங்களாகிய தாமரைகளெல்லாம் மலரும்பொருட்டுத் தேவகியாகிய கிழக்குச்சந்தியில் ஸ்ரீமந்நாராயணனாகிய சூரியன் உதித்தருளினான்' என்ற ஸ்ரீவிஷ்ணுபுராணம்முதலியவற்றில் கிருஷ்ணன் சூரியனெனப்பட்டுள்ளான். இவர்களை முறையே 'ராமதிவாகரன்' என்றும், 'அச்யுதபாநு' என்றுங் கூறுதல், பெருவழக்கு. இவர்களைச் சூரியனென்றதற்குக் காரணம் - உலகத்திற் பயங்கரமாய்ப் பரவிய கரிய பெரியவடிவமுடைய இராக்கதர்முதலிய துஷ்டர்களாகிய இருளை அறத்தொலைத்துச் சிஷ்டர்களுடைய முககமலங்களை மலர்த்தி விளங்குதல். 'பண்டு' என்றது - திரேதாயுக துவாபரயுகங்களி லென்றபடி. 'பண்டு' என்றதற்கு எதிராக, 'பின்பு' என்று வருவித்தது, கலியுகத்தைக் குறிக்கும். துவாபரயுகாந்தத்திலே கண்ணன் தன்னுடைச்சோதிக்கு எழுந்தருளியவுடன் கலியுகம்பிறந்த நாற்பத்துமூன்றாநாளில் ஆழ்வார் அவதரித்து முப்பத்தைந்து வருஷம் இவ்வுலகத்தில் வாழ்ந்திருந்தன ரென்று உணர்க. திருவாய்மொழிப் பாடல்களை மூன்றாவதுசுடராகச் சேர்த்ததற்குக் காரணம், 'உலகத்திடரிரண்டாய்வரும் பேரிருள் சீப்பன' என்ற அடைமொழியினால் விளங்கும். ("வாய்ந்தவளவயல்சூழ் தண்வளங்குருகூர்ச் சடகோபன், நேர்ந்த ஓராயிரத்திப்பத்து அருவினைநீறுசெய்யுமே," "வல்வினைதீர்க்குங்கண்ணனை வண்குருகூர்ச்சடகோபன், சொல்வினையாற் சொன்னபாடலாயிரத்துள் ளிவைபத்தும், நல்வினையென்றுகற்பார்கள் நலனிடைவைகுந்தம் நண்ணித், தொல்வினைதீர வெல்லாரும் தொழுதெழவீற்றிருப்பாரே," "காரிமாறன் சடகோபன் சொல்லாயிரத்திப்பத்தால், வேரிமாறாதபூமேலிருப்பாள்வினை தீர்க்குமே," "சடகோபன்சொல்லாயிரத்துளிப்பத்தும், கண்டுபாடவல்லார் வினைபோம்" என்று பதிகங்களிற் பயன்கூறியபடி) திருவாய்மொழிப்பாசுரங்

கள் தம்மை ஓதியவரதுவினைகளைத் தீர்ப்பனவாதல் காண்க. அச்சந்தருத லால், வினை 'இருள்' எனப்பட்டது.

'இடரிரண்டு' என்றது - நல்வினை தீவினைகளை; நல்வினையும் பிறத்த ற்கு ஏதுவாதலால், அதனையும் தீவினையோடொப்ப 'இடர்' என்றே கூறினர். இங்கு 'நல்வினை' என்றது, அழியுந்தன்மையனவான சுவர்க்கவின்பம் முத லிய காமியங்களைத் தருவனவாகிய யாகம்முதலியவற்றின் பயனை. இவை முக்திக்கு நேரேகாரணமாகிய தத்துவஞானத்தை யுண்டாக்காமைமாத்திர மேயன்றித் தீவினைபோல அது நிகழவொட்டாமல் தடைசெய்து நிற்றலுமு டையனவாம், ஆதலால், இந்நல்வினை தீவினை இரண்டும் ஒருவனுக்கு ஞானத் தைத்தடுத்துப் பந்தமுறுத்துவதிற்பொன்விலங்கும் இருப்புவிலங்கும்போலத் தம்முள் ஒப்பனவா மென்க. ஆனதுபற்றியே, பிறரும், "இருள்சே ரிருவினை யுஞ் சேரா விறைவன், பொருள்சேர்புகழ் புரிந்தார்மாட்டு" என்றார். இங்கு "சுடரிரண்டேபண்டு" என்று அடைமொழியொன்றும்கொடாமற்கூறி மூன் றுவதுசுடரெனப்படுகிற திருவாய்மொழிப்பாவிற்கு 'துகள்தீர்ந்து உலகத்து இடர் இரண்டாய்வரும் பேரிருள் சீப்பன' என்ற அடைமொழி கொடுத்த தனால், அச்சுடரிரண்டினும் இச்சுடர்க்கு விசேடங் கூறியவாறாம். 'ஆதித்ய ராமதிவாகர அச்யுதபாநுக்களுக்குப் போகாத உள்ளிருள் நீங்கி, சோஷியாத பிறவிக்கடல் வற்றி, விகஸியாத போதிற்கமலம் மலர்ந்தது வகுளபூஷண பாஸ்கரோதயத்திலே" என்னும் ஆசார்யஹ்ருதயவாக்கியம் நோக்கத்தக்கது. சூரியன் முதலிய முச்சுடர்கள் நீக்கமாட்டாத இருள் என்றற்கு, 'பேரிருள்' என்றார்; அங்ஙனங் கூறியது, ராமதிவாகர அச்யுதபாநுக்களுக்கும் நீக்கு தற்கு அரியது என்றவாறுமாம். ராமகிருஷ்ணாதி அவதாரங்கள் உலகத்தை நல்வழிப்படுத்துதலிற் பயன்பட்டவிதம் போதாதென்று அதன்பின் எம்பெரு மான் பிரபஞ்சத்தவரைப் பிறவிப்பெருங்கடலினின்று கரையேற்றிக் கைப் பற்றுதற்கு ஆழ்வார்களை அவதரிப்பித்தான் என்பது, ஐதிகியம். தன்னைச் சரணமடைந்தவர்களுடைய கருமங்களைத் தொலைத்துப் பிறப்பையொழித்து அவர்களை முத்தியிற் சேர்க்குந் திருவடிகளை யுடையா னென்பார், 'எம்பிறப் பைஅடர் இரண்டாம் மலர்த்தாளுடையான்' என்றார். 'வெம்பிறப்பு' என்று பதம் பிரித்தல் மோனைத்தொடைக்குச் சிறவாது. இரண்டாம் மலர்த்தாள் - உபயதிருவடித்தாமரை. திருவாய்மொழிப்பிரபந்தமாகிய சூரியனுக்கு அதன் பாடல்கள் ஆயிரத்தையும் ஆயிரங்கிரணமாகக் கருதுக.

'பா' என்ற பால்பகா அஃறிணைப்பெயர் இங்குப் பன்மைப்பொருள் தாதலால், அதனை 'சீப்பன' என்ற பலவின்பால் வினையாலணையும் பெயர் கொடுத்து விசேடித்தனர். திருவடிக்குத் தாமரைமலர் உவமை - செம்மை மென்மை அழகுகட்கு. மலர் என்ற பொதுப்பெயர், சி ப்புப்பற்றி, தாமரை மேல் நின்றது. படர்தல் - எங்கும் பரவுதல். (உ)

ட. பாவொடுக்குந்நுண்ணிசையொடுக்கும்பல்வும்பறையு
நாவொடுக்குந்நல்லறிவொடுக்கும்மற்றுநாட்டப்பட்ட
தேவொடுக்கும்பரவாதச்செருவொடுக்குங்குருகூர்ப்
பூவொடுக்கும்மமுதத்திருவாயிரம்போந்தனவே.

(இ - ள்.) குருகூர் பூ ஒடுக்கும் - திருக்குருகூரில் அவதரித்தருளின ஆழ்வாருடைய திருவாய்மலரினுள்ளே (எம்பெருமானால்) நிறைத்துவைக்கப் பட்ட, அமுதம் திரு ஆயிரம் - அமிருதம்போல் இனிய திருவாய்மொழி ஆயிரஞ்செய்யுள்கள், போந்தன - (அங்குநின்று) வெளிப்பட்டன: (அவை), பா ஒடுக்கும் - இயற்றமிழ்ச் செய்யுளிலக்கணங்களைத் தம்முள் அடக்கிக்கொண் டுள்ளன; நுண் இசை ஒடுக்கும்-நுட்பமான இசைத்தமிழிலக்கணங்களைத் தம்முள் அடக்கிக்கொண்டுள்ளன; பலவும் பறையும் நா ஒடுக்கும் - பலவிஷயங்களையுங் கூறுகிற நாடகத்தமிழினிலக்கணங்களைத் தம்முள் அடக்கிக் கொண்டுள்ளன: நல் அறிவு ஒடுக்கும் - நல்ல அறிவுகளைத் தம்முள் அடக்கிக் கொண்டுள்ளன; மற்றும் நாட்டப்பட்ட தே ஒடுக்கும் - உலகத்தில் நிலைநிறுத் தப்பட்ட மற்றைத்தெய்வங்களையெல்லாம் ஒடுங்கச்செய்வன; பர வாதம் செரு ஒடுக்கும் - அந்நியமதஸ்தர்களின் வாதப்போர்களை அடங்கச்செய்து விடுவன; (எ - று)

பா ஒடுக்கும் - "எழுத்துப்பதின்மூன்று இரண்டுஅசை சீர்முப்பது எந் தளை ஐந்து, இழுக்கிலடி தொடைநாற்பதின்மூன்று ஐந்துபா இனம்மூன்று, ஒழுக்கியவண்ணங்கள் நூறு ஒன்பதுஒண்பொருள்கோள் இருமூ, வழுக்கில், விகாரம் வனப்புஎட்டு யாப்புள் வகுத்தனவே" என்று தொகுத்து உணர்த்தப் படும் இயற்றமிழ்ப்பாவினிலக்கணங்கள் பலவற்றையும் தம்முள்ளே சுருக்கக் கொண்டுகாட்டும் என்றபடி. நுண்இசை ஒடுக்கும் - குறிஞ்சி, செருந்தி, இந் தளம், கொல்லி, காமரம், தக்கேசி, பஞ்சமம், கைசிகம், காந்தாரம், பாலையாழ் முதலிய பண்களாதியவற்றைத் தம்முள்ளே கொண்டு காட்டு மென்றபடி; "பண்ணிற் பன்னிருநாமப்பாட்டு" என்று திருவாய்மொழியில் வருதலுங் காண்க. 'பலவும்பறையும் நாவொடுக்கும்' என்பதற்கும் இங்ஙனமே கண்டு கொள்க. "எழுத்து அசை சீர் பந்தம் அடி தொடை நிரைநிறை ஓசை தளை இனம் யாப்புப் பாத்துறை பண் இசை தாளம் பத்து நூறு ஆயிரம் முதலான செய் கோலம் இதுக்கும் உண்டு" என்ற ஆசார்யஹ்ருதய வாக்கியமுங் காண்க. செவிகருவியாக நுண்ணிதின் உணரப்படுதலால், இசைக்கு 'நுண்' என்ற அடைமொழி கொடுத்தனர். இயலுக்கும் இசைக்கும் பொதுவாதல் பற்றி, நாடகம் 'நா' எனப்பட்டது; நா=நடு.

'நல்லறிவு ஒடுக்கும்' என்பதற்கு - நல்லஅறிவை அடங்கியிருக்கச்செய் யும் என்று உரைப்பாரு முளர். ("நாட்டினான் தெய்வமெங்கும் நல்லதோ ரருள்தன்னாலே", "இறுக்குமிறையிறுத்துண்ணஎவ்வுலகுக்கும் தன்மூர்த்தி, நிறுத்தினான் தெய்வங்களாக அத்தெய்வநாயகன்தானே", "வணங்குந்துறை கள் பலபலவாக்கி மதிவிகற்பால், பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி அவையவைதோறு, அணங்கும் பலபலவாக்கி நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்" என்ற படி) எம்பெருமான் தானே, ஸத்வகுணம் மிக்கவராய்த் தன்னைப் பற்றுமவ வுடையரன்றியே யிருக்கும் ரஜோகுணதமோகுணங்களால் மிக்கவர்க்கு ஏற்ற படி பலதேவதைகளை நியமித்துவைத்துள்ளானாதலால், 'நாட்டப்பட்ட தே' என்றார். தன்னரசு நாடாக ஸ்வதந்திரராய்க் கண்டபடி திரிகிறவர்களுக்கு அவரவர்குணத்துக்கு ஏற்ப ஒவ்வொருதெய்வத்தை அமைத்துக்காட்டி அதனை

வழிபடும்படிசெய்து அவர்களை அடக்கிவைத்தால் அங்ஙனம் ஒருப்பட்டசேத னர்கள் பின்புநாளடைவிலே வேதமுதலிய நூல்களைக்கொண்டு அச்சிறுதெய் வங்களுக்கும் பரதேவதையான தனக்குமுள்ள வாசியை யறிந்து தன்பக்கல் வந்து உய்வார்கள் என்பது, ஸர்வேசுவரனது திருவுள்ளமென்க. 'நாட்டப் பட்ட'என்ற சொல்லின் ஆற்றலால், பரமாத்மாவான ஸ்ரீமந்நாராயணன் அந் தத்தேவதாந்தரங்களுக்கு அந்தராத்மாவாக நில்லாவிடின் அவர்கள் கொள். கொம்பு பெறாத கொடிகள்போல அலைந்து நிலைகுலைவ ரென்பது போதரும். ("பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும், நாயகனவனே கபால நன்மோக்கத்துக் கண்டுகொண்மின்" என்றும் மற்றும்பலவாறும்) திருவாய் மொழிப்பாசுரங்கள் நாராயணனுடைய பெருமையையும் மற்றைக்கடவுள ரின் சிறுமையையும் நன்குவெளியிட்டு, கொடி கொள்கொம்பை மூடிப்படர்ந் திடாதபடி செய்தலால், 'மற்றுநாட்டப்பட்டதே வொடுக்கும்' எனப்பட்டது. ("இலிங்கத்திட்டபுராணத்தீரும் சமணரும் சாக்கியரும், வலிந்து வாதுசெய் வீர்களும் மற்றும் நுந்தெய்வமுமாகி நின்றான்; மலிந்து செந்நெல் கவரிவீசும் திருக்குருகூரதனுட், பொலிந்துநின்றபிரான் கண்டீ ரொன்றும்பொய்யில்லை போற்றுமினே" என்றும் மற்றும் பலவாறும்) தமது பிரபந்தங்களிற் கூறிய தத்துவார்த்தங்களைக்கொண்டு பிறமதங்களாகிய யானைகளைச் செருக்கடக்கி அவற்றிற்கு ஆழ்வார் மாவெட்டியென்னுங் கருவிபோன்றவராய்ப் பராங்குச ரென்று ஒருதிருநாமம் பெறுதல் தோன்ற, 'பரவாதச் செருவொடுக்கும்' என்றார்.

இரட்டுறமொழிதலென்னும் உத்தியால் 'பூ' என்பதை 'பூ' எனவடமொ ழியாகவும், 'பூ' எனத் தென்மொழியாகவும் வைத்து இருபொருளும்ஒருங்கே கொள்ளப்பட்டது. 'குருகூர்ப்பூ' என்றது - திருக்குருகூரில் தோன்றிய ஆழ் வாரைக்குறித்தது; 'ஸ்வயம்பூ' என்ற பிரமன்பெயரும், 'ஆத்மபூ' என்ற மன் மதன்பெயரும், 'அக்நிபூ' என்ற முருகன்பெயரும் காண்க. 'பூ' என்ற தமிழ்ச் சொல் - அதுபோன்ற விரயையுணர்த்தும்போது உவமையாகுபெயராம். வட மொழி வேதங்கள்போலவே தமிழ்வேதமாகிய திவ்வியப் பிரபந்தங்களும் அபௌருஷேயமும் நித்தியமுமாமென்பதும், செய்யாமொழியாகிய அவற்றை எம்பெருமான் தானே ஆழ்வார்கள் நாவிலிருந்து பாடிப் பிரகாசிப்பித்தா னென்பதுமாகிய ஆன்றோர்கொள்கைகள், 'குருகூர்ப்பூவொடுக்கும் அமுதத் திருவாயிரம் போந்தன' என்பதில் தோன்றும். "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றபடி அமிருதம்போ லினிய ஆயிரம் பாசுரங்க ளென்பார், 'அமுதத்திருவாயிரம்' என்றார்; உவமத்தொகை; திரு என்ற அடைமொழி, மேன்மையைக் குறிக்கும். ஆயிரம் - ஆயிரஞ்செய்யுள் களுக்கு எண்ணலளவாகுபெயர்.

ஒடுக்குந்நுண், ஒடுக்குந்நல், ஒடுக்கும்மற்று, ஒடுக்கும்மமுதம்என்றவற் றின்இடையிலுள்ள நகரமகரவொற்றுக்கள்- விரித்தல் விகாரம். வாதச்செரு- சொற்போர். 'பலவும் பறையும் நா வொடுக்கும்' என்பதற்கு-பலவற்றை யும் பிதற்றுவதான (பிறசமயவாதிகளின்) நாக்கை ஒடுங்கச்செய்யு மென்று உரைத்தலும் ஒன்று; 'திருநாவீறுடையபிரான்' என ஒருதிருநாமம் ஆழ்வார்

க்கு வழங்குதல் காண்க: வீறு - ஒப்புயர்வற்ற சிறப்பு. நண்இசை ஒடுக்கும் என்பதற்கு - "முன்னல்யாழ்பயி லுனரம்பின் முதிர்சுவையே." "நடங்கு கேள்வியிசையென்கோ" என்றபடி நுண்ணிதினுணரத்தக்க கீதம்போலினிய பரம்பொருளைத் தம்முள்ளேகொண்டு காட்டு மென்று உரைப்பாருமுளர். 'மற்றும் நாட்டப்பட்ட தே வொடுக்கும்' என்பதற்கு - பிறதெய்வங்களையும் தம்முள் அமையவைத்திருக்குமென்று உரைப்பினும்இழுக்காது; ("சக்கரபாணியனோடயனு மிந்திரனும் முதலாக, ஒக்கவுந்தோற்றியவீசன்மாயன்". "கள்வா எம்மையும் ஏழுலகும் நின்னுள்ளே தோற்றிய இறைவவென்று, வெள்ளேறன் நான்முக னிந்திரன் வானவர். புள்ளூர்திகழல்பணிந்தேத்துவரே." "சுவிர்மதிச்சடையனென்கொ நான்முகக்கடவுளென்கோ," "நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்ச் சீரார்சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனாய்." "முனியே நான்முகனே முக்கண்ணப்பா" என்பவை முதலியன காண்க.

'பாவொடுக்கும்' என்றதை. "எழுத்தசைசீரடிசொற்பொருள்யாப்பு. வழுக்கில்வனப்பணிவண்ணம்—இழுக்கின்றி, என்றெவர் செய்தன வெல்லா மியம்பின, இன்றிவ ரின்குறள்வெண்பா" என்றாற்போலக் கொள்க. (௩)

௪. தனமாஞ்சிலர்க்குத்தவமாஞ்சிலர்க்குத்தருமநிறை
கனமாஞ்சிலர்க்கதற்காரணமாஞ்சிலர்க்காரணத்தி
னினமாஞ்சிலர்க்கதற்கெல்லையுமாந்தொல்லையேர்வகுள
வனமாலையெம்பெருமான்குருகூர்மன்னன்வாய்மொழியே.

(இ - ள்.) தொல்லை - பழமையான, ஏர்-அழகிய. வகுளம் வனம் மாலை எம்பெருமான் குருகூர் மன்னன் வாய்மொழி - மகிழமலர்களினாலாகிய அழகிய மாலையையுடையவரும் எமக்கு இறைவரும் திருக்குருகூர்க்குத் தலைவருமான ஆழ்வாருடைய திருவாய்மலரினின்று வெளிப்பட்ட சொற்களாகிய திருவாய்மொழி முதலிய பிரபந்தங்கள்.—சிலர்க்கு—. தனம் ஆம் - செல்வமாம்; சிலர்க்கு—, தவம் ஆம்—; சிலர்க்கு—, தருமம் நிறை கனம் ஆம்-தருமம்நிறைந்த சிறந்தகாமபுருஷார்த்தமாம்; சிலர்க்கு—. அதற்கு ஆரணம் ஆம்-அந்தக்காமவின்பத்திற்கு உரிய வேதமாம்; சிலர்க்கு—, ஆரணத்தின் இனம் ஆம் - வேதத்தின்வருக்கமாம்; (சிலர்க்கு—,) அதற்கு எல்லையும் ஆம் - அவ்வேதத்தின் முடிவாகிய வேதாந்தமுமாம்; (எ - று.)

சிலர்க்கு - ஒவ்வொன்றை வேண்டுகிற அந்தந்த அதிகாரிகளுக்கு ஏற்பவென்க. ("அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே." "அறம் பொருளின்பமும் வீடும் பயக்கும், புறங்கடை நல்லிசையு நாட்டும் - உறுங்கவலொன்று. உற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியினூங் கில்லை, சிற்றுயிர்க் குற்றதுணை" என்றவாறு) கல்வி திரவிய சம்பாதனத்துக்குக் காரணமாகிற வரையில் திருவாய்மொழிமுதலிய பிரபந்தங்களும் பொருளீட்டத்திற்கு ஏதுவாதலால், (பொருளிலார்க் கிவ்வுலகமில்." "பொருளுடையான் கண்ணதேபோகம்', என்பவற்றை மேற்கொண்டு) பொருட்செல்வத்தை வேண்டுகிற சிலர்க்கு; அப்புருஷார்த்தத்தை விளைக்குமென்பார், 'தனமாம் சிலர்க்கு' என்றன ரென்பர்; காரணம், காரியமாக உபசரிக்கப்பட்டது. ("செல்வரை யெல்லாருஞ்செய்வர்சிறப்பு", "தம்மைத்து உடையார்க்கும் எவ்வூரும் ஊர்" என்ற

படி) செல்வமுடையார்க்கு எங்கும் உபசாரங்கள் நடத்தல்போலவே; ("கற்ரோர்க்குச் சென்றவிடமெல்லாஞ் சிறப்பு", "யாதானு நாடாமா லூராமா லென்னொருவன், சாந்துணையுங்கல்லாதவாறு" என்றபடி) திருவாய்மொழி ஓதினார்க்கு எங்கும் உபசாரங்கள் நிகழ்தல்பற்றி, பொருட்செல்வம்போலு மென்றபொருளில் 'தனமாம்' என்றனரெனினும் அமையும். செல்வம்போல மிகவிரும்பிப் பாதுகாக்கப்படும் பொருளாமென்பதும் கருத்து. ("அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து, தீதின்றிவந்தபொருள்" என்றபடி) பொருள் அறத்துக்கும் இன்பத்துக்கும் காரணமாகிற சிறப்புடைமைபற்றி முதலிற் கூறப்பட்டது. ("வேண்டிய வேண்டியாங்குஎய்தலாற் செய்தவம், ஈண்டுமுய லப்படும்" என்றபடி), தன்னைப்பயின்றவர்க்கு வீடுபேறுமுதலாக வேண்டிய பயன்களை வேண்டியபடியே பெறுவிக்கின்ற தவம்போல, இத்திவ்வியப்பிர பந்தமும் தன்னை ஓதினவர்க்கு இம்மைமறுமைவீடுகளில் வேண்டியபயன் களை உண்டாக்குதலால், 'தவமாம் சிலர்க்கு' எனப்பட்டது; (அதனை, "பாத மடைவதன் பாசத்தாலே மற்றவன்பாசங்கள் முற்றவிட்டுக், கோதில்புகழ்க் கண்ணன்தன்னடிமேல் வண்குருகூர்ச்சடகோபன் சொன்ன, தீதிலந்தாதி ஓராயிரத்துள் ளிவையுமோர் பத்திசையொடும் வல்லார், ஆதுமோர் தீதில ராகி இங்குமங்கு மெல்லாமமைவார்கள்தாமே" எனக் காண்க.) ("விளக்குப் புக இருள்மாய்ந்தாங்கு ஒருவன், தவத்தின்முன் நில்லாதாம் பாவம்" என்ற படி) தவம் பாபக்ஷய ஹேதுவாதல்போல, அருளிச்செயலும் ஓதுவாரது தீவி னைதீர்தற்கு மூலமாம் என்பதுபற்றி, 'தவமாம்சிலர்க்கு' என்றனரென்றுங் கொள்க. சதுர்வித புருஷார்த்தங்களுள் தர்மபுருஷார்த்தமாம் என்பது 'தவ மாம்' என்றதன் தாற்பரியம்.

நான்கு உறுதிப்பொருள்களுள் மூன்றாவதற்கு உள்ள சிறப்புப்பற்றி, அது, 'கனம்' என்ற பெயராற் குறிக்கப்பட்டது; ("சேமநல்வீடும் பொருளுந் தருமமுஞ் சீரியநற், காமமு மென்றிவை நான் கென்பர்" என்ற இராமாநுச நூற்றந்தாதியில் 'சீரியநற்காமம்' என்றதையும், அதன்வியாக்கியானத்தில் 'சாஸ்திரங்களிலே சிலாகிக்கப்பட்டதாய்ப் போக்யமாய் விஹிதமாய் ஸ்வயம் புருஷார்த்தமான காமம்' என்றதையுங் காண்க.) இங்கு இன்பமென்றது, ("காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டதே இன்பம்" எனப்படுகிற) உலகவாழ்க்கைச் சிற்றின்பத்தை யன்று; ("நான்கினுங் கண்ணனுக்கே ஆம துகாமம் அறம்பொருள் வீடிதற்கென் றுரைத்தான், வாமனன் சீல னிராமா நுச னிந்தமண்மிசையே" என்றபடி) எம்பெருமானைச் சேரவேண்டுமென்று அவன்பக்கலிலே உண்டாகின்ற அபேக்ஷையையே கூறியது. (கோவிந்தா, எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன்றன்னோடு, உற்றோமேயாவோம் உனக்கே நாமாட்செய்வோம், மற்றை நங்காமங்கள் மாற்று" என்றதுங் காண்க. லோகநாயகனுடைய சேர்க்கையை அபேக்ஷிக்கின்ற பேரின்பக் காதல், வேதாந்த நிர்ணயத்தின்படி அன்பு செலுத்தவேண்டிய இடத்தில் அன்பைச் செலுத்தியதாதலால், சிற்றின்பக்காதல்போலன்றி, சகலபாபநிவ் ருத்திக்கும் வீடுபேற்றுக்குமே காரணமாதல்பற்றி, 'தருமம்நிறைகனம்' எனப் பட்டது.) பரமாத்மாவினது தலைமையும், ஜீவாத்மாவினது அடிமையும், ஜீவாத்மா பரமாத்மாவுக்கே உரியதாயிருக்கையும், புருஷோத்தமனாகிய எம்

பெருமானது பேராண்மைக்குமுன் உலகம்முழுதும் பெண்தன்மைய தாதலும், ஜீவாத்மாவினது ஸ்வாதந்திரியமின்மையும், பாரதந்திரியமும், தாம் எம்பெருமானது சேர்க்கையால் இன்பத்தையும் பிரிவினால் துன்பத்தையும் அடைதலும், அவனையே தாம் கரணங்களெல்லாவற்றாலும் அநுபவித்து ஆனந்தித்தலும் முதலிய காரணங்களால் ஆழ்வார் தம்மைத் தலைமகளாகவும் எம்பெருமானைத் தலைமகனாகவுங்கொண்டு அருளிச்செய்த இன்பச்சுவைமிக்க பாடல்களைக் கருதி, 'தருமசிறை கனமாஞ் சிலர்க்கு' என்றார். "கண்ணிற் காண்பரேல், ஆடவர் பெண்மையை அவாவுந் தோளினாய்," "வாராகவாமனனே அரங்கா வட்டநேமிவலவா ராகவா உன்வடிவுகண்டால் மன்மதனும் மடவாராக ஆதரஞ்செய்வன்" என்ப வாதலாலும், தண்டகாரணிய வாசிகளான முனிவர்கள் இராமபிரானது சௌந்தரியாதிசயத்தில் ஈடுபட்டுத் தாம் பெண்தன்மையைப் பெறவிரும்பி மற்றொருபிறப்பில் ஆயர்மங்கையராய்க் கண்ணனைக் கூடினரென்பது ஐதிகியமாதலாலும், எம்பெருமானது திவ்விய சௌந்தரியத்தில் ஈடுபட்டு அவனது உத்தமபுருஷத் தன்மையைக் கருதியதனால் அப்பொழுதே அவனைக் கிட்ட வேண்டும்படியான ஆசையைப் பெற்ற ஆழ்வார் அங்ஙனம் அவனைக் கிட்டப்பெறாமையாலே ஆற்றாமைமீதூர்ந்து தளர்ந்து அத்தளர்ச்சியினாலே தாமானதன்மை குலைந்து ஆண்பெண்ணாம்படியான நிலைமை தோன்றி ஒருபிராட்டிநிலைமை அடைதல் அமையும். அங்ஙனம் நாயகியாகிய நம்மாழ்வார் தலைமகள் வார்த்தை தாய்வார்த்தை தோழி வார்த்தைகளால் தூதுவிடுதல் இரங்குதல் வெறிவிலக்குதல் காலமயக்கு நலம் பாராட்டு உருவெளிப்பாடு முதலிய பல அகப்பொருளிலக்கணத் துறைகளமையுமாறு பாடிய பாசுரங்கள் காமசாஸ்திரமாதல்பற்றி, 'அதற்கு ஆரணமாம்' என்றார். சிருங்காரரசப்பிரதானமான அகப்பொருட்கிளவித்துறைகளை ஞானநூலாகிய தோத்திரப்பிரபந்தங்களிற் கூறுதற்குக் காரணம் - கடுத்தின்னாதானைக் கட்டிபூசிக் கடுத்தின்பிப்பார்போலச் சிற்றின்பங் கூறும்வகையாற் பேரின்பத்தைக் காட்டி நாட்டுத லென்பர். இங்ஙனம் அர்யாபதேசமாகக் கூறிய சிற்றின்பத்துறைச் செய்யுள்கட்கெல்லாம் ஸ்வாபதேசமாகப் பேரின்பத்தின்பாற்படுத்தும் உள்ளுறைபொருள் உண்டென்பதையும் உணர்க.

'ஆரணத்தின் இனமாம்' என்றது - ஆழ்வார் அருளிய நான்குபிரபந்தங்களும் நான்குவேதமாதலால், அவ்வேதங்களின் சித்தாந்தமான உபநிஷத்துக்களின்சாரமான அர்த்தங்கள் ஆழ்வாரருளிச்செயல்களிற் பொதிந்திருத்தல் பற்றி, 'அதற்கு எல்லையுமாம்' எனப்பட்டது; என்றது, "கூறுதல்வல்லாருளரேற் கூடுவர் வைகுந்தமே" என்றபடி திவ்வியபிரபந்தங்கள் மோக்ஷசாதனமாம் என்றவாறு. எனவே, நூற்பயனாகிய நான்கையும் ஆழ்வார் பிரபந்தங்களால் அடையலாமென்பது இச்செய்யுளில் விளக்கப்பட்டதென்க.

"ஆரணங்காணென்பர் அந்தணர் யோகியர் ஆகமத்தின், காரணங்காணென்பர் காமுகர் காமநன்னூலதென்பர், ஏரணங்காணென்பர் எண்ணர் எழுத்தென்பர் இன்புலவோர், சீரணங்காய சிற்றம்பலக்கோவையைச் செப்பிடினே" என்ற திருக்கோவையார்ச் சிறப்புப்பாயிரத்தோடு இதனை ஒப்பிடுக.

தொல்லை. ஏர் என்ற இரண்டும்-வாய்மொழிக்கு அடைமொழி. ஆழ்வார் திருவாய்மலரினின்று வெளிப்பட்ட தமிழ்வேதங்கள் சம்ஸ்கிருதவேதங்கள்

போலவே அநாதியாமென்ற கருத்து அமைய 'தொல்லைவாய்மொழி' எனப் பட்ட தென்க. தம்பக்கல் திருவுள்ளமுவந்து திருக்குருகூர்ப் பொலிந்து நின்றபிரான் பிரசாதித்த மகிழமலர்மாலையைத் தரித்ததனால், ஆழ்வார்க்கு 'வகுளாபரணர்' என்று ஒரு திருநாமம் வழங்கும். "வண்குருகூர் நகரான் நாட்கமழ்மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன்" என்று ஆழ்வார் தாமே தம்மைக் கூறியிருத்தலுங் காண்க. "தாமம் துளவோ வகுளமோ" என்றபடி ஆழ்வார் ஸ்ரீமந்நாராயணனது அவதாரமே யென்ற ஒற்றுமை விளங்க, மகி ழம்பூமாலையாகிய திருத்துழாய்மாலையையுடைய எம்பெருமான் என்றதாக வும் கொள்ளலாம். அன்றியும், வநமாலை என்றதொரு திவ்வியமாலை திருமா லுக்கு உரியதாதலை 'வநமாலீ' என்ற அவனது திருநாமத்தினால் உணர்க.

'வாய்மொழி' என்று திருவாய்மொழியைக் குறித்தது, மற்றைப் பிரபந் தங்கட்கும் உபலக்ஷணம். (சு)

ரு. மொழிபலவாயினசெப்பம்பிறந்ததுமுத்தியெய்தும்
வழிபலவாயவிட்டொன்றாயதுவழுவாநரகக்
குழிபலவாயினபாழ்பட்டதுகுளிர்நீர்ப்பொருநை
சுழிபலவாயொழுகுங்குருகூரெந்தைதோன்றலினே.

(இ - ள்.) குளிர் நீர் - குளிர்ந்த நீரையுடைய, பொருநை - பொருநை யென்னும் மறுபெயருள்ள தாமிரபர்ணிநதி, சுழி பல ஆய் ஒழுகும் - அநேக நீர்ச்சுழிகளோடுகூடிப் பாயப்பெற்ற, குருகூர் - திருக்குருகூரிலே, எந்தை - நம்ஆழ்வார், தோன்றலின் - திருவவதரித்ததனாலே,—மொழி பல ஆயின - பலபாஷைகளுள்ளே, செப்பம் பிறந்தது - (ஆழ்வார் பாசுரம் அருளிச்செய்த பாஷையாகிய **தமிழ்**ஒன்றுக்கே 'செந்தமிழ்மொழி' என்னும்படி) செவ்வை தோன்றிற்று; முத்தி எய்தும் வழி பல ஆய விட்டு ஒன்று ஆயது - வீடுபெறு வதற்கு உரியவழிகள் பலவானவை நீங்க ஒன்றே முத்திமார்க்கமாய் நின்றது; வழுவா நரகம் குழி பல ஆயின பாழ்பட்டது - தவறாத நரகக்குழிகள் பல வாயிருந்தவை பாழாய் விட்டன; (எ - று.)

'மொழிபலவாயின' என்றது - சிங்களம் முதலிய பதினெட்டுத் தேச பாஷைக ளாகியவற்றை; அவற்றுள்ளே எம்பெருமானால் திருவுள்ளமுவந்து கொண்டாடப்பட்டு அவனுக்குமுன்னே பாராயணஞ்செய்யப் பெறுபவை தமிழ்த்திவ்வியப்பிரபந்தங்களே யாதலால், 'இந்தப் பாஷைக்கே செவ்வி உண்டாயிற்று' என்றார். இத்தகையமேம்பாட்டுக்குக் காரணம் மற்றையாழ் வார்களுமாயினும், அவர்களில் அவயவியாகிய நம்மாழ்வாரைக்கூறியதில் அவயவமாகிய மற்றையாழ்வார்களும் அடங்குவர்; (இங்ஙனம் அங்கியும் அங் கமுமாக உருவகப்படுத்துமிடத்து, நம்மாழ்வார்க்கு, பூதத்தாழ்வாரை முடி யாகவும், பொய்கை பேயாழ்வார்களைக் கண்களாகவும், பெரியாழ்வாரை முகமாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும், குலசேகராழ்வாரை யும் திருப்பாணாழ்வாரையும் கைகளாகவும், தொண்டரடிப்பொடியாழ்வாரை மார்பாகவும் திருமங்கை யாழ்வாரை நாபியாகவும், மதுரகவியாழ்வாரைப் பாதமாகவும் உரைப்பது மரபு: இதன்விவரணம் விரிப்பிற் பெருகும். இப் படி உறுப்பியும் உறுப்புமாக நிரூபித்தற்கு ஏற்ற காரணம், நம்மாழ்வாரது

தலைமை; அது எங்ஙன மெனின்:—மற்றை யாழ்வார்கள்போல இவ்வுலக வுணர்ச்சி நடையாடாநிற்க எம்பிரானருளால் ஒருகாலவிசேடத்திலே தத்துவஞானம்முதலியன தோன்றப்பெற்று அநுபவித்தவரன்றி, இவர், திருத்துழாய் பரிமளத்துடனே அங்குரிக்கு மாறுபோல அவதரிக்கும் பொழுதே இயற்கையில் ஞானபக்திகளை யுடையராய் அந்நிலை என்றும் மாறாதிருந்த தனு லென்க.)

வெவ்வேறு மதங்களில் அந்தந்த மதத்துக்கு உரிய தெய்வத்தை வணங்குதல் முதலாகக் கூறப்பட்ட முக்தி மார்க்கங்களெல்லாம் பூர்வபக்ஷமாய் மறுக்கப்பட்டுத் தலைகாட்டாது ஒழிய, திருமாலை வழிபடுதலொன்றே முக்தி மார்க்கமென்று ஆழ்வார் சித்தாந்தஞ்செய்து நிலைநிறுத்தியிருத்தல்பற்றி, 'முத்தியெய்தும்வழி பலவாய விட்டு ஒன்றாயது' என்றார்; அன்றி, வீடுபேற்றுக்குச்சாதனமாக ஓதப்படுகிற கர்மம் ஞானம் முதலியவற்றை மறுத்து எம்பெருமானைச்சரணமடைதலான பிரபத்தியொன்றே முத்திக்கு நேரான உபாயமென்று நிலைநாட்டியதனால் 'முத்தியெய்தும்வழி பலவாயவிட்டு ஒன்றாயது' என்றதாகவுங் கொள்ளலாம். தீவினைசெய்தவர் அடைதல் தகுவதனவும் அங்ஙனங் கொடுவினைசெய்து புக்குஅழுந்தியவர் மீளுதற்கு அரியனவுமான நரகபேதங்க ளென்பார், 'வழுவாநரகக்குழி பலவாயின' என்றார். அந்நரகவகைகள் அநேகம்ஆயிரங்க ளென்று புராணம் கூறும் 'ஆழ்வாரருளிச்செயலைக் கைப்பற்றி உலகத்தவர் பலருந் திருமாலடியார்களாய்த் தீவினைதவிர்த்து உய்தலால், 'வழுவாநரகக்குழிபலவாயின பாழ்பட்டது' எனப்பட்டது; "அறிவிலாமனிசரெல்லாம் அரங்கமென் றழைப்பாராகில், பொறியில்வாழ் நரகமெல்லாம் புல்லெழுந்தொழியுமன்றே." "காவலிற் புலனைவைத்துக்கலிதன்னைக்கடக்கப்பாய்ந்து, நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள்மீதே, மூவுலகுண்டுமிழ்ந்தமுதல்வ நின்நாமம்கற்ற, ஆவலிப்புடைமை கண்டாய் அரங்கமாநகருளானே." "பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச்சாபம், நலியும் நரகமும் நைந்த நமனுக்கு இங்கு யாதொன்று மில்லை, கலியுங் கெடுங் கண்டுகொண்மின் கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல், மலியப்புகுந்திசைபாடியாடியுழிதரக் கண்டோம்" எனக் காண்க. வெள்ளத்தின்மிகுதியால், சுழி பலவாய் ஒழுகும். 'குருகூர் எந்தை தோன்றலின்' - திருக்குருகூரிலே எம்பெருமானை ஸ்ரீமந்நாராயணன் ஆழ்வாராக அவதரித்ததனால் எனினுமாம்.

'முக்தி' என்ற வடசொல்-பற்றுக்களை விட்டு அடையுமிடமென்று காரணப் பொருள்படும்; வீடு என்ற தமிழ்ச்சொல்லும் இப்பொருளதே. எந்தை-எம்தந்தை: எமது ஆசிரியன், எமது தலைவன், எமது கடவுள். (ந)

கா. தோன்றுவபடைதப்பொருடொன்றனுற்றார்தமக்குந்
சான்றுமிவையென்றபோதுமற்றெண்பலகாலுந்தம்மின்
மூன்றாயினவுநினைந்தாரணத்தின்முழுமைத்தமிழை
யீன்றான்குருகைப்பிரானெம்பிரான்றனிசைக்கவியே.

(இ - ள்.) பல காலும் தம்மில் மூன்று ஆயினவும் நினைந்து - பல இடங்களிலும் ஒருங்குகூறப்பட்டுத் தமக்குட் சேர்ந்துள்ளனவான ஸ்வரூ

பம் உபாயம் புருஷார்த்தம் என்ற மூன்றையும் (யாவருமறியவேண்டியவை யென்று) திருவுள்ளத்திற்கொண்டு (அவற்றை வெளியிட்டு), ஆரணத்தின் மும்மை தமிழை ஈன்றான் - வேதங்களின் ஸாரார்த்தம் அமைந்தனவும் இயல் இசை நாடக மென்னும் மூன்றுவகைத் தமிழிலக்கணங்க ளமைந்தன வுமான திவ்வியப்பிரபந்தங்களைத் திருவாய்மலர்ந் தருளியவரும், குருகை பிரான் - திருக்குருகூரில் அவதரித்த பரமோபகாரியும், எம்பிரான்தன்- எமக்குத்தலைவருமான நம்ஆழ்வாருடைய, இசை கவி இவை - பண்ணிசை யோடுகூடிய இந்தத்திருவாய்மொழி முதலிய பாசுரங்கள், தோன்று உபநிட தம் பொருள் தோன்றல் உற்றார்தமக்கும் சான்று ஆம் - புலப்படுதற்கு அரிய உபநிஷத்துக்களின் மகாவாக்கியார்த்தங்கள் புலப்படப் பெற்றவர்களான (ஸ்ரீமதுரகவி ஸ்ரீமந்நாதமுனி முதலிய) மகான்களுக்கும் மெய்ப்பொருளின் உண்மைவிளங்குதற்கு ஏற்ற சாட்சியாம்: என்ற போது - இங்ஙனமாகிய போது, மற்று என் - இன்னம் இவற்றிற்கு என்ன சிறப்பு வேண்டும்! [மற் றொன்றும் வேண்டா என்றபடி]; (எ - று.)

கடல்கடைந்து அமுதமெடுப்பார்போல, அளவிறந்த வேதங்களின் அந் தமாய் உணர்தற்குஅரியனவா யுள்ள உபநிஷத்துக்களைப் பலபடியால் ஆய்ந்துஉணர்ந்து பரவஸ்துநிர்ணயஞ் செய்யப்புகுவார்க்கு, ஆழ்வாரருளிச் செயல்கள் "கண்ணனல்லால்தெய்வமில்லை", "அத்தெய்வநாயகன்தானே" என்று ஐயந்திரிபறத் தெளியச்சொல்லிப் பரம்பொருளைப் பிடித்துக்காட்டிக் கொடுத்தலால், 'தோன்றுவுபநிடதப்பொருள் தோன்றலுற்றார்தமக்குஞ் சான்று மிவை' எனப்பட்டது. இப்படி ஸர்வப்ரமாணங்களினும் மூலப்ர மாண மான சுருதிகளிலும் மேம்பாடு கூறியபின்பு, இதற்கும் மேலாக அரு ளிச்செயலுக்கு யாதொருசிறப்பும் சொல்லவேண்டுவதில்லை யென்பார், 'என் றபோது மற்றென்' என்றார். 'பலகாலுந்தம்மில்மூன்றாயின' என்றது, சித், அசித் ஈச்வரன் என்ற தத்துவத்திரயத்தை யெனினுமாம். ஆழ்வாரருளிச் செயல் மும்மைத்தமிழாதல், கீழ் மூன்றாங்கவியில் விளக்கப்பட்டது. ஆர ணத்தின் மும்மைத்தமிழை யீன்றான்—"வான்திகழுஞ்சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல், ஆன்றதமிழ்மறைகள் ஆயிரமும் - ஈன்ற, முதல்தாய் சட கோபன்" எனப் பின்புள்ளார் அருளிச்செய்ததுங் காண்க. இசைக்கவி— "இசை, கூட்டி வண்சடகோபன் சொல்லமை, பாட்டோராயிரம்", "பண் ணிற் பன்னிருநாமப்பாட்டு", "பண்டலையிற்சொன்ன தமிழாயிரம்", "செயி ரில் சொல்லிசை மாலையாயிரம்", "பண்கொளாயிரம்" என்பன, திருவாய் மொழி.

'மும்மை' என்பது - மூன்றின் தன்மையை யுணர்த்தாமல், மூன்று என்னும் எண்ணையே உணர்த்திற்று: இதில், மைவிகுதி - தன்மையையுணர் த்தாமல், தன்மையையுடைய பொருளையே உணர்த்தியதனால், பகுதிப் பொருள்விகுதி யென்னும் ஸ்வார்த்த பாவதத்திதப்ரத்யயம்: "தெரிமாண் தமிழ் மும்மைத் தென்னம்பொருப்பன்," "இருமைவகை தெரிந்து" என்ப வற்றிலும் இது. (கூ)

எ. கவிப்பாவமுதமிசையின்கறியொடுகண்ணனுண்ணக்
குவிப்பான்குருகைப்பிரான்சடகோபன்குமரிகொண்கன்
புவிப்பாவலர்தம்பிரான்றிருவாய்மொழிபூசுரர்தஞ்
செவிப்பானுழைந்துபுக்குள்ளத்துளேநின்றுதித்திக்குமே.

(இ - ள்.) கவி பா அமுதம் - (தான்பாடும்) பாசுரங்களாகிய பாவிய இனிய உணவை, இசையின் கறியொடு - பண்ணிசைகளாகிற கறிவருக்கத் துடனே, கண்ணன் உண்ண குவிப்பான் - திருமால் அமுதுசெய்தருளும்படி மிகுதியாகச் சேர்த்துப் பரிமாறுபவரும், குருகை பிரான் - திருக்குருகூர்க் குத் தலைவரும், சடகோபன் - சடகோபனென்னுந் திருநாமமுடையவரும், குமரி கொண்கன் - குமரியாற்றுக்குத் தலைவரும், புவி பாவலர்தம் பிரான் - உலகத்திலுள்ள கவிசனங்கட்கெல்லாம் தலைவருமான நம் ஆழ்வாருடைய அருளிச்செயலான, திருவாய்மொழி - திருவாய்மொழியென்னுந் திவ்விய பிரபந்தமானது,—பூசுரர்தம் செவிப்பால் நுழைந்து - அந்தணர்களுடைய காதுகளிலே (குருமுகமாகச்) சென்று, உள்ளத்துளே புக்கு - (அவர்களுடைய) மனத்திலே புகுந்து, நின்று - (அங்கு) நிலைபெற்று, தித்திக்கும் - இனிமை விளைக்கும்; (எ - று.)—ஈற்று ஏகாரம் - தேற்றம்.

'கவிப்பாவமுதம் இசையின்கறியொடு கண்ணனுண்ணக் குவிப்பான்' என்றது, உருவகம்; எம்பெருமான் அன்புடன் திருச்செவிசாத்தித் திருப்தி யடையுமாறு இனிய இசைக்கவிபாடுபவ னென்றவாறு. "அட்டுக்குவிசோற் றுப்பருப்பதமும் தயிர்வாவியும் நெய்அளறும்" என்றாற்போல, 'பாவமுதம்' எனப்பட்டது. உணவு உண்பார்க்குக் கறி இன்றியமையாத் துணையா யிருந்து சுவைமிகுத்தல்போலக் கவியமுதுக்கு இசை கறியென்க. அடியவர்க்கு எளியவனான மூர்த்தியென்பார், கண்ணன் என்ற பெயராற் கூறினர். திருவாய்மொழி ஆயிரத்திற்குமேலும் உள்ளதுபற்றி, 'குவிப்பான்' என்றது. குமரியென்னும் நதியையுடைய பாண்டியநாட்டில் தலைமைபெற்று விளங்கு கிறவரென்பது, 'குமரிகொண்கன்' என்பதன் கருத்து. நாவில்மாத்திரமே தித்தித்து வாய்வழியாய் வயிற்றினுட் புகுந்து ஜீர்ணிக்கிற தேனும் பாலும் கன்னலும் அமுதும் போலன்றி, திருவாய்மொழியமுதம் செவிவாயிலாக நுழைந்து உள்ளத்துள்ளே புக்குநின்று தித்திக்குமென்க; இதில் வேற்றுமை யணி தொனித்தல் காண்க: இதனை, "சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க் கினிய" என்றாற்போலக் கொள்க.

இசை இன் கறி என்றுபிரித்து, இசையாகிய இனியகறி யெனினுமாம். கறிக்கப்படுவது கறி யெனக் காரணக்குறி; செயப்படுபொருள் விகுதி புணர்ந்துகெட்டது: கறித்தல் - கடித்துத்தின்னுதல், கண்ணன் - 'க்ருஷ்ணன்' என்ற வடசொல்லின் சிதைவு; அது கருநிறமுடையவ னென்றும், பிறவாறும்பொருள்படும்: இது - திருமாலின் ஓர் அவதாரப்பெயரன்றி, பொதுப் பெயருமாம். பாவலர் - பாடல்பாடவல்லவர்; பா - செய்யுள். பூசுரர் - பூமியில் தேவர்போலச் சிறப்புப்பெற்று விளங்குபவர்; "நிலத்தேவர்" என்றார் ஆழ்வாரும். தலைமைபற்றி, முதல் வருணத்தவர் எடுத்துக் கூறப்பட்டனர்.

"மறைப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து, துறைப்பாற் படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமுதம், கறைப்பாம்பணைப்பள்ளியானன்பு

ரீட்டங் களித்தருந்த, நிறைப்பான் கழலன்றிச் சன்மவிடாய்க்கு நிழலில்லையே" என்ற பிள்ளைப்பெருமாளையங்கார்பாடல் இங்கு நோக்கத்தக்கது. ()

ஙு. தித்திக்குமூலத்தெளியமுதேயுண்டுதெய்வமென்பார்
பத்திக்குமூலம்பனுவற்குமூலம்பவமறுப்பார்
முத்திக்குமூலமுளரிக்கைவாணகைமொய்குழலா
ரத்திக்குமூலங்குருகைப்பிரான்சொன்னவாயிரமே.

(இ - ள்.) குருகை பிரான் சொன்ன ஆயிரம் - திருக்குருகூர்க்கு இறைவரான நம் ஆழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்கள்,—தித்திக்கும் மூலம் தெளி அமுதே - இனிமைவிளைக்கின்ற பழமையான தெளிவுகொண்ட அமிருதமென்பது மாத்திரமோ? தெய்வம் உண்டு என்பார் பத்திக்கு மூலம் - தெய்வம் உள்ளது என்கிற ஆஸ்திகர்களுடைய பக்திக்குக் காரணமும், பனுவற்கு மூலம் - மற்றைய பிரபந்தங்கள் பலவற்றிற்கும் முதனூலும், பவம் அறுப்பார் முத்திக்கு மூலம் - பிறப்பையொழிக்க விரும்புபவர்களான முமுக்ஷுக்கள் முக்தியடைவதற்கு முக்கியசாதனமும், முளரி கை வாள் நகை மொய் குழலார் அத்திக்கு மூலம் - செந்தாமரைமலர் போன்றகைகளையும் ஒளியுள்ளபற்களையும் அடர்ந்தகூந்தலையுமுடைய மாதர்களின் விஷயமான ஆசையை அறக்கெடுப்பதற்கு ஏதுவுமாம்; (எ - று.)

ஆழ்வாரருளிச்செயலாகிய தென்மொழிவேதம் வடமொழிவேதம்போலவே அநாதியான முதனூலென்பதுபற்றி, அந்தஅமுதுக்கு 'மூலம்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. "பழகப்பழகப் பாலும் புளிக்கும்." "அளவுக்குமிஞ்சினால் அம்ருதமும் விஷமாம்" என்ற குற்றங்கள் இந்த ஆராவமுதுக்கு இல்லையென்பது தோன்ற, 'தித்திக்குமூலத் தெளியமுது' என்றனரென்னலாம். அமுதே, ஏ-வினா. பரபக்தி, பரஜ்ஞாநம் பரமபக்தி என்பவையெல்லாம் ஆழ்வாரருளிச்செயல்களில் விளங்க உரைக்கப்பட்டிருத்தலால், 'உண்டுதெய்வமென்பார் பத்திக்குமூலம்' என்றார். 'பனுவற்கு மூலம்' என்றது, பிற்பட்ட ஆழ்வாராதியர்களுடைய பிரபந்தங்கள் நம்மாழ்வாரருளிச்செயல்களைச் சொற்பொருட்கருத்துக்களில் அடியொற்றியிருத்தல்கொண்டு; (இதற்கு உதாரணமாக, நம்மாழ்வார் "விளரிக்குரலன்றில் மென்பெடைமேகின்ற முன்றிற் பெண்ணை, முளரிக்குரம்பை" என்றதைத் திருமங்கையாழ்வார், "முன்றிற்பெண்ணைமேல் முளரிக்கூட்டகத்து, அன்றிலின்குரல்" என்றதும், நம்மாழ்வார் "மணியே முத்தமே யென்றன் மாணிக்கமே" என்றதைத் திருமங்கையாழ்வார் "முத்தினை மணியை மணிமாணிக்கவித்தினை" என்றதும் முதலியன காண்க.) 'பவமறுப்பார் முத்திக்கு மூலம்' என்றதற்குக் காரணம் - வீடுபேற்றிற்கு நல்ல உபாயமான சரணாகதியை விவரித்திருத்தல். ("கொண்டபெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறரும், கண்டதோடு பட்டதல்லாற் காதல்மற்றி யாதுமில்லை, எண்டிசையும் கீழும் மேலும் முற்றவும் உண்டபிரான், தொடரோமா யுய்யலல்லாவில்லை கண்டீர் துணையே", "துணையும் சார்வு மாகுவார்போற் சுற்றத்தவர் பிறரும், அணையவந்த ஆக்கமுண்டேல் அட்டைகள்போல் சுவைப்பர், கணையொன்றாலே யேழ்மரமுமெய்த எம்கார்முகிலைப், புணையென்றுய்யப் போகிலல்லா லில்லைகண்டீர்

பொருளே" என்று உறுத்திக்கூறி), தேகபந்துக்களும் ஸம்பந்தபந்துக்களும் ஐஹிக பந்துக்களுமான மனைவி முதலிய ஆபாஸபந்துக்களின் பாசத்தை விட்டு ஆத்மபந்துவும் ஆபத்பந்துவும் ஸர்வதேச ஸர்வகாலபந்துவுமான எம்பெருமானைப் பற்றும்படி உணர்த்தியதனால், 'மொய்குழலார்க்கு மூலம்' எனப்பட்டது. திருவாய்மொழி ஆயிரத்து நூற்றிரண்டு செய்யுள்களாயினும், சொச்சத்தொகையைக் குறிக்காது பெருந்தொகையைமாத்திரமே குறித்து 'ஆயிரம்' என்றார்; எம்பெருமானுடைய ஆயிரத்தெட்டுத் திருநாமங்களை 'ஸஹஸ்ரநாமம்' என்றார்போல: நூறுபதிகத்திலுமுள்ள நூறு திருநாமப்பாட்டுக்களையும் ஒதுக்குமிடத்து ஆயிரத்திரண்டேயாகு மன்றோ.

பனுவல் - நூல். முளரி-முட்களையுடைய அரியையுடையதெனக் காரணப்பொருள்படும். அரி=அரை: தண்டின் சுற்றுப்புறம். 'மொய்குழலார்' என்றது, இலக்கணையால், அவர்கள்மீது கொள்ளும் ஆசையை உணர்த்திற்று. கையழகு, பல்வரிசையினழகு, கூந்தலழகு முதலியவற்றைக்கொண்டு பெண்டிர் ஈடுபடுத்த ஆடவர் அவற்றில் ஈடுபடுதல் இயல்பென்பது தோன்ற, அவர்களை 'முளரிக்கை வாணகை மொய்குழலார்' என்று வருணித்தனர். 'மூலம்' என்றசொல் ஒருபொருளிலேயே பலமுறைவந்ததனால், சொற்பொருட் பின்வருநிலையணி. (அ)

கூ. ஆயிரமாமறைக்குமலங்காரமருந்தமிழ்க்குப்
பாயிரநாற்கவிக்குப்படிச்சந்தம்பனுவற்கெல்லாந்
தாயிருநாற்றிசைக்குத்தனித்தீபந்தண்ணங்குருகூர்ச்
சேயிருமாமரபுஞ்செவ்வியான்செய்தசெய்யுட்களே.

(இ - ள்.) தண் அம் குருகூர் - குளிர்ச்சியான அழகிய திருக்குருகூரில் அவதரித்த, சேய் - குமாரரும், இரு மா மரபும் செவ்வியான் - (தாய்மரபு தந்தைமரபு என்ற) இரண்டு சிறந்தவம்சங்களிலும் மேன்மையையுடையவருமான ஆழ்வார், செய்த - அருளிச்செய்த, செய்யுட்கள் - பாசுரங்கள்,—ஆயிரம் மா மறைக்கும் அலங்காரம் - மிகப்பலவாகவுள்ள சிறந்தவேதங்கட்கெல்லாம் அழகுசெய்வனவாம்; அருந் தமிழ்க்கு பாயிரம் - (இன்சுவையினால்) அருமைமிக்க தமிழ்ப்பாஷைக்கு முகவுரையுமாம்; நால் கவிக்கு படிச் சந்தம் - நால்வகைக்கவிகளுக்கும் மாதிரிக்காப்பியமுமாம்; பனுவற்கு எல்லாம் தாய் - எல்லா நூல்களுக்கும் தாயுமாம்; இரு நால் திசைக்கு தனி தீபம்-எட்டுத்திக்குக்கும் ஒப்பற்ற விளக்குமாம்; (எ - று.)

ஆழ்வாரருளிச்செயல்கள், அளவிறந்த வேதங்களிலே எளிதிற்காணவொண்ணாதபடி மறைந்துகிடந்த தத்துவப்பொருள்களையெல்லாம் எடுத்துத் தெளிவுபடச் சொல்லி விளக்கி அவ்வேதங்களின்சிறப்பைப் பிரகாசிப்பித்தலால், 'ஆயிரமாமறைக்கும் அலங்காரம்'எனப்பட்டன. ஆயிரம் சாகைகளாகவுள்ள பெரிய ஸாமவேதமாகிய விருக்ஷம் முழுவதுக்கும் அழகுசெய்வனவென்றும் பொருள்கொள்ளலாம்; திருவாய்மொழி ஸாமவேதத்தின் ஸாரமாதலால். பாயிரம் - முகவுரை, நூன்முகம். ("மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்," 'அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போல'த்) திருவாய்மொழி எல்லாநூல்கட்கும் தலைமையாகவைத்து

முதலிற் கூறப்பட்டு விளங்குதலால், 'அருந்தமிழ்க்குப் பாயிரம்' என்றார். "ஆயிரமுகத்தா னகன்றதாயினும், பாயிரமில்லது பனுவலன்றே" என்றபடி நூற்குஇன்றியமையாச்சிறப்பினதான பாயிரம்போலத் திருவாய்மொழி தமிழ்க்கல்விகேள்விகட்கெல்லாம் இன்றியமையாச்சிறப்பின தென்பதும், 'பருப்பொருட்டாகிய பாயிரங் கேட்டார்க்கு, நுண்பொருட்டாகிய நூல் இனிதுவிளங்கும்'என்றபடி ஒருநூலின்பாயிரம் ஓதினார்க்கு அந்நூல் இனிது விளங்குதல்போலத் திருவாய்மொழியோதினார்க்கு எல்லாநூல்களும் இனிது விளங்கு மென்பதுபற்றியும் 'அருந்தமிழ்க்குப் பாயிரம்' என்றதாகவுங் கொள்ளலாம்.

நாற்கவி-ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, விஸ்தாரகவி என்பன. ஆசுகவியாவது - ("மூச்சுவிடுமுன்னே முந்நூறு நானூறும், ஆச்சென்றா லாயிரம்பாட் டாகாதோ," "இம்மென் னுமுன்னே எழுநூறு மெண்ணூறும், அம்மென்றா லாயிரம்பாட்டாகாதோ," "எழுந்தஞாயிறு விழுவதன்முன் கவிபாடின தெழுநூறே", 'நிமிஷக்கவிராயர்' என்னும்படி) விரைவிற்பாடுங் கவி. மதுரகவி-சொற்பொருள்களின் இனிமையமையப் பாடுங் கவி. சித்திரகவி-பலவகை மிறைக்கவி விசித்திரங்களமையப் பாடுங் கவி. விஸ்தாரகவி - ஒரு பொருளையே விரித்துப் பாடுங் கவி. படிச்சந்தம் - மாதிரிக்குக்காட்டும் அழகியவடிவம்; (திருக்கோவையாரில் "கடிச்சந்தயாழ்கற்ற மென்மொழிக்கன்னியனநடைக்குப், படிச்சந்தமாக்கும் படமுளவோ நும்பரிசகத்தே" என்றவிடத்து, பேராசிரியர், 'படிச்சந்தமென்பது - ஒன்றன்வடிவையுடைத்தாய் அதுவென்றே கருதப்படும் இயல்புடையது; படிச்சந்தமென்பது - ப்ரதிச்சந்தமென்னும் வடமொழிச்சிதைவு' என்று உரைப்பர்.) திருவாய்மொழி முதலியன, மதுரகவியாழ்வார் கேட்டுக்கொண்டேவர நம்மாழ்வார் தட்டுத்தடையின்றிச் சொல்லிக்கொண்டே வந்தவையும் எம்பெருமானை யநுபவித்த தனாலான ஆனந்தம் உள்ளடங்காமல் மேல்வழிந்து பிரபந்தரூபமாக வெளிவந்தவையு மாதலால் ஆசுகவிக்கு எடுத்துக்காட்டும், ஆதிதொடங்கி அந்தம் வரையிலும் செவிக்கினியசெஞ்சொல்லாய்த் தெளியமுதாதலால் மதுரகவிக்கு எடுத்துக்காட்டும், கரந்துறைசெய்யுளென்னுஞ் சொல்லணியின் இலக்கணவகையால் பிரணவமகாமந்திரத்தின் மூன்றுஎழுத்துக்களும் திருவாய்மொழியின் முதற்பாட்டின் முதல்மூன்றடிகளிலே அமையும்படி "உயர்வற உயர்நலமுடையவன் யவனவன், மயர்வற மதிநல மருளினன் யவனவன், அயர்வறு மமரர்க ளதிபதி யவனவன், துயரறு சுடரடி தொழுதெழென் மனனே"என்று அருளிச்செய்தது முதலியவற்றால் சித்திரகவிக்கு எடுத்துக்காட்டும், பதினொருபாடல்களையுடைய நூறுபதிகங்களின் வடிவமாகப் பகவத்விஷயம் ஒன்றையே குறித்து ஆயிரங்கவிகளுக்கு மேலாய்ப் பாடியுள்ளதனால் விஸ்தாரகவிக்கு எடுத்துக்காட்டு மாதல் காண்க.

பிற்பட்ட மற்றையாழ்வார்களுடைய பிரபந்தங்கட்கெல்லாம் முதனூலாதலாலும், யாக்கைநிலையாமை செல்வநிலையாமை முதலியவற்றை எடுத்து விளக்கி அறநூலுக்கும், "நும்மெய்வருத்திக் கைசெய்துய்ம்மினோ" என்று பொருள்தேடுமுபாயங்கூறிப் பொருள்நூலுக்கும், களவும் கற்புமாகிய அகப்

பொருள்துறைகளைப் பலவாற்றாற்காட்டி இன்பநூலுக்கும், முக்திபெறு முபாயத்தை யுணர்த்தி வீட்டுநூலுக்கும் ஆதாரமாதலாலும், 'பனுவற்கெல்லாம் தாய்' என்றனர். தாய் - தாய்போலத் தன்னுட்கொண்டு தருமென்றபடி. 'நாற்றிசைக்குத் தனித்தீபம்' என்றது "உலகத்துஇடரிரண்டாய்வரும் பேரிருள்சீப்பன" என்றபடி, சூரியசந்திரஅக்கினிய மென்னும்முச்சுடர்க்கும் நீக்கலாகாத அஜ்ஞாநமாகிற அகவிருளை அனைவர்க்கும் நீக்குதலா லென்க. 'தனித்தீபம்' என்றது - வெளியிருளை நீக்குகிற சாதாரணமான தீபத்தினும் உள்ளிருளைநீக்குகிற இந்தத் திவ்வியபிரபந்ததீபத்திற்கு உள்ள சிறப்பை உணர்த்துவதோடு, 'புறத்திருளை யொழித்தற்குப் பலசுடர்களுள்ளன: அகத்திருளையழித்தற்கோ இஃதொன்றே உள்ளது' என்ற கருத்தையுங் காட்டும்; இதனை "வெள்ளி வியாழம் விளங்கிரவி வெண்டிங்கள், பொள்ளென நீக்கும் புறவிருளைத்-தெள்ளிய, வள்ளுவரின்குறள்வெண்பா வகிலத்தோ, ருள்ளிருணீக்கு மொளி," "வையத்துவாழ்வார்க, ளுள்ளிருணீக்குமொளி" என்றாற்போலக் கொள்க.

தண், அம் என்ற அடைமொழிகள் - முறையே குருகூரின் நீர்வள நிலவளங்களை யுணர்த்தும். சேய் - செம்மையுடையவன்; செம்மை - ஞானச்செல்வி: 'செய்யவனென்பது சேய்என விகாரத்தால் நீண்ட தென்றுமாம்' என்பர் நச்சினார்க்கினியர். இருமாமரபு-இருமுதுகுரவர்மரபு. இருமாமரபும் செவ்வியான் - இருகுலத்திலும் கோடாத ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயையுடையவன்; இவருடைய திருத்தந்தையாரான காரியாரும் திருத்தாயாரான உடைய நங்கையாரும் ஆகிய இருவரும் வம்சபரம்பரையாகத் திருமாலடிக்கே தொண்டுபூண்டொழுகுஞ் சிறந்தகுலத்தவராதலை யறிக; (இவ்வாழ்வார்தாமே "எந்தை தந்தைதந்தைதந்தைதந்தைக்கும்முந்தை" என்று அருளிச் செய்கையாலே ஏழாட்காலும் புறந்தொழாமே குடிகுடியாட்செய்யுந் தொண்டக்குலத்திலே பிறந்து ஏழாட்காலும் பழிப்பிலரா யிருப்பர்; எங்ஙனேயென்னில்:—திருவழுதிவளநாடரென்றொருவர்; அவர்பிள்ளை அறந்தாங்கியார்; அவர்பிள்ளை சக்கரபாணியார்; அவர்பிள்ளை அச்சுதர்; அவர்பிள்ளை செந்தாமரைக்கண்ணர்; அவர்பிள்ளை செங்கண்ணர்; அவர்பிள்ளை பொற்காரியார்; அவர்பிள்ளை காரியார்; அவர்பிள்ளை மாறன். இவர்கள்தாம் இக்கிரமத்திலே ஸந்தானபரம்பரையாகக் குடியடியாராய்ப் பழவடிமையாய் வழிவழிவந்து ஆட்செய்யுந் தொண்டரான இத்திருவம்சத்திலே, பொற்காரியார் என்கிறவர், உலகெல்லாம் வாழும்படி தம்முடையபுத்திரரான காரியாருக்கு விவாஹம்பண்ணுவிப்பதாகத் திருவண்பரிசாரத்திலே காரியாரைக் கொண்டுபோய்த் தமக்குஸமான ஸம்பந்தயோக்கியராய் வைஷ்ணவஸந்தானிகரான திருவாழ்மார்பர் திருமாளிகையிலே எழுந்தருளி அவரைப்பார்த்து 'உம்முடைய புத்திரியாரான உடைய நங்கையாரை நம்முடையபுத்திரரான காரியாருக்கு விவாஹம்பண்ணித்தரவேணும்' என்று தமரும் பிறரு மறிய ப்ரஸங்கித்துக்கேட்க, திருவாழ்மார்பரும் மிகவும்ஸந்துஷ்டராய்க் கொண்டு ஸம்மதித்து, கலியாணம்கொடுத்து' என்ற குருபரம்பராப்ரபாவவாக்கியம் இங்கு நோக்கத்தக்கது. "கேசவன் தமர் கீழ்மேலெமரேழெழுபிறப்பும், மாசதிரதுபெற்று நம்முடையவாழ்வு வாய்க்கின்றவா" என்றார் திருவாய்மொழியிலும்.)

செய்யுட்களென்ற ஒரு பொருளினிடத்து, 'மறைக்குஅலங்காரம்' முதலாகப் பலபொருள்களின் தன்மையை ஆரோபித்துக்கூறியது, பலபடப் புனைவணி; கீழ்வந்த "தனமாஞ்சிலர்க்கு" என்ற செய்யுளும் இவ்வணியின் பாற்படும்; இதனை வடநூலார் உல்லேகாலங்கார மென்பர். "நெஞ்சுக்கிருள் கடிதீபம் அடங்காநெடும்பிறவி, நஞ்சுக்குநல்லவமுதம் தமிழ நன்னூற்றுறைக, ளஞ்சுக்கிலக்கியம் ஆரணசாரம் பரசமயப், பஞ்சுக்கனலின் பொறி பரகாலன்பனுவல்களே" என்ற பெரியதிருமொழித் தனியனோடு இச்செய்யுளை ஒப்பிடுக.

ஆயிரம்ஆம் மறை என்று பதம்பிரிப்பினு மாம். 'செய்யுட்களாயிரம்' என்று கூட்டுதலும் ஒன்று.

இச்செய்யுளில் 'பனுவற்கெல்லாம்தாய்' என்றும், கீழ்ச்செய்யுளில் 'பனுவற்குமூலம்' என்றும் கூறியவற்றிற்கு நிதரிசனமாக விநோதரசமஞ்சரியில் வருவதொரு விஷயம்:—'திருவள்ளுவர் குறள்செய்தகாலத்தில், அவரும் ஔவையும் இடைக்காடரும் சந்தித்த சமயத்தில், வள்ளுவரை நோக்கி மற்றைஇருவரும் 'நீர்செய்த நூல் எத்தன்மைத்தாகியது?' என்று வினவ, அவர் 'அகஸ்தியராற் பிரசித்தம் பண்ணப்பட்ட இயல் இசை நாடகம் என முத்திறத்ததாகிய தமிழும், என்னாற்செய்யப்பட்ட குறளும், உடையநங்கையின் திருக்குமாரராகிய சடகோபர் அருளிச்செய்த திருவாய்மொழியின் புத்ரஸ்தானமாகிய வழி நூலாம்' என்னுங் கருத்தை உள்ளமைத்து "குறுமுனி வன்முத்தமிழும் என்குறளும் நங்கை, சிறுமுனிவன் வாய்மொழியின் சேய்" என்று சொன்னதையும்; அதுகேட்டு, ஔவை, 'அர்த்தபஞ்சகத்தையும் சதுர்விதபுருஷார்த்தத்தையும் அறப்பால்முதலிய முப்பாலுள் அடக்கி அமைக்கப்பட்ட உண்மைப்பொருளாகிய எவ்வகைப்பட்ட வேதங்களுக்குஞ் சம்மதமான மேலானபொருளை, குளிர்ச்சிதங்கிய தாமிரபருணிதீரத்தி லிருக்குந் திருக்குருகூரிற் காரிமுதலியார்புதல்வராய் அவதரித்த நம்மாழ்வாரது திருவாய்மொழியாகிய திரவிடவேதமென்று சிலர் சொல்லுவார்கள்; நான், அவர்கள் சொல்லை மறுத்து, அக்குறளை, இந்த உலகத்திற்குத் தாயாகிய ஸ்ரீமந்நாராயணனாற் பிரமனுக்கு உபதேசிக்கப்பட்டுவந்த கீர்வாணவேதமென்றே சொல்லுவேன்' என்னுங் கருத்தை உள்ளிட்டு "ஐம்பொருளும் நாற்பொருளும் முப்பொருளிற் பெய்தமைத்த, செம்பொருளை யெம்மறைக்குஞ் சேட்பொருளைத் - தண்குருகூர்ச், சேய்மொழிய தென்பர் சிலரி யானிவ்வுலகின், தாய்மொழிய தென்பேன் தகைந்து" என்று சொன்னதையும்; இடைக்காடர் 'திரவிடவேதமாகிய சேய்மொழியையும் கீர்வாணவேதமாகிய தாய்மொழியையும் ஆராய்ந்து சொல்லுமிடத்தில், இரண்டும் ஒன்றேயாம். திருவாய்மொழியை யாவரும் சங்கையின்றி வேதமென்றேசொல்லுவார்கள். திருவாய்மொழியைப்போலச் சிறந்தநூல்கள் அநேகம்உண்டு என்று சிலர் குதர்க்கஞ் செய்தாலும், நான், அவர்களை மறுத்து, அவைகளும் இந்தக்குறளும் அத்திருவாய்மொழியினது சாயையா யிருப்பவைக ளென்றே சொல்லுவேன்' என்னுங் கருத்தை யடக்கி, "சேய்மொழியோ தாய்மொழியோ செப்பி லிரண்டு மொன்றவ், வாய்மொழியை யாரு மறையென்ப - வாய்மொழிபோ,

லாய்மொழிகள் சாலவுளவெனினு மம்மொழியின். சாய்மொழி யென்பேண் யான் தகைந்து" என்று சொன்னதையும் நினையாமற்போனோமே' என்பது.)

ருO. செய்யோடருவிக்குருகைப்பிரான்றிருமாலைநங்கள்
கையோர்கனியெனக்காட்டித்தந்தான்கழற்கேகமலம்
பெய்யோமவன்புகழேத்திப்பிதற்றிப்பித்தாய்த்திரியோ
மையோவறிதுமென்றேயுபகாரத்தினாற்றலையே.

(இ - ள்.) செய் - வயல்களில், ஓடு - விரைந்துபாய்கின்ற, அருவி-நீர்ப் பெருக்கையுடைய, குருகை - திருக்குருகூரில் அவதரித்த, பிரான் - தலைவரானஆழ்வார், திருமாலை-ஸ்ரீமந்நாராயணனை, நங்கள் கை ஓர்கனி என காட்டி தந்தான் - நம்முடைய கையிற் கிடைத்தவொரு பழத்தைப்போல (ஸ்வரூபம் நன்குவிளங்கும்படி) காட்டி உபகரித்தருளினர்; (அவன்) கழற்கே - அங்ஙனம் மகோபகாரஞ்செய்தவருடைய திருவடிகளிலே, கமலம் பெய்யோம் - தாமரைமலர்களை இட்டு அருச்சிக்கின்றோமில்லை! அவன் புகழ் ஏத்திபிதற்றி பித்து ஆய் திரியோம்-அந்த ஆழ்வாருடைய கீர்த்தியை எடுத்துத் துதித்துப் பலகாலுஞ்சொல்லி (அவ்விஷயத்திலே நம்மைப் பித்தரென்றே பிறர்சொல்லும்படி) பரவசமாய்த் திரிதலுஞ் செய்திலோம்!! ஐயோ-அந்தோ! உபகாரத்தின் ஆற்றலை என்றே அறிதும் - (ஆழ்வார்செய்தருளிய உதவியின்பெருமையை என்றைக்குத்தான் அறிவோம்! (எ - று.)

என்றறிது, எவ்வாற்றாலும் உணர்தற்கு அரிய பகவானுடைய சொரூபத்தை ஆழ்வார் தெளிவாகஉணர்த்திவிளக்கி எளிதிற்காட்டி யருளினமையாகிய பேருதவிக்கு உலகத்தவரனைவரும் கடமைப்பட்டிருக்கவும் பெரும்பாலார் அதனை உணர்ந்து அவர்திறத்தில் வழிபாடுசெய்தலின்றிப் பழுதேபலபகலும்போக்குதலைக்குறித்துக் கழிவிரக்கமாகக் கூறியவாறாம். அவருடைய திருவடிகளில் மலர்களைக்கொண்டு அருச்சனைசெய்தும் அவர்புகழையே எப்பொழுதும்எடுத்துச்சொல்லியும் உய்தல் தவிர, அவர்செய்த பேருதவிக்கு ஏற்றபடி பிரதியுபகாரஞ்செய்யக்கூடிய தொன்றுமில்லை யென்பதும் இதிற்போதரும். கையோர்கனியெனக் காட்டித்தருதல் - கைவசமாம்படி காட்டிக்கொடுத்தல்; ("கையிற்கனியென்னக் கண்ணனைக் காட்டித்தரிலும்," "கையிலங்கு நெல்லிக்கனி," 'கரதலாமலகம்,' 'உயரத்திலேயிருக்கிற மகாபலமானது அடியிலேயிருக்க மடியிலேவிழும்படி கைகண்ட பலமாயிருக்கும்', "கையுறைநெல்லித்தன்மையி னெல்லாங்கரைகண்டாம்" என்பன காண்க.)

வயலை 'செய்' என்பது - கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுட் பன்றிநாட்டில் வழங்குந் திசைச்சொல். 'நன்செய்,' 'புன்செய்' என்ற வழக்குங் காண்க. அருவி - மலைநீர்ப்பெருக்கு; இங்கு, பொதியமலையினின்று வரும் பொருநையாற்றின்வெள்ளம். 'நங்கள்' என்ற தன்மைப்பன்மை - பிறரையும் உளப்படுத்தியது. கழற்கு = கழலில்: உருபுமயக்கம்; ஏ-பிரிநிலை. பிதற்றுதல் - பேசுதல்; "இசைத்தல் விளத்த லியம்பல் புகறல், பிதற்ற லென்றிவை பேசுதலாகும்" என்பது, பிங்கலந்தை. அவரது புகழின்பெருமைக்கு ஏற்றபடி அதனை ஒழுங்காக எடுத்துக்கூறுந் திறமைதானும் எங்கட்கு அரிதென்பது.

'பிதற்றி' என்ற சொல்லின் ஆற்றலால் தோன்றும். பித்து ஆய்த்திரிதல் - காண்பவர் பேய்பிடித்தவரென்னும்படி பரவசப்பட்டுப் பலவிடத்துஞ் செல்லுதல். "நேசனைக் காணுவிடத்து நெஞ்சாரவே துதித்தல், ஆசானை யெவ்விடத்து மப்படியே," "குரும் ப்ரகாசயேந் நித்யம்" என்றபடி ஆசார்யருடைய பெருமைகளை ஊரும் நாடும் உலகமும் எல்லாம் அறியும்படி வெளியிடுதல் தகுதியாதல் காண்க; "எண்டிசையுமறிய இயம்புகேன், ஒண்டமிழ்ச் சடகோபனருளையே" என்று ஸ்ரீமதுரகவியாழ்வார் அருளிச்செய்ததும் உணர்க. "அரங்கனுக்கடியார்களாகியவருக்கே, பித்தராமவர் பித்தரல்லர்கள் மற்றையார் முற்றும்பித்தரே" என்றபடி பாகவதவிஷயத்திலே பக்தி காரியமான பித்துஏறித் திரிதல் உரியதாதலால், அது வேண்டப்பட்டது; உரியவிஷயத்திற் பித்துக்கொண்டவர் பித்தராகார், உரியனவல்லாதவிஷயங்களிற் பெருவிருப்புக்கொண்டவரே பித்தராவ ரென்க.

நம்மாழ்வார் செய்தருளின உபகாரத்தின் வைபவத்தைப் பாராட்டி ஸ்ரீமதுரகவிகள் "அருள்கொண்டாடுமடியவரின்புற, அருளினனவ்வருமறையின்பொருள், அருள்கொண்டாயிர மின்தமிழ் பாடினான், அருள்கண்டீரிவ்வுலகினில் மிக்கதே" என்று அருளிச்செய்திருத்தல் நோக்கத்தக்கது. (க0)

கக. ஆற்றிற்பொதிந்தமணலின்றொகையருமாமறைகள்
வேற்றிற்பொதிந்தபொருள்களெல்லாம்விழுமாக்கமலஞ்
சேற்றிற்பொதிபவிழ்க்குங்குருகூரர்செஞ்சொற்பதிக
நூற்றிற்பொதிந்தபொருளொருகூறுநுவல்கிலவே.

(இ - ள்.) ஆற்றில் பொதிந்த மணலின் தொகை - ஒருநதியிலேபொருந்தின மணல்களெத்தனையோ அத்தனையாகவுள்ள [அநந்தங்களென்னும்படி அளவிறந்தனவான], அரு மா மறைகள் வேற்றில் - (ஓதியுணர்தற்கு) அரியனவும் சிறந்தனவும் பலவேறு வகைப்பட்டனவுமாகிய வேதங்களனைத்திலும், பொதிந்த - உள்ளடங்கிய, பொருள்கள் எல்லாம் - சகல அர்த்தங்களும்,—விழு மா கமலம் - சிறந்த பெரிய தாமரைமலர்கள், சேற்றில் பொதி அவிழ்க்கும் - சேறுள்ளவிடங்களிலெல்லாம் கட்டவிழ்த்துமலரப்பெற்ற, குருகூரர்-திருக்குருகூரிலவதரித்தவரான ஆழ்வார் அருளிச்செய்த, செம் சொல் பதிகம் நூற்றில்-செந்தமிழ்ச்சொற்களாலாகிய நூறுதிருப்பதிகங்களில், பொதிந்த-நிரம்ப அமைந்த, பொருள் - அருத்தத்தின், ஒரு கூறும் - ஒருபகுதியையாயினும், நுவல்கில-சொல்லமாட்டிற்றில; (எ - று.)—ஏ-தேற்றம்.

அளவிறந்த அரிய பெரிய பல வேதங்களிலு முள்ள பொருள்களெல்லாங்கூடி, திருவாய்மொழி ஆயிரம்பாசுரத்திற் கூறிய ஸாரார்த்தத்தின் ஒரு பகுதியளவுஞ் சொல்லினவல்ல வென்பதாம்; என்றது, சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல் முதலிய அழகுகளோடு தத்துவப்பொருள்களின் ஸாரங்களை எடுத்துச்சொல்லிவிளக்குந்தன்மையில் வடமொழிவேதங்களினும் இத்தென்மொழிவேதம் மிகச்சிறந்ததென்று இதன்வைபவத்தைக் கொண்டாடிக் கூறியவாறு; துதிவகையாகிய இது 'நஹிநிந்தாந்யாய' த்தால் வேதத்தைப் பழித்ததாகாதென்க. 'ஓர் ஆத்மாவுக்கு ஹிதாம்சத்துக்கு ஒருபாட்டே அமையும்படியிறே இவர்பாடிற்று' என்பர் ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை. எண்ணலள

வைக்கு உட்படாதென்றற்கு, 'ஆற்றிற்பொதிந்த மணலின் தொகை' என்றார். 'மறைகள்வேறு' என்றது - ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்ற நால்வகை வேதங்களை. தாமரைக்குச் சிறப்பு - திருமகளுக்கு வாஸஸ்தானமாதல். அது பங்கஜமாதலால், 'சேற்றிற்பொதியவிழ்க்கும்' எனப்பட்டது. இவ்வர்ணனை, மருதநிலமாகிய குருகூரின் சீர்வளத்தை யுணர்த்தும்; "செய்ய தாமரைப்பழனத் தென்னன்குருகூர்ச் சடகோபன்" என்ற திருவாய்மொழியையுங் காண்க. பதிகம் - பத்து அல்லது பதினொரு செய்யுள் கொண்டது: 'தசகம்' எனப்படும்; இதனை 'திருமொழி' என்றல், வைஷ்ணவசம்பிரதாயம்.

[இயலிடங்கூறல்.]

௯௨. இலவேயிதழுளவேமுல்லையுள்ளியம்பும்மொழியுஞ்
சிலவேயவைசெழுந்தேனொக்குமேதமிழ்ச்செஞ்சொற்களாற்
பலவேதமுமொழிந்தான்குருகூர்ப்பதுமத்திரண்டு
சலவேல்களுமுளவேயதுகாணென்றனியுயிரே.

(இ - ள்.) தமிழ் செம் சொற்களால் பல வேதமும் மொழிந்தான் - செவ்விய தமிழ்மொழிகளினாற் பலவகைவேதங்களின் பொருளையெல்லாம் அருளிச்செய்தவரான ஆழ்வாருடைய (திருவவதார ஸ்தலமாகிய), குருகூர் - திருக்குருகூரிலே, பதுமத்து - ஒரு தாமரைமலரிலே, இதழ் - இதழ்கள், இலவே - இலவமலரேபோலும்; (அவ்விதழ்களினுள்ளே), முல்லை உளவே - முல்லையரும்புகள் உள்ளனவே; உள் இயம்பும் மொழியும் சிலவே - அவற்றுள்ளே பேசப்படும் பேச்சுக்களும் சிலவே (உண்டு): அவை - அந்தச் சின்மொழிகள்தாம், செழுந் தேன் ஒக்குமே - சுவைமிக்க தேனையே போலும்; (மற்றும் அத்தாமரைமலரில்), இரண்டு சலம் வேல்களும் உளவே - அசைகின்ற இரண்டு வேலாயுதங்களும் உள்ளனவே; அது காண் என் தனி உயிரே - (இவை யனைத்தையுமுடைய) அவ்வுருவந்தான் எனது தனிப்பட்ட உயிர்போன்ற காதலி யென்று (நீ) உணர்வாய்; (எ - று.)

ஓர் உத்தமபுருஷன் பரிவாரத்துடன் வேட்டையாடுதற்குப் புறப்பட்டு வனத்துக்குச் சென்றவனும் ஓர் உத்தமகன்னிகையும் தோழியருடன் பூக்கொய்துவிளையாடுதற்கென்று பூஞ்சோலையிற் சேர்ந்தவளவிலே, ஒவ்வொருவியாஜத்தால் தோழியர் பிரிய அக்கன்னிகை அங்குத் தனித்துநின்ற சமயத்தில், ஒவ்வொருவியாஜத்தாற் பரிவாரங்கள் பிரியத் தனிப்பட்டவனும் அப்புருஷன் அங்கு வந்துசேர, இருவரும் ஊழ்வினைவசத்தால் இங்ஙனந் தற்செயலாய் ஓரிடத்திலே சந்தித்து ஒருவரையொருவர் கண்டு காதல்கொண்டு காந்தர்வவிவாக கிரமத்தாற் கூடி உடனே பிரிவர்; இச்சேர்க்கை, இயற்கைப்புணர்ச்சியென்றும், தெய்வப்புணர்ச்சியென்றும், முன்னுறுபுணர்ச்சியென்றும் பொருளிலக்கணத்திற் கூறப்படும். இங்ஙனங் கலந்து பிரிந்த தலைமகன் பின்பு தனதுதோழனைத் துணையாகக்கொண்டு மீண்டும் அத்தலைமகளைச் சந்தித்தல், முறைமை; அது, பாங்கற்கூட்டமெனப்படும். அதற்கு உரிய துறைகள் பலவற்றில், 'இயலிடங்கூறல்' என்ற துறை, இச்செய்யுளிற் கூறியது; அதாவது - முதலிற் கலந்து பிரிந்த தலைமகன், பின்பு தன்னையடுத்துத் தன்மெலிவைக் கண்டு 'நீ இவ்வாறு ஆதற்குக் காரணம் என்னோ?'

என்று வினவிய பாங்கனுக்கு, 'யான் ஒருத்திவலையிலே அகப்பட்டேன்' என்று உற்றதுகூற, அதுகேட்ட பாங்கன் 'நினது ஒழுக்கம் தக்கதன்று' என்று சிலகூறியபின்பும், தலைமகன் தெளிவுபெறாது வருந்தவே, பாங்கன் இரக்கங்கொண்டு 'நின்னாற் காணப்பட்ட வடிவம் எத்தன்மைத்து? அதனை நீ கண்ட இடம் எது?' என்று இயலும் இடமும் வினவ, அதுகேட்ட தலைமகன் மகிழ்ச்சிகொண்டு 'என்னாற்காணப்பட்ட வடிவுக்கு இயலிவை இடமிது' என்று கூறுதல்.

'இதழ்' என்றது-இங்கு, வாயிதழ்களை. அவற்றிற்கு இலவம்பூ உவமை - செம்மைக்கும், மென்மைக்கும். 'முல்லை' என்றது - அவ்வரும்புகள்போல் வெண்ணிறமான வடிவையுடைய பற்களின் வரிசையை. மொழிக்குத்தேன் உவமை - இனிமையில். கண்டவர் கண்களைக் களிப்பிக்குங் கட்டழகுபற்றி முகம் 'பதுமம்' என்றும், கூரியவடிவும் ஆடவர்நெஞ்சிற்பாய்ந்து அதன்வலிமையைக்கெடுத்து அதனை வருத்துந்திறமும் பற்றிக் கண் 'வேல்' என்றுங் கூறப்பட்டன. இன்றியமையாமையும் மிக்கஅன்புக்குஇடமாதலும் தோன்ற, 'உயிர்' என்றது. தனிஉயிர் - ஒப்பற்ற உயிர்எனினுமாம். கண்களின்பிறழ்ச்சி பற்றி, அதற்கு உபமானமான வேலுக்கு 'சலம்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. சலவேல்என்பதற்கு-மாறுபாட்டையுடையவேல் என்று உரைப்பாருமுளர். 'மொழியுஞ் சிலவே' என்றது, மிதமாகப்பேசுபவளாதலால்.

முல்லை, பதுமம், வேல் என்பன - உருவகவுயர்வுநவிற்சியால் உபமேயத்தின்மேல் நின்றன. மொழியின் செழுமையைக் கருதி, அதற்கு உவமையாகிய தேனுக்குச் செழுமை அடைமொழியாக்கப்பட்டது. உணர்தற்குஅரிய வைதிக சப்தம்போலன்றி எளிதிலுணரத்தக்கவையான தமிழ்ச்சொற்களினாலென்பார், 'தமிழ்ச்செஞ்சொற்களால்' என்றார். பலவேதமும்மொழிந்தான்' என்றது, அநந்தமானவேதங்களின் அருத்தத்தைத் தொகுத்துச் சுருக்கிக் கூறியருளிய தென்றவாறும். இச்செய்யுளின் முதலடியிற் சொற்போக்கினால் 'இல', 'உள' என்ற மாறுபட்டசொற்கள் அமைதல், முரண்தொடையின்பாற்படும்; "மொழியினும்பொருளினும் முரணுதல் முரணே" என்றார், ஆசிரியர் தொல்காப்பியனார். இரண்டுமூன்றாமடிகளில் சில பல என்பனவும், மூன்றுநான்காமடிகளில் இரண்டு தனி என்பனவும் வந்ததையும் தொடைமுரணென்னலாம். இச்செய்யுளின் மெய்ப்பாடு - உவகை. பயன் - பாங்கற்கு உணர்த்தல்.

தோத்திரப்பிரபந்தங்களில் அகப்பொருட்கிளவித்துறைகளை இடையிடையே கூறுதல் கவிசமயமாதலை இலக்கியங்கள்கொண்டுஉணர்க. அருமறைப்பொருளை அருளினால் தமிழிற்பாடியுதவியவரான ஆழ்வாருடைய திருமுகமண்டலத்தின் திவ்வியசௌந்தரியத்தையும், கூரியஞானவிகாஸத்தையும் திருவாய்மலரின் செவ்வியையும், அதனகத்தேவிளங்குகின்ற சுத்தமான தந்தபங்க்தியையும், அங்குநின்றுவெளிவருகிற சுருங்கச்சொல்லல்முதலியஅழகுகளோடுகூடிய செவ்விய தீஞ்சொற்களையுங் கண்டு அவற்றில் ஈடுபட்ட பாகவதர், தங்கள் ஈடுபாட்டைக் கண்டு உசாவிய அன்பர்கட்கு, அந்த ஆழ்வாருடைய இயல்புகளையும் திருவவதாரஸ்தலத்தையும் அவர் தங்கட்கு இன்றி

யமையாதவ ரென்ற அருமையையும் எடுத்துக்கூறுதல், இதற்கு உள்ளுறை பொருளாதலை உய்த்துணர்க; விரிப்பிற் பெருகும். ஸ்வாபதேசத்தில், தலைமகள் - ஆழ்வார், தலைமகன் - பாகவதர். (௩௨)

௩௯. உயிருருக்கும்புக்குணர்வுருக்கும்முடலத்தினுள்ள
செயிருருக்கொண்டநந்தீங்குருக்குந்திருடித்திருடித்
தயிருருக்குநெய்யொடுண்டானடிச்சடகோபன்சந்தோ
டயிருருக்கும்பொருநற்குருகூரெந்தையந்தமிழே.

(இ - ள்.) தயிர்-தயிரையும், உருக்கும் நெய்யொடு - உருக்குதற்குஉரிய வெண்ணெயையும், திருடி திருடி உண்டான் - (திருவாய்ப்பாடியில்) இடந்தொறும் நாள்தொறும் எப்பொழுதும் மிகுதியாகக் களவாடி அமுதுசெய்தருளியவனை திருமாலினது, அடி-திருவடிநிலையாகிய, சடகோபன்-சடகோபனென்னுந் திருநாமமுடையவரும், சந்தோடு அயிர் உருக்கும் பொருநல் குருகூர் எந்தை - (பரிமளத்தாற்) சந்தனத்தையும் (சுவையினிமையாற்) சருக்கரையையுந் தோற்கச்செய்கின்ற பொருநையென்னுந் தாமிரபர்ணிநதி பாயப்பெற்ற திருக்குருகூரில் அவதரித்தவருமான நம்மாழ்வாருடைய, அம் தமிழ்-(அழகிய தமிழ்ப்பாசுரங்கள்),—உயிர் உருக்கும் - (ஓதுகிற நம்முடைய) உயிரை(ப் பக்திமிகுதியினால்) உருகச்செய்யும்; புக்கு உணர்வு உருக்கும்-உள்ளே பிரவேசித்து (அகத்துஉறுப்பான) மனத்தை (ஆனந்தாதிசயத்தாற்) கரையச்செய்யும்; செயிர் உரு கொண்ட நம் உடலத்தின் உள்ள தீங்கு உருக்கும் - குற்றந்தானே புருஷவடிவங்கொண்டாற் போன்ற நமது தேகசம்பந்தத்தாலாகிய (காமம் கோபம் முதலிய) பொல்லாங்குகளைப் போக்கும்; (எ - று.)

உருக்குதல் - உருகச்செய்தல், நெகிழ்ந்துகரைவித்தல், மெலிவித்தல். தீங்கு - தீக்குணம், தீச்செயல்கள். உருக்கும்நெய்—'உருக்கும்' என்பது எதிர்காலப்பெயரெச்ச மாதலால், இனிமேல் உருக்கப்படும் நெய் எனக்கொண்டு, வெண்ணெ யெனப்பட்டது; (சீவகசிந்தாமணியில் "வெம்புஞ்சுடர்" என்பதற்கு-நச்சினார்க்கினியர் 'இளஞாயிறு' எனப் பொருள்கொண்டு, 'மேல் வெம்பும் என எதிர்காலம்நோக்கிற்று' என்றமை காண்க.) இனி, உருக்குமென்பதை, காலமுணர்த்தாது தன்மையுணர்த்தியதெனக் கொண்டு, உருக்கும்நெய்-வெண்ணெயுருக்கினநெய் [அதாவது - புத்துருக்குநெய்] என்றுங் கொள்ளலாம். பெருமாள் கிருஷ்ணாவதாரத்திற் கோகுலத்திலே ஆய்ச்சியர் வைத்த பால் தயிர் வெண்ணெய் நெய் முதலியவற்றைக் களவுசெய்துஉண்டமை, பிரசித்தம். ஆழ்வார் எம்பெருமானது திருவடிகளுக்கு மிகவும் அந்தரங்கபக்தராக இருந்ததுபற்றி அப்பெருமானதுபாதுகை 'ஸ்ரீசடகோபன்' என்று இவரது திருநாமத்தை யிட்டு வழங்கப்படுதல் தோன்ற, 'உண்டானடிச்சடகோபன்' என்றா ரென்க; "முகில்வண்ணனடியையடைந் தருள்சூடியுய்ந்தவன்" என்றபடி திருமாலின் திருவடிகளைச் சரணமடைந்து அடிமைபூண்ட சடகோபன் எனினுமாம். 'சந்தோடுஅயிர்உருக்கும்' என்பதற்கு - (நீர்ப்பெருக்கு மலையினின்று விசையுடன்வந்து பெருகும்போது) சந்தனமரத்தையும் நுண்மணலையுங் கரையச்செய்துவரு மென்று உரைப்பினுமாம். பொருநை யெனினும், பொருந லெனினும் ஒக்கும். (௩௯)

௧௪. அந்தமிலாமறையாயிரத்தாழ்ந்தவரும்பொருளைச்
செந்தமிழாகத்திருத்திலனேனிலத்தேவர்களுந்
தந்தம்விழாவுமழகுமென்னுந்தமிழார்கவியின்
பந்தம்விழாவொழுகுங்குருகூர்வந்தபண்ணவனே.

(இ - ள்.) ஆர் தமிழ் கவியின்-(இலக்கணம்) நிரம்பிய தமிழ்ப்பாடல்கள் (சீர்கேடின்றி ஒழுகுதல்) போல, பந்தம் விழா ஒழுகும் - ஒழுங்காக [முறை மைதவறாமல்] நித்திய நைமித்திக உத்ஸவங்கள் நடக்கப்பெற்ற, குருகூர் - திருக்குருகூரில், வந்த-அவதரித்த, பண்ணவன் - பெரியவரான ஆழ்வார், அந்தம் இலா மறை ஆயிரத்து ஆழ்ந்த அரும் பொருளை-அழிவில்லாதனவும் அநேகஆயிரம் சாகைகளாகவுள்ளனவுமான வேதங்களின் ஆழ்ந்த அருமை யான ஸரார்த்தத்தை, செம் தமிழ் ஆக திருத்திலனேல் - செவ்விய தமிழ்த் திவ்வியபிரபந்தங்களாகச் சீர்திருத்தி அருளிச்செய்யா திருந்தனராவல்,நிலத் தேவர்களும் தம் தம் விழாவும் அழகும் என் ஆம் - அந்தணர்களும் (அவ்வந்த ணர்களில்) அவரவர் கொண்டாடிச்செய்யுந் தேவாலய உத்ஸவங்களும் ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயும் யாதாய்முடியும்? [சிறிதும்சிறப்புறா என்றபடி]; (எ-று.)

பூதேவ ரெனப்படுகிற அந்தணர்கட்கு "குருகூர்ச்சடகோபன்சொற், சந்தங்களாயிரத்திவைவல்லார் முனிவரே" என்றபடி ஆழ்வாரருளிச்செயல் களை ஓதினால்மாத்திரமே சிறப்புண்டு என்பதும், கோயில்களில்நிகழும் நித் தியநைமித்திகஉத்ஸவங்களிலெல்லாம் தமிழ்வேதங்களையோதவேண்டுமென் பது ஸ்ரீபாஞ்சராத்திராதிசாஸ்திரசம்மத மென்பதும், "குருகூர்ச்சடகோபன் சொன்ன, குறிகொளாயிரத்துள்ளிவைபத்தும் திருக்குறுங்குடியதன்மேல், அறியக்கற்றுவல்லார் வைட்டணவ ராழ்கடல்ஞாலத்துள்ளே" என்றபடி அரு ளிச்செய லோதினாலே ஸ்ரீவைஷ்ணவத்வபூர்த்தியுண்டா மென்பதும் பற்றி, இங்ஙனங்கூறினார். எம்பெருமானுடைய ஐந்துவகைநிலைகளுள் பரத்வம் வியூகம் விபவம் அந்தர்யாமித்வம்என்ற நான்குக்கும் முறையே வேதம் பாஞ்ச ராத்திரம் இதிகாசம் ஸ்மிருதி என்பனபோல அர்ச்சாவதாரத்துக்கு ஏற்ற துதி திவ்வியபிரபந்தங்களே யென்பதையும் உணர்க. அஃறிணையிருபாலுக் கும் பொதுவான 'எவன்' என்ற வினாவினைக்குறிப்புப்பெயர், என் என்று விகாரப்பட்டது; ஆகவே, 'நிலத்தேவர்களும் தம்தம்விழாவும் அழகும்' என் னும்' என்ற முடிபு - உயர்திணையும் அஃறிணையும் அடுக்கி, மிகுதிபற்றி, அஃறிணைமுடிக்குஞ்சொல்லைக் கொண்ட திணைவழுவமைதியாம்: தேவர்கள் என உயர்திணைப்பொருள் ஒன்றேயாக. விழாவும் அழகும் என அஃறிணைப் பொருள் இரண்டாதல். இங்கே மிகுதி. அன்றி, 'ஆகும்' என்ற செய்யு மென்முற்றின் விகாரமான 'ஆம்' என்றது "பல்லோர்படர்க்கை முன்னிலை தன்மையிற், செல்லாதாகுஞ் செய்யுமென்முற்றே" என்றபடி பலர்பாலுக்கு வாராமை காண்க.

(அந்தமிலாமறையாயிரத் தாழ்ந்த அரும்பொருளைச் செந்தமிழாகத் திருத்திலனேல்—'அல்பச்ருதர்கலக்கின ச்ருதி நன்ஞானத்துறைசேர்ந்து தெளிவுற்று ஆழ்பொருளையறிவித்தது', 'மேகம்பருகினஸமுத்ராம்புபோலே

'நூற்கடல்சொல். இவர்வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதாஸர்வோப ஜீவ்யமாமே' என்ற ஆசார்யஹ்ருதயவாக்கியங்கள் நோக்கத்தக்கன.)

முறைகேடின்றித் திருவிழா நடத்தற்கு, தமிழ்க்கவியின் முறைகேடின் மையை உவமைகூறியதனால், இந்நூலாசிரியரது பாஷாபிமானம் விளங்கும். பண்-பெருமை; அதனையுடையவன், பண்ணவன். (கச)

கரு. பண்ணப்படுவனவும்முளவோமறையென்றுபல்லோ
ரெண்ணப்படச்சொற்றிகழச்செய்தானியலோடிசையின்
வண்ணப்படைக்குத்தனித்தலைவேந்தன்மலருகுத்த
சுண்ணப்படர்படப்பைக்குருகூர்வந்தசொற்கடலே.

(இ - ள்.) இயலோடு இசையின் வண்ணம் படைக்கு - இயற்றமிழ்த் துறைவகைகளும் இசைத்தமிழ்த்துறைவகைகளு மாகிய சேனைகட்கு, தனி தலை வேந்தன் - ஒப்பற்ற தலைமைபூண்ட அதிபதியும்,—மலர் உகுத்த சுண்ணம் படர்-பூக்கள்சிந்திய மகரந்தப்பொடிகள் பரவப்பெற்ற, படப்பை - மருத நிலத்துஊராகிய, குருகூர் - திருக்குருகூரில், வந்த - அவதரித்த, சொல் கடல் - சொற்கள் நிறைந்த கடலுமாகிய ஆழ்வார்,—பண்ணப்படுவன மறையும் உளவோ என்று பல்லோர் எண்ணப்பட - (நூதனமாகச்) செய்யப்படு வனவாகிய வேதங்களும் உண்டோ வென்று பலபேராலும் கருதப்படுமாறு, சொல் திகழ - சொற்கள் சிறப்புற்று விளங்க, செய்தான் - (தமிழ்த்திவ்வியப் பிரபந்தங்களை) அருளிச்செய்தனர்; (எ - று.)

ஸம்ஸ்கிருதவேதம்போலவே தமிழ்மறையாகிய திவ்வியப்பிரபந்தங்களும் நித்தியமென்பது, ஆன்றோர்கொள்கை. திவ்வியப் பிரபந்தங்களை ஆழ்வார்கள் இயற்றியதாகச்சொல்லுதல் என்னெனின்,-வடமொழிவேதங்களை அன்ன வடிவங்கொண்ட திருமாலினிடம் உபதேசம்பெற்ற பிரமன் தனது வாக்கினால் வெளியிட்டமாத்திரத்தைக்கொண்டு "முன்னம் திசைமுகனைத்தான் படைக்க மற்றவனும், முன்னம்படைத்தனன் நான்மறைகள்" என்று பிரமன் தானே அவற்றைப்படைத்ததாகச் சொல்லுதலும், பின்பு அவ்வடமொழி வேதங்களின் ஒவ்வொருபகுதியை ஒவ்வொருமுனிவர் ஒவ்வொரு சமயத்தில் வெளியிட்டதுகொண்டு அந்தப்பகுதியை அந்தந்தமுனிவரியற்றியதாக அவரவர்பெயரையிட்டுவழங்குதலும் போலவே, எம்பெருமான் திருவருளால் உணர்த்த ஆழ்வார்கள் திவ்வியபிரபந்தங்களை புணர்த்து வெளியிட்ட மாத்திரத்தைக்கொண்டு அவர்கள் செய்ததாகச் சொல்லுதலும் உபசாரவழக்காம் என்பது, சம்பிரதாயம். ஸம்ஸ்கிருதவேதம் அபௌருஷேயமும் நித்தியமுமாய் 'செய்யாமொழி' என்று பிரசித்திபெற்றிருத்தலையும், திருவாய்மொழியில் "குருகூர்ச்சடகோபன், சொல்லப்பட்ட வாயிரம்" என்றாற்போலப் பலவிடங்களில் வருதலையும், அதுவடமொழியும் இதுதென்மொழியுமாய் நின்று சிலவேறுபாடுடையனபோலத் தோன்றினும் உய்த்துணருமிடத்துக் கருத்து வேறுபடாமையையுங் கண்டு, 'பண்ணப்படுவனவும் உளவோ மறை' என்று பல்லோர் எண்ணுவ ரென்க; இதனை, "செய்யாமொழிக்குந் திருவள்ளுவர் மொழிந்த, பொய்யாமொழிக்கும் பொருளொன்றே" என்றாற்போலக் கொள்க.

இயலோடிசையின்வண்ணப்படைக்குத்தனித்தலைவேந்தன் முத்தமிழ்த் துறைகளை ஒழுங்குபடுத்திநடத்துபவ னென்க. வண்ணம்-விதம். சுண்ணம் - சூர்ணம் என்ற வடசொல்லின் சிதைவு. 'சுண்ணம்படர்' என்பது, சுண்ணப் படர் என்று வலித்தல்பெற்றது. நீர்நிறைந்த கடல்போலச் சொற்கள் நிரம் பிய ஆகர மென்பார், 'சொற்கடல்' என்றார், 'அருட்கடல்' என்றாற்போல: உருவகம். பண்ணப்படுவனவும், உம் - இறந்ததுதழுவிய எச்சம்; செய்யா மொழியாகிய மறையைத் தழுவுதலால். சொற்று இசைழச்செய்தானென்று பதம்பிரித்து, (பகவத்விஷயமான திவ்வியபிரபந்தங்களைக்) கூறி (விஷயாந் தரங்களை) இகழப்பண்ணினானென்று உரைப்பாருமுளர். (௩௫)

௩௬. கடலைக்கலக்கியமுதமரர்க்களித்தான்களித்தார்
குடலைக்கலக்குங்குளிர்சங்கினன்குறையாமறையின்
றிடலைக்கலக்கித்திருவாய்மொழியெனுந்தேனைத்தந்தா
னடலைப்பிறப்பறுத்தென்னையுமாட்கொண்டநாயகனே.

(இ - ள்.) களித்தார் குடலை கலக்கும் - செருக்கிய பகைவர்களுடைய குடலை (அச்சத்தால்) கலங்கச்செய்கின்ற, குளிர் சங்கினன் - குளிர்ந்த சங் கத்தையுடையவனான திருமால், கடலை கலக்கி - திருப்பாற்கடலைக் கலங் கச்செய்து [கடைந்து], அமுது அமரர்க்கு அளித்தான்-(அதனினின்று எழு ந்த) திவ்வியாமிருதத்தை (யெடுத்து)த் தேவர்கட்குக் கொடுத்தருளினான்; (அதுபோல),—அடலை பிறப்பு அறுத்து என்னையும் ஆட்கொண்ட நாயகன் - துன்பத்தைச் செய்கிற பிறப்பையொழித்து என்னையும் அடிமைகொண்டரு ளின தலைவரான ஆழ்வார், குறையா மறையின் திடலை கலக்கி - குறைவில் லாத வேதமாகிய (ஏறுதற்குஅரிய) மேட்டை அளவின்மையையொழித்து அளவுடையதாக்கி, திருவாய்மொழி எனும் தேனை தந்தான் - திருவாய் மொழியென்கிற திவ்வியபிரபந்தமாகிய தேனை (மனிதர்கட்கு)க் கொடுத் தருளினான்; (எ - று.)

இச்செய்யுளிலுள்ள இரண்டுவாக்கியங்களில், முந்தினது உபமானமும், பிந்தினது உபமேயமுமாய் நிற்க, இடையில் உவமவுருபு இல்லாமையால் எடுத்துக்காட்டுவமையணி.

திருப்பாற்கடல்கடைகையில், மந்தரமலையாகியமத்தைச்சுற்றிய வாசுகி யென்னும் மகாநாகமாகிய கடைகயிற்றின் வாற்புறத்தைப்பிடித்துக்கொண்ட தேவர்களும் தலைப்புறத்தைப்பிடித்துக்கொண்ட அசுரர்களும் ஆகிய இரு திறத்தாரும் அதனை வலியப்பிடித்து இழுத்துக் கடையவல்ல வலிமையில்லா தவராய் நிற்க, அதுநோக்கி எம்பெருமான் தான் ஒருதிருமேனியைத்தரித் துத் தேவர்கள்பக்கத்திலேயும் வேறொரு திருமேனியைத்தரித்து அசுரர் கள் பக்கத்திலேயும் நின்று பாம்பின் வாலையும் தலையையும் பிடித்து வல மும் இடமுமாக இழுத்துக் கடைந்தருளியபொழுது, அமிருதத்துடன் தேவ லோகத்துச்செல்வங்களெல்லாம் வெளியெழுந்தவளவிலே, அசுரர்கள் அமி ருதத்தை வலியக் கவர்ந்துகொள்ளத் தொடங்க, நாராயணமூர்த்தி மோகி னிப்பெண்வடிவங்கொண்டு அவ்வடிவழகினால் அசுரர்களை மயக்கி அமிருதத் தைத் தான் கைக்கொண்டு தேவர்கட்கு அதனைப்பகிர்ந்துகொடுத்தனனென்

பது. புராணகதை. இவ்வாறலாற்றிருல், தன்னைச்சரணமடைந்தவரைத் தன் சிரமம் பாராமற் பரிபாலிக்கும் பகவானது கருணை வெளியாம்.

எம்பெருமான் தனது திருவாய்மலரில் வைத்து ஊதுந் திவ்வியசங்கமா கிய ஸ்ரீபாஞ்சசன்னியம் தனது பெருமுழக்கத்திருற் பகைவரை அஞ்சி மயங்கி அழியச்செய்து வெற்றிகொள்ளுந் தன்மையதாய், அவ்வழிவுத்தொழி லோடு நிற்காமல் அடியார்கட்கு உற்சாகத்தை விளைத்து எழுப்பவல்ல திவ் விய சக்தியையு முடைமையால், அதற்கு 'களித்தார்குடலைக்கலக்கும்,' 'குளிர்' என்ற இரண்டு அடைமொழிகள் கொடுக்கப்பட்டன. களித்தார்குட லைக் கலக்குஞ் சங்கு - "அருட்கொண்டலன்ன அரங்கர் சங்கோசையில் அண்டமெல்லாம், வெருக்கொண்டிடர்பட மோகித்து வீழ்ந்தனர் வேக முடன், தருக்கொண்டுபோகப் பொருதே தொடருஞ் சதமகனும், செருக் கொண்ட முப்பத்துமுக்கோடிதேவருஞ் சேனையுமே," "தருணவாணிருபர் மயங்கிவீழ்தர வெண்சங்கமு முழக்கி" என்பனபோல்வன காண்க. இத்தன் மைபற்றியே, சங்கம், திருமாலின் பஞ்சாயுதங்களில் ஒன்ருயிற்று. குளிர் சங்கு—திருமால் ஞானமயமான தனதுசங்கத்திருல் துருவனை முகத்திலே பரிசித்தருளின மாத்திரத்தில், அந்த இளங்குமரன் தத்துவஞானம் உதிக்கப் பெற்றவனுய்ப் பகவானைப் பலவாறு துதிசெய்யலாயினனென்பதுங் காண்க. திருமால் திருக்கைகளிலேந்தியுள்ள சங்கம் சக்கரம் முதலியன, பகைவர் கட்கு அச்சத்தையும் அழிவையும் விளைத்தலால் ஆயுதகோடியிலும், அன் போடு தரிசிக்கின்ற அடியார்கட்கு அழகியனவாய்த் தோன்றிக் காட்சிக்கு இனிமைதந்து அலங்காரமாதலால் ஆபரணகோடியிலுஞ் சேருமென்பது சாஸ்திரார்த்த மாதலால், சங்கத்துக்கு 'களித்தார்குடலைக் கலக்கும்,' 'குளிர்' என்ற மாறுபட்ட அடைமொழி இரண்டையுங் கொடுத்தமைகற்கும். "பெரிய பெருமாளரங்கராவர்கரத்துப், படைக்குங்கமலம் அளிக்கும் மின்ருழிப்படை படைக்கும், துடைக்கும்கதை முத்திமாற்ருது நல்கும் சரிசங்கமே" என்ற படி சங்கம் முத்தியளிக்க வல்லதாதலால், அதனை, 'குளிர்சங்கு' என்றதாக வுங் கொள்ளலாம்.

குறையாமறை - அசங்கமானவேதம்; சொற்செறிவு பொருட்பொலிவு களிற் குறைவில்லாத வேதம் எனினுமாம். மலைச்சிகரம்போன்ற மேட்டிடங் களில் தேன்கூடுகட்டுதல் இயல்பாதலால், மறை 'திடல்' எனப்பட்டது. அறி தற்குஅரிய வேதத்தின் அளவுபடாமையைப் போக்கி அதனை அளவுபடுத்தி அதிலுள்ள பொருட்சாரத்தைத் தமிழ்ப்பிரபந்த மூலமாக அனைவர்க்கும் எளி திலுணரலாம்படி தந்தருளின ரென்பது. "குறையாமறையின் திடலைக் கலக் கித் திருவாய்மொழியெனுந் தேனைத்தந்தான்" என்பதன் கருத்து; உருவகம். இனி, மேடுபட்ட [மேலேபருத்துக்காட்டுகிற] வடிவமுடைமைபற்றித்தேன் கூண்டையே 'திடல்' என்றதாக உரைப்பாரு முளர். என்னையும் - ஆட்கொ ள்ளப்படுதற்குஉரிய குணம் சிறிதுமில்லாத என்னையும் என்று தனது இழிவு தோன்றக் கூறியவாறு; உம் - இழிவுசிறப்பு. திடல்=திடர்; ஈற்றுப்போலி. திருவாய்மொழியை 'தேன்' என்றதும், அதனை அமிருதத்தோடு உவமித்த தும், இனிமைமிகுதிபற்றி. (கசு)

௧௭. நாய்போற்பிறர்கடைதோறுநுழைந்தவரெச்சினச்சிப்
பேய்போற்றிரியும்பிறவியினேனைப்பிறவியெனு
நோய்போமருந்தென்னுநுன்றிருவாய்மொழிநோக்குவித்துத்
தாய்போலுதவிசெய்தாய்க்கடியேன்பண்டென்சாதித்ததே.

(இ - ள்.) நாய் போல்—, பிறர் கடை தோறும் நுழைந்து - அயலாருடைய வீட்டுவாயில்தோறும் புகுந்து, அவர் எச்சில் நச்சி - அவர்கள் உண்டு கழித்த சேடத்தை விரும்பி, பேய் போல் திரியும் - பேய்போல (ஓய்வின்றிப் பலவிடத்தும் அலைந்து) திரிகிற, பிறவியினேனை - (இழிந்த) பிறப்பையுடையவனை என்னை, பிறவி எனும் நோய் போம் மருந்து என்னும் நுன் திருவாய்மொழி நோக்குவித்து-'பிறப்பென்கிற நோய் நீங்குதற்குக் காரணமான மருந்து' என்று சொல்லப்படுகிற உமது திருவாய்மொழிப் பிரபந்தத்தை நோக்கும்படி பண்ணி, தாய்போல் உதவி செய்தாய்க்கு - பெற்றதாய் (தன் குழந்தைக்குக் கைம்மாறுகருதாது பலவாற்றாலும் உதவிபுரிதல்) போல (என் பக்கல் பூரணகிருபைவைத்து) உபகரித்தருளிய உமக்கு, அடியேன் பண்டு சாதித்தது என் - தாசனான நான் முன்புசெய்த நன்மை யாதோ? (எ - று.)

உம்பக்கல் அடியேன் செய்த நன்மையொன்றும் இன்றாதலால், நீர் என்பக்கல் நிர்ஹேதுககருணைகொண்டு என்னை ஆட்கொண்டது செய்யாமற்செய்த உதவியாகின்றது; ஆகவே, அதற்கு எதுவும் ஈடாகாது என்பதாம். நாய்போல் அலைதலின்றி ஓய்வுகொண்டு ஓரிடத்திற் சிறிதுபொழுதேனுந் தங்குதற்கு அவகாசமும்பெறாமற் செய்தற்கு வேலையுமில்லாததான கடைப்பட்ட நாய்போல என்றபடி. பேய்போல் - எங்குஞ் சுகமுறாமல் அலைகிற சன்மமேயான பேய்போல என்க. எஞ்சியது, எச்சில்எனக் காரணக்குறி. பிறவியெனும்நோய் போம் மருந்து என்னுந் திருவாய்மொழி - "ஆயிரத்துளிப்பத்தும், உயக்கொண்டு பிறப்பறுக்கும்" என்ற திருவாய்மொழியைக் காண்க. 'நோய்போம் மருந்து' என்றவிடத்து, போம் என்ற பெயரெச்சம் - காரியப்பொருளதாய், காரணப்பெயரைக் கொண்டது; நுன் - திசைச்சொல். திருவாய்மொழி - ஸ்ரீஸூக்தி. செய்தாய் - முன்னிலை யொருமையிறந்தகால வினையாலணையும்பெயர். துன்பந்தருதலால், பிறவி 'நோய்' எனப்பட்டது. 'பிறர்கடைதோறுநுழைந்து அவர் எச்சில் நச்சிப் பேய்போல்திரியும் பிறவியினேன்' என்றது - ஆழ்வாருடைய அடியார்களான ஸ்ரீவைஷ்ணவர்களின் எச்சிலை விரும்பி உண்டிருந்தாலும் உய்ந்திருப்பேன்; அதுவுஞ் செய்திலேனே என்ற இரக்கக்குறிப்பு.

இங்கு அறிதற்கு ஏற்றதோர் ஐதிகியம் வருமாறு:—'ஒரு காலத்தில் தாமிரபருணிநதியின் வடகரையில் வசித்திருந்த யோகியொருவர் வளர்த்த நாயொன்று, தென்கரையிலுள்ள ஆழ்வார்திருநகரிக்குப் பிரதிதினமும் மத்தியானவேளையிற் போய் வீதியிலிருக்கும் வைஷ்ணவர்களுடைய உச்சிஷ்டத்தைத் தின்று வயிற்றை நிரப்பிக்கொண்டுவருகிற வழக்கப்படி ஒருநாள் போய்த் திரும்பிவர நேரப்பட்டதனால், யோகியானவர் 'நாய் இன்னும்வரவில்லையே' என்று ஆற்றோரத்தில் வந்துபார்க்கும்பொழுது, அந்நாய் நட்டாற்றில் வருகையில் அகஸ்மாத்தா வெள்ளம்வந்தமையால் நீந்திக் காலோ

ய்ந்துபோய் நீரில் அமிழ்ந்து கிளம்பிற்று; அத்தருணத்தில் அதன்கபாலம் வெடித்து அந்த ரந்திரத்தின்வழியாய் நாயின் ஆத்மாவாகிய சோதியானது எழுந்து அமாவாசை யிருளில் அநேகம்தீவட்டிகொளுத்தினதுபோலப் பிரகாசித்ததைப் பிரதியக்ஷமாகப் பார்த்து, 'அசேதனமாகிய நாயும் பெறுதற்கு அரியபேறு பெற்றதே: இது என்னசாதனத்தை யுடைத்தாயிருந்தது? ஒன்று மில்லாதிருந்தும், ஆழ்வார்திருநகரியின்உச்சிஷ்டத்தை யுண்டதனாலல்லவோ இப்படிச் சம்பவித்தது: இது, தபசிகள் யோகிகள் முதலானவர்களுக்கும் சித்திக்கமாட்டாதே!' என்று நினைத்து மனதுருகிக் கண்ணீர்விட்டு அழுது அவர் "வாய்க்குங்குருகைத் திருவீதியெச்சிலை வாரியுண்ட, நாய்க்கும் பரம பதமளித்தாய் அந்தநாயொடிந்தப், பேய்க்கு மிடமளித்தாற் பழுதோ பெருமாள் மகுடஞ், சாய்க்கும்படிக்குக் கவிசொல்லு ஞானத்தமிழ்க்கடலே" என்பது முதலாகச் சிலபாடல்களால் ஆழ்வாரை ஸ்தோத்திரித்தனர்' என்பது. ()

௧௮. சாதிக்குமேபரதத்துவத்தைச்சமயத்திருக்கைச்
சேதிக்குமேயொன்றுசிந்திக்குமேயதனைத்தெரியப் [யைச்
போதிக்குமேயெங்குமோங்கிப்பொதுநிற்குமெய்யைப்பொய்
சோதிக்குமேயுங்கள்வேதமெங்கோன்றமிழ்ச்சொல்லெனவே.

(இ - ள்.) எம் கோன் தமிழ் சொல் என - எமதுதலைவரான நம்மாழ்வாருடைய தமிழ்ப்பிரபந்தம்போல,—உங்கள் வேதம்—,—பரதத்துவத்தை சாதிக்குமே - (எல்லாப்பொருள்கட்கும்) மேலான உண்மைப்பொருளாகிய பரப்ரஹ்மத்தை (உண்டென்று நிலைநிறுத்தி)ச் சாதிக்கமாட்டுமோ? சமயம் திருக்கை சேதிக்குமே - பிறமதங்களின்மாறுபாட்டைக் கண்டித்தொழிக்க மாட்டுமோ? ஒன்று சிந்திக்குமே - யாதாயினுமொருவிஷயத்தை ஆய்ந்து ஓய்ந்துஉணரமாட்டுமோ? அதனை தெரிய போதிக்குமே - அங்ஙனமுணர்ந்த பொருளைப் பிறர்க்கு விளங்க உணர்த்தமாட்டுமோ? எங்கும் ஓங்கி பொது நிற்கும் மெய்யை பொய்யை சோதிக்குமே-எவ்விடத்துஞ்சிறந்து (யாவர்க்கும்) பொதுப்படநிற்கின்ற உண்மையான விஷயத்தையும் (அதற்குமாறாகிய) பொய்யானவிஷயத்தையும் பகுத்து ஆராயமாட்டுமோ? [மாட்டாஎன்றபடி].

"வேதம்பஹுவிதம்; இதில், ஸம்ஸ்கிருதம் திராவிடம் என்கிற பிரிவு ருகாதிபேதம்போலே. "செந்திறத்த தமிழ்" என்கையாலே, ஆஸ்தியமும் அநாதி. 'வடமொழிமறை' என்றது, தென்மொழிமறையை நினைத்திறே" என்னும்படி, ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணம் என்பவை வேதத்தின் பகுப்பாதல்போல ஸம்ஸ்கிருதவேதம் திராவிடவேதம் என்பனவும் வேதத்தின் பகுப்பேயாயிருக்க, அவ்வுண்மையையுணர்ந்து இரண்டும் சமமெனக் கருதாது பக்ஷபாதத்தால் வடமொழிவேதத்தையே சிறந்தபிரமாண மென்று கொண்டாடித் தென்மொழிவேதத்தை அங்ஙனமன்றென்றுமறுக்கிற சிற்றறிவாளர்களை நோக்கி, 'நீங்கள் கொண்டாடுகிற வடமொழிவேதத்தினும், நம் ஆழ்வார் அருளிய தென்மொழிவேதம், பரப்ரஹ்மஸ்வரூபத்தையும் மற்றும் பிறப்பு வினை வினைப்பயன் வீடு அதன்காரணம் முதலிய தத்துவப்பொருள்களையும் உள்ளபடிஉணர்ந்து பிறர்க்குத் தெளிவாகச்சொல்லி ஸ்வமதஸ்தாபநம் செய்து பரமதநிரஸநம் பண்ணுவதிற் சிறந்ததாமென்று எதிர்வாதங் கூறியவாறு மென, இச்செய்யுட்குச் சங்கதி கண்டுகொள்க. (௧௮)

கக. சொல்லென்கெனோமுழுவேதச்சுருக்கென்கெனோவெவர்க்கு
நெல்லென்கெனோவுண்ணுநீரென்கெனோமறைநேர்நிறுக்குங்
கல்லென்கெனோமுதிர்ஞானக்கனியென்கெனோபுகல
வல்லென்கெனோகுருகூரெம்பிரான்சொன்னமாலையையே.

(இ - ள்.) குருகூர் எம்பிரான் சொன்ன மாலையை - திருக்குருகூரில் அவதரித்த எமதுதலைவரான நம்ஆழ்வார் அருளிச்செய்த பாமாலையாகிய திவ்யப்பிரபந்தத்தை,—சொல் என்கெனோ - (எல்லாவிலக்கணமுமமைந்த) சொல் என்று சொல்வேனோ? முழு வேதம் சுருக்கு என்கெனோ - வேதம் முழுவதன் சாரசங்கிரக மென்பேனோ? எவர்க்கும் நெல் என்கெனோ - எல்லார்க்கும் (ஜீவநோபாயமான) நெல்என்பேனோ? உண்ணும் நீர் என்கெனோ - (இன்றியமையாததான) பருகுதற்குஉரிய நீர் என்பேனோ? மறை நேர் நிறுக்கும் கல் என்கெனோ - தராசுதட்டு இரண்டனுள் ஒன்றில்வேதத்தைவைத்து அதற்குச்சமமாக மற்றொன்றில் வைத்துசிறுத்துதற்குஉரிய எடுத்தலளவைக் கல் என்பேனோ? முதிர் ஞானம் கனி என்கெனோ - முதிர்ந்த தத்துவஞான மயமான பழமென்பேனோ? புகல வல் என்கெனோ-(மற்றும் அதன்திறத்தை உள்ளபடிஎடுத்துச்) சொல்ல வல்லமை (எனக்குஉள்ளது) என்பேனோ?

'சொல்லென்கெனோ... .....கனியென்கெனோ' என்றது - இங்ஙனம் பலபடியாக விகற்பித்துக் கூறலாம்படியுள்ளது ஆழ்வாரருளிச்செயல் என்றவாறும். 'புகல வல் லென்கெனோ' என்றது - அதன்தன்மையை உரியபடி சொல்லவல்லேனல்லேன் யான்என்றபடி. 'சொல்லென்கெனோ' என்பதற்கு - எம்பெருமானுடைய புக ழென்பேனோ என்று உரைப்பினும் அமையும்; சொல் - புகழாதலை "சொன்மாண்பமைந்த குழூ" எனச் சீவகசிந்தாமணியிலுங் காண்க. மாலை - பெருமானது திருவடிகளிற் சூட்டும் பூமாலை போன்ற பாமாலை யென்க. "சடகோபன்சொல்லமை, பாட்டோராயிரத்திப் பத்தாலடிசூட்டலாகு மந்தாமமே," "மொய்யசொல்லா லிசைமாலைகளேத்தி யுள்ளப்பெற்றேன்," "நாவியலா லிசைமாலைக ளேத்தி நண்ணப்பெற்றேன்" என்றூர் திருவாய்மொழியிலும். 'எவர்க்கும் நெல்லென்கெனோ' என்றதற்கு - தேகயாத்திரைக்கு நெற்போல ஆத்மயாத்திரைக்கு ஆழ்வாரருளிச்செயல் வேண்டுமென்பது கருத்து. கல் - படிக்கட்டுக்கல். 'உண்' என்பது, பொது வினையாகவும் வழங்கும். (கக)

[செலவுணர்த்திச் செவிலியைத் தேற்றல்.]

உ0. மாலைக்குழலியும்வில்லியுமாறனைவாழ்த்தலர்போம்
பாலைக்கடம்பகலேகடந்தேகிப்பணைமருதத்
தாலைக்கரும்பினரேலென்னுமோசையையஞ்சியம்பொற்
சாலைக்கிளியுறங்காத்திருநாட்டிடஞ்சார்வர்களே.

(இ - ள்.) மாலை குழலியும்-மலர்மாலையைச்சூடிய கூந்தலையுடையளான தலைமகளும், வில்லியும்-கையில்வில்லேந்தியுள்ளவனான தலைமகனும் (ஆகிய இருவரும்)—மாறனை வாழ்த்தலர் போம் பாலை கடம் பகலே கடந்து ஏகி - நம்மாழ்வாரைவாழ்தாதவர்கள் செல்லுமிடமான பாலைநிலமாகிய கொடுஞ்சுரத்தை இன்றைப்பகலிலேயே கடந்துசென்று,—பணை மருதத்து - விளை

நிலஞ்சூழ்ந்த மருதநிலத்திலே, ஆலை கரும்பின் கரும்பையாட்டுகிற ஆலை யினது. நரேல் என்னும் ஓசையை - நரேல் என்று ஒலிக்கிற ஓசைக்கு; அஞ்சி - பயந்து. அம் பொன் சாலை கிளி உறங்கா - அழகிய பொன்மய மான மாளிகைவெளிகளிலமைக்கப்பட்டுள்ள கூடுகளில் வசிக்கின்ற கிளிகள் நித்திரைகொள்ளாத. திரு நாடு இடம் - சிறந்த (பாண்டிவள) நாட்டின் எல் லையில், சார்வர்கள் - சேர்வார்கள்; (எ - று.)

குழலியும் வில்லியும் கடந்தேகிச் சார்வர்க ளென்க.

இயற்கைப்புணர்ச்சி, பாங்கற்கூட்டம், பாங்கியிற்கூட்டம் என்பவற்றுற் களவுநெறியில் தலைமகளோடுகலந்த தலைமகன் அங்குப்பழிபரவுதலின் தோழி யால் உணர்த்தப்பட்டுத் தலைமகளை உடன்கொண்டு தன்னூர்க்குச் சென்றன னாக, அங்ஙனம் தலைவன் தலைவியை இடைச்சுரநெறியாக உடன் கொண்டு போனமையைத் தோழியாலறிந்த செவிலித்தாய் அச்செய்தியைப் பெற்ற தாய்க்கு உணர்த்தி அவளிடம் அநுமதிபெற்றுத் தலைமகளைத் தேடிச் செல லுங்காட்டுநெறியிலே, எதிர்வருபவர்களைநோக்கி 'ஓர் இளம்பெண் ஓர் இளை மகனுடனே நும்எதிரேவரக் கண்டதுண்டோ?' என்றுவினவ, அவ்வினவப் பட்டவர் 'நீ கூறுகின்றவர்களைக் கண்டோம்: அத்தலைவியும் தலைவனும் ஓர் இடுக்கணின்றி இன்னபொழுதில் ஊர்சேர்ந்திருப்பர்' என்றுசொல்லிச் செவி லியைத் தேற்றுதல், இச்செய்யுளிற் குறிக்கப்பட்ட விஷயம். இந்த அகப் பொருட்டுறைச்செய்யுளின் மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - செவிலியை எதிர்வருவார் ஆற்றி மீளச்செய்தல்.

இயற்கையழகுடன் செயற்கையழகையுமுடைய ளாதலால், 'மாலைக் குழலி' எனப்பட்டாள். இங்ஙனங் கூந்தலழகுகொண்டு தலைவனை வசீகரித் தவளென்க. கூந்தலிற்சூடியமலர்தானும் வாடியதில்லையென்பது தோன்ற 'மாலைக்குழலி' என்றதனால் அம்மடமங்கை வழிச்செலவினாற் சிறிதும்வருத்த முற்றில ளென்று குறிப்பாக உணர்த்திச் செவிலியை ஆற்றியவாறுமாம். 'வில்லி'என்றது-தலைவன் வில்வீரனாதலாற் கையிலேந்திய வில்லைக்கொண்டு அம்புஎய்து இக்கானகத்திலெதிர்ப்பட்ட கொடுவிலங்குகளை அழித்து இடை யூறின்றிச் செல்கின்றன னென்ற குறிப்பு. மாறனைவாழ்த்தாதவர்கள் நாடு முதலிய நல்இடங்களை நீங்கிப் பாலைவனம்புகுவ ரெனவே, ஆழ்வாரின் அரு மையைப் பாராட்டி அவர்பக்கல் அன்புபூணாதவர்கள் மறுமைப்பயனையே யன்றி இம்மைப்பயனையும் இழப்பரென்பது போதரும். 'கடந்தேகி' என் றது - கடத்தற்கு அரியதனை எளிதிற்கடந்தன ரென்றவாறு. பணைமருதம் என்பதுமுதலாக, தலைவியுந் தலைவனுஞ் சென்றுசேரும் நாட்டின்வளத்தை விளக்கி, அப்பதி வழிநடைவருத்தத்தை இனிதுதணிக்குந்தன்மையதென்று உணர்த்திச் செவிலியை ஆற்றியவாறும். பணை - வயல். மருதம் - நாடும், நாடுசார்ந்த இடமும். ஆலையிற் கரும்பாட்டும்போது உண்டாகிற நரேலென் னும் ஓசையைப் பூனையின்குரலென்று எண்ணி அஞ்சிக் கிளிகள் உறங்கா வென்க; இங்கு மயக்கவணி தொனிக்கும்.

நரேல் எனல்-ஒலிக்குறிப்பு. மாறனைவாழ்த்தும் விதம் - "மேதினியில் வைகாசிவிசாகத்தோன் வாழியே வேதத்தைச் செந்தமிழால் விரித்துரைத்

தான் வாழியே. ஆதிகுரு வாய்ப்புவியிலவதரித்தான்வாழியே அனவரதஞ் சேனையர்கோனடிதொழுவோன் வாழியே, நாதனுக்கு நாலாயிரமளித்தான் வாழியே நம்மதுரகவி வணங்கும் நாவீரன் வாழியே. மாதவன் பொற்பாதுகையாய்வளர்ந்தருள்வோன் வாழியே மகிழ்மாறன் சடகோபன் வையகத்தில் வாழியே'' எனக் காண்க.

எம்பெருமானுடைய திருவடித்தாமரைமலர்களை முடிமேற்கொண்டு வணங்கி அந்தப் பிராணமத்தின் அமைதியால் அப்பெருமானைத் தம்வசப்படுத்தியவரும், தம்மைப்போன்ற அடியார்கட்கு நேரும் இடையூறுகளைத் தீர்த்து அவர்களைப்பாதுகாத்தற்கென்றே கையில்வில்லேந்தியுள்ள எம்பெருமானை ஏகாந்தத்திலே தரிசித்து அப்பெருமானைப்பிரிந்து உயிர்வாழமாட்டாதவராய் அவனைவிடாது தொடர்ந்தவருமான ஆழ்வார், இடையூறான கொடிய ஸம்ஸாரத்தைத் தத்வஞ்ஞானதசையிலேயே கடந்து, நிரதிசயவின்பந்தருவதான அப்பரமனுடைய ஸ்ரீவைகுண்டத்தைச் சேர்வர் என்று, அவருடைய ஒழுக்கத்தைக் கண்ட உலகத்தார் அவர்பக்கற் பரிவையுடைய ஞானிகட்குக் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருளாம். 'திருநாடு' என்பது - பரமபதத்திற்கு ஒரு பெயராதலை யுணர்க. அங்குத் திருமாமணிமண்டபத்திலே அழிவும் ஞானஸங்கோசமு மிலராய் வாழ்கிற இனியனவே பேசு மியல்புடையரான நித்தியமுக்தர்கள் ஸர்வாந்தராத்மாவான ஸ்ரீமந்நாராயணனிடத்துப் பொங்கும்பரிவினாலே பெரியாழ்வார்போல அஞ்சவேண்டாததற்கு அஞ்சி உள்ளுறப் பல்லாண்டுபாடுதலும் உணரத்தக்கது. ஸம்ஸாரமருகாந்தாரம் பாகவத பக்திபூணாதவர் திரிதற்கு உரிய இடமாதலால், 'மாறனை வாழ்த்தலர் போம் பாலைக்கடம்' எனப்பட்ட தென்க. மற்றும் ஸ்வாபதேசார்த்தத்தின் விவரம் சம்பிரதாயம் வல்லார்வாய்க் கேட்டு உணரத்தக்கது. (உ೦)

[பாங்கி நேறியருமைகூறித் தலைமகனை வரவுவிலக்கல்.]

உக. சாரற்குறிஞ்சிதழுவும்பொழிற்றளிர்மெல்லடித்தண்
மூரற்குறிஞ்சிநகைமுகநோக்கற்குநீமுடுகுஞ்
சூரற்குறிஞ்சிநெறிநினைதோறுந்துணுக்கெனுமால்
வாரற்குருகைப்பிரான்றிருவாணைமலையவனே.

(இ - ள்.) மலையவனே - மலைக்குஉரியவனே! சாரல் குறிஞ்சி தழுவும் பொழில் - மலைச்சார்பாகிய குறிஞ்சிநிலத்தைச் சார்ந்த சோலையிலே, தளிர் மெல் அடி தண் மூரல் குறிஞ்சி நகை முகம் நோக்கற்கு - தளிர்போன்ற மென்மையான பாதங்களையும் குளிர்ச்சியான [கண்ணுக்குஇனிய] பற்களையும் குறிஞ்சியென்னும் பண்போ லினிய சொற்களையும் புன்சிரிப்பையுமுடையவளான தலைவியினது முகத்தைப் பார்த்தற்பொருட்டு, நீ முடுகும் - நீ விரைந்துவருவதாகிய, சூரல் குறிஞ்சி நெறி - பிரப்பங்காடுமிக்க மலைவழியை, நினைதோறும் - (நாங்கள்) நினைக்கிறபோதெல்லாம், துணுக்கெனும் - (எங்கள்மனம்) திடுக்கிட்டு அஞ்சுவதாயிருக்கும்; ஆல் - ஆதலால், குருகைபிரான் திரு ஆணை வாரல் - திருக்குருகைக்குத் தலைவரான நம்மாழ்வார்மேலாணை இனி நீ இங்ஙனம் வரவேண்டா; (எ - று.)

இயற்கைப்புணர்ச்சிப்பெற்ற தலைமகன், பின்பு, தலைமகளினது தோழியினுதவியைக்கொண்டு தலைமகளைப் பகலிலும் இரவிலும் களவுநெறியில் ஏகாந்தத்திலே சந்தித்தல், இயல்பு; அது, பகற்குறி இரவுக்குறி எனப்படும். தலைமகனது வேண்டுகோளின்படி ஒருநாளிரவிற்குறிப்பிட்டதொருசோலையிடத்தே அத்தலைமகனையுந் தலைமகளையுஞ் சந்திக்கச்செய்த தோழி, பின்பும், அக்களவொழுக்கத்தையே வேண்டிய தலைமகனுக்கு, அவன்வரும் நெறியினது அருமையையும் அதுகருதித் தாங்கள் அஞ்சுதலையுங் கூறி, 'இனி அங்ஙனம் வரற்பாலையல்லை' என்று விலக்குதல், இச்செய்யுளிற் குறித்த அகப்பொருள்துறை; இது, 'ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி' எனப்படும். (ஆறு - வழி.) 'தலைவன்வரும் வழி, மிகவும்இன்னாது, நீருடையது, கல்லுடையது, ஏற்றிழிவுடையது, கள்ளர் புலி கரடி யானை பாம்பு முதலிய கொடியபிராணிகளையுடையது' என்று கவலுங் கவற்சியாற் சொல்லுவதென்க. இதில், மெய்ப்பாடு - அச்சம். இதன்பயன் - வெளிப்படையாகவந்து மணஞ்செய்துகொள்ளுதலை வற்புறுத்துதல். முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் பாலை என்ற ஐவகை நிலங்களுள் மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சியாமென்பதும், "போக்கெல்லாம்பாலை புணர்தல்நறுங்குறிஞ்சி, ஆக்கஞ்சேரூடலணிமருதம் - நோக்குங்கால், இல்லிருக்கைமுல்லை இரங்கல்நறுநெய்தல், சொல்லிருக்குமைம்பாற்றுறை" என்றபடி புணர்ச்சிக்கு உரிய இடம் குறிஞ்சியென்பதும் அறியத்தக்கன. தலைமகன், குறிஞ்சிநிலத்திற்குஉரிய மக்கள் கோலத்தனாய் வந்துள்ளானாதலால், 'மலையவனே' என்று விளிக்கப்பட்டான். மலையவனென்பது - குறிஞ்சிநிலத்தலைவன்பெயர்.

சாரல் - மலையைச்சார்ந்தது, மலைப்பக்கம்; தொழிலாகுபெயர். 'தளிர் மெல்லடித் தண்மூரற் குறிஞ்சிநகை' என்பது - உம்மைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாய், தலைவியை யுணர்த்தும். இரண்டாமடியில், 'குறிஞ்சி' என்ற பண்ணின்பெயர் - அதுபோ லினிய மொழிக்கு உவமையாகுபெயராம். துணுக்கெனல் - அச்சக்குறிப்பு. 'துணுக்கெனும்' என்பதற்கு 'தலைமகள்' என்ற தோன்றாஎழுவாய் வருவித்துஉரைப்பினுமாம். ஆல்- ஆதலால் என்பதன் விகாரம். வாராமையை வற்புறுத்தி 'வரைந்துசெல்க' என்பதை யுணர்த்துவாள், 'குருகைப்பிரான்திருவாணை வாரல்' என ஆணையிட்டு மறுத்தாள்.

தமோகுணப்ரசுரமாய் அநேகவித தேகவியாதி மநோவியாதிகளாகிற கொடுவிலங்குமுதலியவற்றை யுடையதான ஸம்ஸாரமார்க்கத்திலே இருந்து நேர்பட்ட இடத்தில் ஆழ்வார்பக்கல் பக்தி செய்தொழுகுகிற பாகவதர்களை நோக்கி அன்பர்கள் 'இனி இக்களவொழுக்கத்தைவிட்டுப் பிரபத்திமார்க்கத்தில் நின்று ஆழ்வார்பக்கல் இடையீடின்றி அநவரதபாவனை செய்தல் வேண்டும்' என்று வற்புறுத்துதல், இதற்கு உள்ளுறைபொருளாம்: விவரம் கேட்டுணர்க. உள்ளுறைபொருளிலே ஆழ்வாரைத் தலைமகளாகக் கொள்ளும்போது சிலவிடத்தில் எம்பெருமானைத் தலைமகனாகவும், சிலவிடத்தில் பாகவதரைத் தலைமகனாகவும், கம்பர் தம்மைத் தலைமகளாகக்கொள்ளும்போது ஆழ்வாரைத் தலைமகனாகவும் இடத்துக்கேற்பக் கொள்க. எம்பெருமான்பக்

கலிற்போல "மாயப்பிரானடியார்கள் குழாங்களை - உடன்கூடுவ தென்று கொலோ?" என்று அவனது சம்பந்தம்பெற்ற அடியார்களிடத்தும் ஆழ் வார் மிக்க பக்திகொண்டு அவர்களையும் தமக்குத் தலைவராகக்கொள் ளுந் தகுதியுடையராதல். ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கிளவித்தலைமகனாகக் கொண்டதற்குக் காரணம்; "உற்றதும் உன்னடியார்க்கடிமை" என்றதுங் காண்க. (உக

உஉ. மலையாரமுங்கடலாரமும்பன்மாமணிகுயின்ற
விலையாரமும்விரவுந்திருநாடனைவேலைசுட்ட
சிலையாரமுதினடிச்சடகோபனைச்சென்றிறைஞ்சுந்
தலையாரெவரவரேயெம்மையாளுந்தபோதனரே.

(இ - ள்.) மலை ஆரமும் - பொதியமலையி லுண்டாகிற சந்தனமும் கடல் ஆரமும் - கடலில்தோன்றுகிற முத்துக்களும், பல் மா மணி குயின்ற விலை ஆரமும் - பலவகைப்பட்ட சிறந்த இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற விலை மிக்க ஹாரங்களும், விரவும் - பொருந்திய, திரு நாடனை - சிறந்த பாண்டிவளநாட்டிலே அவதரித்தவரும், வேலை சுட்ட சிலை ஆர் அமுதின் அடி சடகோபனை - சமுத்திரத்தை (ஆக்கினேயாஸ்திரத்தால்) வேகச்செய்த (கோதண்டமென்னும்) வில்லையேந்திய அருமையான அமிருதம்போன்ற எம்பெருமானது திருவடிநிலையெனப்படுபவருமாகிய ஆழ்வாரை, சென்று இறைஞ்சும் - (திருக்குருகூரிற்) போய் வணங்குகின்ற, தலையார் - தலைமை யுடையவர், எவர் - எவரோ, அவரே - அவர்தாம், எம்மை ஆளும் தபோத னர் - எம்மை அடிமைகொள்ளுந் தவச்செல்வராவர்; (எ - று.)—ஈற்று ஏகா ரம்-தேற்றம்: ஈற்றசையுமாம்.

'சடகோபனைச் சென்றிறைஞ்சுந்தலையாரெவரவரே' என்றது, ஸ்ரீமதுர கவியாழ்வார்முதலான ஸத்புருஷர்களை. 'அவரே எம்மையாளுந்தபோதனர்' என்று, ஆழ்வாரது அடியார்பக்கல் தமக்கு உள்ள அடிமைப்பக்தியை வெளி யிட்டவாறும். 'அமுதினடிச்சடகோபன்' என்பதை, கீழ் கஉ-ஆஞ்செய்யுளில் "உண்டானடிச்சடகோபன்" என்றாற்போலக் கொள்க. 'மலையாரமுங் கட லாரமும் பன்மாமணிகுயின்றவிலையாரமும்விரவும்' என்றஅடைமொழி, திரு வழுதிவளநாட்டின் வளங்களை யுணர்த்தும். ஆரம்-ஹாரம் என்ற வடசொல் லின் விகாரம்: "சந்தனம் மாலை பூண் ஆத்தி முத்தெனு, வந்தன வைந்தும் ஆரமாகும்" என்ற திவாகரத்தால், ஆரமென்பதன் பொருளை யுணர்க; "அரைக்கு மாரமு மாரமு மாரமு மணிந்து" என்றார் வில்லிபுத்தூராரும். "சந்தனப்பொதியத்தடவரை" என்றபடி, சந்தனமரங்களை மிகுதியாக வுடை மையாற் சந்தநாசல மெனப்படுகிற மலயபர்வதம் பாண்டியநாட்டிலுள்ளத னால், மலையாரம் அந்நாட்டுக்குச் சிறந்த உரிப்பொருளாயிற்று. "பூழியர் கோன் தென்னாடு முத்துடைத்து" என்றபடி பாண்டியநாட்டைச்சார்ந்த கடலில் முத்துக்கள் மிகுதியாக உண்டாவது பிரசித்தமாதலால், கடலார மும் அந்நாட்டுக்கு ஏற்றதாதல் காண்க. 'பன்மாமணிகுயின்ற விலையாரம்'- செல்வவளத்தால் அந்நாட்டுக்குடிகளிடம் அமைவன; ஆரம்-மார்பிலணிவடம்

வேலைசுட்டது, ஸ்ரீராமாவதாரத்தில்; அவ்வரலாறு:—இராவணனாற் கவரப்பட்ட சீதாபிராட்டி இலங்கையிலிருக்கிற செய்தியை அநுமான் சென்று அறிந்துவந்து சொன்னபின்பு இராமபிரான் வாநரசேனையுடனே புறப்பட்டுச் சென்று கடற்கரையையடைந்து, கடல்கடக்க உபாயஞ்சொல்ல வேண்டுமென்று அக்கடலரசனாகிய வருணனைப் பிரார்த்தித்து அங்குத் தருப்பசயனத்திலே படுத்துச் சிலநாளளவும் பிராயோபவேசமாகக்கிடக்க, சமுத்திரராசன் அப்பெருமானது மகிமையை யறியாமல் உபேக்ஷையாயிருக்க, ஸ்ரீராமன் அது கண்டு கோபங்கொண்டு, அனைவரும் நடந்துசெல்லும்படி கடலை வற்றச் செய்வேனென்று ஆக்நேயாஸ்திரத்தைத் தொடுக்கத் தொடங்கியவளவிலே, அதன் உக்கிரத்தால் தபிக்கப்பட்டு வருணன் அஞ்சி நடுங்கி ஓடி வந்து அப்பெருமானைச் சரணமடைந்து, கடல்வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு ஒடுங்கிநிற்க, பின்பு இராமமூர்த்தி வாநரங்களைக்கொண்டு மலைகளாற் சேதுபந்தனஞ் செய்தனன் என்பதாம்.

"கற்றார்பரவு மிராமாநுசனைக் கருதுமுள்ளம், பெற்றாரெவரவ ரெம்மை நின்றாளும் பெரியவரே" என்ற இராமாநுசநூற்றந்தாதியின் வாய்பாடும் இச்செய்யுளின் வாய்பாடும் ஒருநிகராதல் காண்க. (௨௨)

௨௩. போந்தேறுகவென்றிமையோர்புகலினும்பூந்தொழுவின்
வேந்தேறடர்த்தவன்வீடேபெறினுமெழிற்குருகூர்
நாந்தேறியவறிவன்றிருவாய்மொழிநாளுநல்குந்
தீந்தேறலுண்டுழலுஞ்சித்தியேவந்துசித்திக்குமே.

(இ - ள்.) போந்து ஏறுக என்று இமையோர் புகலினும்-'மேலேயுள்ளதான எங்களுலகத்துக்கு வருவாயாக' என்று இந்திராதிதேவர்கள் வேண்டும்படி (சுவர்க்கம்முதலிய மேம்பட்டபதவி) கிடைப்பதானாலும்,—பூ தொழுவின் வேந்து ஏறு அடர்த்தவன் வீடே பெறினும் - அழகியதொழுவத்திலே தலைமைபெற்ற எருதுகளை வலியடக்கித் தழுவியவனான திருமாலினது ஸ்ரீவைகுண்டத்தையே பெறுவதானாலும்,—எழில் குருகூர் நாம் தேறிய அறிவன் திருவாய்மொழி நாளும் நல்கும் தீம் தேறல் உண்டு உழலும் சித்தியே வந்து சித்திக்கும் - அழகியதிருக்குருகூரிலவதரித்தவரும் நாமெல்லாம் தேர்ந்து குருவாகக்கொள்ளத்தக்க ஞானியுமான நம்மாழ்வாருடைய திருவாய்மொழிப்பிரபந்தம் தன்னை அநுஸந்திக்கும் பொழுதெல்லாந் தருகிற இனிமையான சொற்பொருளின்பத்தேனை யுட்கொண்டு களித்துத்திரியும் பேறே (எனக்கு) வந்து கைகூடுவதாக; (எ - று.)

இந்திரன் முதலிய இறையவர்பதங்களி லநுபவிக்கப்படுகிற போகங்களினும் தாமரைக்கண்ணனுலகில் நுகரப்படுகிற நிரதிசயவின்பத்தினும் திருவாய்மொழி யநுஸந்தாநத்தாலாகும் ஆநந்தரஸம் மேம்பட்ட தென்பதையும், அதில் தமக்குள்ள ஆதராதிசயத்தையும் கூறியவாறாம்; "தேவுமற்றறியேன் குருகூர்நம்பி, பாவினின்னிசை பாடித்திரிவனே" என்றார் ஸ்ரீமதுரகவிகளும். போந்தேறுக வென்று இமையோர் புகலுதல் - "மாதவன்தமரென்று வாசலில் வானவர், போதுமி னெமதிடம் புகுதுக வென்றலும்"

னக் காண்க. நாங்கள்கொண்டுவந்த விமானத்தி லேறி எங்கள் மேலுலகத் திற்குவந்து அங்குச் சீரியசிங்காசனத்திலேறி வீற்றிருக்க வென்று தேவர்கள் கூறினாலுமென விரித்துமுரைக்கலாம். தொழு-பசுக்கொட்டில். வேந்து ஏறு - செருக்குக்கொண்ட ஏறு; ராஜஸகுணம்மிக்க ஏறு என்க. ஏறு - பசுவின் ஆண்மைப்பெயர்.

ஏறடர்ந்தது, கிருஷ்ணாவதாரத்தில்; அவ்விவரம்:—கண்ணன், நப்பின்னையென்பவளைத் திருமணஞ்செய்துகொள்வதற்கு அவள்தந்தை கன்னியாசுல்கமாகக் குறித்தபடி, யாவர்க்கும் அடங்காத அசுராவிஷ்டமான எழு எருதுகளையும் ஏழுதிருவுருக்கொண்டு சென்று வலியடக்கித் தழுவினனென்பதாம்.

அறிவன் - சாஸ்திராப்பியாசத்தாலும் யோகாப்பியாசத்தாலு முண்டாகிற உணர்வுகளினும் பலமடங்கு மேம்பட்ட எம்பிரானருளா லுண்டான மெய்யுணர்வை யுடையவர்; மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர். நாளும் - எந்நாளும். தேறல் - தேன்; தெளிந்தது. (உரு)

உச. சித்தர்க்கும்வேதச்சிரந்தெரிந்தோர்கட்குஞ்செய்தவர்க்குஞ்
சுத்தர்க்குமற்றைத்துறைதுறந்தோர்கட்குந்தொண்டுசெய்யும்
பத்தர்க்குஞானப்பகவர்க்குமேயன்றிப்பண்டுசென்ற
முத்தர்க்குமின்னமுதஞ்சடகோபன்மொழித்தொகையே.

(இ - ள்.) சடகோபன் மொழித் தொகை - நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழிப் பாசுரங்களின் தொகுதியானது,—சித்தர்க்கும் - (அணிமா மகிமாமுதலிய) யோகசித்திகளைப் பெற்றவர்கட்கும், வேதம் சிரம் தெரிந்தோர்கட்கும் - வேதத்தின் தேர்ந்த பொருண்முடிவாகிய [வேதாந்தமெனப்படும்] உபநிஷத்துக்களை யுணர்ந்தவர்கட்கும், செய் தவர்க்கும் - தவஞ்செய்கிறவர்கட்கும், சுத்தர்க்கும் - (மனம் மொழி மெய்என்னும் திரிகரணங்களின்) தூய்மையுடையவர்கட்கும், மற்றை துறை துறந்தோர்கட்கும் - மற்றொரு மார்க்கமாகிய இல்லறத்திலிருந்து துறவறம்புக்கவர்களான சந்நியாசிகட்கும், தொண்டு செய்யும் பத்தர்க்கும் - (பகவானுக்கும் பாகவதர்க்கும்) அடிமைத் தொழில் செய்கின்ற பக்தியையுடையவர்கட்கும், ஞானம் பகவர்க்குமே அன்றி - தத்துவஞானத்தையுடைய பெரியோர்கட்குமேயல்லாமல், பண்டு சென்ற முத்தர்க்கும் - முன்னமே பிறவித்துன்பங்களைக்கடந்து சென்றவர்களான முத்திபெற்றவர்கட்கும், இன் அமுதம் - இனிய அமிருதம்போல இன்சுவை விளைப்பதாம்; (எ - று.)

வேதச்சிரம் - வேதமுடி. செய்தவர் - செய்கிற தவத்தை யுடையவர்: வினைத்தொகை. சுத்தர் - பரிசுத்தாத்மாக்கள். பத்தர்-பக்திநிஷ்டர். ஞானப் பகவர் - ஞானிகள், ஞானாசாரியர். முத்தர் - ஜீவந்முக்தருமாம். இன்னமுதம் - திருப்பாற்கடலினின்று தோன்றியது அமுதம், ஆழ்வார் திருவாய் மலரினின்று தோன்றியது இன்னமுதம் என்க. சித்தர்முதல் முத்தரீறாகச் சொல்லப்பட்ட பலவகை அதிகாரிகளும் கொண்டாடி ஆனந்தித்தற்கு ஏற்ற சிறப்பு அடங்கப்பெற்றுள்ளது - ஆழ்வாருருளிச்செயல் என்பதாம்.

நிறைந்தமகிமை தைரியம் கீர்த்தி சம்பத்து ஞானம் வைராக்கியம் என்ற ஆறுக்கும், 'பகம்' என்று பெயர் அதனையுடையவன், பகவான்; இவ்வட சொல், தமிழில் 'பகவன்' என்று விகாரப்பட்டு வழங்கும்: பகவர் என்பது, அதன் பன்மையாய் நின்றது. (உச)

உரு. தொகையுளவாயபனுவற்கெல்லாந்துறைதோறுந்தொட்டாற்
பகையுளவாமற்றும்பற்றுளவாம்பழநான்மறையின்
வகையுளவாகியவாதுளவாம்வந்தவந்திடத்தே
மிகையுளவாங்குருகூரெம்பிரான்றன்விழுத்தமிழ்க்கே.

(இ - ள்.) தொகை உள ஆய பனுவற்கு எல்லாம் - தொகுதியாகவுள்ளனவான மற்றைச் சமயநூல்கட்கெல்லாம், துறை தோறும் தொட்டால் - இடந்தோறும் ஊன்றிநோக்கினால் [அவற்றிலுள்ள பொருள்களிலெல்லாம் ஆராய்ச்சிசெய்தால் என்றபடி], பகை உள ஆம் - ஒருநூலிலேயே முன்னுக்குப்பின் மாறுகொளக்கூறலாகிய விரோதமும் வேதாந்தமான சாஸ்திரங்களோடு தாம் மாறுபடுதலாகிய விரோதமும் உள்ளனவாம்; மற்றும் - இதுவன்றியும், பற்று உள ஆம் பழ நால்மறையின் வகை உள ஆகிய வாது உள ஆம் - தொடர்ச்சியுள்ளனவாகிய பழமையான நான்குவேதங்களின் வகுப்புக்களிற்கூறிய பொருளோடு (மாறுபடுதலால்) உள்ளனவாகுஞ் சொற்போர்களும் (அச்சமயநூல்கட்கெல்லாம்) உண்டாகும்; குருகூர் எம்பிரான்தன் விழுத் தமிழ்க்கே - திருக்குருகூரிலவதரித்த எமது தலைவரான நம்மாழ்வாருடைய சிறந்த தமிழ்த்திவ்வியபிரபந்தங்களிலேயெனில், வந்த வந்த இடத்தே மிகை உள ஆம் - (மாறுபடக்கூறலும் நித்தியமான வேதத்தின் பொருளோடு எதிர்வாதமும் இல்லாமல்) பார்த்தபார்த்த இடமெல்லாம் விசேஷார்த்தங்களே அமைந்துள்ளனவாம்; (எ - று.)

ஆழ்வாரருளிச்செயல்களானவை, மாறுகொளக்கூறல் முதலிய நூற்குற்றங்களின்றிச் சகலவேதசாஸ்திரங்களுக்குஞ் சம்மதமாய்ச் சிறந்த வேதாந்தப்பொருளையே அறிவுடையாரனைவரும் அங்கீகரிக்குமாறு இடந்தோறும் உணர்த்துதலால், எல்லாச்சமயநூல்களினுஞ் சிறந்தன வென்பதாம்; பற்று நித்தியமாதலால் அநாதிகாலமாக இடையீடின்றிக் குருசிஷ்யக்கிரமத்திலே ஓதியுணரப்பட்டுவருந் தன்மை. இனி, பற்றுஉளவாம் என்பதற்கு - தத்துவப்பொருள்களையுணர்த்துதலில் மிக்கஅபேக்ஷையை யுடையனவான என்றும்பொருள்கொள்ளலாம். (உரு)

உசு. விழுப்பாரினியெம்மையார்பிறவித்துயர்மெய்யுறவந்
தழுப்பாதொழிமினருவினைகாளும்மையப்புறத்தே
யிழுப்பானொருவன்வந்தின்றுநின்றானிளநாகுசங்கங்
கொழுப்பாய்மருதஞ்சுலாங்குருகூரெங்குலக்கொழுந்தே.

(இ - ள்.) அரு வினைகாள் - (போக்குதற்கு) அரிய கருமங்களே! இளநாகு சங்கம் கொழுப்பு ஆய் மருதம் சுலாம் - இளமையான பெண்சங்குகளுடனே ஆண்சங்குகள் மதர்ப்புக்கொண்டு மருதநிலத்திலே எங்குந் திரியப்பெற்ற, குருகூர் - திருக்குருகூரில் அவதரித்த, என் குலம் கொழுந்து -

எங்கள்குலமான வைஷ்ணவகுலத்துக்கெல்லாங் கொழுந்துபோன்றவரா நம்மாழ்வார், உம்மை அ புறத்தே இழுப்பான் ஒருவன் வந்து - உங்கள இழுத்து அப்புறத்திலே எறியவல்ல ஒருவராய் எழுந்தருளி, இன்று நி ருன் - இப்பொழுது (எமது உள்ளத்தில்) நின் ருளினர்; இனி எம்மை பிறவி துயர் விழுப்பார் ஆர்-இனிமேல் எம்மைப் பிறப்புத்துன்பத்தில்வீழ்த் வல்லவர் யாவர்? [எவருமில்லை யென்றபடி]; (ஆகவே), மெய் உற வந் அழுப்பாது ஒழிமின் - (எமது) உடம்பிலே பொருந்தவந்து வருத்தாமல் நீ குங்கள்; (எ - று.)

மெய்யுற என்பதற்கு - மெய்யாக என்று பொருள்கொண்டு, அழுப்ப தொழிமின் என்பதனோடு இயைப்பினுமாம். உம்மை அப்புறத்தே இழு பான் - உங்களை வைஷ்ணவ கோஷ்டியினின்றும் அப்பாலே போகவிடு தாக ஆட்டைப்பற்றிப் புலி இழுப்பதுபோல இழுத்தெறிய வல்லவரென் ஒருவன் - ஒப்பற்ற மகாபுருஷ ரென்றபடி. நாகு - பெண்மைப்பெய இது சங்கிற்கு உரியதாதலை, "நீர்வாழ்சாதியுள் நந்து நாகே" என்ற தொ காப்பியங்கொண்டும் உணர்க. நாடும், நாடசார்ந்த இடமும் - மருதநில கொழு பாய் மருதம் என்று பிரித்து, கலப்பைக்காறு உழுது பாயப்பெற் வயல்களிலே யென்று பொருள்கொள்ளினுமாம். சுலாவுதல் - சுற்றிவருத

ஒருமரத்தின் அபிவிருத்திக்கு அதன்கொழுந்து காரணமாதல்போல தொண்டக்குலத்தின் பெருக்குக்குக் காரணமானவர் நம்மாழ்வார் என்பது 'எம்குலக்கொழுந்து' என்பதன் கருத்து; 'பிரபந்நஜநகூடஸ்தர்' என்று ஆ வாரை வழங்குதல் பிரசித்தம். இங்கே 'கொழுந்து' என்றது, உவமவா பெயர்: இராமாநுசநூற்றந்தாதியில் "எங்குலக்கொழுந்து" என்றதன் வியா கியானத்தில், 'எம்குலம் - ஸ்ரீவைஷ்ணவகுலம்; அதுக்குக் கொழுந்து எ றது - வ்ருக்ஷமாய்ப் பலிக்கைக்கும் கொடியாய்ப்படர்ந்து பலிக்கைக்கு மூலம் கொழுந்தாகையாலே, எங்கள்குலத்துக்கெல்லாம் மூலமானவரென் படி. கொழுந்து - தலை. அன்றிக்கே, 'எம்குலக்கொழுந்து' என்றது - எ கள்குலமடங்கலும் ஒருவேராய் அதுக்கு எம்பெருமானார்தாம் கொழுந்தாய் கொண்டு, வேருக்கு வெக்கைதட்டினால் கொழுந்து முற்படவாடுமாபோல எங்கள் குலத்துக்கு ஒருகுறை வந்தால் முற்படத் தம்முடையமுகம் வாட யிருக்குமவ ரென்னவுமாம்' என்றது, இங்கும் கொள்ளத்தக்கது.

"பெற்றங்கள்மேய்க்கும் பிரானார் பேணுந் திருக்கோயில்கண்டீர், அற் முரைக்கின்றே னின்னம் ஆழ்வினைகாளுமக்கிங்கோர், பற்றில்லைகண்டீ நடமின்;" "திருமாலையல்லது தெய்வமென்றேத்தேன், வருமாறென் ந மேல் வினை." "கூற்றமுஞ் சாரா கொடுவினையுஞ் சாரா, தீமாற்றமுஞ்சார வகை யறிந்தேன் - ஆற்றங், கரைக்கிடக்குங்கண்ணன்கடல்கிடக்கும்மாயன் உரைக்கிடக்கு முள்ளத்தெனக்கு" என்ற ஆழ்வாரருளிச்செயல்களைப் பி பற்றியது இச்செய்யுள் என்னலாம். 'இராமாநுசன் மன்னுமாமலர்த்தா ளயரே னருவினை யென்னை யெவ்வா றின்றடர்ப்பதுவே" என்று பின்பு வார் அருளிச்செய்ததுங் காண்க.

(உக

[பிரிவாற்றாது வருந்துந் தலைவிநிலை கண்டு தோழி இரங்கல்.]

உஎ. கொழுந்தோடிலையு முகையு மெல்லாங் கொய்யுங் கொய்ம்மகிழ்க்
விழுந்தோடுவதோர் சருகும் பெறாள் விறன் மாறனென்று [கீழ்
அழுந்தோடளரு மனமுருகுங் குருகூரென்றி
லெழுந்தோடவுங் கருத்துண்டு கெட்டேனிவ் விளங்கொடிக்கே.

(இ - ள்.) (இம்மெல்லியலாள்), கொழுந்தோடு இலையும் முகையும் எல்லாம் கொய்யும் - (மகிழமரத்தினது) கொழுந்தும் இலையும் அரும்புமுட்பட எல்லாவற்றையும் தனக்குக் கொண்டுதர வேண்டுவாள்; கொய் மகிழ் கீழ் விழுந்து ஓடுவது ஓர் சருகும் பெறாள் - மலர் கொய்தற்கு உரிய மகிழ மரத்தின்கீழ் உதிர்ந்து (காற்றின்விசையினால் எப்புறத்தும்) ஓடுவதான சருகு ஒன்றையாயினும் பெற்றாளில்லை; விறல் மாறன் என்றால் - பெருமையையுடைய மாறன் என்று (தலைமகனது பெயரைச்) சொன்னால், அழும் - (ஆற்றாமையினால்) அழுவாள்; தோள் தளரும் - தோள்கள் தளரப்பெறுவாள்; மனம் உருகும் - நெஞ்சு உருகப்பெறுவாள்; குருகூர் என்றில் - (அந்தமாறனுடைய ஊராகிய) திருக்குருகூரின் பெயரைச் சொன்னால், இ இளங்கொடிக்கு - இளமையான பூங்கொடிபோன்ற இம்மங்கைக்கு, எழுந்து ஓடவும் கருத்து உண்டு - எழுந்திருந்து (இங்குநின்று அவ்விடத்துக்கு) ஓடிச்செல்லவும் எண்ணமுண்டாகின்றது; கெட்டேன் —! (எ - று.)

"தெய்வத்தண்ணந்துழாய்த் தாராயினுந் தழையாயினுந் தண்கொம்பதாயினுங் கீழ், வேராயினும் நின்ற மண்ணாயினுங் கொண்டு வீசுமினே," "சீரார்தாழ்பொழில் மாலிருஞ்சோலையிற் செல்வர் செங்கட், போரார்தாள் புனை தாரிதாகில் தண்பூந்துளவின், தாரிதாவுந் தழையிதாகில் தழை தொடுத்த, நாரிதாகிற் பிழைப்பரிதா மெங்கள் நன்னுதற்கே" என்றபடி, தலைமகனைப்பிரிந்து அப்பிரிவையாற்றாது வருந்துகிற நிலையில் அவன்தரித்த மகிழமலர்மாலையையாயினும் பெற்றால் அதுகொண்டு ஒருவாறு தணிந்திருக்கலாமென்று கருதிய தலைமகள் அது கிடையாமையால் அதுதானே கிடையாவிடினும் அதன் சம்பந்தமுள்ள கொழுந்து இலை முகை என்பவற்றில் ஏதேனும் ஒன்றாவது கிடைக்குமாயின் அது பற்றுக்கோடாக ஆறியிருக்க நினைத்து அவற்றை வேண்டுகின்ற இயல்பு, 'கொழுந்தோடு இலையும் முகையும் எல்லாம் கொய்யும்' எனப்பட்டது. அங்ஙனம் வேண்டியவற்றிலொன்றுங் கிடைத்திலதென்பதேயன்றி அம்மகிழமரத்தின்கீழே உதிர்ந்துகிடக்குஞ் சருகுதானுங் கிடைத்திலதென்று இரங்குவாள், 'கொய்ம்மகிழ்க் கீழ் விழுந் தோடுவதோர் சருகும் பெறாள்' என்றார். இப்பாட்டு, பாட்டுடைத் தலைவனை கிளவித்தலைவனாக்க் கூறியது. பிரபந்தத்தலைவனாகிய ஆழ்வார் 'வகுளாபரணர்' என்று பெயர்பெறும்படி மகிழமலர்மாலையை யுடையராதல் உணர்க. 'கெட்டேன்' என்றது - இரக்கத்தாற் சொல்லுஞ் சொல்.

சருகு - உலர்ந்த இலை. (இவள்) தோள்தளரும், மனம் உருகும் - உயர்திணைதொடர்ந்த அஃறிணைச்சினையின்வினை அவ்வுயர்திணையின் மேலேற்றப் பட்டது; திணைவழுவமைதி. இளங்கொடி - அக்கொடிபோல் மெல்லியவடிவமுடைய பெண்ணுக்கு உவமையாகுபெயர்.

கம்பநாட்டாழ்வார் நம்மாழ்வார் திருவடிகளிலேயே சேர்ந்திருக்கப்பெ
ருது பிரிந்து வருந்துகிற நிலையில், அவ்வாழ்வாரோடு நேரிலாவது இடை
யிட்டாவது சம்பந்தம்பெற்ற பொருள் யாதாயினுமொன்றை அவருடை
பிரசாதமாகப்பெற்று ஆறியிருக்கக் கருதி வேண்டுதலையும், அங்ஙனம் ஒ
றும் அவர்க்குக் கிடைத்திடாமையையும், ஆழ்வாருடைய திருநாமத்தை
சொல்லும் போதெல்லாம் அவர் பக்திபரவசராய் அழுது உடல்சோர்ந்
மனந்தளர்தலையும், அவ்வாழ்வார் எழுந்தருளியிருக்கிற திவ்யதேசத்திற்
விரைந்துசென்றுசேர விரும்புதலையும், அன்பர்கள் பாராட்டி, இனிஇவர்க்
என்னுகுமோவென்று இரங்கிக்கூறுதல்; இதற்கு உள்ளுறை பொருளா
விவரம் கேட்டு உணர்க (உ

உ௯. கொடியெடுத்துக்கொண்டுநின்றேனினிக்கொடுங்கூற்றினுக்கே
ரடியெடுத்துக்கொண்டென்பால்வரலாகுங்கொலாரணத்தின்
படியெடுத்துக்கொண்டமாறனென்றுற்பதுமக்கரங்கண்
முடியெடுத்துக்கொண்டவந்தணர்தாளென்முடியெனவே.

(இ - ள்.) ஆரணத்தின் படி எடுத்துக்கொண்ட - வேதம்போல
(ஸாரமான அர்த்தங்களைத்) தேர்ந்தெடுத்துக்கொண்டு கூறிய, மாறன்-ம
னென்னுந் திருநாமமுடையவர், என்றால் - என்று யார்சொன்னாலும், (அ
ரைக்குறித்து), பதுமம் கரங்கள் முடி எடுத்துக்கொண்ட - தாமரைம
போன்ற தமது கைகளைக் குவித்து அஞ்சலிசெய்து அந்தஅஞ்சலிபந்தத்தை
தமதுசிரசின்மேற்கொள்ளுந் தன்மையரான, அந்தணர் - ஸ்ரீவைஷ்ணவ
ளுடைய, தாள் - திருவடிகள், என் முடி எனதுசிரமேற் கொள்ளப்படுவ
வாம்,' என - என்றுசொல்லி, கொடி எடுத்துக்கொண்டு நின்றேன் - (பாக
தர்க்கு வழித்தொண்டன் யானென்று வெளியிடுமாறு) விருதுக்கொடி பிடி
துக்கொண்டு நின்றேன்; இனி - இங்ஙனம் யான் ஆழ்வாரடியார்க்குத்தொ
ண்டுபூண்டபின்பு, கொடுங் கூற்றினுக்கு ஓர் அடி எடுத்துக்கொண்டு எ
பால் வரல் ஆகும் கொல் - (தீவினைக்குஏற்பக்) கொடியதண்டனை செய்ப
னன யமனுக்கு என்பக்கல் ஒருகாலடியையாவது எடுத்துவைத்துவருத
கூடுமோ? [கூடாது என்றபடி]; (எ - று.)

ஆழ்வாரடியார்பக்கல் வழிபாடுபூண்ட ஸ்ரீவைஷ்ணவர்களுடைய தி
வடியைஎன்முடிக்கு அணியாகக்கொண்டேனாதலால், எனது தீவினையனை
தும் தீர்ந்தது; இனி யமன் என்பக்கல் எங்ஙனம் வரமாட்டுவன்? என்
தனதுபெருமிதத்தை வெளியிட்டபடியாம். ஆரணத்தின்படி யெடுத்து
கொண்ட என்பதற்கு - வேதத்தின்ஸாராம்சத்தை எடுத்துக்கொண்டு தி
வியபிரபந்தங்களை யருளிச்செய்த என்றும், வேதத்துக்குஈடாகப் பிரப
மருளிச்செய்த என்றும் உரைத்தலு மொன்று. (உ

உ௰. என்முடியாதெனக்கியாதேயரியதிராவணன்றன்
பொன்முடியாற்கடறார்த்தவில்லான்பொருநைத்துறைவன்
றன்முடியாலவன்றாளிணைக்கீழெழப்பொருளுந்தமிழ் இச்
சொன்முடியாலமுதக்கவியாயிரஞ்சூட்டினனே.

(இ - ள்.) இராவணன்தன் பொன் முடியால் கடல் தூர்த்த வில்லான் - இராவணனுடைய ஸ்வர்ணகிரீடத்தைத் தரித்த தலைகளைப் பலமுறை துணித்துத்தள்ளி அவற்றைக்கொண்டு மிக ஆழ்ந்த கடலையும் நிரம்பியிட்டவனான ஸ்ரீமந்நாராயணனது (அடியவராகிய), பொருநைத் துறைவன் - தாமிரபர்ணி நதிதீரதேசத்திலவதரித்தவரான நம்மாழ்வார்,—அவன் தாளிணைக்கீழ் - அத்திருமாலினது உபயதிருவடிகளிலே, தன் முடியால் - தமது சிரசினால் (வணங்கி), சொல் முடியால் - (தமது) சொற்களின் சேர்க்கைகொண்டு, எ பொருளும் தழீஇ - (முத்திபெறுவார்க்கு வேண்டுவனவான) எல்லாப் பொருள்களையும் ஒருங்கு தொகுத்து, அமுதம் கவி ஆயிரம் சூட்டினன் - அமிருதம்போலினிய ஆயிரம்பாசுரங்களைப் பாடி அப்பாமாலையை அப்பெருமானுடைய இணையடியிற்) சமர்ப்பித்தனர்; (இப்படிப்பட்ட மகாவைபவமுடைய ஆழ்வார்க்கு யான் அடிமைப்பட்டபின்பு, எனக்கு முடியாதது என் - எனக்கு அசாத்தியமானது யாது? (எனக்கு) யாதே அரியது - எனக்குச் சிரம சாத்தியமானதுதான் யாது? [ஏதுவுமில்லை: வேண்டிய வேண்டிய நற்பயன்களெல்லாம் தவறாது எளிதிற் கைகூடுமென்றபடி;] (எ - று.)

இராமபிரான் தனது அம்புகளைக்கொண்டு இராவணனுடைய பத்துத் தலைகளையும் துணித்து இலங்கையைச் சூழ்ந்துள்ள கடலிலே தள்ளிவருந்தோறும் அவை அவனுக்குப் பிரமனளித்த வரபலத்தினால் மீண்டும்முளைத்து வர பின்பு பெருமான் அவனதுமார்பில் அஸ்திரத்தைப்பிரயோகித்து அவனை வதைத்திட்டன னென்பது, வரலாறு. வில்லான் பொருநைத்துறைவன் - ஆறாம்வேற்றுமைத்தொகை. 'இராவணன்தன்பொன்முடியாற் கடல்தூர்த்த வில்லான்' என்றதில், அவனது தலைகளின் பருமை தோன்றும். திருக்குருகூரென்ற திவ்வியதேசத்தி லெழுந்தருளியுள்ள பொலிந்துநின்றபிரானையே 'இராவணன்றன் பொன்முடியாற் கடல்தூர்த்த வில்லான்' என்று குறித்ததாகக்கொண்டு, அப்பிரானுக்கு உரிய தாமிரபர்ணிநதியினது கரையிலுள்ள ஊரில் அவதரித்த ஆழ்வார் என்றலு மொன்று. 'எப்பொருளும்' என்றது - பரப்ரஹ்மஸ்வரூபமும், ஜீவாத்மாவினது தன்மையும், பரமாத்மாவையடையும் உபாயமும், அங்ஙனமடைதலின் பயனும், அச்சாதனத்திற்குப் பகையும் என்று சகலவேதசாஸ்திரங்களிலும் சாரமாகச்சொல்லப்பட்ட அர்த்தபஞ்சகத்தை. 'எனக்கு' என்பது, மத்திமதீபமாக முன்னும் பின்னும் இயையும். தாளிணைக்கீழ்ச் சூட்டினனென்க. பொன்முடி என்றது - இரண்டும் மூன்றும் வேற்றுமை யுருபும்பயனும் உடன்தொக்கதொகை. (உக)

௨௰. சூட்டிற்குருகுறங்குங்குருகூர்தொழுதேன்வழுதி
நாட்டிற்பிறந்தவர்க்காளுஞ்செய்தேனென்னைநல்வினைபாக்
காட்டிப்புகுதவிட்டுப்பக்கொண்மாறன்கழல்பற்றிப்போய்
வீட்டிற்புகுதற்குமுண்டேகுறைமறைமேற்பெயரிலே.

(இ - ள்.) சூட்டில் - நெற்போர்களிலே, குருகு - மருதநிலத்துப்பறவைகள், உறங்கும் - (யாதொருகவலையுமின்றி) இனிதுதுயிலப்பெற்ற, குருகூர் - திருக்குருகூரென்கிற ஆழ்வார்திருநகரியை, தொழுதேன் - சேவிக்கப்பெற்றேன்; வழுதி நாட்டில் பிறந்தவர்க்கு ஆளும் செய்தேன் - அந்த ஆழ்வார்

திருவவதரிக்கப்பெற்ற நாடாகிய பாண்டியநாட்டிற் பிறந்த ஸ்ரீவைஷ்ணவர் கட்கு அடிமைத்தொழிலையுஞ் செய்யப்பெற்றேன்; மறை மெய்எனில்-வேதம் சத்தியமாகு மானால்,—என்னை நல் வினை ஆம் காட்டில் புகுத விட்டு உய்ய கொள் மாறன் கழல் பற்றி போய் வீட்டில் புகுதற்கும் குறை உண்டே - என்னை நற்செய்கைகளாகிற தவவனத்திலே செல்லவிட்டு (யான்) ஈடேறுமாறு (என்னை) ஆட்கொண்டருளுகிற நம்மாழ்வாருடைய திருவடிகளைச் சரணமடைந்தபின்பு (யான்) ஸ்ரீவைகுண்டத்திற் சென்று சேர்தற்கும் தடையுண்டோ? [இல்லையே யென்றபடி]; (எ - று.)

ஒருபாகவதரை ஆசாரியராகக்கொண்டு அவர் திருவடிகளிற்சரண்புகுந்து ஆட்படுதலும், அந்தக்குருவினது திருவவதாரஸ்தலத்தை வணங்குதலும், அந்தஞானாசாரியரது சம்பந்தத்தை எவ்வாற்றாலாயினும் பெற்றவர்கட்கு அடிமைபூணுதலும், ஆத்மா உஜ்ஜீவித்துத் தவறாது வீடுபெறுதற்குக் காரணமா மென்பது, சத்தியமான வேதத்தின் சித்தாந்தமாகும் என்று தாற்பரியங் காண்க. சூட்டிற் குருகு உறங்கும்—"போரிடையுறங்கு மன்னம்" என்றார் இராமாயணத்தும். சூடு - நெல்முதலியவற்றி னரிக்குவியல். குருகுஎன்பது- நீர்வாழ்பறவைப் பெயராகவும், பறவைப்பொதுப்பெயராகவும் வழங்கும். வழுதி - பாண்டியன். இங்கு 'நல்வினை' என்றது, பிரபத்திமார்க்கத்துக்கு உரிய செயல்களை. முந்துற இராமாயணமென்னும் சரணாகதிவேதத்தைத் தாம் பாடும்படி செய்வித்தது ஆழ்வார்கருணையென்பார் 'என்னை நல்வினையாங்காட்டிற் புகுதவிட்டு உய்யக்கொள் மாறன்' என்றன ரென்றுங் கொள்ளலாம்; "கற்பா ரிராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ, புற்பாமுதலாப் புல்லெறும்பாதி யொன்றின்றியே, நற்பாலயோத்தியில்வாழுஞ் சராசரம் முற்றவும், நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார்பெற்ற நாட்டுளே" என்று ஆழ்வா ரருளிச்செய்தது, தன்னையடுத்த சராசரங்களையெல்லாம் அன்று வைகுந்தத்து ஏற்றிய இராமபிரானது திவ்வியசரித்திரத்தைக் கவிபாடுதற்குத் தூண்டுகோலாதல் காண்க. 'மாறன்கழல்பற்றிக் குருகூர்தொழுதேன் ஆளுஞ் செய்தேன்' என்று முன்பின்னாகமாற்றி அந்வயித்துப் பொருளுரைப்பினும் அமையும். மெய் - யதார்த்தபிரமாணம். வீட்டிற்புகுதற்குமுண்டே குறை— "இம்மையும்சாதித்து வானவர்நாட்டையும், நீகண்டுகொள்ளென்று வீடுந் தரும்" என்றபடி. (௯௦)

௯௧. மெய்புமெய்யாயதுபொய்யும்பொய்யாயதுவேறுபடுத்
துய்புமெய்யாயவுபாயம்வந்துற்றதுறுவினையைக்
கொய்புமெய்வாள்வலவன்குருகைக்கரசன்புலமை
செய்யுமய்யன்றனக்கேதனித்தாளன்புசெய்தபின்னே.

(இ - ள்.) உறு வினையை - மிக்ககருமங்களை, கொய்யும் - அறுத்தொழிக்கின்ற, மெய் - சத்தியவாக்காகிய, வாள் - வாட்படையின்தொழிலில், வலவன் - வல்லவரும், குருகைக்கு அரசன் - திருக்குருகூர்க்குத்தலைவரும், புலமை செய்யும் அய்யன் தனக்கே - ஸ்வரூபஞானத்தை (எல்லார்க்கும்) உபதேசிக்கிற ஆசாரியருமாகிய நம்மாழ்வார்க்கே, தனி தாள் அன்பு செய்த பின் - ஒப்பற்ற திருவடிகளில் (யான்) பக்திசெய்தபின்பு,—(எனக்கு), மெய்

யும் மெய் ஆயது - உண்மைப்பொருளும் உண்மையாக விளங்கிற்று; பொய் யும் பொய் ஆயது - பொய்ம்மைப்பொருளும் பொய்யாகவே புலப்பட்டது: வேறுபடுத்து - (இவ்வனம் மெய்பொய்களைப் பகுத்துஉணர்ந்தபின்பு, உய் யும் - (ஆத்மா) உஜ்ஜீவிப்பதற்குஉரிய, மெய் ஆய உபாயம் - உண்மையான உபாயமும், வந்து உற்றது - (எனக்கு) வந்து சித்தித்தது; (எ - று.)

மெய் - பரப்ரஹ்மஸ்வரூபம், ஜீவாத்மஸ்வரூபம் முதலியன. பொய் - உடம்பு, செல்வம், யானெனதென்னுஞ்செருக்கு முதலியன. மெய்யாய - ஸ்வரூபாநுரூபமான. பயன் தவறாத; உபாயம் - சரணாகதி. மூன்றும்அடி யில், மெய் - உண்மைப்பொருளுணர்த்துந் திருவாய்மொழி. தனித்து ஆள் அன்பு என்று பதம்பிரித்து, தனியே ஆட்கொள்ளப் பெற்றற்கு ஏற்ற பக்தி யென்றலும் ஒன்று. மெய் மெய்யாதலும், பொய் பொய்யாதலும், வேறு படுத்து உய்யும் மெய்யாய உபாயம் வந்துஉறுதலும், ஆழ்வாரருளிச்செயலின் அர்த்தஞானத்தால் இனிது வாய்க்கும். (௫௧)

௫௨. செய்யன்கரியனெனத்திருமாலைத்தெரிந்துணர
வய்யங்கரியல்லமாட்டாமறைமதுரக்குருகூ
ரய்யன்கவியல்லவேற்பிறவிக்கடலாழ்வதல்லா
லுய்யும்வகையொன்றும்யான்கண்டிலேனிவ்வுயிர்களுக்கே.

(இ - ள்.) திருமாலை - ஸ்ரீமந்நாராயணனை, செய்யன் கரியன் என தெரிந்து உணர - செந்நிறமுடையவன் அல்லது கருநிறமுடையவன் என்று ஆராய்ந்து அறிதற்கு, வையம் கரி அல்ல - உலகத்துஉயிர்கள் ஏற்ற சாக்ஷி யாகா; மறை - வேதங்களும், மாட்டா - (அந்தணமே பகவானது சொரூபத் தை இன்னபடியென்று அறிதற்கு) வல்லனவல்ல; (ஆகவே), மதுரம் குரு கூர் அய்யன் கவி அல்ல எல் - (அவனைத்தெரிந்து சொல்லுதற்கு) இனிமை யான திருக்குருகூரிலவதரித்த ஆசாரியரான ஆழ்வாருடைய பாசுரங்கள் உள்ளனவல்லவாளுல், பிறவி கடல் ஆழ்வது அல்லால் - (உயிர்களெல்லாம் பிறப்பாகிய கடலில் அழுந்துவதல்லாமல், இ உயிர்களுக்கு உய்யும் வகை ஒன் றும் யான் கண்டிலேன் - இந்தஜீவாத்மாக்களுக்கு உய்வுபெறும் உபாயமொன் றையும் யான் கண்டேனில்லை; (எ - று.)

பரப்ரஹ்மஸ்வரூபத்தை உள்ளபடி உணர்ந்து வெளியிட்டு அதனை யடையும் உபாயத்தையுங் கூறி உயிர்களைப் பிறவிக்கடலினின்று முத்திக் கரையேற்றுவது ஆழ்வாரருளிச்செயலேயல்லது யாதொன்று மில்லையென் பதாம். 'இத்தன்மையனென்று' என்ற பொருளில் 'செய்யன்கரியனென' என்றது; ஒரு சொல்விழுக்காடு அளவின்மையும், அச்சந்தருதலும், அலை மாறிமாறிவருதலும்பற்றி, பிறவி 'கடல்' எனப்பட்டது. செய்யன் கரியன் என்பதற்கு - வாய் கண் கை கால் என்கிற அவயவங்களிற் செந்நிறமுடைய வன் திருமேனியிற் கருநிறமுடையவன் என்று உரைப்பாருமுளர். (௫௨)

௫௩. உயிர்த்தாரையிற்புக்குறுகுறும்பாமொருமூன்றனையுஞ்
செயிர்த்தார்குருகைவந்தார்திருவாய்மொழிசெப்பலுற்றுன்
மயிர்த்தாரைகள்பொடிக்குங்கண்கணீர்மல்குமாமறைப்பு
லுயிர்த்தாரயிர்த்தபொருள்வெளியாமெங்காரணர்க்கே.

(இ - ள்.) உயிர் தாரையில் புக்கு உறு - உயிர் செல்லுகிற வழியிலே உடன் சென்று கூடுகிற, குறும்பு ஆம் ஒரு மூன்றனையும் - முக்குறும்புகளையும், செயிர்த்தார் - வெறுத்தொழித்தவராகிய, குருகை வந்தார் - திருக்குருகூரிலவதரித்தவரான நம்மாழ்வாருடைய, திருவாய்மொழி - திருவாய்மொழிப் பிரபந்தமாகிய திவ்வியசூக்திகளை, செப்பல் உற்றால் - ஓதியுணரத்தொடங்கினால்,—எங்கள் அந்தணர்க்கு - எங்களை ஆட்கொள்ளுதற்கு உரியவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு,—மயிர் தாரைகள் பொடிக்கும் - (உடம்பிலுள்ள) மயிரொழுங்குகள் சிலிர்ப்புக்கொள்ளும்; கண்கள் நீர் மல்கும் - கண்கள் ஆனந்தக்கண்ணீர் நிறைந்து பெருகப்பெறும்; மா மறையுள் அயிர்த்தார் அயிர்த்த பொருள் வெளி ஆம் - (பொருளுணர்தற்கு அரிய) பெருமையையுடைய வேதங்களின் கருத்துக்களிற் பிறசமயத்தார் சந்தேகித்த அர்த்தங்களெல்லாம் நன்கு விளங்கும்; (எ - று.)

முக்குறும்பு - உயர்குடிப்பிறந்தேனென்னுஞ் செருக்கு, கல்வியிற் சிறந்தேனென்னுஞ்செருக்கு, ஒழுக்கத்திற் சிறந்தேனென்னுஞ் செருக்கு என்பவை. இவை, தம்மையுடையார் அபிமானத்தால் தமது உயிரைப் பகவத்பாகவதர்கட்கு அடிமையென்று கொண்டு உயர்கதிபுகாது தமக்கே உரியதென்று கொண்டு இழிகதிகளிற் செல்லுதற்குக் காரண மென்பது தோன்ற, 'உயிர்த்தாரையிற் புக்குறு குறும்பாம் ஒருமூன்று' எனப்பட்டன. அவற்றை ஆழ்வார் வெறுத்திட்டமையை, அவரருளிச்செய்த பிரதமபிரபந்தமாகிய திருவிருத்தத்தின் முதற்பாசுரத்தில் "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும், இந்நின்றநீர்மை யினி யாமுறாமை" என்றது முதலியனகொண்டு உணர்க. மயிர்த்தாரைகள் பொடித்தல் - உரோமாஞ்சம். பொடித்தல் - புளகித்தல். இதுவும், கண்களில்நீர்மல்குதலும் - உவகையினாலாகிற மெய்ப்பாடு. கண்கள் நீர் மல்கும் - இடத்துநிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது; உபசாரவழக்கு. 'எங்கள் அந்தணர்' என்றது - ஸ்ரீமதுரகவிகள், நாதமுனிகள் போல்வாரை. (௩௩)

௩௪. அந்தணர்க்கோநல்லருந்தவர்க்கோவன்றியோகியராய்
வந்தவர்க்கோமறவாதியர்க்கோமகரக்குழைசேர்
சுந்தரத்தோளனுக்கோவவன்றொண்டர்கட்கோசுடர்தோய்
சந்தனச்சோலைக்குருகைப்பிரான்வந்துசந்தித்ததே.

(இ - ள்.) அந்தணர்க்கோ - வேதியர்கட்காகவோ, நல் அருந் தவர்க்கோ - சிறந்த அருமையான தவத்தைச்செய்கிறவர்கட்காகவோ, அன்றி - அல்லது, யோகியர் ஆய் வந்தவர்க்கோ - யோகாப்பியாசஞ்செய்து வருகிறவர்கட்காகவோ, மறம் வாதியர்க்கோ - பிணக்கர்களாய்ப் பரசமயவாதஞ் செய்கிறவர்கட்காகவோ, மகரம் குழை சேர் சுந்தரம் தோளனுக்கோ - மகரகுண்டலங்கள் தாழ்ந்து தவழப்பெற்ற அழகிய திருத்தோள்களையுடைய ஸ்ரீமந்நாராயணனுக்காகவோ, அவன் தொண்டர்கட்கோ - அப்பெருமானுடைய அடியார்கட்காகவோ, சுடர் தோய் சந்தனம் சோலை குருகை பிரான் வந்து சந்தித்தது - (சந்திரசூரியர் முதலிய) விண்ணொளிகள் தன்மேற் படும்படி (அவற்றையளாவிமிகஉயர்ந்து) வளர்ந்துள்ள சந்தனமரச்சோலையையுடைய திருக்குருகூர்க்குத் தலைவரான நம்மாழ்வார் வந்து அவதரித்தது? (எ - று.)

அந்தணர் அருந்தவர் யோகியர் அவன்தொண்டர் என்பவர்கட்கு வேதத்தினுட்பொருளையும் உயர்ந்ததவத்தின்தன்மையையும் சிறந்தயோகத்தின் நிலைமையையும் அடிமைத்திறத்தையும் அருளிச்செய்து அவர்களை உய்வித்தலாலும்; பரசமயவாதிகளை வென்று அடக்கித் தங்களைப்படுத்தி நல்வழிப் புகுத்தலாலும், "நற்பாக்காவன நற்பலதோளற்கு" என்றபடி தோளழகையுடைய திருமாலுக்கு அடிமைபூண்டு அவனது மகிமைகளை வெளியிட்டுப் பாசுரம்பாடி அவனது திருவுள்ளத்தை உவப்பித்தலாலும், ஆழ்வாரது திருவவதாரம் அந்தணர் முதலிய அனைவர்க்கும் தனித்தனி பிரயோஜநகரமாம் என்ற பொருளை, இங்ஙனம் விகற்பித்துக்கூறும் வாய்பாட்டினால் பெறவைத்தார். மகரக்குழை - சுறாமீன்வடிவு தோன்றத் தொழில்செய்யப்பட்ட குண்டலம்; "சுறவிறக்கொடுங்குழை" என்றார் சிந்தாமணியாரும். 'சுடர்தோய் சந்தனச்சோலை' என்றது - தொடர்புயர்வுநவிற்சியணி; சோலையின் மிக்க உயர்ச்சியை விளக்கும். (௩௪)

௩௫. சந்தியுஞ்சந்திப்பதமுமவைதம்மிலேதழைக்கும்
பந்தியும்பல்லலங்காரப்பொருளும்பயிலுகிற்பீர்
வந்தியும்வந்திப்பவரைவணங்கும்வகையறிவீர்
சிந்தியுந்தென்குருகூர்தொழுதாட்செய்யுந்தேவரையே.

(இ - ள்.) சந்தியும்-எழுத்துப்புணர்ச்சியிலக்கணத்திலும், சந்தி பதமும்-அங்ஙனம்புணர்தற்குஉரியபதங்களி னிலக்கணத்திலும், அவைதம்மிலே தழைக்கும் பந்தியும் - அச்சொற்களிலே மிக்குவிளங்குகிற பொருளிலக்கண வகைகளிலும், பல் அலங்காரம் பொருளும் - பலவகை அணியிலக்கணவிஷயங்களிலும், பயிலுகிற்பீர்-பழகுகிற இலக்கணப்புலவர்காள்! தென் குருகூர் தொழுது ஆள் செய்யும் தேவரை-(ஆழ்வாருடைய திருவவதாரஸ்தலமான) அழகிய திருக்குருகூரைச் சேவித்து (ஆழ்வார்பக்கல்) அடிமைசெய்கிற பூதேவர்களாகிய அந்தணர்களை, வந்தியும்-நமஸ்கரியுங்கள்; வந்திப்பவரை வணங்கும் வகை அறிவீர் - (அந்த ஆழ்வாரடியார்களை) வணங்குகிற ஸ்ரீவைஷ்ணவர்களை வணங்கும்விதத்தை அறிவீர்கள்; சிந்தியும் - (அவர்களைத்) தியானமுஞ் செய்யுங்கள்; (எ - று.)

"கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்க வதற்குத் தக" என்றபடி கல்விக்குத்தக்க ஒழுக்கம் இல்லாதவழிக் கல்வி பயனிலதாதலாலும், சப்த சாஸ்திரம் முதலியன வேதாந்தசாஸ்திரத்திற்கு அங்கமாக உபயோகித்தற்கு உரியனவேயன்றித் தனியே தாம் வீடுபேறளிக்குந்தன்மையுடையன வல்லவாதலாலும், அந்தந்தநூற்பயிற்சியுடையாரை விளித்து 'நீங்கள் ஆழ்வாரடியார்களை வணங்கியும் அவரடியார்களை வணங்கியும் உய்வீர்கள்' என்று உணர்த்தியபடியாம். 'சந்தி' என்றது-மற்றைஎழுத்திலக்கணங்கட்கும் உபலக்ஷணம். பல் அலங்காரம் - சொல்லணி பொருளணிகள். எழுத்துச் சொற் பொருள் யாப்பு அணி என்னும் ஐவகையிலக்கணத்தில் நான்கைக் கூறியதில், அந் நான்கினுலுமாகிற செய்யுளின் இலக்கணம் தானே அடங்கும். சந்தியென்றதில், சொற்களின்சேர்க்கையென யாப்பையும் அடக்குதலும் ஒன்று. 'பல் அலங்காரப்பொருள்' என்பதில் பொருளிலக்கணம் அணியிலக்கணம் என்ற

இரண்டையும் அடக்கி. 'அவைதம்மிலே தழைக்கும் பந்தி' என்பதில் சந்தியும் சந்திப்பதமும் என்றவற்றுலமைகிற யாப்பிலக்கணவகைகளை யமைப் பாருமுளர். (௫௫)

[பாங்கி வெறிவிலக்கிச் செவிலியர்க்கு அறத்தொடுநிற்றல்.]

௫௬. தேவரையேறியமூதறிவாட்டியைச்சீரழித்தீர்
பூவரையேறியகோதையுள்ளம்புகுந்தாரெவரென்
றேவரையேறிமொழிகின்றபோதியம்பிற்றிறைவர்
மூவரையோகுருகூரரையோசொல்லுமுந்துறவே.

(இ - ள்.) தேவரை ஏறிய மூதறிவாட்டியை சீர் அழித்தீர்-தெய்வஆவேசங்கொண்ட முதிர்ந்தஅறிவுடையளான கட்டுவிச்சியைச் சீர்கெடுத்துவிட்டீர்கள். (நீங்கள்); பூ வரை ஏறிய கோதை உள்ளம் புகுந்தார் எவர் என்றே வரை ஏறி மொழிகின்ற போது - மலர்கள் அளவாகச் சூட்டப்பெற்றுள்ள கூந்தலையுடைய இவ்விளமங்கையினது மனத்திற் புக்கு இவளைவருத்துபவர் யார் என்று நீங்கள் வினவியதைக்குறித்து (அக்கட்டுவிச்சி) நமது உறையுளின் எல்லையில் ஏறிவந்து விடைகூறுகிறபொழுது; இயம்பிற்று - சொன்னது; இறைவர் மூவரையோ-திரிமூர்த்திகளையோ?(அன்றி), குருகூரரையோ-திருக்குருகூர்நம்பியையோ? முந்துற சொல்லும் - என்முன்னே சொல்லுங்கள்.

கட்டுவிச்சி சொன்னது இறைவர்மூவரையன்று குருகூரரையேயென்பது; இவள்கொண்டகூறுஞ் சித்தாந்தம். களவொழுக்கத்தால் தலைமகளைக் கூடிய தலைமகன் பின்பு அவளை வெளிப்படையாக மணஞ்செய்துகொள்ளும் பொருட்டுப் பொருள்தேடிவருதற்காக அவளைப்பிரிந்துசென்று வரவுகுறித்தகாலத்தில் வாராது சிறிது நீட்டிக்க, அந்நிலையிற் பிரிவாற்றாது மிகவருந்திய தலைமகளைச்செவிலித்தாய்மார் எதிர்ப்பட்டுஅவளதுவடிவுவேறுபாட்டை நோக்கி 'இவள் இங்ஙனம் மெலிதற்குக் காரணம் என்னோ?' என்று கவலைப்பட்டுக் கட்டுவிச்சியைக் குறிகேட்க, அவளும் வீடேறிவந்து தன்மரபின்படி ஆராய்ந்து இவள்பக்கல் ஆவேசித்தவர் குருகூர்நம்பியொழியத் திரிமூர்த்திகளுமல்லரென்று சிலகூற, அதுகேட்டசெவிலித்தாயர், அக்கட்டுவிச்சிவார்த்தையில்வந்த 'குருகூர்நம்பி' என்ற பெயர்க்கும், அதற்கு அடைமொழியாகவும் அதன்பரியாயநாமங்களாகவும் வந்த விசாகன் சேய் ஆறுமுகன் வேள் இளையான் அழகியான் கடவுண்மைந்தன் ஆசான் கலையுணர்புலவன் குழகன் கங்கைநந்தனன் சுவாமி மேலவர்க்கிறைவன் என்பன போன்ற சொற்களுக்கும் முருகக்கடவுளென்று பொருள் செய்துகொண்டு, அதற்கு ஏற்ப, வேலனெனப்படுகிற வெறியாட்டாளனை யழைப்பித்து அவனைக்கொண்டு, முருகக்கடவுளினுவேசத்திற்குப் பரிகாரமாக வெறியாடுவிக்க முயல, அதனையறிந்த தலைமகள் தனக்குத் தலைமகனுல் நேர்ந்த நோயை இயைபில்லாத பிறர் தீர்க்கத்தொடங்குதல்குறித்து மிகவருந்தித் தோழியை வேண்ட, அவளது துன்பத்தின் மெய்க்காரணத்தை யறிந்த தோழி அச்சமயத்திற் செவிலியரைநோக்கிச் சிலகூறி வெறிவிலக்கித் தலைவியினது துன்பத்தின் உண்மைக்காரணத்தை யுணர்த்துகிற துறை; இது. இதன்மெய்ப்பாடு - பெருமிதத்தைச்சார்ந்த நகை; பயன் - அறத்தொடுநிற்றல். கட்டுவிச்சிகூறிய

சொற்களின் உண்மைப்பொருளை யுணராது அவற்றிற்கெல்லாம் பிறிது பொருள்கொண்டு அதற்கேற்பமுயலுதல். அக்கட்டுவிச்சி இவளதுநோயின் காரணத்தை உள்ளபடி உணர்ந்திலளென்று பிறர்கருதுமாற்று இடமாகி அவளது அறிவின் பெருமையைக் கெடுத்ததாக முடிதலால், 'சேழ்த்தீர்' என்றாள். அவள் அங்ஙனங் கவர்பொருள்படக் கூறினளென்று கொண்டது. அகத்தமிழிலக்கணத்திற்கு ஏற்பவென்று உணர்க. தேவரையேறிய = தேவரேறிய; ஐ - அசை. தெய்வமுன்னிலையாகக்கொண்டு குறிபார்த்து அத்தெய்வத்தின் வெளிப்பாட்டால் உண்மையையுணர்ந்து உரைக்குந் தகுதியுடையாளாதலால், 'மூதறிவாட்டி' என்று சிறப்பித்துக் கூறப்பட்டாள்.

மூதறிவு - பேரறிவு. முதுமையை அறிவாட்டிக்கு அடைமொழியாக்கினால், பிராயம்முதிர்ந்தவளென்று பொருளாம். பூவரையேறிய கோதை - பூக்களுக்கு எல்லையான கூந்தலெனினுமாம்; ("பூவரம்பாய கோதைப் பொன்னனார்" என்ற சிந்தாமணியைக் காண்க.) அர் - பகுதிப்பொருள்விகுதியென்றும், ஐ - அசையென்றுங் கொண்டு, பூவரையேறியகோதை - பூவேறியகோதையெனினும் அமையும்; (சிந்தாமணியில் "பூவர்சோலை" என்றவிடத்து நச்சினார்க்கினியர், 'பூவர், அர் - பகுதிப்பொருள் விகுதி' என்றமை காண்க.) கோதை - பெண்ணுக்குச் சினையாகுபெயர். 'வரையேறி' என்றதை, சிறியதிருமடலில் "கட்டுவிச்சி கட்டேறி" என்றாற்போலக் கொள்ளலாம். இறைவர் - தலைவர். 'இறைவர்மூவர்' என்றது, தொகைக்குறிப்பு.

நம்மாழ்வாரது சாந்நித்தியத்தைப் பெறாமல் வருந்துகிற கம்பநாடரது துயரத்தைக்கண்ட ஞானிகள், அவர்பக்கலுள்ள பரிவா லுண்டான கலக்கத்தால், அதன்காரணத்தை உணர்ந்தவ ருணர்த்தவு முணராமல் மயங்கி இதை தேவதாவேசமென்று எண்ணித் தேவதாந்தரபஜநத்தாலாவது இவரது ஆற்றாமையைத் தணிப்பிக்கலாமோ வென்று தொடங்கிய நிலையில், அக்கம்பநாடரது தன்மையை யுணர்ந்த அன்பர்கள் அம்முயற்சியை விலக்கி உண்மைக்காரணத்தை யுணர்த்தும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருளாம். 'தேவரையேறிய மூதறிவாட்டி'-தெய்வவுணர்வுடைய பெரியோர். 'பூவரையேறியகோதை' - ஆழ்வாரது திருவடித்தாமரைமலரை முடிக்கு அணியாகச் சூடுபவர். 'உள்ளம் புகுந்தார்' - அவரது மனத்தில் என்றும் நீங்காது குடிகொண்டுள்ளவர். 'இயம்பிற்று இறைவர் மூவரையோ குருகூரரையோ' - "தேவுமற்றறியேன் குருகூர்நம்பி, பாவினின்னிசைபாடித்திரிவனே" என்ற மதுரகவியாழ்வார்போலக் கம்பநாட்டாழ்வாரும் வேறொருதெய்வத்தினிடத்தில் பற்றுவைத்திடாமல் நம்மாழ்வார் பக்கலிலேயே பூரணபக்திகொண்டவரென்க; வேதவிதிப்படி ஆசாரியனையே தெய்வமாகக்கொண்டவ ரென்றபடி. பிறவும் கேட்டு உணர்க; விரிப்பிற் பெருகும்.

இனி, இச்செய்யுட்கு வேறுதுறையமைத்துப் பொருள்கூறலாயினும், பொருந்துமாயிற் கொள்க.

௩௭. துறவாதவர்க்குந் துறந்தவர்க்குஞ் சொல்லவேசரக்கு
மறவாவவையிங்கொராயிரநிற்கவந்தோசிலர்போய்
மறவாதியர்சொன்னவாசகமாமலட்டாவைப்பற்றி
கறவாக்கிடப்பரங்கென்பெறுவோதங்கள்கைவலிப்பே.

(இ - ள்.) துறவாதவர்க்கும் - இல்லறத்தார்க்கும், துறந்தவர்க்கும்-துறவறத்தார்க்கும், சொல்லவே சுரக்கும் - ஓதுமளவிலேயே (அறம்பொருளின்பம்வீடென்னும் நால்வகைப்பால்களையும்) மேன்மேற்சுரந்து தருகிற, அறம் ஆ அவை ஓர் ஆயிரம் - பரமதர்மரூபமான ஓராயிரம்பசுக்கள் [ஸ்ரீவைஷ்ணவசிகாமணியான நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்கள்], இங்கு நிற்க - இவ்வுலகத்திலே சிறப்புற்றுநிற்க,—அந்தோ-ஐயோ சிலர்—,போய் - (இவற்றைவிட்டுச்) சென்று, மறம் வாதியர் சொன்ன வாசகம் ஆம் மலடு ஆவை பற்றி - மாறுபாடுடைய வாதங்களைச் செய்பவரான சைவர் [மாணிக்கவாசகர்] சொன்ன திருவாசகமாகிய மலட்டுப்பசுவைப் பயன்தருவதாகக் கொண்டு, கறவா கிடப்பர் - கறந்துகொள்ள முயல்வார்; அங்கு - அந்தமலட்டுப்பசுவினிடத்து, தங்கள் கை வலிப்பு - அவர்கள் கை நோகப்பெறுவது, என் பெறவோ - யாதுபயனை யடையவோ? [அதில் ஒன்றும் பெறப்படுவதில்லை யென்றபடி]; (எ - று.)

துறந்தவர் - புறமாகிய செல்வத்தினிடத்தும் அகமாகிய உடம்பினிடத்தும் உள்ள பற்றை, அவற்றின் நிலைபாமையை நோக்கி விட்டவர்; இதன் எதிர்மொழி, துறவாதவர். 'அவை' என்பதை, பகுதிப்பொருள்விகுதி யென்றாவது, முதல்வேற்றுமைச் சொல்லுருபென்றாவது, அசையென்றாவது கொள்க. அந்தோ - இரக்கக்குறிப்பிடைச்சொல்; இதனைச் சிங்களநாட்டில் வழங்குந்திசைச்சொல்லென்பர்: 'ஹந்த' என்ற வடசொல்லின் சிதைவு என்னலாம். 'மறவாதியர் சொன்னவாசகம்' என்பதற்கு - "தர்க்கச்சமணரும் சாக்கியப்பேய்களும் தாழ்சடையோன், சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும் நான்மறையு, நிற்கக் குறும்புசெய்நீசரும்" முதலாகத் தாமசபுத்தியால் விபரீதார்த்தங்களைக்கற்பித்து வாதிக்கிற பரசமயத்தார்கள் சொன்ன வாக்கியங்களென்று பொதுப்பட உரைப்பினுமாம். வலிப்பு - கடுப்பு. இங்கே, கறத்தல் - உறுதிப்பொருள்களாகிய சுவைப் பயனைப்பெறமுயலுதல். கைவலிப்பு - வீண்சிரமம் என்றபடி. சிலர் என்பெறவோ மலட்டாவைப்பற்றிக் கறவாக்கிடப்பர்: அங்கு (அவர்கட்குத்) தங்கள்கைவலிப்பே (சித்திப்பது) என்று இயைத்தும்உரைக்கலாம்.

[இப்பொழுதைக்கு ருசு - வருஷத்துக்குமுன்பு இச்சடகோபரந்தாதிக்குத் திரிசிரபுரம் மகாவித்வான் கோவிந்தபிள்ளையவர்கள் செய்த உரையில், இச்செய்யுளின்கீழ், 'ஆழ்வார்திருவாய்மொழி இருக்க, வேறொன்றையும்பற்றலாயிருக்கின்றதே: இது என்னபேதைமை என்கிறது!', 'அந்தவாசகமாகிய பசு, சிஷ்யனாகிய கன்றைப் பெறாமையால், 'மலட்டுப்பசு' என்றது "திருவாய்மொழிகற்ற, நாதமுனி உய்யக்கொண்டார் இராமர் நல் ஆளவந்தார், எதமில்வண்மைப்பராங்குசதாசர் எதித்தலைவர்" என்பதுபோல், அவ்வாசகத்துக்குக் குருபரம்பரை இல்லாமையைக்கொண்டு, 'மலட்டுப்பசு' என்றார்; ஆனால், 'மாணிக்கவாசகன் சொற்படி அம்பலவாணன் கையெழுத்து' என்கிற பிரசித்தம் உண்டே யென்றால், அந்த அம்பலவாணன் நாதமுனிகளைப் போலப் பிறருக்கு உபதேசிக்கவில்லையென்று கருத்து. எழுதின மதுரகவிகள் சொன்ன 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' போல ஒருவரும் ஆசாரியநிஷ்டை

கூடி ஒன்றுஞ் சொல்லாமையாலும், 'மலட்டுப்பசு வென்னக் குறையில்லை' என்ற வாக்கியங்கள் காணப்படுகின்றன.] (௫௧)

[மடலூரத்துணிந்த தலைமகளின் வழியொழுகித் தோழி இரங்கல்.]

௫௨. கைதலைப்பெய்தரும்பூசலிட்டுக்கவியாலுலகை
யுய்தலைச்செய்ததும்பொய்யென்றுமோசென்றவ்வூரறிய
வைதலைத்தேசதுமோகுருகூரென்னுமாறறியாப்
பைதலைக்கோதுகட்டிட்டேட்டிலேற்றியபண்பனையே.

(இ - ள்.) குருகூர் என்னும் ஆறு அறியா - (தலைமகனது ஊர்) 'குருகூர்' என்று வாயினாற்சொல்லும் விதத்தையும் அறியாதிருந்த, பைதலை - இளமையுடைய இம்மகளை, கோது உகட்டிட்டு ஏட்டில் ஏற்றிய - முறைகேடு தலைக்கேறிப் பனைமடற்குதிரையின்மேலேறுமாறுசெய்த, பண்பனை - குணத்தையுடையவனை தலைமகனை, சென்று - (அவனதூர்க்கு யாம்) சென்று, கை தலை பெய்து - கைகளைத் தலைமேல்வைத்துக்கொண்டு, அரும்பூசல் இட்டு - (பொறுத்தற்கு) அரிய பேராரவாரத்தைச்செய்து, கவியால் உலகை உய்தலை செய்ததும் பொய் என்றுமோ - (அக்குருகூர்நம்பி) தான்பாடியபாடல்களைக் கொண்டு உலகத்துஉயிர்களைத் துன்பந்தீர்த்து வாழுமாறு செய்தனனென்பதையும் பொய்யென்றுசொல்லி முறையிடுவோமோ? அ ஊர் அறிய வைது அலைத்து ஏசுதுமோ - அவ்வூரிலுள்ளாரனைவரும் அறியும்படி நிந்தித்துக்கலக்கம்விளைத்துப் பழிப்போமோ? (எ - று.)

தலைமகனும் தலைமகளும் கொடுப்பாரும் அடுப்பாரு மின்றித் தமது விருப்பத்தின்படி களவுப்புணர்ச்சி புணர்ந்து, பிரிந்த பின்பு அவ்வாற்றாமை விஞ்சி அதனால் நாணம்முதலியன அழிந்து, இவர்களுள் ஒருவர் மற்றொருவரது வடிவத்தையும் ஊரையும் பெயரையும், தமது ஊரையும் பெயரையும் ஒருபடத்திலெழுதி அச்சித்திரபடத்தைக் கையிற்கொண்டு பனைமடலினால் ஒருகுதிரையுருச்செய்வித்து அதன்மேல் தாம் ஏறி அதனைப் பிறராலிழுப்பித்து வீதிவழியே பலருங்கூடும் பொதுவிடங்களிலெல்லாஞ் செல்லுதலுண்டு; இது - மடலூர்தலெனவும், மடன்மாவேறுத லெனவும்படும். இதற்குப் பயன் - இவரது இக்கடுந்தொழிலைக்கண்டு அதனாற் பெருவேட்கையையுணர்ந்து உறவினராயினும் அரசராயினும் கூட்டுவிக்கக் கூடுதலாம். 'இம்மடற்றிறம்' ஆடவர்க்கே பெரும்பாலும் உரியது; அளவுக்குவிஞ்சின ஆசையின்மிகுதியால் மகளிர்க்கும் சிறுபான்மை வரும். அன்றியும், மடலூர்தல் ஆடவர்க்கே உரியதென்றும், மடலூர்வே னென்று சொல்லுதல் இருபாலார்க்கும் உரியதென்றும் உணர்க. இங்குக்கூறிய இது, தலைவியின் மடற்றிறம். மடலேறத்துணிந்த தலைமகளின் வருத்தங் கண்ட தோழி, அவளை வழியொழுகி ஆற்றுவிக்க வேண்டுஞ் சமயமாதலால், தானும் அவளோடு வருத்தமுற்றுக் கூறிய வார்த்தை, இச்செய்யுளிற் குறிக்கப்பட்ட விஷயம்.

கைதலைப்பெய்தல், முறைப்பாட்டுக்கு உரியது: "இறையோ கிடாரு கையு மெடுத் தெண்ணுற முறையோ, முறையோ வென" என்றார் பிறரும். பூசல் பேரொலி. 'கவியால் உலகை உய்தலைச் செய்தது' என்றதற்கு -

(முன்புஇராமாவதாரத்தில்) வானரங்களினுதவியைக்கொண்டு (துஷ்டநிக் ரகஞ்செய்து) உலகத்தை உய்வித்தமை யென்றும் பொருள் கொள்ளலா ஆழ்வார் திருமாலின் அம்சமுடையவ ராதலால். ஊர் - இடவாகுபெய பைதல் - இளமைப்பெயராதலை "சிறுகிளிப்பைதலே" என்ற திருவாய்மொ ழியிலுங் காண்க. கோகு உகட்டுதல் என்பது - "கும்பிடுநட்டமிட்டாடி கோகுகட்டுண்டுழலாதார்" எனத் திருவாய்மொழியிலும் இப்பொருளில் வ துள்ளது; கோகு - அடைவுகேடு; உகட்டுதல் - தலைமண்டையிடுதல், மேலி தல். 'ஏடு' என்றது - இலக்கணையாய், பனைமடலினாலாகிய குதிரையை குறித்தது. பண்பிலாதானைப் பண்பனென்றது, இகழ்ச்சிக்குறிப்பாகிய எதி மறையிலக்கணையுமாம்.

ஆழ்வாரதுஸாந்நித்தியத்தை எவ்வாற்றாலாயினும் பெறுதற்குவிரைந் முயல்கிற கம்பநாடர்பக்கல் பரிவுகொண்ட அன்பர்கள் இப்படி பரம பக் தலையெடுத்த அடியவர்க்கு ஆழ்வார் உடனே ஸாந்நித்தியந் தந்தருளா காலநீட்டித்தலைக் குறித்துக் குறைகூறும்வகையாற் கம்பநாடரை ஆற்றுதல் இதற்கு உள்ளுறைபொருளாம்; விவரம் உய்த்துணர்க. கம்பநாடர்க்கு முதல் லே பக்தியையுண்டாக்கி அதனை அபிவிருத்தியாம்படி செய்து அவரைப் பிரபந்தம்பாடும்படி செய்வித்தது ஆழ்வாரது திருவருளே யென்பது, 'குற் கூறென்னுமாறறியாப் பைதலைக் கோகுகட்டிட்டேட்டிலேற்றிய பண்பன் என்றதனாற்போதரும். கைதலைப்பெய்தல் - தலைமேற்கைவைத்து வணங்கு தலுமாம்.

(ந-அ)

ஙடகூ. பண்ணுந்தமிழுந்தவஞ்செய்தனபழநான்மறையு
மண்ணும்விசும்புந்தவஞ்செய்தனமகிழ்மாறன்செய்யு
ளெண்ணுந்தகைமைக்குரியமெய்யோகியர்ஞானமென்னுங்
கண்ணும்மனமுஞ்செவியுந்தவஞ்செய்தகாலத்திலே.

(இ - ள்.) மகிழ் - மகிழமலர்மாலையையுடைய, மாறன் - நம்மாழ்வார் அருளிச்செய்த, செய்யுள் - பாசுரங்களை, எண்ணும் - சிந்தனை செய்வதாகிய, தகைமைக்கு - பெருமைக்கு, உரிய - ஏற்ற, மெய் யோகியர் - உண்மையான ஞானபக்தியோகங்களையுடையவர்களுடைய, ஞானம் என்னும் கண்ணும் - அறிவாகிய அகக்கண்ணும், மனமும்—, செவியும் - காதுகளும், தவம்செய்த காலத்திலே—,—பண்ணும்-(குறிஞ்சிமுதலிய) பண்களும், தமிழும் - தமிழ்ப் பாஷையும், தவம் செய்தன—; பழ நால் மறையும் - பழமையான நான்கு வேதங்களும், மண்ணும் - பூலோகமும், விசும்பும் - மேலுலகமும், தவம் செய்தன—; (எ - று.)

ஆழ்வார் அவதரித்துத் திருவாய்மொழி முதலியன பாடியதற்குக் கார ணம், பண்முதலியன செய்த தவ மென்பதாம். வடமொழிமுதலிய மற்றைப் பாஷைகளிலன்றித் தமிழிலே பண்வகைகளமைய ஆழ்வார் பாசுரம்பாடப் பெற்றமை அப்பண்ணும்தமிழும்மிக்கசிறப்புப்பெறுதற்குக் காரணமாதலால், 'அவை தவஞ்செய்தன' என்றனரென்க. தொன்று தொட்டு உள்ள நான்கு வேதங்களும் வடமொழியிலே உணர்தற்கு அரிய மறைபொருளனவாயிருந்து ஒளிதிற்பயன்படாமற் போதலாகிய குறைதீர அறிதற்கு எளிய தென்மொ

ஞானத்தையுடைய. எம் மூர்த்தியை - எமது ஆசாரியமூர்த்தியான நம்மாழ்வாரை. காலத்திலே குருகூர் புக்கு கைக்கொண்மினோ - (பழுதேபலபகலு போக்காது) இப்பொழுதே திருக்குருகூர்க்குச்சென்றுசரண்புக்கு உய்யுங்கள்.

"ஆழ்வாரவதரித்தருளின காலம் முந்திப்போயிற்றே, இக்காலத்தில் என் செய்யலாம்?' என்பாரை, நாதமுனிகள்போல ஆழ்வார்திருநகரியிலேற சென்று ஆழ்வாரது அர்ச்சாவிக்கிரகத்தைப் பற்றிவழிபட்டு உய்வுபெறுங்கள் என்று உபதேசிக்கிறார். "சிற்றஞ்சிறுகாலேவந் துன்னைச்சேவித்து" என்றாற்போல, 'காலத்திலேபுக்குக் கைக்கொண்மின்' என்றார். ஆல் என், மரத்தின்பெயர், முதலாகுபெயராய், அதன் இலையைக் குறித்தது.

ஆலத்திலேதுயின்றகதை:—பிரமன்முதலான சகலதேவர்களு முட்பட யாவும்அழிந்துபோகின்ற கற்பாந்தகாலத்திலே ஸ்ரீமகாவிஷ்ணு அண்டங்களையெல்லாம் தன்வயிற்றில்வைத்து அடக்கிக்கொண்டு ஏகார்ணவமான மகாபிரளயசமுத்திரத்திற் சிறுகுழந்தைவடிவமாய் ஆதிசேஷாம்சமான ஆலிலையின்மீது பள்ளிகொண்டு யோகநித்திரைசெய்கின்றன னென்பதாம்.

அப்பெருமான் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனத்தின்பொருட்டுக் கற்பந்தோறும் உரியசமயங்களிற் கொள்ளுகிற மத்ஸ்யம் கூர்மம் வராகம் நரசிங்கம் வாமநன் பரசுராமன் தசரதராமன் பலராமன் கிருஷ்ணன் கல்கி என்ற தசாவதாரங்களின் ஸாரம் ஆழ்வார் என்பது, தேர்ந்தபொருள். ஐயிரண்டு - பண்புத்தொகை. மூட்டியஞானத்து - ஞானத்தைமூட்டிய எனினுமாம். எம்ஞானமூர்த்தி என்றுங் கொள்ளலாம். ஞானமாவது-முக்தியுணர்வு.

சக. மூர்த்தத்தினையிம்முழுவேழுலகுமுழுகுகின்ற
தீர்த்தத்தினைச்செய்யவேதத்தினைத்திருமால்பெருமை
பார்த்தற்கருளியபாரதத்தைப்பணித்தானுநின்ற
வார்த்தைக்குருகைப்பிரானுங்கண்டானம்மறைப்பொருளே.

(இ - ள்.) மூர்த்தத்தினை - ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தையும், இ முழு ஏழ் உலகும் முழுகுகின்ற தீர்த்தத்தினை - ஏழுவகைப்பட்ட இந்தஉலகங்களெல்லாம் அடங்குமிடமும் ஸ்வயம்பரிசுத்தமுமான பரப்ரஹ்மத்தினது தன்மையையும், செய்ய வேதத்தினை - செவ்வியையுடைய வேதங்களையும், திருமால் பெருமை பார்த்தற்கு அருளிய பாரதத்தை - ஸ்ரீமந்நாராயணனாகிய ஸ்ரீகிருஷ்ணன் சிறந்த உண்மைப்பொருளை (அருச்சுனனுக்கு) உபதேசிக்கப்பெற்ற [ஸ்ரீபகவத்கீதை தன்னில் அடங்கப்பெற்ற] மகாபாரதத்தையும், பணித்தானும் - சொல்லியருளியவனான ஸ்ரீவேதவியாசபகவானும், நின்ற வார்த்தை குருகை பிரானும் - நிலைபெற்ற திருவாய்மொழியாகிய திவ்விய சூக்தியையுடைய நம்மாழ்வாரும், (ஆகிய இருவருமே), அ மறை பொருள் கண்டான் - அப்படிப்பட்ட [உணர்தற்கு அரிய] இரகசியமான வேதங்களின் சாரார்த்தங்களை அறிந்தவர்கள்; (எ - று.)

இவ்விருவருமே உள்ளபடியுணர்வாரில் தலைவராயினரென்றபடி. "நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும், வித்தகர்க்கல்லா லரிது" என்றவிடத்தில் 'அரிது' என்பதனைத் தனித்தனி கூட்டியுரைத்தல்போல, இங்கு 'கண்டான்' என்பதையும் 'பணித்தானுங் கண்டான், குருகைப்பிரானுங்

கண்டான்' என்று தனித்தனி கூட்டி முடிக்க. 'கண்டார்' என்று பன்மையான பாடம் ஓதுவாரு முளர். வியாசமாமுனிவர் ஸ்ரீவாத்மபாராத்மஸ்வரூபங்களை வரையறுத்து உணர்த்துகிற வேதாந்த சூத்திரங்களைச் செய்து வெளியிட்டதும், வேதங்களை நான்காகவகுத்து ஒதுவித்ததும், பஞ்சமவேதமான மகாபாரதத்தைச் செய்து உபதேசித்ததும்பற்றி, 'மூர்த்தத்தினை..... பணித்தான்' என்றார். முழுவேழுலகு - சகலவுலகமாகிய பிரபஞ்சம். பார்த்தன் - வடமொழித் தத்திதாந்தநாமம்; பிருதையின் மகன்: பிருதை - குந்தி. நின்ற வார்த்தை - நிலைபெற்ற புகழுமாம். (௪௧)

[பொருள்வயிற்பிரியுந் தலைவனுக்குத் தோழி தலைவியினாற்றாமை கூறல்.]

௪௨. பொருளைச்சுவையென்றுபோவதெங்கேகுருகூர்ப்புனித
னருளைச்சுமந்தவள்கண்ணின்கடைதிறந்தாறுபட்டுக்
குருளைச்சுமந்துவெளிபாரந்தோட்டருங்கொள்ளைவெள்ள
முருளைச்சுடர்மணித்தேரையந்தோவந்துதைக்கின்றதே.

(இ - ள்.) குருகூர் புனிதன் அருளை சுமந்தவள் - திருக்குருகூர்க்குத் தலைவனும் பரிசுத்தனுமான தலைமகனது கருணையை மிகுதியாகப்பெற்றவளான தலைமகளினது, கண்ணின் கடை - கண்களின் நுனியிடத்தை, திறந்து - திறந்து அவ்வழியாகவெளிப்பட்டு, ஆறு பட்டு - நீராறாகி, குருளை சுமந்து வெளி பரந்து ஓட்டரும் - (பலவகை) விலங்கின்குட்டிகளை இழுத்து மேற்கொண்டு வெளியானஇடமெங்கும் பரவி ஓடுவதான, கொள்ளை வெள்ளம் - மிகுதியாகிய (கண்ணீர்ப்) பெருக்கானது, உருளை சுடர் மணி தேரை - சக்கரங்கள்பூண்டதும் ஒளிவீசும்இரத்தினங்கள் பதித்ததுமான (தலைமகனது) தேரை, அந்தோ - ஐயோ, - வந்து உதைக்கின்றதே - வந்துமோதுகின்றதே! (இங்ஙனமாக), பொருளை சுவை என்று போவது எங்கே - (தலைமகன்) செல்வத்தை இனியதென்றுஎண்ணி (அதன்பொருட்டு இவளைப் பிரிந்து) செல்வது எவ்வாறோ! (எ - று.)

தலைவன் தலைவியை மணஞ்செய்துகொண்டதன்பின்பு பிரியும் பிரிவு, ஆறுவகைப்படும்; ஓதற்பிரிவு, காவற்பிரிவு, பகைதணிவினைப்பிரிவு, வேந்தற்குற்றுழிப்பிரிவு, பொருள்வயிற்பிரிவு, பரத்தையிற்பிரிவு என: அவற்றில், இங்கு எடுத்துக்கொண்டது, பொருள்வயிற்பிரிவு; அதாவது - பொருளீட்டுதல் காரணமாகப் பிரியும் பிரிவு: தாதை முதாதை முதலிய தன்முன்னோராற் படைக்கப்பட்ட பொருள்கொண்டு இல்லறஞ்செய்தால் அதனால்வரும் பயன் அவர்க்குஆம்அத்துணையல்லது தனக்குஆகாமையால் தனதுபொருள் கொண்டு இல்லறஞ்செய்தற்காகப் பொருள்தேடுதற்பொருட்டுச் செல்வம் நிறைந்த தலைமகன் பிரிந்துசெல்லநினைக்க; அங்ஙனம்பிரியக்கருதிய தலைவன் தனதுபிரிவைத் தானே தலைவிக்கு உரைத்தலரிதென்று கருதித் தோழியைநோக்கி, 'நீ அவட்கு உணர்த்துமாற்றா லுணர்த்து' என்றுசொல்ல, அங்ஙனம் தோழிஉணர்த்தியவளவிலே, அதுகேட்டதலைவி மிகவருந்தி ஆற்றாது கண்ணுங் கண்ணீருமாய் மிகுதியாகப்புலம்ப, அவ்வருத்தங்கண்ட தோழி தலைவனிடம் வந்து அத்தலைவியின் பிரிவாற்றாமையைக் கூறுதல், இச்செய்யுளிற் குறிக்கப்பட்ட விஷயம். மெய்ப்பாடு - இளிவரலைச்சார்ந்த பெரு

மிதம்; பயன்-தலைமகனைச் செலவழுங்குவித்தல்; விரைந்துமீண்டுவரக்குறிப்பித்தலுமாம்.

'குருகூர்ப்புனிதனருளைச் சுமந்தவள்' என்றது, முன்னிலைப்படர்க்கை 'குருகூர்ப்புனிதன் போவதெங்கே' என்றுகூட்டி. அதனையும் அங்ஙனம் வந்த திணைவழுவமைதி யெனக் கொள்ளலாம். இனி, 'புனிதன்' என்றதை இயல்பாகிய அண்மைவிளி யெனினும் அமையும்; (திருக்கோவையாரிலே பொருள்வயிற்பிரிவில் ஆற்றாமைகூறலென்னுந் துறைக்கு இலக்கியமான செய்யுளில் "மலர்க்கண்கள் முத்தம்வளர்க்கும். தேனக்கதார்மன்ன னென்னே விளிச்சென்றுதேர்பொருளே" என்றவிடத்து, பேராசிரியர் 'மன்னனென்பது, ஈண்டு முன்னிலைக்கண் வந்தது: இயல்புவிளி யென்பாரு முளர்' என்றமை காண்க.) தலைவனது தலையளியை நிரம்பப்பெற்றவ ளென்பது, 'புனிதனருளைச் சுமந்தவள்' என்றதன் பொருள். 'கண்ணின்கடை திறந்து ஆறுபட்டுக் குருளைச்சுமந்து வெளிபரந்து ஓட்டருங் கொள்ளை வெள்ளம்' என்றதும், 'தேரைவந்து உதைக்கின்றது'என்றதும்-அதிசயோக்திவகையாற் கண்ணீர்ப்பெருக்கின் மிகுதியை வருணித்தவாறும். ஆறுபட்டு - நதிபோன்று. (பிணைமுகக்களியானை பன்மாக்களோடு அணிவகுத்தென ஈர்த்து" என்றபடி) யாற்றுவெள்ளம் தான்வருகிற மலை காடு முதலிய வழிகளி லுள்ள விலங்குகளை இழுத்துவரு மியல்பைக் கண்ணீர்ப்பெருக்கைச் சிறப்பிக்கும் அடைமொழியாக்கி, 'குருளைச்சுமந்துவெளிபரந்துஓட்டருங்கொள்ளைவெள்ளம்' எனப்பட்டது.

'குருளை' என்ற இளமைப்பெயர் - நாய்முதலியவற்றின் குட்டிக்கு உரியதாதலை "நாயே பன்றி புலி முயல் நான்கும், ஆயுங்காலைக் குருளையென்ப", "நரியும் அற்றே நாடினர் கொளினே" என்ற தொல்காப்பியச் சூத்திரங்களா லுணர்க. இரண்டாம்வேற்றுமைத்தொகையாதலால் 'குருளைசுமந்து' என வரற்பாலது, எதுகைநயம்நோக்கி 'குருளைச்சுமந்து' என விரித்தலென்னுஞ் செய்யுள்விகாரம் பெற்றது. 'ஓட்டந்தரும்' என்பது, 'ஓட்டரும்' என்று விகாரப்பட்டது; (ஒட்டக்கெதிரா நீ யாரென" என்ற கம்பராமாயணத்திலும். "உள்ளமுருகியென்கொங்கையோட்டந்துபாய்ந்திடுகின்ற" என்ற பெரியார் திருமொழியிலும் 'ஓட்டந்தந்து' என்பது, 'ஓட்டந்து' என்று விகாரப்பட்டு வந்தமை காண்க.) உருள்வது உருளை யெனக் காரணக்குறி. பொருளைச் சுவையென்று-"வறியார் இருமையறியார்," "இல்லார் இருமையும் நல்ல எய்தார்," "அரனீனும் இன்பமுமீனும் திறனறிந்து, தீதின்றிவந்தபொருள்." "பொருளாமிரண்டும்பெறலாகும்" என்று பொருளின் இன்றியமையாமையையும் பயன்களையும் பாராட்டி அதனிடத்துவிருப்பம்வைத்து என்றபடி. 'உருளைச்சுடர்மணித்தேரைவந்துஉதைக்கின்றது' என்றதன் உட்கோள், பிரயாணத்துக்குத் தடைசெய்கின்ற தென்பது.

கம்பநாடர்பக்கல் கருணைகொண்டு அவர்க்குக் காட்சிதந்த ஆழ்வார் அங்ஙனமே ஸதாஸாந்நித்தியந்தராமற் பரம்பொருளை நாடித் திவ்வியதேச யாத்திராபேக்ஷையுடையராய் நின்ற நிலையில் அப்பிரிவைஆற்றாது வருந்திய கம்பநாடரது நிலையை அன்பர்கள் ஆழ்வார்பக்கல் விண்ணப்பஞ்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள்; விவரம் தேர்ந்துணர்க. (சஉ)

[மருங்கிளைத்தல்.]

சகூ. வந்தடிக்கொண்டனகொங்கைகண்மாறன் குருகைவஞ்சி
கொந்தடிக்கொண்ட குழலுங்கலையுங்குலைந்தலையப்
பந்தடிக்குந்தொறுநெஞ்சம்பறையடிக்கின்றதென்றாற்
செந்தடித்தன்னமருங்கிற்குண்டோ நிற்குஞ்சிக்கனவே.

(இ - ள்.) மாறன் குருகை வஞ்சி - சடகோபருடைய திருக்குருகூரிலே யுள்ள வஞ்சிக்கொடிபோல் மெல்லிய இந்த இளமாதினிடத்து, கொங்கைகள் வந்து அடிக்கொண்டன - தனங்கள் மங்கைப்பருவத்தோன்றலாக எழுந்து மார்பினிடமெல்லாம் தம்மிடமாகக் கொண்டன; (இப்பருவம் தோன்றியத னால்), கொந்து அடிக்கொண்ட குழலும் கலையும் குலைந்து அலைய பந்து அடிக்கும் தொறும் நெஞ்சம் பறை அடிக்கின்றது - பூங்கொத்துக்கள் நிரம் பச்சூட்டப்பெற்ற கூந்தற்பாரமும் உடுத்தஆடையும் நிலைகுலைந்துசோரு (இம்மெல்லியலாள் பந்தடிக்கும்பொழுதெல்லாம் இவளிடைந்து என்றொ மோ வென்று) என்மனம் பறையடிக்கின்றதுபோலப் படபடவென்று துடி துடிக்கின்றது; என்றால் —, செம் தடித்து அன்ன மருங்கிற்கு நிற்கும் சிக்க னவு உண்டோ - செவ்விய மின்னலைப்போன்ற இவளிடைக்கு (இப்பாரங்க ளைச்சுமந்து துவளாது) நிற்கும் வன்மை உளதாமோ? (எ - று.)

இயற்கைப்புணர்ச்சி பாங்கற்கூட்டம் இவற்றின்பின்னர்ப் பாங்கியிற் கூட்டத்தால் இரவுக்குறியிலே தலைவன் தலைவியைத் தனியிடத்திற் சந்தித் துச் சிலஅன்புமொழிபேசும்போது அவள் பெருநாணினளாதலால் அவன் முன்நிற்கமாட்டாது நாணித் தலைவணங்கி வருந்தாநிற்க, தலைவன் தனது மிக்கஆதரவினால் அவ்வருத்தந் தணிப்பான்போன்று முலையொடு முனிந்து அவளிறு மருங்குல் தாங்கி நெருங்கித் தழுவுபவனாய் அவளது இடையின் மென்மையையும் தனபாரத்தையும்பற்றிக் கவன்று உரைக்கிற வியாஜத்தால் தன்காதன்மிகுதி புலப்படச்சொல்லும் சிலவார்த்தை. இச்செய்யுளிற்குறித்த பொருள். மெய்ப்பாடு - உவகை; பயன் - தலைமகளைச்சார்தல். தலைமகள் அவ்வகை நின்றமை கண்ட தலைமகன் இவ்வகைசொல்லிச் சார்ந்தானென் பது. இத்துறை - தணிகைப்புராணத்தில் 'வாடிடை நோக்கி வருந்தினன் போல, ஆடமைத்தோளியை யார்வமோடணைதல்' என்ற பெயரால் குறிக்கப் பட்டுள்ளது; மெய்தொட்டுப்பயிறலும் இத்தன்மைத்தே.

'மாறன்குருகைவஞ்சி' என்றது - முன்னிலைப்படர்க்கை. வஞ்சி - உவ மையாகுபெயர். கொந்து = கொத்து: இங்ஙனம் மெலித்தல்விகார மென்ன லாம். நெஞ்சம் பறையடிக்கின்றது - "இருவர்மாமனமும் பறையறைந்தயர் வுடன்நடுங்க" என்ற வில்லிபுத்தூரார்பாரதங் காண்க. செம் தடித்து - செந் நிறமான மின்னல் எனினுமாம்.

ஆழ்வார்பக்கல் ஆதரத்தால் அவரருகில் வந்த பாகவதர், அவரது பக்தி வளர்ச்சியையும் பிரேமம் முதலிய முயற்சிகள் நிலைகுலையும்படி நேர்கிற பிரபஞ்சபோகலீலைக்கு அவர் உரியரல்லாமையையும் அவரது வைராக்கியத் தின் முதிர்ச்சியையும் பாராட்டிக்கூறும் வார்த்தை. இதற்கு உள்ளுறை பொருள். ஸ்வாபதேசத்தில், கொங்கை - பக்தி; பகவத்பாகவதரைச் சேர்ந்து

அநுபவித்தற்கு உபகரணமானதென்க. வந்து அடிக்கொள்ளுதல், அதன் முதிர்ச்சி; அதாவது - பேற்றுக்குச்சாதனமான பரமபக்தியாகப் பரிணமித்தல். கொத்தடிக்கொண்ட குழல் - விதிமுறைப்படிசெய்யும் பிரணயம். கலை- "மடிதற்றுத்தான் முந்துறும்" என்றபடி அரையில் ஆடையை இறுக உடுத்துக்கொண்டு முந்துற்றுச்செய்யும் முயற்சி. இவைகுலையும்படி பந்தடித்தல்- பிரபஞ்சபோகலீலை தன்வசப்படுத்துவதாக மோதுதல். அதற்கு அவருரிய ரல்லரென்பது, 'நெஞ்சம் பறையடிக்கின்றது' என்றதனுல் விளக்கப்பட்டது. ஈற்றடி - பக்திகாரியமான வைராக்கியத்தின் முதிர்ச்சியைத் தோற்றுவிக்கிறது; 'இடையழகென்பது, ஒன்றும்பொருந்த வைராக்கியத்தை' என்பர் அழகிய மணவாளசீயர்: அன்றி, வேறொன்றன் தொடர்ச்சி யுண்டானுல் இடையே கெடும்படியான இடையறுத அன்பின் மேன்மையைச் சொல்லியதுமாம். விவரம், விரிப்பிற் பெருகும்; கேட்டுணர்க.

இனி, இச்செய்யுட்குத் துறையும் பொருளும் உள்ளுறை பொருளும் பிறவாறு உரைக்கவுங்கூடும். கல்வியிற்பெரியராய கம்பர் இயற்றிய கம்பசூத்திர மெனத்தக்க அருஞ்செய்யுள்களின் ஆழ்பொருள்களை நுண்ணிதாக உரைப்பான்புகின் வரம்பின்றிப் பெருகுமென்பது, வெளிப்படை. (சரு)

சச. கனவாயினவுந்துரியமுமாயவையுங்கடந்து
மனவாசகங்களைவீசியமாறனைமாமறையை
வினவாதுணர்ந்தவிரகனைவெவ்வினையைத்தொலைத்த
சினவாரணத்தைக்குருகைக்கரசனைச்சேர்ந்தனமே.

(இ - ள்.) கனவு ஆயினவும் - சொப்பனுவஸ்தையின் வகைகளையும், துரியமும் - துரியாவஸ்தையையும், ஆயவையும் - மற்றும் அவற்றிற்கு இனமான ஜாக்ராவஸ்தை ஸுஷுப்தியவஸ்தை என்றவைகளையும், கடந்து—, மன வாசகங்களை வீசிய - மனோவாக்குகளைக்கடந்த, மாறனை - மாறனென்னுந் திருநாமமுடையவரும், மா மறையை வினவாது உணர்ந்த விரகனை - சிறந்தவேதங்களை (எவரிடத்துங்) கேளாமல் (தாமே எம்பெருமானருளால்) அறிந்த ஞானவிசேஷத்தையுடையவரும், வெவ்வினையை தொலைத்த சினம் வாரணத்தை - கொடியகருமமாகிய கட்டுத்தறியை முறித்தொழித்த கோபமுடைய யானை போன்றவரும், குருகைக்கு அரசனை - திருக்குருகூர்க்குத் தலைவருமான நம்மாழ்வாரை, சேர்ந்தனம் - சரணமடைந்தோம்; (எ - று.)

'ஆழ்வார்திருவடிகளே சரணம்' என்றபடி, அநாதிகாலமாய் எண்ணிறந்த பலபிறப்புக்கள்தோறும் மாறிமாறித் திரிந்த நாம் இன்று ஆழ்வாரைச் சேர்ந்து உய்யப்பெற்றோம் என்ற ஆநந்தாதிசயத்தாலும், ஆழ்வார் செய்தருளிய உபகாரங்களையுணர்ந்து அவரைவணங்கிக் கடமைசெலுத்தினேமென்ற மகிழ்ச்சியினுலும், இங்ஙனங் கூறினர். ஜாக்ரம், ஸ்வப்நம், ஸுஷுப்தி, தூர்யம், தூர்யாதீதம் என்று அவஸ்தை ஐந்து வகைப்படும். ஜாக்ரம் - விழிப்பு நிலை. ஸ்வப்நம் - கனுநிலை. ஸுஷுப்தி - மனமொடுக்கம்: அயர்ந்த தூக்கம். தூர்யம் - உயிரொடுக்கம், சமாதி, ஆத்மா தன்னைத் தான் காணுதல். தூர்யாதீதம் - ஜீவாத்மா ஒடுங்கிப் பரமாத்மாவைத் தரிசித்து ஆனந்தத்திலழுந்தி நிற்கும் நிலை. மதபேதத்தால் இவற்றைப் பிறவாறு உரைத்தலும் உண்டு.

அவற்றையெல்லாம் பரந்த நூல்களிற் கண்டுகொள்க. 'கனவாயினவுந்துரிய முமாயவையுங் கடந்து' என்றது - ஜாக்ரம் ஸ்வப்நம் ஸுஷுப்தி துரியம் என்ற நான்கு நிலைகளையுங் கடந்த துரியாதீத நிலையிலே நின்ற என்றபடி. 'மனவாசகங்களை வீசிய' என்றது - மனமும் சொல்லும் பிறபல விஷயங்களிற் செல்லுந் தன்மையைப் போக்கி அவற்றை எம்பெருமான் பக்கலிலே யே உபயோகித்த என்றபடி; அகக்கரணத்தையும் புறக்கரணத்தையும் வென்ற என்க. 'வெவ்வினையைத் தொலைத்த சினவாரணம்' என்றதில் 'சடகோபன்' என்ற திருநாமத்தின் பொருள் தோன்றும். கனவாயினவும் துரியமும் ஆய் அவையும் கடந்து என்று பிரித்து, எல்லா நிலைமைகளிலும் பரப்ரஹ்ம மயனாய் என்று உரைத்தலும் ஒன்று. மாமறையை வினவாது உணர்ந்த வீரன் - மயர்வறமதிநலம் அருளப்பெற்றவர். மனவாசகங்கள் - பன்மை விகுதி பெற்ற அஃறிணை யும்மைத்தொகை. தூர்யம் அல்லது துரீயம் - வடசொல்: நான்காவது நிலை என்று பொருள்; இதற்கு மேம்பட்டது துர்யாதீத மென்க. (சச)

சரு. சேராதனவுளவோபெருஞ்செல்வர்க்குவேதஞ்செப்பும்
பேராயிரந்திண்பெரும்புயமாயிரம்பெய்துளவத்
தாரார்முடியாயிரங்குருகூர்ச்சடகோபன்சொன்ன
வாராவமுதங்கவியாயிரமவ்வரியினுக்கே.

(இ - ள்.) அ அரியினுக்கு - அந்த ஸ்ரீமந்நாராயணனுக்கு,—வேதம் செப்பும் பேர் ஆயிரம் - வேதங்கள் கூறிய திருநாமங்கள் ஆயிரமாம்; திண் பெரும் புயம் ஆயிரம் - வலிய பெரிய தோள்கள் ஆயிரமாம்; பெய் துளவம் தார் ஆர் முடி ஆயிரம் - சாத்திய திருத்துழாய்மாலை பொருந்திய திருமுடிகள் ஆயிரமாம்; (இப்படி எல்லாம் ஆயிரமாகவே அமையப் பெற்றுள்ள எம்பெருமானுக்கு), குருகூர் சடகோபன் சொன்ன ஆரா அமுதம் கவி ஆயிரம்- திருக்குருகூரிலவதரித்த நம்மாழ்வார் பாடிய தெவிட்டாத அமிருதம் போன்ற பாசுரங்கள் ஆயிரமும் அமைந்தன; பெருஞ் செல்வர்க்கு சேராதன உளவோ - மிக்க செல்வமுடையார்க்கு மற்றுஞ்சேராதபொருள்களும் உண்டோ? [இல்லை யென்றபடி;] (எ - று.)

பேர் புயம் முடி என்பவற்றை ஆயிரமாயிரமாகவுடைய எம்பெருமானுக்கு ஆழ்வாரருளிச்செய்த திருவாய்மொழிப்பாசுரம் ஆயிரமும் வாய்த்தன வென்ற சிறபுப்பொருளை, பெருஞ்செல்வர்க்கே மேன்மேற் பொருள் சேரு மென்ற பொதுப்பொருள்கொண்டு விளக்கியதனால், **வேற்றுப்பொருள் வைப்பணி.** பேர் ஆயிரம் - ஸஹஸ்ரநாமம். "புரமாயிரம் திருக்கண்மலரா யிரம் புண்டரிகக், கரமாயிரம் கழற்கான்மலராயிரம் கண்ணிமுடிச், சிரமா யிரம் திருநாமமுமாயிரம் செய்யசெய்யவெயிர, வரமாயிரங் கொண்ட திண்டிறலாழி யரங்கருக்கே" என்ற திருவரங்கத்துமாலைச்செய்யுள் இங்கு உணரத்தக்கது. இங்கே 'ஆயிரம்' என்பது, அளவில்லாத தென்னும் பொருளது: அங்ஙனங் கொள்ளாவிடின், புயமாயிரமும்: முடியாயிரமும் சேராவாம. ஆகவே, அளவற்ற கைமுதலிய சகலஅங்கங்களையுமுடையவ னென்பதாம்: அபரிமிதமாய் அற்புதமாயிருக்கிற மகாஞானமும் மகாசக்தியுமுள்ளவன் எம்பெருமானென்

பது தேர்ந்தபொருள். பெருமான் சகல இந்திரியங்களாலே யாதல் ஓர் இந்திரியத்தாலேயாதல் திருமேனியாலேயாதல் திவ்யாத்ம ஸ்வரூபத்தாலே யாதல் எல்லாவற்றையும் எப்போதும் எல்லாவிதத்திலும் அறிகின்றவனும் செய்கின்றவனுமா யிருக்கின்றானென்பது முக்கியமானகருத்து. இங்ஙனமேயன்றி, அநேகம்திருமுடிகள் திருக்கைகள் திருக்கண்கள் திருவடிகள் முதலான அவயவங்களாற் செறிந்திருக்கின்றான் பகவானென்பது கருத்தன்று. அளவில்லாத கண்முதலியவற்றை யுடையவன் எப்படி அளவில்லாத காட்சி முதலானவற்றை யுடையவனாயிருப்பனோ அப்படியே பகவானும் என்று எடுத்துக்காட்டினபடியாம். மற்றும், விசுவரூபங்காட்டுகிற சமயங்களில் மாத்திரம் எம்பெருமான் பல அவயவங்களைக் கொள்ளுதலு முண்டு. இங்குச் சிலர் உலகமெல்லாம் பகவானுடைய சொரூபமாதலாலே உலகத்திலுள்ளோருடைய முடி புயம் முதலியனவையெல்லாம் அவனுடையவையாமெனக் கருத்துக்கூறுவர்; அது பலவிதத்திலும் பொருந்தா தென அறிக. இது, திவ்வியாத்மஸ்வரூபம் கூறியபடி. ஆரா அமுதம் - உண்ணஉண்ணத் தெவிட்டாத [போதுமென்னுந் திருப்தியை யுண்டாக்காத] அமுதம். (சரு)

[தோழி இரங்கல்.]

சசு. அரிவளைபொன்மகிழாயிழைக்கீயுங்கொலந்திவந்து
முரிவளைமுத்துஞ்சினையுமயங்கமுறைசெறுத்து
வரிவளையும்மன்னமுந்தம்மிலேவழக்காடவலம்
புரிவளையூடறுக்குங்குருகூரெம்புரவலனே.

(இ - ள்.) முரி வளை முத்தும் - வளைந்த சங்கினாற் பெறப்பட்ட முத்தும் சினையும் - (அன்னப்பறவையீன்ற) முட்டையும், மயங்க - (நீர்த்துறையிலே) கலந்து மாறுபடினவாக, (அவற்றைக்குறித்து), வரி வளையும் அன்னமும் - உட்சுழியையுடைய சங்கும் அன்னப்பறவையும், முறை செறுத்து தம்மிலே வழக்கு ஆட - (ஒன்றன்பொருளை மற்றொன்று தனதென்று மயங்குதலால்) நீதிமுறைகடந்து தமக்குள்ளே [ஒன்றோடொன்று] வழக்கிட, வலம்புரி வளை ஊடு அறுக்கும் - வலம்புரிச்சங்கு சென்று நடுநின்று அவற்றின்போரை விலக்குதற்கிடமான, குருகூர்-திருக்குருகூரில் தோன்றிய, எம் புரவலன் - எமது தலைவன், அந்தி வந்து - (இன்றை) மாலைப்பொழுதில் மீண்டுவந்து, அரி வளை பொன் மகிழ்-வண்டுகள் சூழ்ந்து மொய்க்கப்பெற்ற அழகிய தனது மகிழம்பூமாலையை, ஆயிழைக்கு ஈயும் கொல் - தேர்ந்தெடுத்தணிந்த ஆபரணங்களையுடையவளான இம்மடமங்கைக்குக் கொடுத்தருள்வனோ? (எ - று.)

மணந்து பிரிந்த தலைவனது பிரிவை யாற்றாது வருந்திய தலைவியின் நிலைமை கண்டு தோழி இங்ஙனம் இரங்கிக்கூறின ளென்க. பிரிந்த நிலையிலே தலைவி தலைவனது மலர்மாலையைப் பெற்றாயினும் மகிழக்கருதியதனைக் குறித்து, 'மகிழ் ஈயுங்கொல்' என்றது. இது, தனதுமாலை இவளுடம்பிற் படும்படி கலவியின்பத்தைத் தந்தருள்வனோ வென்ற குறிப்புமாம்; இடக்கரடக்கலின்பாற்படும்; அன்றி, ஒளியையுடைய வளையையும் பொன்போல விரும்பப்படுகிற அருமையான மகிழ்ச்சியையுந் தருவனோ வென்றலுமொன்று; பிரிந்தகாலத்திலே கைவளைகழலுமாறு தலைவிக்குநேர்ந்த உடல்

மெலிவு மீண்டுவந்து கலந்தவளவிலே தணிதலால் அவ்வளை கழலாதவாறு மகிழ்ச்சியால் உடல்பூரிக்கச்செய்வனே யென்பது தாற்பரியம். அரி வளை - (தான்) கவர்ந்த வளை எனினுமாம்; ஹரித்தல்-கவர்தல்: தன்பிரிவு தலைவியி னுடலை மெலிவித்து வளைகழலுமாறு செய்தது பற்றி 'அரிவளை' என்றதெனக் கொள்க. பொன்மகிழ் - பொன்நிறமான மகிழமலர் என்றும் பொருள்படும். ஆயிழை - தலைவனுக்கு மகிழ்ச்சிவிளைத்தற்பொருட்டுச் சிறந்த அணிகலங்களைத் தெரிந்தெடுத்து அணிந்து தலைவன் குறித்தகாலத்திலே மீண்டு வருவதை எதிர்நோக்கி நிற்கின்றவளென்றபடி. 'அந்திவந்து' என்றதைப் பின்தின அடிகளில் வரும் நாட்டவருணனையோடு சேர்த்து, மகிழ் சயுஞ் சொல் - மகிழமலர்மாலையை (இவட்குத் தாரகமாகக் கொடுத்தனுப்புவனே யென்று பொருள் கொள்வாரு முளர்; அவர் 'அந்திவந்து' என்பதற்கு - அந்திப்பொழுது வந்ததனு லென்று உரைப்பர்.

சங்குஈன்ற முத்தும், அன்னப்பறவையீன்ற முட்டையும் வடிவிலொப்புமையுடைமையால், அவற்றை மாறுடிச் சங்கும் அன்னமும் வழக்கிட்டன வென்க; மயக்கவணியின் பாற்படும்; வழக்காவது - ஒருபொருளைத் தனித் தனியே எனதுஎனது என்றிருப்பார் அதுகாரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருளின்மேல் தொடர்வது; வியவகாரம். சங்கும்அன்னமும் போராடி நிற்கையில் இவ்விரண்டும் மதிக்கத்தக்க பெரிய வெண்மையான வடிவமுடைய வலம்புரிச்சங்கு அவை அஞ்சி அகலும்படி அவற்றின்நடுவிற் சென்றதையே, மத்தியஸ்தனாய்நின்று வழக்குத்தீர்த்ததாகக் குறித்தார். வலம்புரி - வலப்பக்கமாக உட்சுழிந்திருக்கும் உத்தமசங்கம். சங்குகளில் இதற்குள்ள தலைமையை "இப்பியாயிரமே சூழ்ந்ததிடம்புரியென்றகூறும், ஒப்பில் சங்கா யிரஞ்சூழுறும் வலம்புரியென்றோதும்" என்ற நிகண்டினாலும் உணர்க. எம் புரவலன் - எம்மைப் பாதுகாத்தலில் வல்லவன். தலைவிக்குந் தனக்குமுள்ள ஒற்றுமையால், தோழி, 'எம்புரவலன்' என்றாள்; தலைவியைப் பாதுகாத்தலையே தன்னையும் பாதுகாத்தலாகக் கருதுந் தன்மையன்.

ஆயிழை - வினைத்தொகை யன்மொழி. அந்தி - ஸந்த்யா; இரவொடு பகல்கூடும் பொழுதாகிய காலைச்சந்திக்கும் பகலொடு இரவுகூடும் பொழுதாகிய மாலைச்சந்திக்கும் பொதுவான இச்சொல், இங்கு, சிறப்பாய், மாலைப் பொழுதை யுணர்த்திற்று. அது பிரிந்தார்க்கு வருத்தத்தை மிகுவிக்குங் காலமும் பிரிந்து வெளிச்சென்ற ஆடவர் மீண்டுவருவதற்கு உரிய காலமு மாதல் பற்றி, 'அந்தி வந்து ஈயுஞ்சொல்' என அக்காலத்தில் வருதல் வேண்டப்பட்டது. முரி - மூரிஎன்பதன் விகாரம்; இதனை முத்துக்குக்கூட்டி 'பெரிய முத்து' எனக் கொள்ளுதல் ஏற்கும். சங்கிற்கு 'வளை' என்பது, உட்சுழிந்திருத்தல்பற்றிவந்த காரணக்குறி. செறுத்தல் - அடக்குதல். எங்கேனும் தடுமாற்றத்தினுற் குழப்பமுண்டானுல் அதனை அங்குச்சென்றுநின்று தீர்க்குந் தன்மையனான தலைவனென்பது, நாட்டவளங்காட்டவந்த அடைமொழியினுற் போந்த பொருள்; இங்ஙனம் கூறினது, ஊடலைப்பிரிவினுன் இது பகைதணிவினைப்பிரி வென்பதைக் காட்டும். அஃதாவது—'இருவர் அரசர் தம்மிற்பொருப என்றவிடத்து அவரைச்சந்து செய்வித்தற்குப்பிரியும் பிரிவு.

தூதுவர்போலச் சந்துசெய்வித்தற்குப் பிரியு மென்பதன்று: இருவர் அரசர் நாளைப்பொருதும் இன்றுபொருது மென்றிருந்த நிலைமைக்கண் தான் அரு ளரசனாகலின் இம்மக்களும் இவ்விலங்குகளு மெல்லாம் பட இவ்விரண்டு குலத்திற்கும் ஏதம் நிகழும்: அதனால் இப்போரொழிப்பனென்று இருவரை யும் இரந்து சந்துசெய்வித்தலு மொன்று; அல்லதூஉம். தேவரும் அசுரரும் அமர்செய்த காலத்துத் தேவர்களையும் அசுரர்களையும் ஒருவீர் ஒருவீர் மிக்காரை ஒறுப்பல் யானெனப் பாண்டியன் மாகீர்த்தி சந்துசெய்வித்தது போல், இருவரின் மிக்குச் செய்தீரை யொறுப்பலென்று சந்துசெய்வித்தலு மொன்று: இருவரையும் ஒறுக்குந்துணை ஆற்றலுடையனாகலா னென்பது; அங்ஙனமாயின் தன் அகத்து இருந்துவிட அமையாதோ? அன்ன ஆற் றலனாகலான். தான் செல்லவேண்டுமோ? எனின்,—செல்ல வேண்டும்: என்னை காரணமெனின், காதலரைப்பிரிந்து ஒருகருமமுடிப்ப அதனின்மிக்க ஆள்வினையில்லை யென்பது; ஆதலாற் பிரிந்தே சந்துசெய்விக்கு மென்பது' என்ற இறையனாரகப்பொருளுரை வாக்கியங்களைக் காண்க. சங்கும், அதிற் சிறந்த சாதியான வலம்புரியும், தாமரையை விரும்புந் தன்மையதான அன் னப்பறவையும், நீர்வளஞ்சிறந்த விடத்திலேயே பயிலும்.

தியானநிலையில் நின்ற கம்பநாடரது அகக்கண்ணுக்கு ஆழ்வார் புல னாகி மறைந்தவளவிலே அவரது ஸதாஸாந்நித்தியத்தை யபேக்ஷித்துப் பிரி வாற்றாமையால் வருந்துகிற கம்பநாடருடைய துயரத்தை நோக்கிய அன்பர் கள் ராஜஸதாமஸ காரியங்களைப் போக்கிச் சாத்துவிககாரியத்தையே நிலை நிறுத்துபவரும் திவ்வியதேசத்திலவதரித்து அங்கேயே வாசஞ்செய்பவரும் அடியார்களைப் பாதுகாத்தலையே தமக்கு ஸ்வரூபமாக வுடையவருமான நம் ஆழ்வார் இக்கம்பநாடர்க்கு உரிய சமயத்தில் வந்து தமது இனிமையைத் தந்து தலையளிசெய்யவேணுமென்று ஆதரத்தோடு கூறிய வார்த்தை;இதற்கு உள்ளுறைபொருள். அரிவளை பொன் மகிழ்=ஸாரக்ராஹிகள் மிகவிரும்பி விடாது சூழப்பெறுவதான தமதுகாட்சியின்பம்: ஆயிழை= ஆழ்வார்திருவுள் ளத்தை மகிழ்விக்கும்படியான சற்குணபூர்த்தியுடையவர்; நல்லோர்க்கு நற் குணமே ஆபரணமாம். அந்திவருதல்=உரியசமயத்தில் உபேக்ஷியாதுவருதல். (இது. தொகுத்துச்சுட்டல். வகுத்து உணர்ந்துகொள்க.) (சகூ)

[தலைவி கடலைநோக்கித் தேர்வழிதூர லேன்றல்.]

சஎ. புரைதுடைத்துப்பெரும்பொய்புந்துடைத்துப்பிறர்புகலு
முரைதுடைத்தங்குள்ளஊசறுடைத்தெம்முறுபிறவித்
துரைதுடைத்தாட்கொண்டதொண்டர்பிரான்றுறைநீர்ப்பொருநைக்
கரைதுடைக்குங்கடலேதுடையேலன்பர்காற்சுவடே.

(இ - ள்.) புரை துடைத்து - (ஐம்பொறிகளாலுண்டாகிற) குற்றங்க ளைப் போக்கி, பெரும் பொய்யும் துடைத்து - (அவற்றிற்கெல்லாம் மூலகா ரணமாகிற) பெரும்பொய்யாகிய மகாமாயையையும் போக்கி, பிறர் புகலும் உரை துடைத்து - பரசமயத்தார் சொல்லும் வாதங்களைப் பொருந்தாமை காட்டிக் கழித்து; அங்கு உள்ள ஊசல் துடைத்து - அவ்வாறு பரதத்துவ நிர் ணயஞ்செய்கிற விஷயத்திலுண்டாகிற தடுமாற்றத்தையுந்தீர்த்து, எம் உறு

பிறவி துறை துடைத்து ஆட்கொண்ட - விதிவசத்தால் எமக்குநேரும் பிறவித்துன்பத்தின் விரைவைத்தடுத்து எம்மைஅடிமைகொண்டருளிய, தொண்டர் பிரான் - (திருமாலின்) மெய்யடியார்கட்குத் தலைவரான நம் ஆழ்வார்க்கு உரிய, துறை - திருமஞ்சனத்துறைமுகத்தையுடைய, நீர் பொருநை-நீரான் மிக்க தாமிரபர்ணிநதி, கரை துடைக்கும் - (கடலைநோக்கித் தான் பெருவெள்ளமாகவரும் விசையினாற்) கரையை உடைக்கப்பெற்ற, கடலே—! அன்பர் கால் சுவடு - என்பக்கல் தலையளிசெய்து சென்ற காதலரது தேர்க்கால் சென்ற வழியை, துடையேல் - அழித்திடாதே; எ - று.)

களவினால் தலைமகளைப் புணர்ந்துநின்ற தலைமகன், அதனால் உண்டாகும் பழிபரவுதலை யறிந்து, அப்பழிதூற்ற லடங்குமாறு அவளைச் சிலநாள் பிரிந்திருக்கக் கருதி, அதனை அவட்குக் கூறாமலே தான் பிரிதலை அவள் அறிந்தால் வருந்துவ ளென்று அவளறியாதபடியும் பாராறியாதபடியும் அவள்முகங் காண்கின்றபொழுது தான் போகமாட்டாமையாலும் இருளிலே பிரிந்து செல்ல, பின்பு அப்பிரிவையறிந்து ஆற்றாது வருந்துகின்ற தலைமகள், அவனது தேர்ச்சக்கரஞ்சென்ற சுவட்டை நோக்கி அவன் மீண்டுவருமளவும் அதனையே தனது உயிர்க்குப் பற்றுக்கோடாகப் பாவித்துப் பார்த்துக்கொண்டிருக்கையில், அங்ஙனம் பிரிந்திருந்த இடங்குமிடம் கடற்கரையாகிய நெய்தல்நிலமாதலாலே அத்தேர்க்காற் சுவட்டைக் கடலின் அலை வீசிவந்து அழிக்கப்புக அழித்திடாதேயென்று அதனை வணங்கிவேண்டியது. இது. திணை - நெய்தல். மெய்ப்பாடு - அழுகை. பயன்-அயர்வுயிர்த்தல். உள்ளதெல்லாங்கொடுத்து உஞ்சவிருத்திபண்ணி ஜீவிப்பார்போலத் தலைவரைப் போகவிட்டு அவர்போனவழியைப்பார்த்து ஆறியிருக்கிறேன், இதனை அழித்திடாதே என்று வேண்டின ளென்க. அன்பர் தேர்க்காற்சுவடு, 'அன்பர் கார்சுவடு' எனப்பட்டது; நடந்து சென்றதாகக் கொண்டு, அவரது அடிச்சுவடு என்றலு மொன்று.

ஆழ்வார் தாம் பஞ்சேந்திரியநிக்கிரகஞ்செய்து மகாமாயையையும் ஒழித்தவராயிருத்தலோடு திவ்வியபிரபந்தங்களிலே தாம் அருளிச்செய்த உபதேசத்தால் ஐம்பொறிகளின் கொடுமையையும் மகாமாயையின் பொல்லாங்கையும் எடுத்துக்கூறி அடியார்களும் அவற்றைஒறுக்குமாறு செய்தமை தோன்ற 'புரைதுடைத்துப் பெரும்பொய்யுந் துடைத்து' எனப்பட்டது. ஆழ்வார் பிறர்புகலும் உரைதுடைத்தமை - அவரது 'பராங்குசன்' என்ற திருநாமத்தினாலும், திவ்வியபிரபந்தங்களினாலும் விளங்கும். அவர் தமதமதத்துக்கு இடமின்றிப் பரதத்வநிர்ணயஞ் செய்தமையை, அவரது அருளிச் செயல்களிற் காண்க. 'எம்' என்ற பன்மை - அவர்க்கு அடிமைப்பட்ட அனைத்துயிரையும் உளப்படுத்தும். ஆழ்வாரருளால் அடியார்களுடைய கருமங்களுட் சஞ்சிதமும் ஆகாமியமும் அப்பொழுதே அறத்தொலையப் பின்புநின்ற பிராரப்த கருமமும் சார்பின்றி வலிகுறைந்து அப்பிறப்பின் முடிவோடு ஒழிதலால் அவ்வுயிர்கள் தவறாதுவீடுபெறுதல், 'எம்பிறவித்துறை துடைத்து ஆட்கொண்ட' என்றதனாற் புலனும். ஆழ்வார்களனைவரிலும் நம்மாழ்வார் அவயவியென்னும்படி தலைவராதலால், 'தொண்டர்பிரான்' எனப்பட்டனர்.

கரை - கடற்கரை. தாமிரபர்ணிநதி சென்று கடலிற்சேருஞ் சங்கமத்துறையிற் கடல் அலைமோதி யெதிர்த்தலால், அந்நதியின்கரையை யுடைக்கு மென்றுங் கொள்ளலாம்.

நம்பநாடர், ஆழ்வாரைப் பிரிந்து வருந்துகிற நிலையில், அவர் பக்கல் தமதுமநோரதத்தை இடைவிடாதுசெலுத்தி அதனாலேனும் ஒருவாறு ஆறியிருக்கலா மென்று நினைக்கும்போது, அம்மநோரதப்போக்கை இடையிற் குலையாதிருக்கவேணுமென்று ஸம்ஸாரமாகிற கடலை நோக்கிப் பிரார்த்தித்துக் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். பின்புள்ளாரும் மநோரதத்தை "உள்ளமான தேர்" என்பது காண்க. அன்பர்கால்சுவடு - ஆழ்வாரது திருவடிபட்ட சுவடுமாம். ஸம்ஸாரத்தை 'கடல்' என்றது, பல துன்பங்களை மேன்மேல்தந்து அகப்பட்டவர் ஆழ்ந்திடும்படி பரவுந்தன்மைய தாதலாலும், அளத்தற்கு அரிய பரப்புடைமையாலு மென்க. ஸம்ஸாரமாவது - எம்பெருமானது லீலாவிபூதி. ஆழ்வார்பக்கல் ஈடுபட்ட தமக்குத் தீங்கு செய்திடாமைப் பொருட்டு அந்தலீலாவிபூதிக்கு உள்ள ஆழ்வார்சம்பந்தத்தைஎடுத்துக் காட்டி உறவு கொண்டாடியபடி. (இது, சுருக்கம்; பெருக்கம் ஆய்ந்துணர்க.) (சஎ)

[செவிலித்தாய் நற்றாய்க்கு இருவர் காதலு முரைத்தல்.]

சஅ. சுவடிறக்கத்தொடராசைக்களிற்றைத்தொடர்ந்திரண்டு
கவடிறக்கட்டியபாசத்தளைக்கண்பரிந்துசங்கக்
குவடிறக்குத்தியமாறப்பெயர்க்கொலையானைநங்கா
யிவடிறத்தொன்றும்படரந்திவானமிருள்கின்றதே.

(இ - ள்.) நங்காய் - மகளிரிற் சிறந்தவளே!—இரண்டு கவடு இற - (தனக்கு முன்னும் பின்னும் உள்ளனவாய்த் தன்னைக்கட்டுதற்கு ஆதாரமான) மரத்தறிகளிரண்டும் ஒடிய, கட்டிய பாசம் தளை கண்பரிந்து - தன்னைக்கட்டிய கால்விலங்காகிய சங்கிலியின் பொருத்துவாயைத் துணித்திட்டு, சுவடு இறக்க தொடர் ஆசை களிற்றை தொடர்ந்து - (மதசலம் பெருகுகிற) அடையாளம் மிகுதியாகத் தொடர்ந்திருக்கப்பெற்ற திக்கஜத்தை (நாடிச் சென்று) அதனோடு போர்தொடர்ந்து, சங்கம் குவடு இற குத்திய - அழகிய மலைச்சிகரங்களை ஒடியுமாறு (தந்தங்களினாற்) குத்திய, மாறன்பெயர் கொலையானை - மாறனென்னும்பெயரையுடைய கொல்லுதல்வல்ல யானையானது, படர் அந்தி வானம் இருள்கின்றதே - (பிரிந்தார்க்குத்) துன்பத்தைச் செய்கின்ற சாயங்காலத்தில் ஆகாயம் இருளடைகிறவளவிலே, இவள் திறத்து ஒன்றும் - இவள்பக்கல் (தவறாது) வந்து சேர்ந்திடும்; (எ - று.)

தலைவன் களவுப்புணர்ச்சிநேர்ந்த தலைவியை வெளிப்படையாக மணஞ்செய்துகொண்டபின்பு வந்த மணமகனைக்கண்ட செவிலி மகிழ்வோடு சென்று அத்தலைவி தலைவன் என்னுமிருவரும் ஒருவர்மேலொருவர் மிக்ககாதலுடையராயிருக்கிற நிலைமையை நற்றாய்க்குச் சொல்லுதல், இச்செய்யுளிற் கூறப்பட்ட பொருள். தலைவன் காவற்பிரிவு வேந்தற்குற்றுழிப்பிரிவு என்றவைகளில் ராஜகாரியத்தால் தலைவியைப்பிரிந்து நெடுந்தூரஞ் சென்றாலும் சூரியாஸ்தமனசமயத்திற்குள் தொழில்முடித்துத் தவறாது வந்துசேர்வன்; ஓரிர

வேனும் புறத்துத்தங்கான் என்று, தலைவனது காதலை அறிவித்தாள். அங்ஙனங் காதல்செய்தற்கு ஏற்றபடி தலைவி ஒழுகுகின்றன ளென்பதும், தலைவன் அந்தி நேரத்தில் வாராதிருப்பின் இவள் பொறுக்கிலா ளென்பதும், அவன் வரவையே எதிர்பார்த்து நிற்கின்றன ளென்பதும் தொனித்தலால், தலைவியின்காதல் குறிப்பாக உணர்த்தப்பட்டதென்க. மெய்ப்பாடு - உவகை. பயன் - மகிழ்தல்.

தலைவனை 'யானை' என்றதனால், 'சுவடிறக்க' என்பது முதலாக யானைக்கு ஏற்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. கொலையானை - மதயானை யென்றபடி; "யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்" என்றார் பிறரும். தலைவனைக் கொலையானை யென்றது, பகைவெல்லுந்திறமும் மிக்கவலிமையும் கம்பீரமான அழகியநடையுமுடைமைபற்றி. சுவடு - கட்டுத்தறி. தன்னைக் கட்டிய தூண்களையும் விலங்குகளையும் முறித்துச்செல்லுதல் மதயானையினியல்பாதலால், 'இரண்டு சுவடறக் கட்டிய பாசத்தினைக் கண்பரிந்து' எனப்பட்டது; "தொடர்பிணி வெளின்முதன் முருக்கித்தோன்றியது. அடலருங் கடாக்களிற் றசனிவேகமே" என்ற சிந்தாமணியையுங்காண்க: தொடர் பிணிவெளில்முதல்முருக்கி - காலிற்சங்கிலிபிணித்த மரத்தையுங் கம்பத்தையும் அடியிலேமுறித்து.) "ஊனும் விலங்கும் முறிப்பது" என்றார் பாரதத்தும். வேறொருயானையினது மதநீரின் மணம் வீசினால் அதனையுணர்ந்தவளவிலே அது பொறாது ஓடிச்சென்று அந்த யானையை எதிர்த்துப்பொருதலாகிய மதயானையினியல்பின்படி, இந்தயானை தனதுவலிமைக்கு ஏற்பத் திசையானையைத்தொடர்ந்து பொருத வென்பாள், 'சுவடறக்கத்தொடர் ஆசைக் களிற்றைத் தொடர்ந்து' என்றாள். மலைச்சிகரத்தைக் கூரியதந்தங்களினாற் குத்திமுறிக்கின்ற மதயானையினியல்பை, 'சங்கக்குவடறக்குத்திய' என்றார்.

உபமானமாகிய யானைக்குக் கொடுத்த அடைமொழித் தொடர்கள், உபமேயமாகிய மாற னென்ற தலைவனுக்கு ஏற்பவும் பொருளமைத்தல், தகுதி. சிறந்தவீரனான தலைவன் திக்குவிசயஞ்செய்பவனாய்த் திக்கஜங்களுள்ள வளவுஞ்சென்று போர்தொடர்ந்து மீளுதல் இயல்பாதலால், சுவடறக்கத் தொட ராசைக்களிற்றைத் தொடர்தல் தலைவனுக்கு அமையும். 'இரண்டு சுவடு இறக் கட்டிய பாசத்தினைக் கண்பரிந்து' என்பதற்கு - உட்பகையும் புறப்பகையு மாகிய வஞ்சகவர்க்கமிரண்டும் அழிய அவற்றைத் தொலைத் தலில்) தன்மனத்தைப்பிணிக்கின்ற பாசபந்தம்போன்ற கண்ணோட்டத்தை யொழித்து என்று பொருள்காண்க. உட்பகை-வழிபறிப்பவர் கள்ளர் கோள் சொல்பவர் முதலிய மனிதர்களும், பன்றி புலி காடி முதலிய மிருகங்களும். சுவடு கபடம்: வடசொல்விகாரம். பாசம்-கயிறு. தளை - கட்டு. பரிதல்-அறுத்தல். 'சங்கக்குவடறக் குத்திய' என்பதன் பொருள் - மலைபோல அழித்தற்கு அரிய பெரிய சேனைத்தொகுதி அழியுமாறு அதனைத்தாக்கிய என்பது. சங்கம் - படையில் ஓர்தொகை; ஸங்கம் - கூட்டமுமாம். எனவே, சிலேடையை அங்கமாகக் கொண்டுவந்த உருவகவணியாம்.

'நங்காய்' என்றது, செவிலித்தாய் நற்றாயை முன்னிலைப் படுத்தியது; நங்கை யென்பதன் ஈறுதிரிந்த விளி. படர் - சிந்தை. இருள்கின்றது - நிகழ்

காலத்தொழிற்பெயர். ஈற்றுஎகாரம் - தேற்றம்; விரைவுமாம். படர் அந்தி வானம் - அந்திப்பொழுதிற் பரவுகிற செவ்வானமுமாம்.

கம்பநாடர்பக்கல் மிக்க ஆதரத்தையுடைய பேரறிவாளரை நோக்கி, அவர்பக்கல் அன்புள்ள ஞானிகள், 'இவர்க்கு ஆழ்வார் உரியகாலத்திலே தவறாது ஸாந்நித்தியந் தந்தருள்வர்' என்றுகூறி மகிழ்வுவிளைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். ஆழ்வாரைக் கொலையானை யென்றது, பரசமயவாதிகளை நிரஸநம்பண்ண வல்லவ ரென்பதுபற்றி. பின்புள்ளார் "இராமாநுசமுனி வேழம்" என்றதும், அங்கு வியாக்கியானத்தில் 'கஜமாகஉத்ப்ரேக்ஷிக்கிறது. விபக்ஷிகளைச் சித்ரவதம் பண்ணவும் தாம்பரிக்ரஹித்தவர்களைப் பட்டாபிஷேகயோக்யராம்படி பண்ணவும் வல்லவராகையாலே' என்றதுங் காண்க. இந்த யானைக்கு மதம் - ப்ரஹ்மாநந்தம். கவடு இறக்கத் தொடர் ஆசைக் களிற்றைத் தொடர்ந்து=(எவ்வளவு வெறுத்து ஒழித்தாலும்) நெடுங்காலப் பழக்கத்தால் ஒழிதலின்றி மிகத்தொடருந் தன்மையதான அவாவாகிய யானையை ஊக்கங்கொண்டு பொருதுஒழித்து; "அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச்சடகோபன்" என்ற திருவாய்மொழியையுங் காண்க. இரண்டு கவடு இற=அகங்காரம் மமகாரம் என்னும் இரண்டும் ஒழிய; இவை, பற்றென்ற ஒன்றின் பகுப்பாதலால், 'கவடு' எனப்பட்டன; கவடு - இருகிளையாகக் கிளைத்த மரக்கொம்பு. கட்டிய பாசத்தளைக் கண்பரிந்து = உயிரைப் பிறப்பிலே கட்டுப்படுத்துகிற பிரபஞ்சபாசபந்தத்தின் தொடர்பை அறத்தொலைத்து. சங்கக்குவடு இறக் குத்திய = சங்கப்புலவர் கூட்டமாகிய மலை நிலைகெடும்படி அதனை அடர்த்த; ஆழ்வாரருளிச் செயலின் பிரபாவத்தாற் சங்கப்புலவர்கள் கருவபங்கமடைந்து தாழ்ந்தமை முன்கூறப்பட்டது. நங்காய் - ஆத்மகுணங்களிற் சிறந்தவரே! என்றுவிளித்தபடி. படர்அந்திவானம் இருள் கின்றதே ஒன்றும் - பலவகைச்சிந்தையை யுண்டாக்குகிற ரஜோகுண தமோகுணங்கள் ஒன்றன்மே லொன்றாகத் தலையெடுத்து மோகாந்தகாரத்தை விளைத்திடாதபடி வந்து ஸாந்நித்யந் தந்தருள்வ ரென்க. தொடர் ஆசைக் களிற்றை - பற்றுகின்ற ஆசையாகிய மற்றொரு யானையை, கவடு இறக்கத் தொடர்ந்து - இருந்த இடம் தெரியாதுபோக எதிர்த்து அடர்த்து என்று உரைப்பாரு முளர். (இது, சங்கிரகம்; விஸ்தாரங் கண்டுகொள்க.)

இச்செய்யுளைப் பிறிதுதுறையின் பாற்படுத்தி உரையிடவுங்கூடும்.(சஅ)

சகூ. இருளாய்ப்பரந்தவுலகங்களைவிளக்கும்மிரவி
பொருளாய்ப்பரந்ததுதான்பொதுநிற்றலின்மற்றதுபோன்
மருளாய்ப்பரந்தமயக்கத்துயக்கற்றமாறனெங்கோ
னருளாற்சமயமெல்லாம்பரனுண்டென்றறிவுற்றதே.

(இ - ள்.) இருள் ஆய் பரந்த - இருள் மிக்குப் பரவப்பெற்ற, உலகங்களை - நிலவுலகத்தின் பகுதிகளையெல்லாம், விளக்கும் - (இருளொழித்து) விளங்கச் செய்கின்ற, இரவி - சூரியமண்டலம், பொது நிற்றலின் - (எல்லாவுயிர்கட்கும்) பொதுப்பட (உதவிசெய்து) நிற்றலால், பொருள் ஆய்பரந்தது- (உலகமுழுவதும்) காணப்படும் பொருளாய் விளங்கிற்று; அதுபோல் - அதுபோலவே,—மருள் ஆய் பரந்த மயக்கம் துயக்கு அற்ற மாறன் எம் கோன்

அருளால் - (பலரும்) மருளும்படி பரவுகிற மாயையினலாகுஞ் சோர்வு இல்லாத மாறனென்னுந் திருநாமமுடைய நம்மாழ்வாரது கருணையினுல், சமயம் எல்லாம் பரன் உண்டு என்று அறிவுற்றது - எல்லாமதங்களும் பரமாத்மாவாகிய ஸ்ரீமந்நாராயணன் உளனென்று அறிந்துகொண்டன; (எ - று.) — ஈற்று ஏகாரம் - தேற்றம். தான், மற்று - அசைகள்.

புறவிருளையொழிக்கிற சூரியன்போலவே அகவிருளையொழிக்கிற ஆழ்வாரும் எல்லார்க்கும் உபகாரக ரென்பதாம். ஆகவே, அவர்பக்கல் அனைவரும் அன்பு செய்யக் கடமைப்பட்டவ ரென்பது போதரும். உவமையணி. ஆய் - ஆக்கமடைந்து, அபிவிருத்தியாகி. விளக்கும் மிரவி - விரித்தல். 'பரந்தது' என்பதற்கு, 'உலகம்' என்ற தோன்றா எழுவாய் வருவிக்க. துயக்கு - கலக்கம். இரவி தான் பொதுசிறப்பின் எல்லாவுயிர்கட்கும் இன்றியமையாது வேண்டுந் தலைமைப்பொருளாய்ப் பிரசித்திபெற்றது; அதுபோலவே, வகுளபூஷணபாஸ்கரரும் எல்லாச்சமயத்தார்க்கும் எம்பெருமானுண்மையை யுணர்த்தி யுதவியதனுல் தலைமைபெற்றனரென்று கருத்துக்கொள்ளுதலும் ஒன்று. இருளொழித்து உலகத்தை விளங்கச் செய்தற்குச் சூரியன்போல, மாயையை யொழித்துப் பரமாத்மாவை விளங்கச்செய்தற்கு ஆழ்வாரென்று தாற்பரியங் கொள்ளினும் தவறாகாது. (சக)

௫0. அறிவேயுனைத்தொழுதேன்மற்றையாகமவாதியரைச்
செறிவேனெனவொன்றுசிந்தைசெய்யாதுசெய்தாரையில்லா
நெறிவேதநின்றநிலையுணர்ந்தோன்குருகூர்நிலத்தைப்
பிறிவேனெனவுமெண்ணுதென்னைவீடுபெறுத்தினையே.

(இ - ள்.) அறிவே - (எனது) உணர்வே!—மற்றை ஆகம வாதியரை செறிவேன் என ஒன்று சிந்தை செய்யாது - (வேதமிருக்க அதனைவிட்டு அதற்கு) மாறான ஆகமங்களைப் பிரமாணமாகக்கொண்டு துர்வாதஞ் செய்பவராகிய புறச்சமயத்தாரைச் சேர்வேனென்று நினைத்தலை யொன்றையுங் கொள்ளாமல், செய்தாரை இல்லா நெறி வேதம் நின்ற நிலை உணர்ந்தோன் குருகூர் நிலத்தை பிரிவேன் எனவும் எண்ணாது - தன்னைச் செய்தவரொவரையும் உடையதல்லாததும் சன்மார்க்கத்தையே போதிப்பதுமாகிற வேதத்தி லூன்றிநின்ற பரதத்துவநிலையை யறிந்தவராகிய ஆழ்வாருடைய திருவவதாரஸ்தலமான திருக்குருகூரென்னுந் திவ்வியதேசத்தை விட்டுப்பிரிவேனென்று எண்ணுதலுஞ் செய்யாமல், என்னை வீடு பெறுத்தினையே - (நீ) என்னை முத்திபெறும்படி செய்தாயே; (அந்தமகோபகாரத்துக்காக), உனை தொழுதேன் - உன்னை (நான்) நமஸ்கரித்தேன்; (எ - று.)

"நெஞ்சமே நல்லை நல்லை யுன்னைப்பெற்றால், லென்செய்யோ மினி யென்ன குறைவினம்" என்று ஆழ்வார் தம்நெஞ்சை விளித்துக் கொண்டாடியதுங் காண்க. வேதம் அபௌருஷேய மாதலால், 'செய்தாரையில்லா' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. பிரி பிறி என்ற இரண்டு வினைகளும் உளவென்றாவது, பிரிஎன்பது எதுகைநோக்கிப் பிறியெனத் திரித்துக் கொள்ளப்பட்டதென்றாவது கொள்க. அறிவு தீவழிச்செல்லாது நல்வழிச் சென்று உதவுதலே ஆன்மா வீடுபெறுதற்குக் காரணமாதலால், இங்ஙனம்

கொண்டாடப்பட்டது. பகவத்பாகவதர் உகந்தருளின நிலங்களிலே பிரவணனாதல், உயர்கதிபெறுதற்கு உரிய உபாயமென்பது போதரும். (௫௦)

௫௧. பெறும்பாக்கியமுள்ளபோதும்பிழைப்புமுண்டேபிறர்பால்
வெறும்பாக்களைத்திமெலிகின்றவென்னைவினைகொடுபோ
யெறும்பாக்கியதமியேனையமரர்க்குமேறவிட்டான்
குறும்பாக்கியமுப்பகைதவிர்த்தாண்டகுருகைமன்னே.

(இ - ள்.) பெறும் பாக்கியம் உள்ள போதும் - மிக்கநன்மை பெறும்படியான அதிருஷ்டம் இருக்கிறபோதும், பிழைப்பும் உண்டே - (அந்நன்மை மிகுதிநேராமல்) தவறுதலு முண்டோ? [இல்லையென்றபடி]; (அது எங்ஙனமெனின்—), பிறர்பால் - அயலார்மீது, வெறும் பா களைத்தி - பயனில்லாத பாடல்களைப் பாடிக்கொண்டு, மெலிகின்ற - திரிந்து இளைக்கின்றவனும், வினை கொடு போய் எறும்பு ஆக்கிய - தீவினைகளால் வலிய இழுத்துக் கொண்டுசென்று எறும்புபோல எளிமையடையும்படி செய்யப்பட்டவனும், தமியேனை - வேறுகதியற்றவனுமாகிய, என்னை—, குறும்பு ஆக்கிய முப் பகை தவிர்த்து ஆண்ட - தீமைகள் செய்யும்படியான மூன்றுவகைப் பகைகளையும் போக்கி அடிமைகொண்ட, குருகை மன் - திருக்குருகூரில் திருவவதரித்த தலைவரான நம்மாழ்வார், அமரர்க்கும் ஏற விட்டான் - தேவர்களைக் காட்டிலும் மேலான நிலையை யடையும்படி செய்தருளிவிட்டனர்; (எ - று.)

இங்ஙனம், தாம்பெற்றபேற்றை மனத்திற்கொண்டாடி அதன் நிறைவினால் வாய்விட்டுக்கூறலாயின ரென்க. முந்தினவாக்கியம் பொதுப்பொருளாயும், பிந்தினவாக்கியம் சிறப்புப்பொருளாயும் நின்று ஒன்றை யொன்று சாதித்தலால், வேற்றுப்பொருள்வைப்பணி. "அருள்பெறுவாரடியார் தம்மடியனேற்காழியான், அருள்தருவானமைகின்றான் அதுநமதுவிதிவகையே" என்ற திருவாய்மொழியை அடியொற்றி 'பெறும்பாக்கியம்உள்ளபோதும்' எனப்பட்டது. 'பிறர்' என்றதில், தேவதாந்தரங்களும் அடங்கும். இறைமைக்குணங்களிலரானாரை அவையுடையரெனப்புகழ்ந்து கூறுகிற பாடல்கள் பொருள்சேரா வாதலால், 'வெறும்பா' எனப்பட்டன; அக்குணங்களை முற்றவும்உடைய எம்பெருமானது புகழையும் அப்பெருமானடியார்களது புகழையுங் கூறும் பாடல்களே பொருள்சேர்ந்தபாடல்களாம்: "மாரியனையகை மால்வரையொக்குந் திண்டோ ளென்று, பாரிலோர்பற்றையைப் பச்சைப்பசும்பொய்கள் பேசவோ" என்ற திருவாய்மொழியையுங் காண்க. தம்வசமின்றிக் கருமவசப்பட்டுத்திரிந்த தமது எளிமை தோன்ற, "வினைகொடுபோய் எறும்பாக்கிய தமியேனை' என்றார்; "இருபாடெரிகொள்ளியினுள் ளெறும்பேபோல், உருகாநிற்கு மென்னுள்ளம்" என்றார்: திருமங்கையாழ்வாரும். சிறுமைக்குஎறும்பைஎடுத்துக்காட்டுதல் இயல்பு; 'ப்ராஹ்மாதி பிபீலிகாந்தம்' என்பர். முப் பகை - காமம், வெகுளி மயக்கம் என்பன. குறும்பாக்கிய முப்பகை - வித்தியாமதம், குலமதம், சீலமதம் என்னும் முக்குறும்பாகிய பகை யென்றுங் கொள்ளலாம்; "வஞ்சமுக்குறும்பாங்குழியைக் கடக்கும் நங்கூரத்தாழ்வான்" என்றவிடத்துப்போல. அமரர்க்கும் ஏறவிட்டான்- மூத்திபெறலாம்படி செய்தருளின ரென்றபடி.

மன் = மன்னன்; பண்பாகுபெயர். 'அமரர்க்கும் அறவிட்டான்' என்றதனை, திருவிருத்தத்தில் "விண்ணுளாரிலுஞ்சீரியர்" என்றதனோடு ஒப்பிடுக; அங்கு, பரமபதத்திலுள்ளவர்களினுஞ் சிறப்புடையராவரென்று பொருள் கொண்டு, இடைவிடாது பகவதநுபவமே செய்யுமிடமான அந்தமுக்தியுலகத்திலன்றி அதற்கு விரோதியான ஸம்ஸாரத்திலிருந்துகொண்டே அங்ஙனம் நித்யாநுபவஞ்செய்பவரை நித்தியசூரிகளினுஞ் சிறியரென்னத் தட்டில்லையென்று கருத்து உரைப்பர் ஆன்றோர்: அதுவும் இங்குப் பொருந்தும். அமரர்க்கும் = அமரரினும்: உருபுமயக்கம். (௫௧)

௫௨. குருகூர்நகரெம்பிரானடியாரொடுங்கூடியன்புற்
றொருகூரையிலுறைவார்க்குமுண்டேயெம்மையாளுஞ்சுற்று
மிருகூர்வினையுமறுத்திறப்பார்க்குமியற்கையல்லு
மருகூரருகிலயலயலார்க்குமரியதன்றே.

(இ - ள்.) எம்மை ஜீவாத்மாக்களாகிய நம்மை, உள்ளும் சுற்றும் - (புறத்தேயன்றி) அகத்தும் சூழ்ந்துள்ள, இரு கூர் வினையும் - மிகுதியான (புண்ணியம் பாவம் என்னும்) இருவகைக் கருமங்களையும், அறுத்து - துணித்து, இறப்பார்க்கும் - (அவ்வினைமரம்) வேரோடு அழியும்படி செய்யும்படியான, இயற்கை - தன்மையானது,—குருகூர் நகர்-திருக்குருகூரென்னும் திருநகரியிலே திருவவதரித்த, எம்பிரான் - எமது தலைவரான நம்மாழ்வாருடைய, அடியாரொடும் - அடியார்களுடனே, கூடி - சேர்க்கை கொண்டு, அன்பு உற்று - (அவர்கள்பக்கல்) அன்புகொண்டு, ஒரு கூரையில் உறைவார்க்கும் - (அவர்களுடன்) ஒருமனையிலே வசிப்பவர்களுக்கும், உண்டே - உள்ளதேயாம்; (மற்றும்), அ ஊர் அருகு ஊர் அருகில் அயல் அயலார்க்கும் - அத்திருக்குருகூர்க்குச் சமீபத்திலுள்ள ஊர்களின் பக்கத்து ஊர்களுக்கு அடுத்த வேறு ஊர்களிலுள்ளவர்களுக்கும், அரியது அன்று - (இருவினையையும் வேரோடு இறச்செய்யும் இயற்கை) அருமையானதன்று; (எ - று.)—உண்டே, அன்றே என்ற ஏகாரம் இரண்டும் - தேற்றம்.

தீமனங்கெடுத்து நன்மனங்கொடுத்தலும், வானேறவழிதருதலும் எம்பெருமான்செயல்களல்லவோ? அவற்றை ஆழ்வார்செயலாகக் கீழ்ச்செய்யுளிற்கூறியது பொருந்துமோ? என்ன, 'அந்த எம்பெருமானது திருவவதாரமான நம்மாழ்வாருடைய அடியாரடியார்களுக்கும் அவரோடு நேரிலேனும் இடைவிட்டேனும் சம்பந்தமுடையார்களுக்கும் அந்தப் பகவத்கடாக்ஷம் கைகூடியதேயாம்' என்றவாறாகும் இது.

'எம்பிரான்' என்றது - எம்பெருமானே நம்மாழ்வார் என்றவாறு. 'எம்பிரானடியார்' என்றது - ஸ்ரீமதுரகவிகள், நாதமுனிகள், பராங்குசதாஸர் போல்வாரை. 'அன்புஉற்று' என்றதில், அவர்கள்பக்கல் தாம் அன்புகொள்ளுதலேயன்றி அவர்களுடைய அன்புக்குத் தாம் இலக்காதலும் அடங்கும். 'இன்புற்று' என்ற பாடத்துக்கு - அந்நல்லோர்சகவாசத்தாலாகும் ஆனந்தமடைந்து என்று பொருள். ஒருகூரையிலுறைதல் - 'தொண்டக்குடி' என்றபடி ஒருகுடியில் வாழ்தல். கூரை - வீட்டின்மேற்புறத்து வேயப்படுவது; (கூறை - ஆடை;) இது; இங்கு இலக்கணையாய், வீட்டைக்குறிக்கும். எல்லா

வுயிர்களையுங் கூட்டி, 'எம்மை' என்றார்: உளப்பாட்டுத் தன்மைப்பன்மை. உடம்புடன்கூடிவாழும்போதும் அதனைவிட்டு நீங்கியபோதும் உயிரைக் கருமம் விடாதுதொடர்தலால், 'உள்ளுஞ் சுற்றும் வினை' எனப்பட்டது. நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாதலால், இருவினையுங் கூறினார்; "இருள்சேரிருவினையுஞ் சேரா" என்றார் திருவள்ளுவனாரும். 'கூர் வினை' என்றதில், சஞ்சிதம் பிராரப்தம் ஆகாம்யம் என்ற மூன்றுவகைக் கருமங்களும் அடங்கும். 'குருகூரருகுஊர்' என்றது, திருக்குருகூ ரெனப்படும் ஆழ்வார்திருநகரிக்கு அருகிலுள்ள ஸ்ரீவைகுண்டம் முதலிய நவதிருப்பதிகளை. 'அவ்வூரருகில் அயல்' என்றது, திருவழுதிவளநாடுமுழுவதிலுமுள்ள எல்லாவூர்களையும். 'அதனயலார்' என்றது, எல்லாநாடுகளிலும் உள்ளாரையும். எங்கு இருந்தாலும் ஆழ்வார்சம்பந்தமுடையாரானார் உய்வுபெறுவ ரென்றபடி.

கூர் - உரிச்சொல். இயற்கை - இயல்பு. இறப்பார்க்கும் என்றவிடத்து, பார்த்தல்-செய்தலென்ற பொருளில் வந்தது; ('காண்' என்ற வினை 'செய்' என்ற பொருளில் வருதலைப் பலவிடத்துங் காண்க.) (௫௨)

[தலைவன்பிரிந்தநிலையில் ஆற்றாத தலைவி இரங்கிக்கூறல்.]

௫௩. அன்றாதவன்றிலையும்மன்றுவித்தென்னையன்னையுடன்
பின்றாதவண்ணமெல்லாம்பின்றுவித்துப்பிறைக்கொழுந்தை
யொன்றாதவண்ணமுபாயமியற்றியதூழ்வினையை
வென்றான்குருகைப்பிரான்மகிழேயன்றிவேறில்லையே.

(இ - ள்.) அன்றாத அன்றிலையும் அன்றுவித்து - (எவரோடும்) பகைகொள்ளாத அன்றிலென்னும்பறவையையும் (இப்பொழுது என்னோடு) பகைகொள்ளும்படிசெய்து, என்னை—, அன்னையுடன் பின்றாத வண்ணம் எல்லாம் பின்றுவித்து - (எனது) செவிலித்தாயுடனே மாறுபடத்தகாத வகையெல்லாம் மாறுபடும்படி செய்து, பிறை கொழுந்தை - இளஞ் சந்திரனை, ஒன்றாத வண்ணம்-(என்னோடு) வேறுபாடுகொள்ளும்படி, உபாயம் இயற்றியது - சூழ்ச்சிசெய்தது, (யாதோவெனில்—),—ஊழ்வினையை வென்றான் - விதியை வென்றிட்டவராகிய, குருகை பிரான் - திருக்குருகூரில் அவதரித்த தலைவரான நம்மாழ்வாருடைய, மகிழே அன்றி - மகிழம்பூமாலையே யல்லாமல், வேறு இல்லை - வேறொன்று மில்லை; (எ - று.)—ஈற்று ஏகாரம் - தேற்றம்.

இயற்கைப்புணர்ச்சிமுதலியவகைகளால் தலைவியைக் களவிற்கூடிநின்ற தலைவன் அங்குப் பழியெழுந்ததென்று தோழியால் விலக்கப்பட்டபின்னர் அப்பழியடங்கச் சிலநாள் ஒருவழிப்பிரிந்துறைத லுண்டு; அது, ஒருவழித் தணத்த லெனப்படும். அன்றி, களவுப்புணர்ச்சிபெற்ற தலைமகன் தோழியால் வரைவுமுடுக்கப்பட்டுத் தலைமகளை வரைந்துகொள்ளுதற்கு வேண்டிய பொருள்தேடுதற்பொருட்டும் பிரிவன்; அது, வரைபொருட்பிரித லெனப்படும். அங்ஙனம் தலைமகன் பிரிந்த சமயங்களில், அப்பிரிவை யாற்றாத தலைவி, நெஞ்சொடுகூறலாகத் தன்னிலேதான் இரங்குதலும், மனமொத்த தன்உயிர்த்தோழியோடு இரங்குதலுஞ் செய்வள். இங்ஙனம் இச்செய்யுட்குத் துறைப்போக்கு உணர்க.

அன்றிற்பறவை, எப்பொழுதும் ஆணும்பெண்ணுமாகிய இரட்டையாயே நிற்கும். கணப்பொழுது ஒன்றையொன்று விட்டுப்பிரிந்தாலும் அத்துயரத்தைப்பொறாமல் ஒன்றையொன்று இரண்டு மூன்று தரம் கத்திக்கூவி அதன்பின்பும் தன் துணையைக்கூடாவிடின் உடனே இறந்துவிடும். "எரிதகைந்தன்னசெந்தலையன்றில், பிரியின்வாழாது" என்றதுங் காண்க. இதனை வடநூலார் 'க்ரௌஞ்சம்' என்பர். தமிழில் 'குருகு' எனவும்படும். எப்பொழுதும் இணையாகவுள்ள அந்தஅன்றிற்பறவையும், அது இரவிலே பார்வை குறைந்து துணையையிழந்து நலிந்து எழுந்து பறந்து வருந்துவதும், அந்நலிவால் அது கூவுகிற குரலும் காமோத்தீபகமாய்க் காமுகரை வருத்துமென்பது, கவிமரபு. அங்ஙனம் அன்றிற்பறவை பிரிந்தநிலையிலுள்ள தனக்கு வருத்தத்தை விளைத்தலே, இங்கு 'அன்றாதஅன்றிலையும்அன்றுவித்து' என்று குறிக்கப்பட்டது. அன்றுதல் - பகைத்தல்; "அன்றிய வாணனாயிரந்தோளுந் துணியவன்றாழி தொட்டானை" எனப் பெரியதிருமொழியிலுங் காண்க.

இங்கு'அன்னை'என்றது, செவிலித்தாயை. தலைமகள் இளமையிலேயே ஒருதலைமகனிடத்து வேட்கைமிஞ்சி அவனுடன் கொண்டுள்ள காதற்குறிகளைக் குறிப்பாகவுணர்ந்த செவிலித்தாய் கோபித்து 'இவள் பிஞ்சிலேபழுத்துவிட்டாள்' என்பது முதலாகச் சில சிறுபுன்சொற்கள் சொல்லி நிர்ப்பந்திக்க, அவற்றைக் குறித்துத் தலைமகள் தான் "அன்னையென் செய்யிலென் ஊர் என்சொல்லிலென் தோழிமீர்" என்றாற்போல வெறுப்புக்கொள்ள வேண்டுதலால், 'அன்னையுடன் பின்றாத வண்ணமெல்லாம் பின்றுவித்து' என்றாள். மாலைப்பொழுதிலே விளங்குகிற பிறைச்சந்திரன் காமோத்தீபகப் பொருள்களிலொன்றாய்ப் பிரிந்தவரை வருத்துதல்பற்றி, பிறைக்கொழுந்தை 'ஒன்றாதவண்ணம்' எனப்பட்டது. ஒன்றாமை - பொருந்தாமை. ஆழ்வார், தாம் எம்பெருமான் திருவடிகளில் சரண்புகுந்து பெற்ற திருவருளால் தவறாவலியினவான வினைகளனைத்தையும் வேரோடு களைந்திட்டனராதலால், 'ஊழ்வினையை வென்றான்' எனப்பட்டனர். தலைவனைப்பிரிந்த நிலையில், தலைவி, அவனது சம்பந்தம்பெற்ற மலர்மாலையையாயினும் தான் பெற்று ஆறியிருக்க அவாவியதனால், 'குருகைப்பிரான் மகிழேயன்றி வேறில்லை' எனப்பட்டது.

முதலிரண்டடிகளில் 'அன்றாத' 'அன்றுவித்து' எனவும், 'பின்றாத' 'பின்றுவித்து' எனவும் வந்த இடங்களில் தொடைமுரண் காண்க. 'கொழுந்து' என்றது - இளமையின்மேலது. இனி, நாளொருவண்ணமும் பொழுதொரு மேனியுமாக வளர்வதென்பதுபற்றி, 'பிறைக்கொழுந்து' எனப்பட்டது. இயற்றியது - பெயர்.

நம்மாழ்வார் சிற்சிலசமயங்களிற் கம்பநாடரது அகக்கண்ணுக்குப் புலனாகி மறைய, அவ்வளவிலே திருப்திப்படாமல் ஸதாஸாந்நித்தியத்தில் அபேக்ஷையாற் பிரிவாற்றாது வருந்துகிறகம்பநாடர். வேறுபலர்க்கு இன்பந்தருகிற பிரபஞ்சவிஷயங்கள் பலவும் நமக்கு ப்ரியப்படாதபடி தம்மைச் செய்தது விதியை வென்றவரான ஆழ்வாருடைய காட்சியின்மை யென்று இரங்கிக் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். விவரம் கேட்டுணர்க. (௫௭)

ருச. வேறேநமக்கிவனன்புடைமெய்யடியானென்றுள்ளந்
தேறேனெனலதுதேறத்தகுஞ்செந்தமிழ்ப்புலவர்க்
கேறேயெதிகளுக்கின்னமுதேயெறிநீர்ப்பொருநை
யாறேதொடர்குருகூர்மறையோர்பெற்றவாணிப்பொன்னே.

(இ - ள்.) செம் தமிழ் புலவர்க்கு ஏறே - செவ்விய தமிழ்ப்பாஷையில் தேர்ந்த பண்டிதர்களுட் சிங்கம்போன்றவனே! எதிகளுக்கு இன் அமுதே - முற்றத்துறந்த முனிவர்களுக்கு இனிமையான அமிருதம் போன்றவனே! எறி நீர் பொருநை ஆறே தொடர் குருகூர் - அலைவீசுகின்ற நீர்ப்பெருக்கை யுடைய பொருநையாறென்னுந் தாமிரபர்ணிநதி இடையறாது பாயப்பெற்ற திருக்குருகூரில் திருவவதரித்த, மறையோர் பெற்ற ஆணிப்பொன்னே - வைதிகர்கள் பெறுப்பேறாகப்பெற்ற மாற்றுயர்ந்த அரும்பொன் போன்றவனே!—இவன் நமக்கு வேறே அன்பு உடை மெய் அடியான் என்று உள்ளம் தேறேன் எனல் - இவன் நம்பக்கல் பொதுப்படவன்றிச் சிறப்பாக அன்புள்ள உண்மையடியவன் என்று (என்னைக்குறித்து) மனப்பூர்வமாக நம்ப மாட்டேனென்று கொள்ளாதே; அது தேறத்தகும் - அங்ஙனம் மெய்யடியவனாக (என்னை நீ) நம்பத்தகும்; (எ - று.)—குருகூர் ஆணிப்பொன் என இயையும்.

ஆதிதொடங்கி நான் உனக்கு ஆட்பட்டு உய்வுபெறாது பழுதே பலபகலும்போக்கிப் பலவேறுவகையாகத் திரிந்தமைபற்றி, என்னை இப்பொழுது நின்பக்கல் அஸாதாரணமான நிஜபக்தியையுடைய மெய்யன்பனென்று துணியேனென மனங்கொள்ளலாகாது; "அன்றுநான் பிறந்திலேன் பிறந்த பின் மறந்திலேன்" என்றபடி இப்பொழுது நான் உண்மையன்புடைய மெய்யடியவனென்பது சத்தியம் என்று ஆழ்வாரைக்குறித்துத் தமது உண்மைநிலையை விண்ணப்பஞ் செய்தவாறும். நமக்கு இவன் வேறே என்று எடுத்து, நமக்கு இவன் புறம்பானவனே என்று உரைத்தலு மொன்று.

"அரசருளேறு" என்றாற்போல, 'செந்தமிழ்ப்புலவர்க்கு ஏறு' என்றார். ஏறுபோல்பவனை ஏறுஎன்றது, உபசாரவழக்கு. அமுது, பொன் என்பனவும் இவ்வாறே. தனது பலபராக்கிரமங்களால் மிருகங்களுள் அரசாய்ச் சிறக்கிற சிங்கம்போல, தமது தெய்வப்புலமையால் செந்தமிழ்ப்புலவர்களுள் தலைமை பூண்டு விளங்குகிறவர் ஆழ்வார் என்க. சிங்கம் காளை முதலிய சிலசொற்கள், சிறப்பை யுணர்த்துவனவாய் ஆடவர்க்கு வழங்கும். யதி என்ற வடமொழி - ஜிதேந்திரியனென்று பொருள்படும்: பொறிகளையெல்லாம் அடக்கியவன். அவ்வடசொல், தமிழில் 'எதி' என விகாரப்பட்டது; எதிகளுக்கு இன் அமுது - ஐம்பொறிவென்ற முனிவர்களுக்கு அமிருதம்போலினியவர் என்க. ஆணிப்பொன் - மாற்றறிதற்குக்கொள்ளும் உயர்தரப்பொன்; இதற்குமேலே மாற்றில்லை யென்னும்படியான சிறந்தபொன் என்றும் உரைப்பர். மறையோர்பெற்ற ஆணிப்பொன் - அந்தணர்கள் விரும்பிப் பாராட்டப்பெற்றவர் என்க. மற்றையடியார்களுடைய ஞான அநுஷ்டானங்களின் தரத்தையும், மற்றைப்புலவரியற்றிய கவிகளின் தரத்தையும் அறிதற்கு அந்தணர்களால் நிதர்சனமாகக் கொள்ளப்படுபவ ரென்றுங் கொள்க. வணிகர்பெறும் ஆணிப்

பொன் அது; இவரோ மறையோர்பெற்றஆணிப்பொன் என்றவாறு. தேறத்தகும் - ஒருவகை வியங்கோள். (௫௪)

௫௫. பொன்னையுரைப்பதப்பொன்னொடன்றோபுலமைக்கொருவ
ருன்னையுரைத்துரைக்கற்குளரோவுயர்நாற்கவியும்
பின்னையுரைக்கப்பெறுவதல்லாற்பெருந்தண்குருகூர்த்
தென்னையுரைக்குமியற்குமிசைக்குஞ்சிகாமணியே.

(இ - ள்.) பெருந் தண் குருகூர் - மகிமையுள்ளதும் ஜீவனத்தால் குளிர்ந்ததுமான திருக்குருகூரிலே திருவவதரித்த, தென்னை உரைக்கும் இயற்கும் இசைக்கும் சிகாமணியே - தமிழ்ப்பாஷைக்கும் அதன்பகுதிகளான இயற்றமிழுக்கும் இசைத்தமிழுக்கும் தலையிலணியும் இரத்தினாபரணம் போல அனைவரும் தலைமேற்கொண்டு கொண்டாடப்பெற்றவனே!—பொன்னை உரைப்பது அ பொன்னொடு அன்றே - (மாற்றறியுமாறு) பொன்னை (உரைகல்லில்) உரைத்துப்பார்ப்பது அதற்குச்சிறிதுமேல்கீழாகவுள்ளபொன்னுடன் வைத்து உரைத்தன்றே? (அங்ஙனம் நோக்கப்புகுமிடத்து), உயர் நால் கவியும் பின்னை உரைக்க பெறுவது அல்லால் - சிறந்த நால்வகைக் கவிகளனைவரும் கடைசித்தரமாகச் சொல்லத்தகுவதே யல்லாமல், புலமைக்கு உன்னை உரைத்து உரைத்தற்கு ஒருவர் உளரோ - கல்வித்திறத்தில் உன்னைச் சொல்லி உனக்கு ஈடாக மற்றுஞ்சொல்வதற்கு வேறொருவர் இருக்கின்றனரோ? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)—குருகூர்ச்சிகாமணி என இயையும்.

கீழ்ச்செய்யுளில் 'செந்தமிழ்ப்புலவர்க்கேறே' என்றும், 'மறையோர் பெற்ற ஆணிப்பொன்னே' என்றும் கூறியதற்கு ஒருசார் விவரணமாகின்றது, இச்செய்யுள். மாற்றுவகையொவ்வொன்றிலும் சரியான மாற்றுள்ள உரையாணிப்பொன்னை உரைகல்லில்உரைத்து அதற்குச் சிறிதுஏற்றத்தாழ்வாகவுள்ளபொன்னின்உரையை அதனுடன்ஒப்புநோக்கிப் பொன்னின்தரத்தையறிவது இயல்பு. அங்ஙனம் செந்தமிழ்க்கவித்திறத்தில் உன்னைச் சொல்லி மற்றும்உன்னோடுசிறிதுமுன்பின்னாக ஒப்புமையுடையவரொன்று காட்டப்பெறும்படி ஒருவருமில்லை; சிறந்தவரெனப்படுகிற நால்வகைக்கவிகளெல்லாரும் உன்னைநோக்குமிடத்து மிகவும் இழிவானதரத்தில் நிற்றலால் என்பது, இதன்கருத்து. அன்றே - தேற்றம். உளரோ, ஓ - எதிர்மறை.

பாரதகண்டத்திலே தென்பகுதியில் வழங்கும் பாஷை யாதலால், தமிழுக்குத் தென்மொழி, தென்சொல், தென்கலை என்பனபோல, 'தென்னுரை' என்றும் ஒரு பெயருண்டு. அதனை "அன்னநடையாரலரேச வாடவர்மேல், மன்னுமடலூரா ரென்பதோர் வாசகமும், தென்னுரையிற் கேட்டறிவதுண்டு" எனப் பெரியதிருமடலிலுங் காண்க. அப்பெயர், எதுகைநயத்தின்பொருட்டு இடையில் ஐகாரச்சாரியைபெற்று, 'தென்னையுரை' எனப்பட்டது. இனி, ஐ - அழகிய, தென்உரை - தென்மொழி யென்றலும் ஒன்று. "குருகையர்கோன் யாழினிசைவேதத்தியல்" என்றபடி நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழி முதலிய திவ்வியப்பிரபந்தங்களில் இயற்றமிழ்ப் பொலிவும் இசைத்தமிழ்ப்பொலிவும் மிக்குவிளங்குதலால், அவை தனியே

பாராட்டி யெடுத்துக் கூறப்பட்டனவென்க. இனி, தென்னை என்பதற்கும் தென்னாட்டுக்குத்தலைவனாயுள்ளவனே! என்றும், அழகியகடவுளே! என்றும் அண்மைவிளியாகப் பொருள்கொள்ளவுங் கூடும்; அன்றி, தென்னை உரைக்கும் என்பதை இயற்கும் இசைக்கும் அடைமொழியாக்கி, அழகாகவும் வியக்கத்தக்கபடியுஞ் சொல்லப்படுகிற இயற்றமிழ்க்கும் இசைத்தமிழ்க்கும் என்னவும் அமையும். 'குருகூரென்னை' என்ற பாடம், குருகூரில் அவதரித்த எனது இறைவனே யென்று பொருள்படும்; என்னை = நம்ஆழ்வார். (ருரு)

[மகட்பாற்காஞ்சி.]

ருசு. மணித்தாரரசன் றன்னோலையைத்தூதுவன்வாய்வழியே
திணித்தாசழியச்சிதைமின் றலையையெந்தீவினையைத்
துணித்தான்குருகைப்பிரான் றமிழாற்சுருதிப்பொருளைப்
பணித்தான்பணியன்றெனிற்கொள்ளுங்கொள்ளுமெம்பாவையையே.

(இ - ள்.) எம் தீ வினையை துணித்தான் - எம்முடைய கொடிய கருமங்களைப் போக்கியருளியவரும், சுருதி பொருளை தமிழால் பணித்தான் - வேதங்களின் பொருளைத் தமிழ்ப்பாடல்களினாற் பாடியருளியவரும் ஆகிய, குருகை பிரான் - திருக்குருகூரில் அவதரித்த தலைவரான நம்மாழ்வாருடைய, பணி அன்று எனில் - கட்டளையன்றாயின்,—மணி தார் அரசன்தன் ஓலையை - அழகிய மாலையைத் தரித்த அவ்வரசனது திருமுகத்தை, தூதுவன் வாய் வழியே திணித்து - (அதனைக்கொண்டுவந்த) தூதனது வாயினுள்ளே புகுத்தி அவ்வாயை நன்றாக அடைத்து, ஆசு அழிய தலையை சிதைமின் - ('பெண்ணைக்கொடு' என்றுகேட்ட) குற்றந் தீருமாறு (அத்தூதனது) தலையைத் துணித்திடுங்கள்; எம் பாவையை கொள்ளும் கொள்ளும் - (எம்குருகைப்பிரானன்றி மற்றோரரசன்) எமது பெண்ணைக் கொள்வான் போலும்! கொள்வான்போலும்!! (எ - று.)

மகட்பாற்காஞ்சி யென்பது - புறப்பொருள்திணை பன்னிரண்டனுள் காஞ்சித்திணைக்கு உரிய பலதுறைகளில் ஒன்று. அதாவது - நின்மகளை எனக்குத்தருக வென்றுசொல்லும் அரசனோடு மாறுபடுவது; "ஏந்திழையாட் டருகென்னும் வேந்தனோடு வேறுநின் றன்று—அளியகழல்வேந்த ரம்மாவரிவை, யெளியளெனன்றெள்ளியுரைப்பிற் - குளியாவோ, பண்போற் கிளவியிப் பல்வளையாள் வாண்முகத்த, கண்போற்பகழிகடிது" என்ற புறப்பொருள் வெண்பாமாலையைக் காண்க. "பேசவந்ததூத செல்லரித்தவோலை செல்லுமோ பெருவரங்களருளரங்கர் பின்னைகேள்வர் தாளிலே, பாசம்வைத்த மறவர்பெண்ணை நேசம்வைத்து முன்னமே பட்டமன்னர் பட்டதெங்கள் பதிபுகுந்து பாரடா, வாசலுக்கிடும்படல் கவித்துவந்தகவிகை மாமகுடகோடி திணையளக்கவைத்த காலுநாழியும், வீசுசாமரங் குடிற்றொடுத்தகற்றை சுற்றிலும் வேலியிட்டதவர்களிட்ட வில்லும் வாளும் வேலுமே" என்றாற்போலக் கலம்பகங்களில் மறவர்வார்த்தையாக வரும் 'மறம்' என்னுந் துறை இதன் இனமாம். குருகைப்பிரானுக்கே உரிமைபூண்பவளான தமது மகளை மணம்பேசும்படி ஓர் அரசனால் ஓலைகொடுத்து அனுப்பப்பட்ட தூதன் அவ்வரசன்கட்டளைப்படி தம்பக்கல்வந்து ஓலைகொடுத்துச் சிலவார்த்தை

கூறி மணம்பேசுவாருக, அம்மகட்கு உரியார் மிக்ககோபங்கொண்டு அந்த மணப்பேச்சைமறுத்து அவ்வரசனைக்குறித்துப் பரிகசித்து அத்தூதனை நன்றாகத்தண்டிக்குமாறு தமதுபரிசனங்களை நோக்கிச் கட்டளைகூறின ரென்க.

'குருகைப்பிரான்பணி யன்றெனின் ....தலையைச்சிதைமின்' என்றதனால், இத்தூதன்கொணர்ந்த ஓலை எமதுமகளைக்கொள்ளுதற்கு ஏற்ற குடிப்பிறப்பு முதலிய சிறப்புக்களையுடைய குருகைப்பிரானது கட்டளையடங்கிய தாயின் ஏற்றுக்கொள்ளுதல்; அதுவன்றி, மற்றோரரசனதாயின் அது கொண்டுவந்த இத்தூதனைத் தண்டியுங்க ளென்றவாறும். அம்மகட்பேச்சுக் குத்தாம்இணங்காததேயன்றி அப்பேச்சைக்கேட்டதுமாத்திரத்திலும் விருப்பங்கொள்ளாமையால், அத்தூதன் மேன்மேற்பேசாதபடி முதலில் அவன் வாயில் அவ்வோலையை அடையுங்க ளென்பார், 'ஓலையைத் தூதுவன்வாய் வழியே திணித்து' என்றார்; அவ்வோலையைச் சிதைத்தலும் செய்யவேண்டு மென்க. ஆசு - குற்றம்; இங்குக் குருகைப்பிரானுக்கு அடிமையென்பது பிரசித்தமாயிருக்கும் மகட்பேசவந்தது குற்றம். அவ்வரசன் எமதுமகளை ஒருநாளும் ஒருபடியாலும் கொள்ளா னென்பார், இகழ்ச்சிக்குறிப்பாக 'கொள்ளுங் கொள்ளும் எம்பாவையை' என்றார்; அடுக்கு - இகழ்ச்சியை விளக்கும்.

“கண்டுகொண்டென்னைக் காரிமாறப்பிரான், பண்டைவல்வினைபாற்றி யருளினான்” என்றபடி அடிமைபூண்டஎமது அருவினையைத் தீர்த்தருளிய வரும், “அவ்வருமறையின்பொருள் அருள்கொண்டு ஆயிரமின்தமிழ்பாடினான்” என்றபடி அறிதற்கரிய மறைப்பொருளை அனைவரும் எளிதில் அறிந்துஉய்யுமாறு தமிழிற்பாடியருளியவருமாகிய நம்மாழ்வார்க்கே அடிமை பூண்ட எமதுஉயிர் பிறிதொரு கடவுளர்க்கேனும் மானிடர்க்கேனும் உரிமை பூணாது என்று, அங்ஙனம் பிறர்க்கு ஆட்படுத்த முயல்வாரை நோக்கிக் கம்பநாடர் கடிந்துகூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். விவரம் கண்டு கொள்க.

மணித்தார் - இரத்தினஹாரமுமாம். பாவை - சித்திரப்பிரதிமை போல அழகியவள்; கண்மணிப்பாவைபோல் அருமையானவள்; கொல்லிப்பாவை போலப் பிறர் மோகித்துஅழிதற்குக் காரணமாகுபவள்; உவமையாகுபெயர். “எல்லாம் வெகுண்டார்முன் தோன்றாக்கெடும்” ஆதலால், “ஓலை கிளையவ ரேத்துநாவலர், விரவியதூதுவர் விருத்தர் வேதியர், அரிவையர் வெஞ்சமரஞ்சுவோர் பெருங், குரவ ரென்றிவர்களைக் கோறல் பாவமே” என்ற நீதியைக் கோபாவேசத்தால் மறந்து இங்ஙனம் 'தூதுவன்தலையைச் சிதைமின்' என்று கொடியகட்டளைகூறின ரென்க. (௫௬)

௫௭. பாவைத்திருவாய்மொழிப்பழத்தைப்பசுங்கற்பகத்தின்
பூவைப்பொருகடற்போதாவமுதைப்பொருள்சுரக்குங்
கோவைப்பணித்தவெங்கோவையல்லாலென்னைக்குற்றங்கண்
ஞவைப்பறிப்பினுநல்லரன்றேமற்றைநாவலரே.

(இ - ள்.) பழத்தை - மிக்கஇனிமையாற் கனிந்த பழம்போன்றதும், பசுங் கற்பகத்தின் பூவை - வேண்டுவார்வேண்டும்பயன்களைத்தரும் ஆற்றலினாலும் அனைவரும் விரும்பித் தலைமேற்கொள்ளப்பெறுஞ் சிறப்பினாலும்

பசுமையான கற்பகவிருக்ஷத்தின்மலர்போன்றதும், பொரு கடல் போதா அமுதை - (உண்ணஉண்ணத் தெவிட்டாமையால்) அலைமோதும் பாற்கடலினின்று தோன்றாததோர் ஆராவமுதம்போன்றதும், பொருள் சுரக்கும் கோவை - நற்பொருளாகிய பாலை மேன்மேற்சுரக்கும் காமதேநுபோன்றதும் ஆகிய, திருவாய்மொழி பாவை - திருவாய்மொழி யென்னும் (தொடர்நிலைச்) செய்யுளை, பணித்த - திருவாய்மலர்ந்தருளிய, எம் கோவை - எமது இறைவரான நம்மாழ்வாரை, அல்லா - அல்லாத பிறரை முன்பு பாராட்டிப் புகழ்ந்து கவிபாடிய, என்னை—, குற்றம் கண்டு - (முன்னமே இவரைப்பாடாத) குற்றமுடையனாக உணர்ந்து, மற்றை நாவலர் என் நாவை பறிப்பினும் - (அக்குற்றத்துக்கு ஏற்றதண்டனையாக) மற்றைப்புலவர்கள் எனது நாக்கைப் பிடுங்கிவிட்டாலும், நல்லர் அன்றே - நல்லவரல்லரோ? [நல்லவரேயாவர் என்றபடி]; (எ - று.)

பழமும் கற்பகமலரும் அமுதமும் பசுவும் போன்ற திருவாய்மொழியென்னுந் திவ்வியப்பிரபந்தத்தைப் பாடி உலகுக்கு உபகரித்தவரும், எல்லாவுயிர்கட்குந் தலைவரு மாகிய நம்மாழ்வாரது மகிமையை உணர்ந்து அவரையேபாடுவது கடவதாயிருக்க, அதுசெய்யாது இதுவரை யான் பிறரைப் பொருள்செய்து கொண்டாடிப்பாடிய குற்றத்திற்காகத் தக்கபுலவர்கள் என்னை நாவைப்பறித்திட்டாலும் தகு மென்பதாம். பழுதேபலபகலும்போயினவென்று அஞ்சி அதுகுறித்து அநுதாபங்கொண்டு அக்கழிவிரக்கத்தாற் கூறியது இது. குற்றஞ்செய்தவர் இம்மையிலேயே தக்கவரால் தக்கதண்டனை பெறுவாராயின், அவ்வளவோடு, அத்தீவினை தீர்ந்திடுதல்பற்றி அவ்வினைப்பயனால் மறுமையில் நரகமடையாரென்பது நூல்துணிபாதலால், அங்ஙனம் தமக்குநன்மைசெய்வாரை 'நல்லரன்றே' என்றார். அன்றே - தேற்றம். அன்று ஏ என்ற இரண்டெதிர்மறை, ஒருங்குதொடர்ந்து உடன்பாட்டுப்பொருளை உணர்த்தித் தேற்றக்கருத்தை விளக்கினவென்க.

பா - இங்கு, பாடல்களினாலாகிய பிரபந்தத்துக்குக் கருவியாகுபெயர். பாடலுக்குஉரிய இலக்கணங்களெல்லாம் நன்குஅமைந்த பாடலென்பார் 'பா' என்று சிறப்பித்துக் கூறினரெனக் கொள்ளலாம். 'கற்பகத்தின்பூ' என்றதை, "என்றும்புலராதியாணர்நாட்செல்லுகினும், நின்றலர்ந்துதேன்பிலிற்றுநீர்மையதாய்க்—குன்றாத, செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத்திருமலர்போல், மன்புலவன் வள்ளுவன் வாய்ச்சொல்" என்ற திருவள்ளுவமாலையோடு ஒப்பிடுக. 'பொருகடற்போதாவமுது' என்றது, இல்பொருளுவமை. 'பழகப்பழகப் பாலும் புளிக்கும்' என்ற தன்மை இத்திருவாய்மொழியமுதுக்கு இல்லையென்க. மிகுதியாக அலையெறியுமாறு கடையப்பட்ட திருப்பாற்கடலினின்று தோன்றிய அமிர்தம் சிலகாலமளவும் மரணமில்லாத தெய்வப்பிறப்பின் சிற்றின்ப வாழ்க்கையையே தரவல்தாம்; இத்திருவாய்மொழியமுதமோ எந்நாளும்அழியாத முத்தியுலகதுப் பேரின்பவாழ்க்கையைத் தருவதாகலால், இதனை 'பொருகடற்போதாவமுது' எனவேண்டிற்று. "துறவாதவர்க்குந் துறந்தவர்க்குஞ் சொல்லே சுரக்கும், அறவாவிவையிங் கொராயிரநிற்கவங்தோ சிலர்போய், மறவாதியர்சொன்ன வாசகமாறவட்டா

-வைப் பற்றிக், கறவாக்கிடப்ப வென்பெறவோ தக்கன் கைவலிப்பே" என்று மேல்வகுக்துக் காட்டியதனைத் தொகுத்துச்சுட்டி 'பொருள்சாக்குக்கோ' என்றார்; கோ-வடசொல். 'கோவைப்பணித்த வெக்கோவை' என்றவிடத்து மடக்கு என்னுஞ் சொல்லணி காண்க. கோ - அரசனை யுணர்த்தும்போது: தமிழ்மொழி. நாவலர்-கவநம், பிரசங்கம், போதனை முதலிய நாவின்வன் மையுடையவர். (ருஎ)

ருஅ. நாவலந்தீவிற்கவிகளெல்லாஞ்சிலநாள்கழியப்
பூவலந்தீவதுபோல்வவல்லாற்குருகூர்ப்புலவன்
கேவலந்தீங்கறுப்பான்கவிபோலெங்கும்போய்க்கொழுமிக்
கூவலந்தீம்புனலுங்கொள்ளுமேவெள்ளங்கோளிழைத்தே.

(இ - ள்.) அம் நாவல் தீவில் - அழகிய ஜம்பூத்வீபத்தில், கவிகள் எல்லாம் - (பிறர்பாடிய) பாடல்களெல்லாம், சில நாள் கழிய - சிலநாள்கழிகிற வளவிலே, பூ வலம் தீவது போல்வ அல்லால் - மலரினது (மணம் மென்மை முதலிய) சிறப்புக் கெட்டழிவதுபோலத் தாம் கெட்டிடுமே யல்லாமல்,— தீங்கு கேவலம் அறுப்பான் குருகூர் புலவன் கவி போல் - (அடியார்களு டைய) தீவினைகளை எளிதில் தீர்த்தருள்பவரும் திருக்குருகூரில் அவதரித்த சிறந்த புலவருமாகிய நம்மாழ்வாருடைய திருவாய்மொழிப் பாசுரங்கள் போல,—எங்கும் போய் கொழுமி - எவ்விடத்தும் போய்ப் பரவி, வெள்ளம் கோள் இழைத்து - வெள்ளத்தையொத்தல்செய்து [வெள்ளம்போல்வதாய் என்றபடி], கூவல் அம் தீம் புனலும் கொள்ளுமே - கிணற்றிலுள்ள அழகிய இனிய நீரையும் கொள்ளமாட்டுமோ? [மாட்டா என்றபடி]; (எ - று.)

மணமும் பொலிவு முடையனவாய்ப் பூத்த மலர்கள் விரைவில் அச் சிறப்புநிலைகுலையப்பெற்று வாடியழிதல்போல, உலகத்திற்பிறர்பாடும் பாடல் களெல்லாம் அப்பொழுது சிறந்தனவாகக் காணப்பட்டாலும் என்றும் அழி வின்றி நிலைத்து நிற்கமாட்டா; ஆழ்வார்பாசுரங்களோ அங்ஙனமன்றி என் றும் அழியாது எங்கும் போய்ப் பரவிப் பெருவெள்ளம்போல்வனவாகிக் கிணற்றகத்து நீர்போல் அகத்துநின்ற அந்தரியாமியான பரமாத்மாவின் சொரூபத்தையும் தன்மேல் விளங்கும்படிகொண்டு வெளிக்காட்டு மென்ப தாம். 'கிணற்றுநீரை வெள்ளம் கொள்ளாது' என்ற பொது வழக்குக்குச் சிறப்பாக இத்திருவாய்மொழிவெள்ளம் எத்துணையாழ்பொருளையும் தன்னி லேபுலப்படுத்து மென்க.

இந்தப்பூமியின் நடுவிலுள்ள மகாமேருமலையை யடுத்துத் தெற்கிலுள்ள கந்தமாதநகிரியின்மேல், பதினோராயிரம் யோசனையளவுள்ளதாய்ப் பிரகாசிக் கிறதொரு நாவல்மரம் இருக்கின்றது; அதனையுடைமைபற்றி, இந்தப்பூமிக்கு ஜம்பூத்வீபம் என்கிற பெயர் உண்டாயிற்று என்று புராணம் கூறும். அது, தமிழில் நாவல்தீவு எனப்பட்டது. நாவலந்தீவு, கூவலந்தீம்புனல் என்ற விடங்களில், அம் - சாரியை யெனினுமாம். தீவு - த்வீபமென்ற வடசொல் லின் சிதைவு. கேவலம் தீங்கு அறுப்பான் - இழிவான குற்றங்களைப் போக் குபவன் எனினுமாம். தீங்கு கேவலம் அறுப்பான் - தீமைகளையெல்லாம் போக்குபவ னென்னவும் அமையும். கூபம் என்ற வடசொல்லின் விகார

துன்னைநிறைத்துக்கொண்டேன், கொடுமைசெய்யுங் கூற்றமும் என்கோலாடி குறுகப்பெறா" என்ற பெரியாழ்வார்திருமொழி இங்கு நோக்கத் தக்கது. முன்னும் "கொடியெடுத்துக்கொண்டுநின்றே னினிக்கொடுங்கூற்றினுக்கோ, ரடியெடுத்துக்கொண்டென் பால்வரலாகுங்கொல்" என்றார். மகாபாகவதோத்தமராகிய ஆழ்வாரை வழிபட்டபொழுதே தீவினையனைத்தும் தீர்ந்திட்டதனால் பாவிகளைத்தண்டிப்பவனான யமன் எனது உயிர்க்கு ஊறு செய்யுமாறில்லை யென்பது கருத்து. ஆழ்வார் பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பால்குடித்தல் முதலிய லோகவியாபாரமொன்று மின்றி உலக நடைக்கு மாறாக இருந்ததனால், இவர்க்கு மாறன் என்று திருநாமமாயிற்று; வலியவினைகட்கு மாறாகவிருத்தலாலும், அந்யமதஸ்தர்களை அடக்கி அவர்கட்குச் சத்துருவாயிருத்தலாலும், பாண்டியநாட்டில் தலைமையாகத் தோன்றியதனாலும் வந்த பெய ரென்றலு முண்டு. (சு0)

[தலைவனைப்பிரிந்த தலைவி தென்றற்கு வருந்தியிரங்கல்.]

சுக. கூறப்படாமறையின்பொருள்கூறிக்குவலயத்தோர்
மாறப்படாவினைமாற்றியமாறன்மகிழலங்க
னாறப்படாநின்றபோதமுதாகுமதன்றிநஞ்சந்
தேறப்படாதுகெட்டேன்மன்றனாறுந்தண்டென்றலையே.

(இ - ள்.) கூறப்படா மறையின் பொருள் கூறி - (எவராலுஞ்) சொல்லப்படாத [எவர்க்குஞ்சொல்லமுடியாத] வேதங்களின் ஆழ்பொருள்களை (அனைவரும் எளிதில்அறியலாம்படி தமிழினால்) பாடியுணர்த்தி, குவலயத்தோர் மாறப்படா வினை மாற்றிய - நிலவுலகத்திலுள்ளாரது நீக்கவொண்ணாத அருவினைகளை நீக்கியருளிய, மாறன் - நம்மாழ்வார்தரித்த, மகிழ்அலங்கல் - மகிழம்பூமாலை, நாறப்படாநின்ற போது - மணம்வீசப்பெறுகிறகாலத்தில், அமுது ஆகும் - (தென்றற்காற்று) அமிருதம்போ லினியதாம்; அது அன்றி - அம்மகிழம்பூமாலை மணம்வீசப்பெறாதபோது, நஞ்சம் - விஷம் போலக் கொடுமைசெய்வதாம்; (ஆகவே), மன்றல் நாறும் தண் தென்றலை - வாசனைவீசுகிற குளிர்ந்த தென்றற்காற்றை, தேறப்படாது-நம்பத்தகாது; கெட்டேன்—! (எ - று.)

'கெட்டேன்' என்றது, மிக்கஇரக்கத்தாற்கூறும் வார்த்தை; "கேளாராயர்குலத்தவ ரிப்பழி கெட்டேன் வாழ்வில்லை" எனப் பெரியாழ்வார் திருமொழியிலுங் காண்க.

கந்தவஹனென்றும் கந்தவாஹனென்றும் பெயர்பெறுமாறு மணத்தைக் கொண்டு வீசு மியல்பினதும் பொதுப்பட எல்லாவுயிர்கட்கும் குளிர்ச்சியைச்செய்யுந்தன்மையது மான தென்றற்காற்றானது எனதுதலைவர் சாத்திக்கொண்டுள்ள மகிழம்பூமாலையின்மேற் பட்டு அதன் நறுமணத்தைக் கொண்டு என்மேல் வீசும்போது அவரைப்பிரிந்துநிற்கிற எனக்கு அமிருதம் போல இன்பத்தைத் தருகின்றது; அதுதானே அங்குப்படாமல் அந்நறுமணங்கொணராது வெறுமையாய் வீசும்போது எனக்கு விஷம் போல மிக்கவருத்தத்தைச் செய்கின்றது; ஆதலால், தென்றற்காற்றைப் பொதுப்பட இனியதென்று நம்பக்கூடவில்லையென்று, தலைவனைப்பிரிந்து அப்பிரி

வுந் துயரையாற்றாத தலைவி தென்றல்வரவுக்கு ஒருசார் வருந்தி யிரங்கிக் கூறிய வார்த்தை இது; திருவிருத்தத்தில் "மால்வரையைக் கீழ்ந்துமறி தரக்கீண்டெடுத்தான் முடிசூடுதுழா, யலர்தூங்கிறுபசுந்தென்றல் வந்தோ வந்துலாகின்றதே" என்றது, தலைவனது திருத்துழாய்மாலையிற் பட்ட தென்றல் வரத் தலைவி மகிழ்ந்துரைத்த வார்த்தையாதல் காண்க. தலைவனுடம் போடு சம்பந்தப்பட்ட பொருள் தன்னுடம்பின்மீது வந்து படுகிறபோது பிரிவாற்றாமைத்துயரை ஒருவாறு தணிவித்து மகிழ்ச்சியைவிளைக்குமென்க. துணைவரோடு கூடியுள்ளார்க்கு இன்பஞ்செய்யுந் தென்றல், அவரைப்பிரிந் தார்க்குத் துன்பஞ்செய்யுமென்றல் வெளிப்படை; "தென்றலுந் தீயினிற் கொடிதாம்" என்றார் திருமங்கையாழ்வாரும். "தென்றற்கும்.................. அயர்ந்தா, ளென் றன்னமேயென்னைக்குமாறற்கியம்பு" என்பது. இரத்தினச் சுருக்கம்.

குவலயம் - பூமண்டலம். மாறன் என்ற பெயர்க்கு ஒருகாரணப்பொருள் கற்பிப்பார்போல, 'குவலயத்தோர் மாறப்படாவினை மாற்றிய மாறன்' என்றார்; 'தொல்லைவல்வினைக் கோர்மாறன்" என்பர் பின்னைப்பெருமாளையங்காரும். வினை - கருமம். தம்பக்கல் திருவுள்ளமுவந்து திருக்குருகூர்ப்பொலிந்துநின்றபிரான் பிரசாதித்த மகிழமலர்மாலையைத் தரித்தலால், நம்மாழ்வார்க்கு வகுளாபரணரென்று ஒருதிருநாமம் வழங்கும். "வண்குருகூர் நகரான், நாட்கமழ்மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன்" என்று ஆழ்வார் தாமே தம்மைக்கூறியிருத்தலுங் காண்க. தென்றல் - தென்திசையிலிருந்து வருங் காற்று.

தமது ஞானக்கண்ணுக்கு ஆழ்வார் புலனாகி மறைந்தவளவிலே அவரது ஸதாஸாந்நித்தியத்தைப்பெறும் விருப்பினால்வருந்துகிற கம்பநாடர், லௌகிக பதார்த்தங்கள் அவரது சம்பந்தத்தை யுடையனவாம் போது தமக்கு மகிழ்ச்சியையும், அவரது சம்பந்தமுடையன வாகாதபோது தமக்கு வருத்தத்தையுந் தரு மியல்பை யெடுத்துக்கூறி ஆற்றுதல், இதற்கு உள்ளுறைபொருள். விவரம் நோக்கிக்கொள்க. (௯௧)

௯௨. தென்றலைத்தோன்றுமுபநிடதத்தையென்றீவினையை
நின்றலைத்தோன்றுநியாயநெறியைநிறைகுருகூர்
மன்றலைத்தோன்றுமதுரகவியைமனத்துள்வைப்பா
ரென்றலைத்தோன்றெம்பிராற்களென்னாவுக்குரியவரே.

(இ - ள்.) தென்தலை தோன்றும் உபநிடதத்தை - தென்திசையிடத்தே உண்டாகிய வேதாந்தமும், என் தீ வினையை நின்று அலைத்து ஒன்றும் [ஒன்றும்] நியாயம் நெறியை - எனது கொடிய கருமங்களை உறுதியாகப் போக்கிப் பொருந்திய நீதிமார்க்கமுடையனவுமாகிய, நிறை குருகூர் மன்தலை தோன்றும் மதுர கவியை - (எல்லாவளங்களும்) நிறைந்த திருக்குருகூரில் அவதரித்த தலைவராகிய நம்மாழ்வார்பக்கல் உண்டான இனியபாசுரங்களை, மனத்துள் வைப்பார் - (ஓதியுணர்ந்து) தம்மனத்தில் வைத்துக்கொள்பவர்கள், என்தலை தோன்று எம் பிராற்கள் - எனது சிரசின்மேற் கொள்ளப்பட்டு விளங்கும் எமது தலைவராவர்; என் நாவுக்கு உரியவர் - எனது நாவினால் துதிக்கப்படுதற்கும் உரியவராவர்; (எ - று.)

ஸம்ஸ்கிருதபாஷை ஆதியில் வடதிசையிலே மிக்கு வழங்கியதனால் அதற்கு வடமொழி யென்று பெயராயிற்று. தமிழ்ப்பாஷை இப்பரதகண்டத்தில் தென்பகுதியாகிய குணகடல் குமரி குடகம் வேங்கடம் என்னும் நான்கெல்லையினுட்பட்ட தேசத்தில் வழங்குதலால், தென்மொழி யெனப்படும். ஞானகாண்ட மெனப்படுகிற உபநிஷத்துக்கள், வடமொழிவேதத்தின் ஒருகூறு. அவ்வடமொழி வேதாந்தத்தின் பொருள்களமைய ஆழ்வார் பாடிய பிரபந்தங்கள் தென்மொழியின வாதலால், 'தென்தலைத்தோன்றுமுபநிடதம்' எனப்பட்டன. ஒன்றும் என்பது, ஓன்றும் என நீட்டல்விகாரம்பெற்றது. ஆழ்வார் அருளிச்செய்த பிரபந்தங்களெல்லாம் சந்மார்க்கத்தையே உணர்த்துவனவும் ஆதரத்தோடு தம்மை ஓதியுணர்வாரது கொடிய கருமங்களைப் போக்கி அவர்கட்கு நற்கதி தருவனவு மாதலால், 'என்தீவினையை நின்றுஅலைத்துஒன்றும் நியாயநெறி' என்றார். மன்தலை-மன்னனிடத்து; தலை-ஏழனுருபு. மதுரகவி-சொல்லினிமையும் பொருளினிமையுமுடைய பாடல். பிராற்கள்=பிரான்கள்; பிராக்கள் என வழங்குதலுமுண்டு. "அப்பனைப், பெருமைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர், வருமையுமிம்மையு நம்மையளிக்கும் பிராக்களே" என்பது, திருவாய்மொழி. ஆழ்வாரருளிச்செயல்களைப் பாராயணஞ் செய்பவர் யான் தலைமேற்கொண்டு வணங்கித் துதிக்கத்தக்கவராவ ரென்று அந்த அடியாரடியார்பக்கல் தமக்குஉள்ள ஈடுபாட்டை வெளியிட்டார். அலைத்துநின்று என மாறினுமாம். (கூஉ)

கூ௩. உரிக்கின்றகோடலினுந்துகந்தம்மெனவொன்றுமின்றி
விரிக்குந்தொறும்வெறும்பாழாய்விடும்பிறர்புன்கவிமெய்
தெரிக்கின்றகோச்சடகோபன்றன்றெய்வக்கவிபுவியிற்
சுரிக்கின்றநுண்மணலூற்றொக்குந்தோண்டச்சுரத்தலினே.

(இ - ள்.) பிறர் புல் கவி - அயலார்பாடுகிற புல்லிய பாடல்கள்.—உரிக்கின்ற கோடலின் உந்து கந்தம் என - உரிக்கப்படுகின்ற வெண்காந்தளின் பெரிய கிழங்குபோல, விரிக்கும் தொறும் ஒன்றும் இன்றி வெறும் பாழ் ஆய் விடும் வருத்து நோக்க நோக்கச் சாரமொன்றுமில்லாமல் மிகவும்பயனற்றனவாய்ப்போய்விடும்; மெய் தெரிக்கின்ற கோ - உண்மைப்பொருளை யுணர்த்துகிற தலைவரான, சடகோபன்தன் - நம்மாழ்வாருடைய, தெய்வம் கவி - தெய்வத்தன்மையுள்ள பாடல்களோ, தோண்ட சுரத்தலின் - ஆழ்ந்து நோக்க நோக்க மேன்மேல் நற்பொருள் இடையறாது வெளிப்படுதலால், புவியில் சுரிக்கின்ற நுண் மணல் ஊற்று ஒக்கும் - பூமியிலே அருவுகின்ற நுண்ணிய மணற்பாங்கிலுள்ள நீரூற்றைப் போன்றிருக்கும்; (எ - று.)

வெண்காந்தட்கிழங்கு உருவத்திற் பெரிதாயிருந்தாலும் உரித்துக்கொண்டு செல்லச்செல்ல உள்ளீடொன்றும் இலதாதல்போல, பிறர்பாடும் புன்கவிகள் மேல்நோக்கில் ஒரு குறையாதிருப்பினும் பொருள் வருத்து நோக்கிக்கொண்டு ஆழ்ந்துசெல்லச்செல்ல உள்ளே ஒன்றும் சாரமில்லாமல் பயனற்று நிற்கும் என்பது, முந்திய வாக்கியத்தின் கருத்து; கோடலுரிபோல் ஆராயின் ஏதுமிலையாதி" என்ற கம்பராமாயணத்திலும் இவ்வுவமை விளங்கக் காண்க. வெறும்பாழ் - சுத்தசூந்யம்; இங்கே பொருட்சிறப்புச்

சிறிதுமின்மை. நுண்மணற்பாக்குகிலத்தி லுள்ள ஊற்றுத் தோண்டத் தோண்ட மேன்மேல் நீர்சுரக்குமாறுபோல நம்மாழ்வாருடைய திவ்விய கவிகள் ஆழ்ந்து நோக்கநோக்க மேன்மேற் பொருள்சுரந்து கொண்டிருக்கும் என்பது, பிந்திய வாக்கியத்தின் கருத்து; "மணற்கிளைக்க நீரூறும் மைந்தர்கள் வாய்வைத்து, உணச் சுரக்கும் தாய்முலை பொன்பால்-பிணக்கிலா. வாய்மொழி வள்ளுவர் முப்பால் மதிப்புலவோர்க்கு, ஆய்தொறு ஊறும் அறிவு" என்ற திருவள்ளுவமாலையும், "தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக், கற்றனைத்து ஊறும் அறிவு" என்ற திருவள்ளுவரும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கன. இரண்டும் - உவமையணி. இங்ஙனம், பிறர்புன்கவிக்கும் ஆழ்வார் தெய்வக்கவிக்கும் உள்ள மிக்க ஏற்றத்தாழ்வை உபமான பூர்வமாக நன்கு எடுத்துக்காட்டியவாறும். மெய்தெரிக்கின்ற கோ - வேதசாஸ்திரங்கள் கொண்டு ஆய்ந்து அரிதிலுணர்த்தக்க தத்துவார்த்தங்களைச் செந்தமிழ்ப் பாடல்கள் கொண்டு விளங்க உணர்த்தி அவ்வப்பொருளின் உண்மை நிலையை யாவரும் எளிதில் அறியும்படி செய்தருளிய பெரியோன்.

உந்துதல் - செழித்துவளர்தல். கந்தம் - கிழங்கு: வடசொல். தெரிக்கின்ற - தெரிகின்ற என்பதன் பிறவினை. ௬௩

௬௪. சுரக்குந்திருவும்வறுமையுந்தீருந்தொடக்குவிட்டுக்
கரக்குமிருவினைமேன்மையுங்காணுங்கயல்குதிப்பத்
திரக்குங்கழைநெடுந்தாளிற்றொடுத்தசெந்தேனுடைந்து
பரக்கும்பழனவயற்குருகூர்வளம்பாடுமினே.

(இ - ள்.) திரக்கும்-உறுதிபெற்ற [நன்கு வளர்ந்து முதிர்ந்த], நெடு - நீண்ட, கழை தாளில் - கருப்பந்தண்டிலே, தொடுத்த - கட்டிய, செம்தேன் - சிவந்ததேனையுடைய கூடுகள், கயல் குதிப்ப உடைந்து - (அருகிலுள்ள) கயல்மீன்கள் துள்ளிவிழும்போது அவைபடுதலால் உடைபட, பரக்கும் - (அத்தேனிறால்களினின்று தேன்) பரவிப்பாயப்பெற்ற, வயல் - கழனிகளையுடைய, பழனம் - மருதநிலஞ் சூழ்ந்த, குருகூர் - (நம்மாழ்வார் திருவவதாரஸ்தலமான) திருக்குருகூரினது, வளம் - மகிமையை, பாடுமின் - கவிபாடித் துதியுங்கள்; (அங்ஙனம் பாடினீராயின் உங்களுக்கு), திருவும் சுரக்கும் - செல்வமும் மேன்மேற்பெருகும்; வறுமையும் தீரும் - தரித்திரமும் நீங்கும்; இரு வினை - (நல்வினை தீவினை யென்னும்) இருவினைகளும், தொடக்கு விட்டு கரக்கும் - தொடர்ச்சிநீங்கி இருந்தவிடம் தெரியாதபடி அழிந்திடும்; மேன்மையும் காணும் - எல்லாமேன்மைகளும் உண்டாகும்; (எ - று.)

என்று உலகத்தார்க்கு நல்லறிவு உணர்த்தியவாறும். தொடக்கு - கட்டு, பந்தம். கரத்தல் - மறைதல். மேன்மையும் காணும் என்பதற்கு - உயர்கதியாகிய பரமபதமும் வாய்க்குமெனினும் அமையும். 'கயல்குதிப்ப .....வயல்' என்றது, ஆழ்வார்திருநகரியின் நிலவள நீர்வளச்சிறப்பை விளக்கியது. திரக்கும் - ஸ்திரமென்ற வடசொல்லின் விகாரமான திரம் என்ற பெயரின்மேற் பிறந்த பெயரெச்சம். சிந்தாமணியில் "கணைநிலைக்கரும்பு" என்றாற்போல 'திரக்குங்கழை' எனப்பட்டது. கழைத்தாள் என்பதை வடநூலார் 'இக்ஷுதண்டம்' என்பதுபோலக்கொள்க. கரும்பில் தேனிறால் தொடுத்தல் கருப்

பின்மேற்றொடுத்த தேன்” எனச் சிந்தாமணியிலுங் காண்க. இனி, கல் என்பதற்கு - மூங்கிலென்று பொருள்கொள்ளுதல் மருதநிலவருணனைக்கு சிறவாமையுணர்க. தேன் - தேனடைக்குத் தானியாகுபெயர். உடைந்து: உடைய: எச்சத்திரிபு. (௬௪

௬௫. பாடுங்கறங்குஞ்சிறைவண்டுபாடப்பைந்தாட்குவளைத்
தோடுங்கறங்குங்குருகைப்பிரானிச்சுழல்பிறவி
யோடுங்கறங்கன்னவாழ்க்கையைநீக்கியுணர்வுதவி
வீடுந்திறந்துதந்தானையெந்நான்றும்விடகிலமே.

(இ - ள்.) சுழல் - சுழன்றுவருகிற [கருமவசத்தால் மாறிமாறிவரு இயல்பினதான], இ பிறவியோடும் - இந்தப்பிறப்புடனே, கறங்கு அன்ன வாழ்க்கையை - காற்றாடிபோன்ற [சிறிதுபொழுதேனும் ஒருநிலையில்லா சுழன்று அலைகிற] இப்பிரபஞ்சவாழ்வை, நீக்கி - (அடியார்களுக்குப்)போக்கி உணர்வு உதவி - நன்ஞானத்தை அளித்து, வீடும் திறந்து தந்தான் - பர பதத்தையும் கதவுதிறந்து தந்தருளியவரும்,—பாடும் கறங்கும் சிறை வண் பாட - இசைபாடிக்கொண்டு சுழன்று மொய்க்கு மியல்பினவான சிறைவ த்தையுடைய வண்டுகள் ரீங்காரஞ்செய்துகொண்டு நெருங்கிமொய்த் மோதுதலால், பைந் தாள் குவளை தோடும் கறங்கும் - பசுமையான நாள தையுடைய குவளை யென்னும் நீர்ப்பூங்கொடிமலரின் இதழ்களும் ஒருநி நில்லாது சுழலப்பெற்ற, குருகை - திருக்குருகூரில் அவதரித்த, பிரானை உபகாரகருமாகிய நம்மாழ்வாரை, எ நான்றும் விடகிலம் - எந்நாளும் வி மாட்டோம், (யாம்); (எ - று.)

நிலவள நீர்வளம் மிக்க திருக்குருகூரில் அவதரித்துத் தம்மைச்சரண மடைந்தவர்களுடைய மாறிமாறிப்பலபிறப்பும் பிறந்திறந்து வருந்துந் துவ பத்தைத் தீர்த்து அவர்கட்குத் தத்துவஞானோபதேசமுகத்தால் வீடுபே வாய்க்கும்படி அருள்செய்தவரான நம்மாழ்வாரை எந்நாளும் விடமாட்டோ யாமென்று தமது துணிவை வெளியிட்டவாறும்.

பாடுங் கறங்கும் வண்டு - பெயரெச்சங்கள் அடுக்கி ஒருபெயரை கொண்டன. இனி, பாடும் - பக்கமுழுவதும் என்றலும் ஒன்று. தாள் தண்டு. (௬௫

[தலைவனைப்பிரிந்த நிலையில் மாலைப்பொழுதுக்கும் இருளுக்கும் ஆற்றாத தலைவியின் துயர்கண்ட தோழி இரங்கல்.]

௬௬. விடவந்தகாரவெம்பாலிற்பராங்குசர்மெல்லியலுக்
கிடர்வந்ததாலென்றிரங்கிப்புணர்ந்திலரின்னுயிரை
யடவந்தகாலன்கொலோவறியேனின்றிவ்வந்திவந்து
படவந்தகாரப்பெரும்புகையோடிப்பரக்கின்றதே.

(இ - ள்.) விடம் அந்தகாரம் - (கருநிறத்தாலும் கொடுமையாலும் விஷம்போன்ற இருளையுடைய, வெம் பாலில் - கொடிய (இரவாகிய காலப் பகுதியில், பர அங்குசர் - பகைவராகிய யானைகளை அடக்கி யாளுதற்கு மாவெட்டிபோன்றவராகிய [பலபராக்கிரமங்கள் மிக்க] தலைவர், மெல் இய

ளுக்கு இடர் வந்தது ஆல் என்று இரங்கி புணர்ந்திலர் - மெல்லியதன்மையையுடையவளான இத்தலைவிக்கு விரகவேதனை நேர்ந்ததேயென்று மனமிரங்கிவந்து கூடினாரில்லை; இன்று - இப்பொழுது, இ அந்தி வந்து பட - இந்த அந்திமாலைப்பொழுதாகிய பெருந்தீ வந்துசேர, அந்தகாரம் பெரும்புகை மூடி பரக்கின்றதே-இருளாகிய பெரும்புகை எங்கும் விடார்ந்துசென்று பரவுகின்றதே! (இது), இன் உயிரை அட வந்த காலன் கொல்லோ - (இத்தலைவியின்) இனிய உயிரை(ச் சமயம்பார்த்து)க் கொல்லவந்த யமன்தானோ? அறியேன் - அறிகின்றேனில்லை; (எ - று.)

மெல்லியல் - இங்கே, விரகவேதனையைப் பொறுக்கும் ஆற்றலில்லாதவள் என்றபடி. காலன் - பிராணிகளின் ஆயுளைக் கணக்கிடுபவனென்று காரணப்பொருள்படும் வடசொல். 'அந்தகாரப் பெரும்புகை' என்பதைநோக்கி, செவ்வானத்தோடு கூடிய மாலைப்பொழுது செந்தீயாகக் கொள்ளப்பட்டது. "காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலைமலரு மிந்நோய்" என்றபடி சேர்க்கைக்கு உரிய காலமாகிய இரவின்தொடக்கமான மாலைப்பொழுதும், அதன்சம்பந்தமான இருளும் பிரிந்தார்க்கு அத்துயரை மிகுவிக்குமென்க.

உரியகாலத்தில் ஆழ்வாரது நிரந்தராநுபவம் தமக்குக்கிடைக்கவில்லையேயென்று மோகாந்தகாரத்திலே மிகவருந்தும் கம்பநாடரது நிலைமையை நோக்கின அன்பர்கள் இரங்கிக்கூறும் வார்த்தை. இதற்கு உள்ளுறை பொருள்; விரிப்பிற்பெருகும். மிகக்களித்துக் கொழுத்துச் செருக்கித்திரிந்து எதிர்த்து வாதப்போர்க்குவரும் பிறமதத்தவராகிய மதயானைகளைத் தமது பிரபந்தங்களிற் கூறிய தத்துவார்த்தங்களினால் அடக்கிக் கீழ்ப்படுத்தித் தம் வசத்தில்வைத்துநடத்துந் திறமுடையராய் அவற்றிற்குமாவெட்டியென்னுங் கருவிபோ லிருத்தலால், நம்மாழ்வார்க்கு, பராங்குசரென்று திருநாமமாயிற்று. பர அங்குசர் என்று பிரியும்: வடமொழிப்புணர்ச்சி, தீர்க்கசந்தி: பரர் - அயலார்; அங்குசம் - மாவெட்டி, தோட்டி. (௯௬)

[உடன்போக்கில் தலைவன் தலைவிக்குத் தன்நகரணிமைகூறல்.]

௯௭. பரவாதுகேட்டினிப்பைம்பகடசுருதிப்பசுக்கள்
சுரவாதவற்றைச்சுரப்பித்தவைசொரியும்பொருட்பால்
கரவாதுதவியமாறன்கவியனையாயினியோர்
சரவாதமிப்புறமப்புறங்காணத்தடம்பணையே.

(இ - ள்.) சுருதி பசுக்கள் சுரவாதவற்றை - எளிதிற் பொருள் புலப்படாத வேதங்களாகிய பால்சுரவாத பசுக்களை, சுரப்பித்து - அப்பொருளாகிய பாலை எளிதிற்சுரக்கும்படி செய்து, அவை சொரியும் பொருள் பால் - அவ்வேதப்பசுக்கள் மிகுதியாகப் பொழிகிற தத்துவப்பொருளாகிய பாலை, கரவாது உதவிய - லோபஞ்செய்யாது (தமது பிரபந்தங்களின் மூலமாக அனைவர்க்கும்) கொடுத்தருளிய, மாறன் - நம்மாழ்வாருடைய, கவி - பாசுரங்களை, அனையாய் - ஒத்துச் சிறப்பையும் இனிமையையுமுடைய மங்கையே!—இனி இப்புறம் - இனி (எனது ஊர்க்கு) இப்பாற்செல்லவேண்டிய

இடம், ஓர் சர வாதம் - ஓர் அம்புவீழ்ச்சியளவுதான்; அப் புறம் - அதற்கு அப்பால். அ தட பணையே காண் - முன்பு நான்சொல்லியிருக்கிற எனது ஊரின் எல்லையாகிய பெரிய மருதநிலமே காண்; (ஆகவே), இனி—, பர வாது - விரைவுகொள்ளாமல், கேட்டு - (யான் சொல்லும் வார்த்தையைக்) கேட்டுக்கொண்டு, பைய நட - மெல்ல நடப்பாய்; (எ - று.)

இயற்கைப்புணர்ச்சி பாங்கற்கூட்டம் பாங்கியிற்கூட்டம் என்பவற்றாற் களவுநெறியில் தலைமகளோடு கலந்த தலைமகன் அங்குப் பழிபரவுதலின் தோழியால் உணர்த்தப்பட்டுத் தலைமகளை உடன்கொண்டு தன்னூர்க்குச் செல லுதல் உண்டு; அது அகப்பொருளிலக்கணத்தில் 'உடன்போக்கு' எனப்படும். இங்ஙனம் தலைவன் தலைவியை இடையிலுள்ள பாலைநிலவழியாக உடன் கொண்டுபோதல்பற்றி, உடன்போக்கு, பாலைத்திணையின்பாற்படும்; "போக் கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி, ஆக்கஞ்சேரூடல் அணிமருதம் - நோக்குங்கால், இல்லிருக்கை முல்லை இரங்கல் நறுநெய்தல், சொல்லிருக்கும் ஐம்பால்தொகை" என்பது காண்க. அவ்வாறு தலைமகளை உடன்கொண்டு இடைச்சுரநெறிகடந்து தன்னூர்க்குச்செல்கின்ற தலைமகன் அவளுக்குவழி நடையிளைப்புத்துன்பம் தோன்றாதிருத்தற்பொருட்டுத் தனதுநகரினணிமை யைக்கூறுதல், இப்பாட்டிற்குறித்த விஷயம். இத்துறையை, 'புணர்ந்து உடன்போன தலைமகன் நடந்துஇளைத்த தலைவியைக்குறித்து இடந்தலைப்பெய் தமை சொன்ன பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயர். இதன் மெய்ப்பாடு, பெருமிதம். பயன், இடமணித்தென்று தேற்றுதல். பாலைவனத்து நடந்து செல்கிற ஸ்ரீராமலக்ஷ்மணர்க்கு விசுவாமித்திரமகாமுனிவன் உபதேசித்த பலை அதிபலை என்னும் மந்திரவித்தைகள் போல, இத்தலைவன்வார்த்தை தலைவிக்குத் தாபந்தணிக்கு மென்க. தலைமகனும் தலைமகளும் தாம் ஒருவர்க் கொருவர் தனிநிழலாயிருக்கையாலே இவர்கட்கு இந்நிலத்தின்கொடுமையா லுண்டாகும் இளைப்பு இல்லையேயாகிலும், பொழுதுபோக்குக்காகத் தலைவன் தலைவியை நோக்கி இங்ஙனங்கூறுவ னென்றலும் உண்டு. 'மாறன்கவியனை யாய்'என்றது—"மண்டுகொளாடி வைகுந்த மன்னன்", "அரிகேசரி தென்புனல் நாடனையாய்", "பல்லுகுத்தீதான்பழனம் மன்னபல்வளை" என்றாற் போலப் பாட்டுடைத்தலைவனது சம்பந்த முடைய பொருளை உவமையாகக்கூறி அவ்வ கையால் தலைவியைச் சிறப்பித்தது. 'தடம்பணை' என்றது, அவ்விடம் இவ் வழிநடைவருத்தத்தை இனிது தணிக்குந் தன்மையது என்றவாறு.

'சுருதிப்பசுக்கள்சுரவாதவற்றைச் சுரப்பித்து அவைசொரியும் பொருட் பால் கரவாதுஉதவிய மாறன்' என்றது, உருவகம். கரவாது - ஒளிக்காமல்; இங்கு, வடமொழிவேதம்போல மறைபொருளினவாகவன்றி யென்றபடி: "எய்தற்கரியமறைகளை யாயிரமின்றமிழாற், செய்தற்கு உலகில்வருஞ் சட கோபன்" என்றார் பெரியாரும். கரவாதுஉதவிய மாறன் என ஆழ்வாரது வள்ளன்மையி லீடுபட்டுக் கூறியவாறு. சுருதிப்பசுக்கள் சுரவாதவற்றைச் சுரப்பித்து - பிறர்க்குஅரிய வேதங்களின் ஆழ்பொருள்களை ஆழ்வார்தாம் எளிதிற்கண்டு என்றபடி. 'மாறன்கவியனையாய்' என்றது, உவமையுணி.

,,ஶரபாதம் என்ற வடமொழித்தொடர். ஈரைந்தெனவிகாரப்பட்டதென்க; சரபாதம் = சரபாதஸ்தாநம்; எய்த அம்பு விழுந் தூர மென்பது பொருள்.

கொடிய சமுசார மார்க்கத்தைக் கடத்திக் கம்பாடனைத் தாம்வாழு மிடமான பரமபதத்துக்கு அழைத்துச்செல்லும் ஆழ்வார் தமக்கு அந்தப் பேரின்பப்பதியின் அணிமையைக் கூறுதல். இதற்கு உள்ளுறைபொருள். "சரணமாகுந்தன தாளடைந்தார்க்கெல்லாம், மரணமானால் வைகுந்தங்கொடுக்கும்பிரான்" என்பவாதலால், இப்பிறப்பின் முடிவிலே முத்தி சித்திக்கு மென்று, செய்ம்மைகருதி வருந்தும் அவரை அணிமைகூறித் தேற்றியவாறும். விவரம் நுண்ணிதின் உணர்க. ௯௭

[பிரிவாற்றாது வருந்துந் தலைவி கார்கண்டு கலங்குதல்.]

௯௮. தடம்பணைத்தண்பொருநைக்குருகூரர்தகைவகுள
வடம்பணைக்கொங்கையில்வைக்கின்றிலர்மற்றைமாலையெல்லா
முடம்பணைக்குந்தொறும்வெந்துகுமைந்துவெம்பாம்புமிழ்ந்த
விடம்பணைக்கொண்டனவேபனிதோய்ந்திடுமேகங்களே.

(இ - ள்.) தட பணை - அகன்ற வயல்களையுடையதும், தண் - (நீர்வளத் தாற்) குளிர்ச்சியானதும், பொருநை - தாமிரபர்ணிநதி பாயப்பெற்றதுமான, குருகூரர் - திருக்குருகூரில் அவதரித்தவராகிய நம்மாழ்வாருடைய, தகை வகுள வடம் - அழகிய மகிழம்பூமாலையை, பணை கொங்கையில் வைக்கின்றிலர் - (பாங்கிமார் கொணர்ந்து) பருத்த என் கொங்கைகளில் வைக்கின் றாரில்லை; மற்றை மாலை எல்லாம் - (அதுவன்றி) மற்ற மாலைகள் யாவும், உடம்பு அணைக்கும் தொறும் வெந்து உகும் - என்உடம்பிற் சேர்க்குந்தோ றும் (மேற்கொண்ட விரகதாபத்தால்) வெந்து பொடியாய் உதிர்ந்துவிடும்; (இந்நிலையில்), பனி தோய்ந்திடும் மேகங்கள் - நீர்த்துளிநிறைந்த மேகங்க ளோ, ஐந்து வெம் பாம்பு உமிழ்ந்த விடம் பணைக்கொண்டனவே - கொடிய ஐந்துபாம்புகள் ஒருங்கு உமிழ்ந்த விஷங்கள் திரண்டனவேயாம்; எ - று. —ஏ - ஈற்றசை.

(திருவிருத்தத்தில் ௩௧ - ஆம் பாசுரத்தில் ஈற்றடியாகிய "மிசை மின்மிளிரியபோவான்வழிக்கொண்ட மேகங்களே" என்றவிடத்தும் மேகங் கள்என்பது - முதல்வேற்றுமையும், ஏகாரம் - ஈற்றசையுமேயாதலும். மே கங்களேஎன விளியாகாமையும் காண்க. ஏகாரவீற்றதாதல், கட்டளைக்கலித் துறையிலக்கணம்.) தலைவன் பொருளீட்டுதற்குப் பிரிந்துசென்ற போது கார்காலத்தே மீண்டுவருவதாகக் காலங்குறித்துச் சென்றபடி அக்காலம்வந் தவளவிலும் வாராமையாலே பிரிவாற்றாது வருந்துந் தலைவிக்கு மேகங் கள் அவ்வருத்தத்தை மிகுவித்தலால் அவள் அவற்றைப் பலபாம்புகள் ஒருங் குஉமிழ்ந்த விஷங்களே இங்ஙனந் திரண்டுவந்தனவென்று பழித்துரைத்தா ளென்க. தலைவனைப்பிரிந்ததனாலாகிய தாபத்தால் தலைவி வருந்தும்போது பாங்கிமார் அத்தாபத்துக்குக்காரணம் இன்னதென்று ஆய்ந்து உள்ளபடி யுணராமல் தாபசாந்தியாகச் சீதோபசாரஞ் செய்பவராய்க் குளிர்ந்தமலர் மாலைகள்பலவற்றைக் கொணர்ந்து இவளுடம்பிற்பெய்ய, "வாங்கினள் முலை

க்குவையில் வைத்தனள்'' என்றவாறு அவை இத்தாபத்தைத் தணி மாட்டாது காமோத்தீபகமாய் இவ்வெப்பத்தை மிகுவித்து அதனால் த தீந்து கரிந்து ஒழிதலால், 'மற்றைமாலையெல்லாம் உடம்பணைக்குந்தோறு வெந்துகும்' என்றாள். "கண்ணன்கழல்துழாய் பொன்செய்பூண்மென்மு க்கென்று மெலியுமே'' என்றபடி, தலைவனைப் பிரிந்து வருந்தும் நிலைய அத்தலைவன் சாத்திய மாலை கிடைக்கப்பெற்றால் அதனை அவனாகவே பா த்து உடம்பில் ஒற்றிக்கொண்டு அவனைத் தழுவி யணைத்தவள் போன்று ம ழ்வுறக்கருதின ளாதலால், அந்தத் தகுதியான பரிகாரத்தை உணர்ந்து செ திடாததற்காகப் பாங்கியரை நொந்துரைப்பாள், 'குருகூரர் தகைவகுளவட பணைக்கொங்கையில் வைக்கின்றிலர்' என்றாள். 'தடம்பணைத்தண்பொ ைக்குருகூரர்' என்றது, எவ்வகைத்தாபத்தையுந் தணிக்கவல்ல நாட்டுவ முடையவ ரென்ற குறிப்பு. தகை-அழகு; பெருமையுமாம். வகுளம் - வ சொல். ஐந்துஎன்றது, அநேக மென்றவாறு; திருவேங்கடத்தந்தாதியி "இற்றைநீடிரவொன்று அஞ்சுகம்தத்தை விளக்கும்"என்றவிடத்தும் 'அஞ் என்பது இங்ஙனமாதல் காண்க. ஐந்து வெம்பாம்பு - கொடிய ஐந்துதலை நாகமெனினுமாம்; இப்பொருளில் ஐந்து - எண்ணலளவையாகுபெயர். பனை க்கொள்ளுதல் - பருமைகொள்ளுதல், திரளுதல்.

சிற்சிலசமயங்களில் தமது ஞானக்கண்ணுக்கு இலக்கான ஆழ்வா மறைந்த வளவிலே அவரது இடையீடில்லாச்சேர்க்கையிலவாவினால் வருந் கிற கம்பநாடர் தமக்கு அவ்வாழ்வார் உரியகாலத்தில் வந்து காட்சிதந் தம்மை அவர்பக்கல் சேர்த்துக்கொள்ளாது விளம்பித்தலாலே, அந்த நற்க லத்துக்குச் சூசகமாகிற பொருள்கள் தமது வருத்தத்தை மிகுவித்தலைக்கு த்து இரங்கிக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். அப்படிப்பட்ட சமயத்தில் ஆழ்வாரது பிரசாதமான மகிழமலர்மாலை கிடைக்கப்பெற்றா அது ஆறுதலாகுமேயன்றி மற்று எதுவும் இத்துயர்க்குப் பரிகாரமாக தென்க. "உடுத்துக்களைந்த நின் பீதகவாடையுடுத்துக் கலத்ததுண்டு, தொ டுத்த துழாய்மலர் சூடிகளைந்தன சூடு மித்தொண்டர்களோம்'' என்றபடி பகவத்ப்ரஸாதத்தையே விரும்பிப்பெற்று ஸ்வரூபம் நிறம்பெறும் ஆழ்வா கள்போல, நம்மாழ்வார் சூடிக்களைந்த மாலையையே அவர்ப்ரஸாதமாக ஏற்று மகிழுமியல்பினர் கம்பநாட்டாழ்வா ரென்க.

இங்ஙனம் திருமாலடியார்க்கு ஆட்பட்டவர்க்குத் தேவதாந்தரங்களின் நிர்மால்யம் வெறுப்புக்கிடமாயினமையும் இதிற் போதரும். பிறவும் உய் துணர்க. இனி, இச்செய்யுளில், முதல்வாக்கியத்துக்கு - (அன்பர்கள்) ஆழ் வாருடைய போக்யதையையே [மிக்க இனிமையையே] எனது பரிபூர்ண பக்திக்கு விஷயமாக்குகின்றாரில்லை யென்றும் - இரண்டாம்வாக்கியத்துக்கு மற்றையினிமைகளெல்லாம் என்சொரூபத்துக்குச் சேராவென்றும், மூன் றாம்வாக்கியத்துக்கு - கைம்மாறுகருதாது கருணைமழைசொரிந்து உலகத் துக்கு உபகாரியாகிற ஆழ்வார்க்குப் போலியான மேகங்கள் இந்நிலையில் என க்கு வருத்தத்தைமிகுவிக்கின்ற வென்றும் (இது, போலிகண்டு அழிதல்) உள்ளுறைபொருள்கொள்ளவும் அமையும்.

(கூஅ

[பொருள்வயிற்பிரிந்து செல்லுகின்ற தலைமகன் முகிலோடு கூறல்.]

௯௯. மேகத்தையாற்றிற் கண்டேனென் றென்னுதிர் மெய்யன் குருகூர்
பாகத்தையாற்றுஞ்சொல்லாளைக் கண்ணீரின் றுளிபரக்கப்
மோகத்தையாற்றிக்கொண்டே கண்டமாற்ற மொழிந்து சிந்தைச்
சோகத்தையாற்றிக்கொண்டே துளிதூவத் தொடங்குகவே.

(இ - ள்.) மேகத்தை ஆற்றில் கண்டேன் என்று என்னுக - மேகங்களாகிய உங்களை இடைவழியிலே கண்டு செய்திகூறினேனென்று (இதனை ஓர் இழிவாக நீங்கள்) நினையாமல்.—மெய்யன் குருகூர் பாகத்தை ஆற்றும் சொல்லாளை - உண்மைப்பொருளையே உணர்த்துபவரான நம்மாழ்வாரது திருக்குருகூரின் பகுதியை யொத்த [மிக இனிய] சொற்களையுடையவளான என்காதலியை, கண் நீரின் துளி பரக்க மோகத்தை ஆற்றிக்கொண்டே - கண்ணீர்த்துளிபெருகுமாறு விஞ்சியுள்ள மோகத்தைத் தணிவித்துக் கொண்டே, (நீங்கள் சமீபிப்பவர்களாய்), கண்ட மாற்றம் மொழிந்து சிந்தை சோகத்தை ஆற்றிக்கொண்டே - (நீங்கள்வருகிறவழியில் யான்மீண்டுவருதலைக்) கண்ட செய்தியைச் சொல்லி அவள் மனத்திலுண்டான விரகவேதனையைச் சாந்தப்படுத்திக்கொண்டே, துளி தூவ தொடங்குக - மழைத்துளி பெய்யத் தொடங்குவீர்களாக; (எ - று.)

ஆறுவகைப் பிரிவினுள் பொருள்வயிற்பிரிவாவது - முன்னோரால் ஈட்டப்பட்ட பொருள்கொண்டு இல்லறஞ்செய்தால் அதனால்வரும் பயன் அவர்க்குஆவதல்லது தமக்கு ஆகாமையால், தமது பொருள்கொண்டு இல்லறஞ்செய்தற்காகப் பொருள்தேடுதற்பொருட்டுத் தலைவன் தலைவியைப் பிரிந்து தேசாந்தரஞ்செல்லுதல்; அங்ஙனம் பொருள்தேடப் பிரிந்துசெல்லுந் தலைவன் கார்காலத்தே மீண்டுவருவதாகக் காலங்குறித்துச் செல்வன். கற்பொடுபொருந்திக் கணவன்சொல்தவறாத தலைவி அவ்வார்த்தையை நம்பி அக்காலவரவை எதிர்நோக்கிக்கொண்டு அதுவரை பிரிவுத்துயரை ஒருவாறு பொறுத்து இல்லத்து இருப்பள். "இல்லிருத்தல் முல்லை" என்பவாதலால், அங்ஙனம் இருத்தலும், இருத்தல் நிமித்தமும் - அகப்பொருளில் முல்லைத்திணையாம். அவ்வாறு பிரிந்துசென்ற தலைவன் பொருளீட்டிக் கொண்டு கார்காலத்தின்வரவைக் கண்டு இரங்கி விரைந்துமீண்டுவருகிற போது விரைவாக முந்துற்றுச்செல்லும் மேகங்களை நோக்கி இவை தலைவியிருக்கிறவிடத்தே என்னின் முற்பட்டுச் செல்லுமாயின் அதுகண்டு அவள் குறித்தகாலத்தில் என்வரவுகாணாத்துயரால் இறந்துபடக்கூடுமே யென்று அஞ்சி அம்மேகங்களை நோக்கி 'நீங்கள் முற்பட்டுச் சென்றீராயின் யான் சொல்தவறாது விரைந்து மீண்டுவருவதை நீங்கள் கண்ட செய்தியை அவட்குச்சொல்லி அவள் துயரையாற்றிப் பின்பு உங்கள் காரியமாகிய மழைபெய்தலைத் தொடங்குவீராக' என்று அவற்றை வேண்டுதல், இச்செய்யுளிற்குறித்த விஷயம். மெய்ப்பாடு - அச்சம். பயன் - இவ்வார்த்தை செவிப்பட்டபோது பாகன் தேரை விரையச்செலுத்துதல்.

என்காரியமாக உங்களை நீங்களுள்ளவிடத்திற்குப் பிரயத்தனபூர்வமாக வந்து கண்டு என்குறைகூறினேனில்லை யென்றும், தற்செயலாக வழியிலே

சந்தித்தவிடத்துக் காரியஞ்சொன்னே னென்றும் நீங்கள் என்மீது குறை கருதலாகா தென்பான், 'மேகத்தையாற்றிற்கண்டே னென்றெண்ணுது' என்றான். 'மேகத்தை' என்றது. முன்னிலைப்படர்க்கை; சிந்தாமணியில் "எம்பியை யீண்டுப்பெற்றேன்" என்றவிடத்து 'எம்பியை' என்பதுபோல. 'மெய்யன் குருகூர்ப்பாகத்தையாற்றுஞ் சொல்லாள்' என்றது. பாட்டுடைத் தலைவனது சம்பந்தமுடைய பொருளை உவமைகூறி அம்முகத்தால் தலைவியைச் சிறப்பித்தது. ஆழ்வார் அவதாரஸ்தலமான திருக்குருகூர் முழுவதுமேயன்றி அதில் ஒவ்வொரு பகுதியுமே மிக இனிய தாகுதலால், அங்ஙனம் முழுவதும் இனியளாதலேயன்றி ஒவ்வோருறுப்புமே இனியளாகிற தலைவி யென்னுங் கருத்து அமைய 'மெய்யன்குருகூர்ப்பாகத்தை யாற்றுஞ் செல்லாள்' என்றான்; இதனை, "தெய்வம்பணிகழலோன்தில்லைச் சிற்றம் பலமனையாள்" என்றாற்போலக் கொள்க; இனி, பூமியை 'பூதலம்' என்றல் போல, குருகூரை 'குருகூர்ப்பாகம்' என்றதாகவுங் கொள்ளலாம். மோகமும், சோகமும் - மன்மதாவஸ்தைகள் ஐந்திற் சேர்ந்தவை; அவையாவன - சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம் மரணம் என்பன. இவற்றில் சுப்பிரயோகம் - சொல்லும், நினைவும்; விப்பிரயோகம்-வெய்துயிர்த்திரங்கல்; சோகம் - வெதுப்பும், துய்ப்பனவெறுவிட்டலும்; மோகம் - அழுங்கலும், மொழிபலபிதற்றலும்; மரணம் - அயர்ப்பும், மயக்கமும். ஐந்தாம் அவத்தையாகிய மரணம் நேர்தற்குமுன்பு நான்காமவத்தையாகிய மோகத்தை நீங்கள் நற்செய்திகூறுதலால் முதலில்தணித்து, மூன்றாமவத்தையாகிய சோகத்தையும் தணிக்கத்தொடங்குவீராக என்றான். அதற்குள் யான் வந்து முதலிரண்டு அவத்தைகளை ஆற்றுவே னென்பது, உட்கோள். நீங்கள் முன்செல்வீராயின் "பருவமெடுத்தது வந்திலர் காதலரென்று பைம்பொனுருவமடப்பிடியே உயங்கேல் உயங்காதவண்ணம், பொருபகை செற்ற பொற்றேரேறி வேந்தர்பொருண்முடித்து, வருவதுரைப்பமுன்னே வந்ததா லிம்மழைமுகிலே" என்று கண்டார்கூறும்படி என்வரவுரைக்குந் தூதாவீர் என்று வேண்டியவாறும்.

இரண்டாமடியில், ஆற்றும் என்பது - உவமவாசகம். சொல்லாளை மோகத்தை ஆற்றிக்கொண்டு-இரண்டு செயப்படுபொருள்வந்த வினை. 'வார்த்தா'என்ற வடமொழி செய்தியையும் அதுகுறிக்கும்பேச்சையும் உணர்த்துதல் போல,'மாற்றம்' என்ற தென்மொழி-சொல்லையும் அவனுற்குறிக்கப்படும் செய்தியையும் உணர்த்தும். மெய்யன்-யதார்த்தவாதி, தத்துவஸ்வரூபி.

கம்பநாடர்பக்கல் பூர்ணகிருபைவைத்து அதனால் உரிய காலத்திலே அவர்க்குக் காட்சிதந்து பேறளிக்குமாறு திருவுள்ளங்கொண்ட ஆழ்வார் அதற்குமுன்னமே விரைந்து வருந்துகிற அவரை உறுதிகூறித்தேற்றுமாறு. திவ்வியதேசயாத்ராபரராய்ச் செல்லும் சில பாகவதரை நோக்கிக் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். இங்ஙனம் கூறுதற்குக் காரணம், மிக்க கருணையென்க. கைம்மாறு கருதாது பரோபகாரத்திற்காகவே நல்நீரைச் சுமந்து கொண்டு உடம்புவருந்தச்சென்று ஆங்காங்குப்பெய்து எல்லாவுயிர்களையும் பாதுகாத்தல், மேகங்களின் இயல்பு; "ஆதியந்த மனந்தமற்புதமானவானவர்

தம்பிரான், பாதமாமலர்சூடும் பத்தியிலாதபாவிகளுய்ந்திடத், தீதில்நன்னெறி காட்டியெங்குந்திரிந்தரங்கனெம்மானுக்கே, காதல்செய்தொண்டர்" என்றபடி இவ்வுலகத்தில் அனைவரையும் உய்விக்கும்பொருட்டு மெய்வருத்தம்பாராமல் எங்குந்திரிந்து குணபூர்த்திகொண்டு நல்லொழுக்கங்காட்டிக் கைம்மாறு கருதாது உதவும் இயல்பினர் பாகவதர் ஆதலால், மேகங்களைப் பாகவதர்களாகச் சொல்லத் தட்டில்லை. எம்பெருமானோடொக்கும்வடிவு இரண்டிடத்தும் உண்டு. கண்ணீர்த்துளிபரந்த மோகமும், சிந்தைச்சோகமும், மதனவத்தையிலொப்பப் பக்தியவத்தையிலும் நிகழும். துளிதூவுதல் = தாபம் ஆறுமாறு மெதுவாக இன்சொற்பேசுதல்; மற்றும் இங்ஙனங் கண்டுகொள்க.

[மதங்கு.]

எ௦. தொடங்குகின்றாணடஞ்சொல்லுகின்றேன்குருகூர்த்தொழா
மடங்குகின்றாண்மண்டலஞ்சுற்றியாடுகின்றாண்மதங்கி
விடங்குகண்டார்பிழைப்பார்சவையீர்விரைந்தேகுமிந்தப்
படங்குவிண்டாற்பின்னைப்போகவொண்ணாதும்பதிகளுக்கே.

(இ - ள்.) சவையீர் - சபையிலுள்ளவர்களே! — சொல்லுகின்றேன் - (யான் உங்கட்கு ஓர் உறுதி) கூறுகின்றேன்; (கேளுங்கள்): மதங்கி - ஆடல் பாடல்வல்ல ஓர் இளமங்கை, நடம் தொடங்குகின்றாள் - கூத்தாடத் தொடங்குகிறாள்; குருகூர் தொழா மடங்குகின்றாள் - திருக்குருகூரில் அவதரித்தவரான நம்மாழ்வாரைத் (தொடக்கத்திலே, தொழுது (திரையினுள்ளே) திரும்பிச்செல்லுகிறாள்; மண்டலம் சுற்றி ஆடுகின்றாள் - மண்டலமாகச் சுழன்று (அங்கிருந்தபடியே) கூத்தாடுகின்றாள்; விடங்கு கண்டு பிழைப்பார் ஆர் - (இந்த மதங்கியின்) அழகைக் கண்டால் (காதல்நோயால் மரணவேதனைப்படாது) பிழைப்பவர் எவர்? [எவருமில்லை யென்றபடி]; இந்த படங்கு விண்டால் பின்னை உம் பதிகளுக்கு போக ஒண்ணாது - இந்தத்திரையை வாங்கிவிட்டாலோ (அவளைக்கண்ட) பின்பு (மோகித்துவீழ்வதேயன்றி உங்களால்) உங்களூர்க்குப் போகமுடியாது; (ஆதலால்), விரைந்து ஏகும் - (அத்திரைவாங்குதற்குமுன்னே) விரைவாக அப்பாற் போய்விடுங்கள்; எ - று.)

மதங்கு என்பது - கலம்பகத்துக்கு முக்கியமான உறுப்புக்கள் பதினெட்டனுள் ஒன்று; இதனை மதங்கமென்றும், மதங்கியாரென்றும் வழங்குவர். இரண்டுகைகளிலும் வாளையெடுத்துச் சுழற்றிக்கொண்டு தானும் சுழன்று ஆடுவாளோரிளமாதின் அழகுமிகுதியை ஒருவன் பாராட்டிக் கூறுவதாகச் செய்யுள்செய்வது, இதன் இலக்கணம். அங்ஙனம் ஆடுபவள், மதங்கியெனப் படுவாள். மற்றும் கலம்பகவுறுப்பினுள் புயவகுப்பு மறம் முதலிய சிலவும் அந்தாதிப்பிரபந்தங்களில் அருமையாகக் கூறப்படுதல் காண்க. போதவெனக்கெளிதானோர் போதவனுக்கரிதானோர், காதரங்கர்திருத்தாள் காடியரங்கில் நடக்கில், ஓதுமதங்கிகடித்தால் உள்ளமதங்கியதாகும், வேதமறைந்திட வல்லீர் விரையமறைந்துவிடீரே" என்ற திருவரங்கக்கலம்பகத்து மதங்குச்செய்யுள் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. அரங்கிற்புகுந்து ஆடுவோர் தொடக்கத்தில் தமது வழிபடுகடவுளைத் தொழுதல் இயல்பு. மண்டலம் சுற்றுதல் - பவுரியென்னுங் கூத்துவிகற்பம்.

ஞானங்கனிந்து நலங்கொண்ட கம்பநாட்டாது பக்தியதிசயத்தை யுண ர்ந்த பாகவதர். அவர் ஆழ்வாரைத் தொழுதலையும், "கும்பிடுநட்டமிட்டெ ந்தாடிப்பாடியிறைஞ்சி" என்றபடி பக்திபரவசப்பட்டுக் கூத்தாடுதலையு உலகத்தார்க்கு எடுத்துக்காட்டி, 'இவரது நலத்தைக் கண்டால் தப்ப வி இல்லை' என்றும், 'ஞானக்கண்ணின் காட்சியை மறைக்கும் திரிபுணர்வாகி திரை அகல இவரது சொரூபத்தை உள்ளபடி கண்டவர் இவர்பக்கல் ஈடுப வதேயன்றி இவரைவிட்டு முன்பு தாம் விரும்பிய பிரபஞ்ச விஷயங்களி செல்ல இயலாது' என்றும் பாராட்டிக்கூறுதல். இதற்கு உள்ளுறைபொருள் அகலம் உரைத்துக்கொள்க. (எC

எக. பதியந்தமிழென்னநான்மறையென்னவிப்பார்புரக்கு
மதியந்தமிலொளிமாலைகளென்னமறைத்தமிழி
னதியந்தருங்கவியாயிரஞ்செய்தளித்தானமுதம்
பொதியந்தருநதியங்குருகூரெந்தைபூசுரர்க்கே.

(இ - ள்.) பொதியம் தரு - பொதியமலையினாற் கொடுக்கப்பட்ட [பொதி யமலையிலிருந்து தோன்றிவருகிற], நதி - தாமிரபர்ணிநதி பாயப்பெற்ற அம் - அழகிய, குருகூர் - திருக்குருகூரில் திருவவதரித்த, எந்தை - எமது தலைவரான நம்மாழ்வார்,—தமிழ் பதியம் என்ன - (மேல்நோக்கிலே காண் பவர்கள்) தமிழ்ப்பதிகங்களென்று சொல்லும்படியும், நால் மறை என்ன - (ஆழ்ந்துபொருள்நோக்குபவர்) நான்குவேதங்களென்று சொல்லும்படியும் இ பார் புரக்கும் மதி அந்தம் இல் ஒளி மாலைகள் என்ன - (பயனைநோக்கி ஈடுபடுபவர்) இந்நிலவுலகத்தை நல்வழிப்படுத்திப் பாதுகாப்பனவும் வரம்பி லாஞானமாகிய ஒளியை வெளிப்படுத்துவனவு மான ஆரங்களென்று சொல் லும்படியும், மறை தமிழின் அதிஅம் தரும் கவி ஆயிரம்செய்து - வேதங்கட் கும் தமிழ்ப்பாஷைக்கும் மிக்கஅழகைத் தருகிற திருவாய்மொழியாயிரம் பா டல்களைப் பாடி, பூசுரர்க்கு அமுதம் அளித்தான் - பூதேவரெனப்படுகிற அந்தணர்களுக்கு அந்தஇன்கவிகளாகிய அமிருதத்தைக் கொடுத்தருளினர்.

திருமால் வானுலகத்தில் வாழுந் தேவர்க்கு அமிருதமளித்தாற்போல, அத்திருமாலடியாரிற் சிறந்தவராகிய நம்மாழ்வார் நிலவுலகத்துவாழுந்தேவ ரெனப்படுகிற அந்தணர்க்குத் திருவாய்மொழியாகிய அமிருதத்தை அளித் தன ரென்க; "மறைப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து, துறைப்பாற்படுத்தித் தமிழாயிரத்தின்சுவையமுதங், கறைப்பாம்பணைப்பள்ளி யானன்பரீட்டங்களித்தருந்த, நிறைப்பான்" என்பர் பிள்ளைப்பெருமா யங்காரும்.

பதியமெனினும், பதிகமெனினும் ஒக்கும். பத்துச்செய்யுள் கொண் டது, பதிக மெனப்படும். திருவாய்மொழி, நூறுபதிகங்கொண்டது; அந் நூற்பதிகந்தோறும் பத்துச்செய்யுள் ஒவ்வொருபதிகத்தின் ஈற்றிலு முள்ள திருநாமப்பாசுரம் நீங்க வெனக் காண்க. இனி, செய்யுளைக்குறிக்கிற பத் யும் என்ற வடசொல் பதியமென விகாரப்பட்டுவந்ததெனக் கொண்டு, தமிழ்ப்பதியம் என்ன - தமிழ்ப்பாசுரங்களென்று சொல்லும்படியும் என்று உரைத்தலும் ஒன்று. அந்தமில் மதி என்க. 'அதி' என்பது, வடசொல்லுள்

விகுதிப்பொருளதோர் இடைச்சொல். பொதியம் = பொதியில்; மலயபருவதம். பூஸுரர் - வடசொல்; வாநுலகத்தில் தேவர்போல பூலோகத்தில் அந்தணர் சிறப்புற்றுவிளங்குதலால், இப்பெயர் பெற்றனர்; "நிலத்தேவர்" என்றார் ஆழ்வாரும். இங்கு 'பூசுரர்' என்றது, மதுரகவியாழ்வார் முதலிய வைதிகர்களை. 'கவியாயிரம்' என்றது, சொச்சத்தொகையைக் குறியாது, பெருந்தொகை மாத்திரத்தைக் குறித்தது; திருவாய்மொழிச்செய்யுள் - ககOஉ ஆகலின். (எக)

எஉ. பூட்சிகண்டீர்பொய்ச்சமயப்புலவர்க்குப்போக்குவல்வாய்
வாட்சிகண்டீர்மற்றைமாயத்தருகர்க்குமன்னுயிர்கட்
காட்சிகண்டீர்தொண்டர்க்கானந்தவாரிகண்டீரறிவைக்
காட்சிகண்டீர்பரவுங்குருகூர்வந்தகற்பகமே.

(இ - ள்.) குருகூர் வந்த கற்பகம் - திருக்குருகூரில் தோன்றிய கல்பக விருக்ஷம்போன்ற நம்மாழ்வார்,—பொய் சமயம் புலவர்க்கு - (பிரபஞ்சத்தைப் பொய்யென்றுகூறும் (பௌத்தமும் பிரச்சந்நபௌத்தமுமாகிய) மதங்களிலுள்ள வித்துவான்களுக்கு, பூட்சி கண்டீர் - (வாயை) அடக்கும் பூட்டு என்று அறியுங்கள்; மற்றை மாயத்து அருகர்க்கு - அவர்களினும் வேறான வஞ்சனையையுடைய ஜைநசமயத்தார்க்கு, போக்கு வல் வாய் வாட்சி கண்டீர் - (அவர்களது மாறுபாட்டைப்) போக்குகிற வலியகூர்வாயையுடைய வாட்சியென்னுங் கருவி யென்று அறியுங்கள்; மன் உயிர்கட்கு ஆட்சி கண்டீர் - உலகத்தில் நிலைபெற்ற உயிர்களுக்கு உரிமையான அழிவற்ற பொருளென்று அறியுங்கள்; தொண்டர்க்கு ஆநந்த வாரி கண்டீர் - (தமது) அடியார்களுக்குப் பேரின்பப் பெருக்காவரென்று அறியுங்கள்; அறிவை காட்சி கண்டீர் - (மற்றும் அவர் நமது) அறிவுக்குக் காணத்தக்க பொருளாவரென்று அறியுங்கள்; (ஆகவே), பரவும் - (எல்லீரும் அவரை) வணங்கிப் புகழ்ந்து வழிபடுங்கள்; (எ - று.)— என்று உலகத்தார்க்கு உபதேசித்தபடியாம்.

பூட்சி = பூட்டு. கண்டீர் - தேற்றம். பொய்ச்சமயம் - மித்யாவாதமும், மாயாவாதமு முள்ள மதங்கள். மெய்ப்பொருளாகிய கடவுளையும் மறுபிறப்பையும் இருவினைப்பயனையும் இல்லையென்றுகூறும் லோகாயதமதமும், மற்றும் இத்தன்மையனவான மாறுபாடுகளைக் கூறும் மதாந்தரங்களும் 'பொய்ச்சமயம்' என்றதில் அடங்கும். வாட்சி = வாய்ச்சி; மரத்தைச்சீவும் ஒருகருவி; அது மரக்கோணலைத் தீர்ப்பதுபோல, இவர் மனக்கோணலைத் தீர்ப்பரென்க. இனி, 'சி' என்பதைப் பகுதிப்பொருள்விகுதியெனக் கொண்டு, வாட்சி - வாள்என்றலும் ஒன்று. "இலிங்கத்திட்டபுராணத்தீரும் சமணரும் சாக்கியரும், வலிந்துவாதுசெய்வீர்களும் மற்றுநுந் தெய்வமுமாகிநின்றான், மலிந்துசெந்நெற்கவரிவீசுந் திருக்குருகூரதனுள், பொலிந்துநின்ற பிரான்கண்டீர் ஒன்றும் பொய்யில்லை போற்றுமினே" என்று ஆழ்வார் திருவாய்மொழியில் பரமதநிரஸநபூர்வமாக ஸ்வமதஸ்தாபநஞ்செய்ததனால், 'பூட்சி கண்டீர் பொய்ச்சமயப்புலவர்க்குப் போக்குவல்வாய்வாட்சி கண்டீர் மற்றைமாயத்தருகர்க்கு' என்றார். ஜீவாத்மா நித்தியமாதலால், 'மன்னுயிர்'

எனப்பட்டது. 'உயிர்கட்கு ஆட்சி' என்பதற்கு-ஜீவராசிகளை ஆளுபவரென்.
பொருள்கொள்ளலுமாம்; ஆட்சி - ஆளுகை; 'சி' விகுதி பெற்ற தொழிற்பெ
யர்: இங்கு, ஆளுபவர்க்கு ஆகுபெய ரென்க. ஆநந்தவாரி - வடமொழி
தொடர். அறிவை = அறிவுக்கு; உருபுமயக்கம்; அறிவைக்காட்சி - அறி
கொண்டு காண்பதற்கு ஏற்ற பொரு ளென்க: அவசியம் அறியத்தக்க பொ(
ளென்றபடி. இனி, 'அறிவைக்காட்சி' என்பதற்கு - ஞானமயமான பர
பிரஹ்மஸ்வரூபத்தை யுணர்ந்தவ ரென்று பொருள்கொள்ளவுங் கூடும். அறி
ஐ காட்சி என்று பிரித்து, அறிவுக்கு அழகிய காட்சிப்பொரு ளென்றலு
மொன்று. பரவும் - ஏவற்பன்மை; பெயரெச்சமாகக்கொண்டு, அனைவராலு
துதிக்கப்படும் குருகூ ரெனினும் இழுக்காது. கற்பகம் - உவமையாகுபெயர்
வேண்டுவோர் வேண்டுமவற்றை அருளுதலால், ஆழ்வார் கற்பக மெனப்பட்ட
னர். கல்பக மென்ற வடசொல் - வேண்டியவற்றைக் கல்பிப்பதென்று கா
ணப்பொருள்படும்: கல்பித்தல் - உண்டாக்குதல். (எஉ)

எங. கற்றுஞ்செவியுறக்கேட்டும்பருகிக்களித்துமுள்ளே
முற்றுமுகப்பெய்துமூழ்கிக்குடைதுமுகந்துகொடு
நிற்றுநிலையுறநீந்துதும்யாநிதமாறனெம்மை
விற்றும்விலைகொள்ளவும்முரியான்கவிவெள்ளத்தையே.

(இ - ள்.) எம்மை விற்றும் விலைகொள்ளவும் உரியான் - எம்மை விற்க
வும் வாங்கவும் உரியவராகிய, மாறன் - நம்மாழ்வார் அருளிச்செய்த, கவி
வெள்ளத்தை - பாடல்களாகிய பிரவாகத்தை, யாம் - நாம்,—நிதம்-நாள்தோ
றும், கற்றும் செவி உற கேட்டும் பருகி களித்தும் - ஓதியும் (பிறர்கூறக்)
காதில்நன்றாகக்கேட்டும் குடித்து மகிழ்வோம்; உள்ளே முற்றும் உக பெய்
தும் - அகத்திலே அவ்வெள்ளமுழுவதும் விழும்படி ஊற்றிக்கொள்வோம்;
மூழ்கி குடைதும் - (அவ்வெள்ளத்தில்) இறங்கி அமிழ்ந்து நீராடுவோம்; முக
ந்து கொடு நிலை உற நிற்றும் - (அப்பெருக்கை) மொண்டெடுத்துக்கொண்டு
நிலைபெற நிற்போம். நீந்துதும் - (அவ்வெள்ளத்தில்) நீந்துவோம்; (எ - று.)

ஆழ்வார்பாசுரங்களை வெள்ளமாக்கி, அதற்குஏற்ப, 'பருகிக்களித்தும்,
முற்றும் உள்ளே உகப்பெய்தும், மூழ்கிக்குடைதும், முகந்துகொடுநிலையுற
நிற்றும், நீந்துதும்' என்றார்; உருவகவணி. ஆழ்வாரது திவ்வியப்பிரபந்தங்
களிலேயே இடைவிடாது பலவாறுபயின்று அவற்றைஉபயோகித்துக்கொள்
வோ மென்பது கருத்து. "பருகுவனன்ன வார்வத்தனாகி,........செவிவா
யாகநெஞ்சுகளனாகக், கேட்டவைகேட்டவைவிடாதுளத்தமைத்தல்" முறை
மையாதலால் 'கற்றுஞ் செவியுறக்கேட்டும் பருகிக்களித்தும்' என்றும், 'உள்
ளேமுற்றும் உகப்பெய்தும்' என்றும் கூறப்பட்டது. உள்ளே - உள்ளத்திலே.
உள்ளே முற்றும் உகப் பெய்தல் - மறந்துவிடாதபடி மனத்திலே நிரம்பப்
பதியவைத்துக்கொள்ளுதல். மூழ்கிக்குடைதல் - பொருளாராய்ச்சி செய்தல்.
முகந்துகொடு நிற்றல் - அப்பொருளைப்பாராட்டித் தாம்உபயோகிக்குமாறு
தேக்கிக்கொள்ளுதல். நீந்துதல் - அவற்றில் ஈடுபடுதல்.

தாம் ஸ்வாதந்திரியமின்றி ஆழ்வார்க்குப்பாதந்திரராய் நிற்பவ ரென்ப
தும் தம்மை அடிமையாக ஆழ்வார் ஆட்கொண்டருளியதும் தோன்ற,

'எம்மை விற்றும் விலைகொள்ளவும் உரியான்' என்றார்: அடிமைகொண்டவ னென்ற பொருளை 'விற்றும் விலைகொள்ளவும் உரியான்' எனப் பிறிதொரு வகையாற் கூறியது, பிறிதினவிற்சியணி. 'எம்மை' என்றது, இயற்கைத் தனித்தன்மைப்பன்மை: தம்மைப்போன்ற அடியார்களையுங் கூட்டிய உளப் பாட்டுத்தன்மைப்பன்மையுமாம்.

நிதம் - நித்ய மென்ற வடசொல்லின் விகாரம்; நித்த மெனவும் வழங் கும். விற்று = விற்க; எச்சத்திரிபு. விலைகொள்ளுதல்-விலைக்குக்கொள்ளுதல்.

[தலைவியின் கண்ணழகு கண்டு வியந்த தலைவன் கூறுதல்.]

எச. வெள்ளம்பரந்தனவோகமலத்தன்றிவெண்மதிமேற்
கள்ளம்பரந்தனவோமுயனீக்கிக்கவிக்கரசன்
றெள்ளம்பரந்தவயற்குருகூர்க்கொம்பின்செம்முகத்தே
முள்ளம்பரந்தனவோகண்களோவொன்றுமோர்கிலமே.

(இ - ள்.) (இவை),—கமலத்து - ஒரு செந்தாமரைமலரின்மேல், வெள் ளம் பரந்தனவோ - பிரவாகம் பரவியவை தாமோ?—அன்றி - அல்லது, வெள் மதிமேல் - வெண்ணிறமான சந்திரன்மேல், முயல் நீக்கி - (களங்க மாகிய) முயலைப் போக்கி, கள்ளம் பரந்தனவோ - களவுத்தொழில் பரவி யவை தாமோ,—கவிக்கு அரசன் - பாவலர்கட்கெல்லாம் மேலான தலைவ ராகிய நம்மாழ்வாருடைய, தெள் அம் பரந்த வயல் குருகூர் - தெளிவான நீர் பரவிப்பாயப்பெற்ற கழனிகளையுடைய திருக்குருகூரி லுள்ள, கொம் பின் - பூங்கொம்புபோன்ற இம்மங்கையினது, செம் முகத்து - சிவந்த முக த்திலே, எம் உள்ளம் பரந்தனவோ - எமதுமனம் பரவியவைதாமோ?— (அன்றி), கண்களோ - கண்கள்தாமோ?—ஒன்றும் ஓர்கிலம் - இவற்றில் ஒன்றையும் துணிவாக அறிகின்றோமில்லை; (எ - று.)

தலைமகன் தலைமகளைப் பூஞ்சோலையில் ஏகாந்தத்திலே தற்செயலாகச் சந்தித்தபோது அவளது கண்ணழகில் ஈடுபட்டு அதுகுறித்து வியந்து தன் னிலே தான் சொல்லிக்கொண்டது, இது; நெஞ்சொடுகூறிய தென்க. இது நலம்பாராட்டல். 'நயப்பு' என்றும், 'கண்நயந்துரைத்தல்' என்றுங் கூறப் படும். ஒருவருள்ளக்கருத்தை ஒருவரறியாத ஒருதலைக்காமமாதலால், இது, இயற்கைப்புணர்ச்சியிலே கைக்கிளையின்பாற்படும்.

இவளது முகம் செந்தாமரை மலர் போன்றிருக்க, அதில் விசாலமா யுள்ள கண்கள் கடல்வெள்ளம்போலுதலால் 'கமலத்து வெள்ளம்பரந்தன வோ' என்றான்; "அஞ்சொற்களமுதிலன்ளிக்கொண்டவள் வதனம் மைதீர். கஞ்சத்தினளவிற்றேனுங் கடலினும்பெரிய கண்கள்" என்ற கம்பராமாயணம் இங்குக் காணத்தக்கது. தன்மனம் அக்கண்ணழகில் ஈடுபட்டு மீளவொண்ணாத படி ஆழ்ந்திட்டதனாலும், அக்கண்களை வெள்ளமென்றான். மகளிர் கண்க ளுக்குக் கடல் உவமையாதலை, "வேல் வாள் கயல் வண்டு வேலைவிடமமுதம்" என்னும் இரத்தினச்சுருக்கத்தாலும் அறிக. மதிக்கு வெண்மை - இயற்கை யடைமொழி. இவளது முகம் களங்கமில்லாததொரு சந்திரமண்டலம்போன் றிருக்க, அதிலே விசாலமாயுள்ள மையுண்டகருங்கண்கள் மிக்க அழகுடை மையாற் காண்பவர்மனத்தைக் களவுசெய்யுந் தன்மையனவாதலின் 'மதி

மேல் முயல்நீக்கிக் கள்ளம்பரந்தனவோ' என்றான். மிக்கவஞ்சனையின்
மாகவேயுள்ளன இக்கண்க ளென்க. களவைக் கருநிறமுடையதென்று
பித்துக்கூறுதல் கவிமரபாதலை, "களவென்னுங் காரறிவாண்மை"
திருக்குறள்கொண்டும் உணர்க. இப்பொழுது இருக்கிற சந்திரமண்
களங்கமுடையதாதலால் இவளது முகத்துக்குஏற்ற உவமையாகா தென்
'வெண்மதிமேல் முயல்நீக்கி' என்றதனாற் போதரும். முகத்துக்குச் ச
னுவமை - கண்டவர் கண்களுக்கு மகிழ்ச்சி விளைவித்தலிலும், குளிர்ந்த
யிலும் என்க. அன்றி, செம்முகத்துக்கு வெண்மதி - நிறத்தில் நிகராக
காண்க. கொம்பு - பூங்கொம்புபோல் மெல்லியவடிவமுடைய பெண்ணு
உவமையாகுபெயர். அவளது அவயவங்கள் அழகிய மலர் போலுதல
அவளை 'கொம்பு' என்றான். அவளது சிவந்தமுகத்திலுள்ள கண்கள், அ
மேல் தனது மனத்தின் ஆசை எவ்வளவு பரவியுள்ளதோ அவ்வளவு வி
மாயுள்ளதனாலும், அவள்முகத்தின்மேல் தன்மனம் பரந்துசென்றவாறு
துள்ளதனாலும், அவற்றைக்காண்பவரது உள்ளம் காதல்மிகுதியால் அக்க
யமேயாகுதலாலும், அவள்முகத்திற் பதிந்த தன்மனம் அதனைவிட்டுப்பே
மையாலும்'கொம்பின் செம்முகத்து எம்முள்ளம் பரந்தனவோ'என்றான்.
மனம் கருங்கண்களுக்குத் தன்மனத்தை உவமைகூறியது, அம்மனம் காம
கத்தால் இருண்டிருத்தல்பற்றி யென்க. இப்படி பலவகையாகக்கொ
காட்டிய உபமானங்களெல்லாம் அவ்வுபமேயத்தின் தகுதிக்குப் போதாவெ
னுங் கருத்தினால், அந்த அதிருப்தி தோன்ற, கடைசியில் கண்கள்தா
என்று கூறிவிட்டான். இப்படி உபமானத்தையும் உபமேயத்தையும் ஐயமு
உரைத்தது, ஐயஉவமையணி.

இச்செய்யுளின் மெய்ப்பாடு. உவகையைச்சேர்ந்த மருட்கை; கண்
கின் பெருமையை வியந்து உரைத்ததனால். இங்ஙனம் உரைத்தலின் பய
மகிழ்தல்.

சந்திரனிடத்திலுள்ள களங்கத்தை முயலென்றும் மானென்றுங் க
தல், மரபு. கவி - இங்கு, சாதிப்பெயர். ஆழ்வார் திருநாவீறுடைய பிரா
லால், 'கவிக்கரசன்' எனப்பட்டார். தெள் அம் - வினைத்தொகை; பண்
தொகையெனினும் இழுக்காது. அம் - வடசொல். இங்கு, 'தெள் அம்'
றது, சுத்தமான தாமிரபர்ணி நதிதீர்த்தத்தை. செம் முகம் - செவ்வியு
முகம் எனினுமாம். 'எம்,' ஓர்கிலம், என்பன - தனித்தன்மைப்பன்
'வெள்ளம்பரந்தன,' 'கள்ளம்பரந்தன,' 'உள்ளம்பரந்தன' என்றவை - த
தனி ஒருசொல்தன்மையுற்று, தோன்றா எழுவாயாக வருவிக்கப்பட்ட 'இவ
என்ற பன்மைப்பெயர்க்குப் பயனிலையாம்.

'கண்ணழகு என்பது, ஜ்ஞாநவைலக்ஷண்யத்தை' என்பர், ஸ்வாப
சம்வல்லார்; ஆகவே, கம்பநாடரது ஞானவிளக்கத்தைக் கண்ட ஆழ்வ
அவர்பக்கல் பெருங்கருணைகொண்டு அந்த ஞானத்தைப் பெரிதாகப்பார
டுதல், இதற்கு உள்ளுறைபொருள். 'அகத்தினழகு முகத்தில்தெரிய
என்றபடி அவரதுமனத்திலுள்ள அறிவின்பெருமை செவ்வியமுகத்தி
தோ--று மாகவின், 'செம்முகத்துக் கண்கள்' எனப்பட்டன. இவர்க்

பேரறிவு ஆழ்வாரது சங்கற்பத்தால் [அதாவது-அவரது உள்ளத்திற்கொண்ட திருவருளால்] உண்டாயினமைபற்றி, அவர் அதனை 'செம்முகத்து எம்வள்ளம்பரந்தனவோ' என்று கொண்டாடத்தகும். இவரது முகத்தை ஆழ்வார் குளிர்ந்ததிருவுள்ளத்தோடு கடாக்ஷித்ததனால் உண்டாகி வளர்ந்தது இவர்க்குப் பெருஞானமென்க. கவிச்சரசன் குருகூர்க் கொம்பு = ஆழ்வாரது அவதாரத் திருவவதாரஸ்தலத்தைச்சார்ந்த கம்பநாடர். தென்னும் பாய்ந்த வயல் குருகூர் = தெளிவான ஞானத்தினாலாகும் பேரானந்தம் பெருக்கெடுத்து வெள்ளமிடுந் திவ்வியதேசம் என்க. இதயகமலத்தி லெழுந்து பொங்கும் ஞானவெள்ள மாதலால், 'வெள்ளம்பரந்தனவோ கமலத்து' எனப்பட்டது. களங்கமற்ற இந்தச் சுத்தஞானத்திற்கு, பரமாத்மாவின் மனத்தையும் கட்பட வசீகரிக்குந்திறம் அமைந்திருத்தல், 'வெண்மதிமேல் முயல்நீக்கிக் கள்ளம் பரந்தனவோ' என்று பாராட்டப்பட்டதென்க. மற்றும்விவரம் முன்னிதின் உணர்க. (எச)

எரு. ஒருந்தகைமைக்குரியாருமோங்கியஞானியருஞ்
சாருந்தனித்தலைவன்சடகோபன்றடம்பதிக்கே
வாருமுமக்கொருறுதிசொன்னேனும்மயக்கமெல்லாந்
தீருந்திருக்கறுஞ்சிந்தைசெவ்வேநிற்குந்தீங்கறுமே.

(இ - ள்.) ஒரும் தகைமைக்கு உரியாரும் - (தத்துவப்பொருளை) ஆராயுந்தன்மைக்கு உரியவர்களும், ஓங்கிய ஞானியரும் - (அஞ்ஞானம் ஆராய்ந்து தெளிந்து) உயர்ந்த ஞானத்தைப் பெற்றவர்களும், சாரும் - சரணமடையப் பெற்ற, தனி தலைவன் - ஒப்பற்ற தலைவரான, சடகோபன் - நம்மாழ்வார் திருவவதரித்த தலமான, தட பதிக்கே-பெருமையுடைய திருக்குருகூர்க்கே, வாரும் - வாருங்கள்; (அங்கு வருவீர்களாயின் அவர்திருவருளால்), உம் மயக்கம் எல்லாம் தீரும் - உங்களுடைய விபரீதஞானமெல்லாம் ஒழியும்; திருக்கு அறும் - மாறுபாடு நீங்கும்; சிந்தை செவ்வே நிற்கும் - மனம் கோணாமல் நேரே [நல்வழியிலே] நிலைநிற்கும்; தீங்கு அறும் - தீவினைகளெல்லாந் தொலையும்; உமக்கு ஓர் உறுதி சொன்னேன் - (இங்ஙனம் உங்களுக்கு ஓர் உறுதிப்பொருள் கூறினேன்; [கேட்டு உய்விராக என்றபடி]; (எ - று.)

என்று உலகத்தார்க்கு நல்லறிவு உணர்த்துகிற முகத்தால், அத்திவ்விய தேசமகிமை கூறியவாறும்.

வீடுபேற்றுக்குக் காரணமாகும் பரம்பொருளை உணர்தற்கு உபாயம் மூன்று; அவை - கேள்வி, விமர்சம், பாவனை என்பன: அவற்றுள், கேள்வி யாவது - ஞானநுட்டானங்களை யுடையரான நல்லாசிரியர்பக்கல் உபதேச மொழிகளைக் கேட்டல். விமர்சமாவது - அங்ஙனங் கேட்ட உபதேசமொழிப் பொருளைப் பிரமாணங்களைக்கொண்டும் யுக்தியைக்கொண்டுந் தெளிய ஆராய்தல். பாவனையாவது - அம்முதற்பொருளை இடைவிடாது கருதுதல். இம்மூன்றனுள், முதலிரண்டுநிலையளவில் நின்றவர் 'ஒருந்தகைமைக்கு உரியார்' என்றும், மூன்றாநிலையையடைந்து பிரத்தியக்ஷமாகப் பொருளையுணர்ந்தவர் 'ஓங்கியஞானியர்' என்றுங் கூறப்பட்டனர். திருக்குறளில் "ஓர்த்துள்ள முள்ளதுணரின்" என்றாற்போல, 'ஒருந்தகைமைக்குரியார்' என்றார்.

இவர்களினும் ஞானியர் மேம்பட்டவராதலால், அவர்க்கு 'ஓங்கிய' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. இனி, 'ஒருந் தகைமைக்கு உரியார்' என்பதற்கு-அஷ்டாங்கயோகநெறியால் உண்மைப்பொருளைக் காண்பவர் [யோகிகள்] என்று பொருள்கொள்ளலும் ஒன்று. இவர்களெல்லார்க்கும்மேம்பட்டவர் ஆழ்வார் என்க. இனி ஒருந் தகைமைக்கு உரியார்-பரனையுணருமியல்பான பரபக்தியை யுடையார் என்றும், ஓங்கிய ஞானியர் - அவரிற் சிறந்தவரான பரஜ்ஞானமுடையார் என்றுங் கொண்டு, இவ்விருவகையாரும் சரணமாக அடையும் ஒப்புயர்வற்ற இறைவர், பரனையுணர்ந்து சேர்ந்து அவனை விடமாட்டாத பரமபக்தியையுடையரான நம்மாழ்வார் என்றலும் உண்டு; பரபக்தி-எம்பெருமானைத் தரிசித்தல், பரஜ்ஞாநம்-அவனைச் சேர்தல், பரமபக்தி-அவனது பிரிவுக்கு அஞ்சுதல் எனக் கொள்வது சம்பிரதாயம்.

'மயக்கமாவது மெய்ப்பொருளல்லவற்றை மெய்ப்பொருளென்று உணர்தல். விபரீதவுணர்வாவது - மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் இல்லையெனவும், மற்றும் இத்தன்மையனவுஞ் சொல்லும் மயக்கநூல்வழக்குக்களை மெய்ந்நூல்வழக்கெனத் துணிதல்: குற்றியை மகனென்றும் இப்பியை வெள்ளியென்றும், இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாகத் துணிதலும் அது. மருள், மயக்கம், விபரீதவுணர்வு, அவிச்சை என்பன - ஒருபொருட்கிளவி' என்று திருக்குறளுரையிற் பரிமேலழகருரைத்தது, இங்கு உணரத்தக்கது. "பொருளல்லவற்றைப் பொருளென் றுணரும், மருளான் ஆம் மாணாப்பிறப்பு" என்றபடி இம்மயக்கம் பிறப்புக்கு முதற்காரணமாதலால், இதுபற்றற ஒழிதலை முக்கியப்பயனாக முதலில் எடுத்துக்கூறினர். திருக்கு - செருக்கு வஞ்சம்முதலியன. சடகோபன் தடம்பதி = ஆழ்வார்திருநகரி. (எ௬)

எ௬. அறுவகையாயசமயமுமைவகைத்தாம்புலனு [கே
முறுவகையாற்சொன்னவோட்டமெல்லாமொழிவித்தொருங்
பெறுவகையாறெனச்செய்தபிரான்குருகூர்ப்பிறந்த
சிறுவகையாரவரைத்தொழுதோமெம்மைத்தீண்டுகவே.

(இ - ள்.) அறு வகை ஆய சமயமும்-ஆறுவகைப்பட்ட சமயநூல்களும், உறு வகையால் சொன்ன - (தம்தமக்குத்) தோன்றியபடி கூறிய, ஓட்டம் எல்லாம் - பொருள்விரிவு முழுவதையும், ஒருங்கே ஒழிவித்து - ஒருசேரப் போக்கி, பெறு வகை ஆறு என செய்த - முத்திபெறும்படியான வழி இது வென்று காட்டி நூல்செய்த, பிரான் - உபகாரகரும், குருகூர் பிறந்த சிறு வகையார் அவரை - திருக்குருகூரில் அவதரித்த சிறியமனிதவடிவினரு மாகிய நம்மாழ்வாரை, தொழுதோம் - வணங்கினோம் (யாம்); ஐ வகைத்து ஆம் புலனும் எம்மை தீண்டுக - ஐந்துவகைப்புலன்களும் (இனி) எம்மைச் சார்வனவாக; (எ - று.)

யாம், ஆழ்வார்திருவடிகளைச் சரணமடைந்தோமாதலால், இனி ஐம்புலன்களைக்குறித்து அஞ்சவேண்டுவதில்லை; அப்புலன்களிற் கண்டபடி செல்லாதவாறு எமது ஐம்பொறிகளையும் மனத்தையுஞ் சீர்திருத்தி எம்மை ஆண்டருள்வர் ஆழ்வார் என்பதாம். இங்ஙனம் தாம் அச்சம்தீர்ந்த களிப்பி

ஞல், 'தொழுதோம்' என்றும், 'எம்மை' என்றும் தம்மை உயர்வுப் பன்மையாற் கூறிக்கொண்டார்.

ஐவகைத்தாம்புலன் - மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்பொறிகளாலும் முறையே கொள்ளப்படுகிற ஊறு சுவை ஒளி நாற்றம் ஓசை என்பன; இவை வடமொழியில், ஸ்பர்சம் ரஸம் ரூபம் கந்தம் சப்தம் என்னும் பஞ்ச விஷயங்க ளெனப்படும். ஆழ்வாரைச்சரணமடைந்த எம்மை இனி இவை சாரக்கடவனவல்ல வென்பதும், ஒருகால் சார்ந்தாலும் ஜிதேந்திரியரல்லாதவர்க்கும் அவரருளால் கடக்கிவாய்க்கத் தடையில்லை யென்பதும் கருத்து. சொற்கிடக்கையினும் பொருளமைதியே முக்கியமாதலால், 'அறுவகையாயசமமும் உறுவகையாற்சொன்ன' என்றும், 'ஐவகைத் தாம்புலனும் நீண்டிக' என்றும் சொற்களைத் துணித்தெடுத்துக்கூட்டி இவ்வாறு பொருள்கொள்ளப்பட்டது; ஆசிரியர் நச்சினார்க்கினியர், சீவகசிந்தாமணியுரையில், 'இத்தொடர் நிலையிற் சொற்களைத் துணித்துப் பலவிடத்தினும் எடுத்துக்கூட்டியது, செய்யுளுறுப்பு இருபத்தாறினும் மாட்டென்னும் உறுப்பாதலின்: "அகன்றுபொருள்கிடப்பினும் அணுகிய நிலையினும், இயன்று பொருள்முடியத் தந்தனருரைத்தல், மாட்டெனமொழிப் பாட்டியல் வழக்கின்" என்றும், ................தொல்காப்பியனார் கூறினார்; ................ இவ்விதி, மேல்வருவனவற்றிற்குங்கொள்க' எனவும், இவ்வகையாகவே திருமுருகாற்றுப் படையுரையிலும் மதுரைக்காஞ்சி யுரையிலும் உரைத்தது காண்க. இது, கொண்டு கூட்டுப்பொருள்கோளில் அடங்கும்.

ஆழ்வார், ஞானவைலக்ஷண்யத்திற் பரமபதத்து நித்ய சூரிகளோடு ஒப்பாராயினும், தோற்றத்தில் எளியமனிதவடிவினராயிருத்தலால், 'சிறுவகையார்' எனப்பட்டார்; அவர், திருவாய்மொழியில், "உறுமோ பாவியேனுக்கு" என்ற பாசுரத்தில், தமக்கு உத்தேசியரான பாகவதர்களை "அவனடியார், சிறுமாமனிசராய் என்னையாண்டார்" என்று அருளிச்செய்ததை அடியொற்றி, கம்பநாடர், தமக்கு உத்தேசியரான அவ்வாழ்வாரை 'சிறுவகையார்' என்றார். (இந்நூலின் ஈற்றில் வருகிற பாயிரத்தின்படி, ஆழ்வார் விஷயமாக மதுரகவிகள் 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்னும் பதிகம் பாடியதை அநுசரித்துத் தாம் இப்பிரபந்தஞ்செய்தனர் கம்பநாடர் ஆதலால், அம்மதுரகவிகளுக்கு முக்கியப்பிரமாணமான மேற்காட்டிய திருவாய்மொழிப்பாசுரத்தை இவர் அடியொற்றுதல் தகும்.)

பாகவதர்களுடைய அநுட்டானங்கள் "இடங்கொள் சமயத்தையெல்லாம் எடுத்துக்களைவனபோலே" உள்ளன வென்று ஆழ்வார் அருளிச்செய்ததைப் பின்பற்றி, அவர்செயலை இவ்வாசிரியர் 'அறுவகையாயசமயமும் உறுவகையாற்சொன்ன கூட்டமெல்லாம் ஒருங்கே ஒழிவித்து' என்றார். உறுவகையால் - தத்தமக்குப் பொருந்தியவாற்றினுல். 'எம்பெருமான் திருவடிகளைச் சரணமடைதலே அவனைப்பெறுதற்கு உபாயம்' என்று ஆழ்வார் பலபடியாலும் தமது திவ்வியப்பிரபந்தங்களில் அருளிச்செய்து நிலைநாட்டியதனுல், 'பெறுவகையாறெனச் செய்த பிரான்' என்றார்; சிந்தாமணிச்செய்யுளில் "முத்திபெய்தும்வழி பலவாயவிட் டொன்றாயது ........ .. ..... ..

குருகூரெந்தை தோன்றலினே" என்றதுங் காண்க. வெவ்வேறுமதங்களில் அந்தந்தமதத்துக்குஉரிய தெய்வத்தை வணங்குதல் முதலாகக் கூறப்பட்ட முக்திமார்க்கங்களெல்லாம் பூர்வபக்ஷமாய் மறுக்கப்பட்டுத் தலைகாட்டாது ஒழியத் திருமாலை வழிபடுதலொன்றே முக்திமார்க்கமென்று சித்தாந்தஞ் செய்து நிலைநிறுத்தினர் நம்மாழ்வார் என்பதும், வீடுபெறுதற்குச் சாதனமாக ஓதப்படுகிற கர்மம் ஞானம் முதலியவற்றை மறுத்து எம்பெருமானைச் சரணமடைதலாகிய பிரபத்தியொன்றே முத்திக்கு நேரான உபாயமென்று தாபித்தனர் நம்மாழ்வார் என்பதும், இங்குக் குறித்த பொருள். ஆறு - வழி. பெறுவகை ஆறு-ப்ராப்திக்கு வழி. "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்ற திருவாய்மொழி, இங்குக் கருதத்தக்கது. ஒருங்கே ஒழிவித்து என இயையும். ஒருங்கே பெறுவகை ஆறு என்று எடுத்து, ஜீவான்மா பரமான்மாவை ஒருசேர்க்கையாக அடையும் உபாய மெனினுமாம்.

அறுவகையாய சமயம் - சாக்ய உலூக்ய அக்ஷபாத க்ஷபண கபில பதஞ்சலிமதங்க ளென்பர்; வேறுவகை கூறலு முண்டு. புலன்=புலம்: ஈற்றுப்போலி. ஒருங்கு - இடைச்சொல்.

இச்செய்யுள், கம்பநாடர் தாமானதன்மையில் உரைத்தது; அன்றி, தலைவிநிலையை மேற்கொண்டு உரைத்த தென்றால், பரத்தையிற் பிரிவில் மீண்டுவந்த தலைவனதுசேர்க்கைக்கு உடன்படாது தலைவி மறுத்துப் புலவி காட்ட, அதுகண்ட தோழி "தொழுது வழிபடற்பாலை பிழைப்பெண்ணல் தோன்றலையே" என்றபடி இங்ஙனம் தலைவனது குற்றத்தை நோக்கி அவன் மீது மிகுதியாகக்கோபித்தல் குலமகளது கற்புநிலைக்கு அடாது என்று சிலகூறி உணர்த்தியபின்னர், தலைவி ஊடல்தணிந்து அவன்வரவை ஏற்றுக்கொள்பவளாய் 'அவரைத்தொழுதோம், இனி அவர் எம்மைத்தீண்டுவாராக' என்றதாகத் துறைப்போக்கு அமைத்தல் சாலும்.

ஆறுவகைப்பிரிவினுள்ளே பரத்தையிற் பிரிவைப்பற்றிய சிலவிவரம்:— "பரத்தையிற்பிரிதலென்பது - தலைமகளை வரைந்தெய்தியபின்னர், வைகலும் பாலேநுகர்வா னொருவன் இடையே புளிங்காடியும் நுகர்ந்து அதனினிமையறிந்தாற்போல, அவள் நுகர்ச்சியினிமையறிதற்குப் புறப்பெண்டிர் மாட்டுப் பிரியாநிற்றல்; அல்லதூஉம், பண்ணும் பாடலும் முதலாயின காட்டிப் புறப்பெண்டிர் தன்னைக் காதலித்தால் தான் எல்லார்க்குந் தலைவனாகலின் அவர்க்கும் இன்பஞ்செய்யப் பிரியாநிற்ற லென்றுமாம்: அல்லதூஉம், தலைமகளை ஊடலறிவித்தற்குப் பிரித லென்றுமாம். இவ்வாறொழிந்து தனக்கின்பம்வேண்டிப்பிரிவானாயின், "கண்டு கேட் டுண் டுயிர்த் துற்றறியு மைம்புலனும், ஒண்டொடிகண்ணேயுள" என்பதனால் இவளுக்குத் தலைமகனென்னும் பெயரோடு மாறுபட்டுத் தனதுபெருமையோடும் மாறுபடாநிற்கும்" என்று திருக்கோவையாருரையிலும், "பரத்தையிற்பிரிவு:—இது, தலைவன் 'பரத்தைமேற் காதலாய்த் தலைவியைப்பிரிந்து பரத்தையர்சேரியிற் போதல். 'பரத்தையிற்பிரிவு' என்று ஓதவே, 'பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின், மாண்ட வறிவினவர்" என்பதனால் தலைவன் அறிவிலனும், தலைவியிடத்து அன்புமிலனும், பெருமையுமிலனும், பட்டியுமாம் எனின்,

அற்றன்று: அரசரிமையனாதலின்; அரசரிமைக்குப் பரத்தையரினும் வரைதற்குரியராய்த் தொன்றுதொட்டு நடக்கு முறைமையாரும் வரையாதவுரிமையாய்ச் சேரியின்கணுறைவாருமாய் அவருட் பிறந்த ஞான்றுதொட்டு இவர்க்கென வகுத்துரைக்கப்படுதலானும், அவரைச்சேர்தல் தகுதியன்மையானும், பரத்தையிற்பிரிதல் குற்றமன்றெனக் கொள்க. அன்றியும், காலைக் கடன்கழித்தலும் ஓலக்கத்திலிருந்து நாடுகாவற்றொழில் செய்தலும், விருந்துடன் அடிசில்கைதொடலும், காவலரோடிகல்வியயிற்றலும், ஆடல்பாடல் கண்டு களித்தலும், மடவாரோடு கூடலும், துயிறலும், துயிலுணர்ந்து தேவர்ப்பராவலும் ஆகிய காலவரையறையெட்டனுள் ஆடல்பாடல் ஒன்றாதலானும் அதற்குரியர் பரத்தையராதலானும், அதற்குரியகாலத்தில் அவரிடத்தில் மனஞ்செல்லுத லியல்பாதலானும், பரத்தையிற் பிரிதலாற் குற்றமின்றெனக் கொள்க. ஆயின், பரத்தையர்சேரியிற் செல்லு மாறு என்னையெனின்,— அவர் பலரோடும் விளையாடற்பொருட்டும். ............ பரத்தையர்சேரியிற் செல்லு மென்று உணர்க” என்று தஞ்சைவாணன்கோவை யுரையிலும் காண்க. “அஃதேயெனின், மற்றைப்பிரிவெல்லாம் வேண்டுக, ஆள்வினை மிகுதியுடைமையான்; இப்பிரிவு எற்றிற்கோவெனின் —பரத்தையிற் பிரிந்தான் தலைமகனென்றால், ஊடலே புலவியே துனியே என்றிவை பிறக்கும்: நிகழ்ந்தால், அவைநீக்கிக் கூடினவிடத்துப் பெரியதோர் இன்பமாம்; அவ்வின்பத்தன்மையை வெளிப்படுப்பன அவையெனக் கொள்க” என்ற இறையனாரகப்பொருளுரையும் காணத்தக்கது.

இங்ஙனம் பரத்தையிற்பிரிந்த தலைவன் மீண்டுவந்து தலைவியின்மனையினிடத்துப் புகும்போது, அவளால் மறுக்கப்பட்டவனாய், பின்பு தோழியை வாயில்வேண்ட, அவளும் மறுத்தனளாக, அதன்பின் பாணனை வாயிலாக அனுப்ப, அவனும் தலைவியால் மறுக்கப்பட்டு நீங்கினனாக, பிறகு மகனை வாயிலாகக் கொண்டும் விருந்தினரை உடன்கொண்டும் புக, அதுகண்டு சினந்தணியவேண்டித் தோழி தலைவியைநோக்கி ‘அன்பானன்றி அருளாற் பரத்தையர்க்குந் தலையளிசெய்ய வேண்டுமன்றே: பரப்பெண்டிரைப்போல யாம் அவனொடு புலக்கற்பாலமல்லேம்: அவன்வரும்பொழுது எதிர்கொள்ளுதும் போம்பொழுது புறந்தொழுதும் புதல்வனைப் பயந்திருக்கையன்றே நமக்குக்கடனாவது’ என்றும், நம்முடைய தோன்றலைத் தனக்குத்துணையாகக்கொண்டு வந்துதோன்றுதலான், நினது உள்ளத்துக்கவற்சியை யொழித்து, இனி நம் அரசர்க்குக் குற்றேவல்செய்வாயாக’ என்றும், மற்றும் உரியபடியாகவுங்கூறி ஊடல்தணிவிக்க, அதைக்கேட்டுச் சினந்தணிகின்ற தலைவி தலைவனை எற்று எதிர்கொண்டு வழிபாடுசெய்பவளாய் “எக்கைகையைத் தீப்பண லாட்டிய வீரம் புலர்த்திவந்து உம். அக்கையிற் சிறப்பு நின்றுச் செய்யிற்செய்யுமாருளே” என்றற்போலக்கூறி, அவன்வந்து தன்னைப்பரிசித்தற்கு உடன்படுவாளென்க. இது, வழிபாடுமறுத்த தலைவி மறுத்து எதிர்கோடல் எனவும், தலைவனைத் தலைவி எதிர்கொண்டு பணிதல் எனவும்படும். “பரத்தையர்சேரியினின்று மறுதந்து தோழியை வாயிலாகக்கொண்டான்: கொன்ன, தோழி புக்குப் பலகாரணமுங் காட்டினள்: காட்டவாள் நாம் இல்லிருந்து

இறைவழிப்பட்டு மக்களைவளர்த்து விருந்துபுறந்தருத லல்லது போகத்து உள்ளாமன்றே; எல்லாம் ஊடலும் புலவியுந் துனியுங் கொள்ளற்பால மல்லம்: அல்லதூஉம். வண்டோரனையர் ஆடவர். பூவோரனையர் மகளிர்; என்பது என்னை? வண்டுகள் தாது ஊதுமிடத்து நன்மலரே ஊதுவேமென்று: எல்லாமலரும் ஊதும்; இனி, பூ அவாவினக்கால், எம்மையே ஊதா, எல்லாப்பூவையும் ஊதின' என்று புலவாதன்றே: அதுபோல. தலைமகனும் எல்லாப்பெண்பால்களையுந் தலைப்பெய்தல் தன்மையான்; அவர்தன்மை அறிவேம்: போம்பொழுது புறந்தொழுது வரும்பொழுது முன்தொழுது எற்றுக்கொண்டு வழிபடுத லல்லது. மலைத்தற்கண்ணேம் அல்லம்: தலைத்தீப்பற்றியமாதலே தலைமை' என்றும். இவ்வாறு வழிபடாதே எம்பெருமானை வருத்தி என்செய்தும்'? என்றும் 'எற்றுக்கொண்டு வழிபடுவது பொருளே போலக் காட்டும்' என்றும் இங்ஙனஞ் சொல்ல. 'அஃதொக்கும்பிற' என்று அப்போதைக்குச் சிவப்பு நீங்கிற்று; 'நீங்க, 'புகுதுக' என்றாள்'' என்பது. இறையனாரகப்பொருளுரை.)

இப்பொருளிற் பதவுரை வருமாறு:—அறு வகை ஆய சமயமும் - ஆறு வகைப்பட்ட காலங்களிலும். ஐவகைத்து ஆம் புலனும் உறு வகையால்-ஐந்து வகைப்பட்ட பொறிகளும் அனுபவிக்குமாறு, சொன்ன - சொல்லப்படுகின்ற, ஓட்டம் எல்லாம் - போக்குகளை யெல்லாம். ஒழிவித்து-நீக்கி, ஒருங்கே பெறு வகை ஆறு என செய்த - (அந்த ஐம்பொறிகளும்) ஒருங்கு இன்பம்பெறும் படியான விதம் இதுவென்று (தனது சேர்க்கையினாற்) செய்த, பிரான் - உபகாரகரும். குருகூர் பிறந்த சிறு வகையார் அவரை - திருக்குருகூரில் தோன்றியவரும் சிறிய ஒழுக்கமுடையவருமாகிய தலைவரை, தொழுதோம் - வணங்குகின்றோம் (யாம்); எம்மை தீண்டுக - (இனி அவர்) எம்மைத் தழுவுவாராக எனக் காண்க.

கண்ணாற் கண்டும். செவியாற் கேட்டும். நாவால் உண்டும். மூக்கால் மோந்தும். மெய்யால் தீண்டியும் இவ்வாறு வேறுவேறு காலங்களில் வேறு வேறு பொருள்களால் அனுபவிக்கப்படும் ஐம்புலவின்பங்களையும் ஒரேகாலத்தில் தன்பக்கல் யான் அனுபவிக்கும்படி செய்த தலைவன் என்பது 'அறுவகையாயசமயமும்ஐவகைத்தாம்புலனும் உறுவகையாற்சொன்ன ஓட்டமெல்லாம் ஒழிவித்து ஒருங்கேபெறுவகையாறெனச்செய்த பிரான்' என்றதன் கருத்து; என்றது. சிற்றின்பச்சுவைமயமாயிருந்தவனென்று முந்திய நிலைமையை மகிழ்ந்து கூறியவாறும்; திருக்குறளுரையிற் காமத்துப்பாலின் தொடக்கத்திற் பரிமேலழகர் 'ஈண்டு இன்பமென்றது, ஒருகாலத்து ஒருபொருளான் ஐம்புலனும் நுகர்தற்சிறப்புடைத்தாய காமவின்பத்தினை' என்றது, இங்கு உணரத்தக்கது. ''வண்டமர்பூங்குழலாரை மணம்புணர்ந்த வன்றொண்டர். புண்டரிகத்தவன்வனப்பைப்புறங்கண்டதூநலத்தைக். கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றமர்ந்திருந்தார் காதலினால்'' என்று பெரியபுராணத்திற் கூறியதும் இதுபற்றியே. ''கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியுமைம்புலனும். ஒண்டொடி கண்ணேயுள'' என்று தலைமகன்கூறினாற்போலத் தலைமகள்கூறியது, இது.

'அறுவகையாய சமயமும்' என்றது - வேறுவேறு காலங்களிலெல்லாம் என்றபடி. 'அறுவகையாயசமயம்' என்றதில், பெரும்பொழுதாறும், சிறுபொழுதுஆறும் அடங்கும். பெரும்பொழுது ஆறு - இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி என்ற ஆறு பருவகாலங்கள்; இவை முறையே, சித்திரைமாதம்முதலாக இரண்டிரண்டுமாதம் ஒவ்வொன்றாம். சிறுபொழுது ஆறுவன - விடியல், நண்பகல், எற்பாடு, மாலை, யாமம், வைகறை என்பன; இவை - முறையே, சூரியோதயகாலம்முதல் ஒவ்வொன்று பப்பத்துநாழிகை யென உணர்க.

'சிறுவகையார்' என்றது - பரத்தையரோடு கூடுதலாகிய சிறிய ஒழுக்கமுடையவரென்றபடி; இதனை, பெரியபுராணத்தில் "இன்னமைதரு இன்பத் துறையினி லெளியரானார்" என்றாற்போலக் கொள்க. 'குருகூர்ப்பிறந்த சிறுவகையார்' என்றது - 'அவர் எம்போலல்லர், சிறந்த ஊரிற் பிறந்தவர்' என்று, முந்தியகோபத்தின் தொடர்ச்சியாற் கூறிய நிட்டூரவார்த்தையாம்; "நாடும் ஊரும் இல்லுஞ் சுட்டி, ஆடற்பூக்கொடி ஊடி யுரைத்தது" என ஊடியுரைக்கையில் ஊர்சுட்டுமாறு உணர்க. 'சிறுவகையாரவரை' என்றது - உயர்வுப்பன்மை; 'தொழுதோம்,' 'எம்மை' என்றவை - தனித்தன்மைப் பன்மை: புலவிக்காலத்தே தலைவி தன்னையுந் தலைவனையும் பன்மையாற் குறித்தலும் இயல்பாதலை, இலக்கியங்களிற் பலவிடத்துங் காணலாம்; ஆகவே, அங்ஙனங்கூறுதல் சிறுசினத்தின் காரியமென்க. திருநீலகண்டநாயனார் பரத்தையிடத்துச்சென்று மீண்டமை புணர்ந்த கற்பிற்சிறந்த அவர்மனைவியார் ஊடல்கொண்டு அவரதுசேர்க்கைக்கு இசையாது "தீண்டுவீராயின் எம்மைத் திருநீலகண்டம்" என்று ஆணையிட்டு மறுத்தாற்போலப் புலவிகொண்டபொழுது 'எம்மை அவர் தீண்டலு மாகாது' என்று மறுத்தனளாதலாலும், "கால்தான் தொடல்தொடரேல் விடுதீண்டல் எம்மைத்தலையே" என்று ஊடலில்மறுத்தல் இயல்பாதலாலும், அப்புலவிதணியும்போது 'எம்மைத் தீண்டுகவே' என்றாள். 'தீண்டுக' என்பதற்கு, 'அவர்' என்ற எழுவாய் வருவிக்கப்பட்டது; அன்றி, சிறுவகையாரைத் தொழுதோம் அவர் எம்மைத் தீண்டுக என்று மொழிமாறினுமாம்.

இச்செய்யுளின் மெய்ப்பாடு - உவகையைச்சார்ந்த வெகுளி; பெருமிதமுமாம். பயன் - ஆற்றாமை நீங்குதல்.

தியானநிலையிலே கம்பநாடரது அகக்கண்ணுக்குப் புலனாகி மறைந்த நம்மாழ்வார் மீளவும் வந்து தோன்றாராக, கம்பநாடர், தம்மினும் விலக்ஷணரான வேறுபல அடியார்கள்பக்கல் அன்பினால் தம்மை அவர் உபேக்ஷித்தனர் என்றுகொண்டு கலங்கி, அக்கலக்கமிகுதியால் 'இனி அவர்தாமே வந்தாலும், மீளவும்பிரிந்து வருத்துவாராதலால், யாம் சகித்துப் பார்ப்பதில்லை: நிரந்தராநுபவமில்லாமல் இடையிடையே அவர் தரும் அநுபவம், பிரிவாற்றாமைத்துயர்க்குக் காரணமாதலால், அது எமக்கு வேண்டா' என்று ப்ரணயரோஷங் கொண்டிருக்கிற நிலையில், அடியவரைக் கைவிடாத இயல்புடையரான ஆழ்வார் மீளவும் வந்து இவர்க்கு வந்தேறியாயுள்ள பராமுகத் தன்மையைப் போக்கி இவரை அபிமுகராக்கிக் கொள்ளுதற்குப் பலவகை

யால் முயன்றபோது; இவர் தமது முந்தினமநஸ்தாபம் மாறாதே நிற்க. அது கண்ட அன்பர்கள் இவரையடுத்து, பரமாத்மாவாகிய ஆழ்வாருடைய ஸ்வாதந்திரியத்தையும், ஜீவாத்மாவுக்கு உரியதான பாரதந்திரியத்தையும், அவர் தமது இயல்பாகிய கருணையினால் பலரையும் ஆட்கொண்டருளுதற்கு உரியரென்பதையும் எடுத்துக்காட்ட, அதுகேட்டவளவிற் கம்பநாடர் மநஸ்தாபந்தீர்ப்பவராய் 'அவரைத்தொழுதோம்; இனி அவர் எம்மைத் தம்பக்கல் சேர்த்துக்கொண்டருள்வாராக' என்று கூறும் வார்த்தை. இதற்கு உள்ளுறை பொருள்.

"அறுவகையாய சமயமும்........செய்த பிரான்' என்றது - "வேட்கையெல்லாம்விடுத் தென்னை உன்திருவடியேசுமந்துழலக், கூட்டரிய திருவடிக்கண்கூட்டினை நான் கண்டேனே," "கண்டுகேட்டுற்றுமோந்துண்டுழலும் ஐங்கருவி, கண்டவின்பம் தெரிவரியவளவில்லாச்சிற்றின்பம். ஒண்டொடியாள் திருமகளும் நீயுமேநிலாநிற்பக், கண்டசதிர் கண்டொழிந்தேன் அடைந்தேன் உன்திருவடியே" என்றபடி எல்லாக்காலங்களிலும் புறம்பான பற்பல பிரபஞ்சவிஷயங்களில் எனக்கு உண்டாகும் ஐம்புலவாசையெல்லாம் தன்னொருவன்பக்கலிலேயே யாகும்படி எனக்கு அருள்செய்த உபகாரகனென்றதாம். 'குருகூர்ப்பிறந்த சிறுவரையார்'—மனிதவடிவாகிய சிறுமை தோன்றத் திவ்யதேசத்திலே திருவவதரித்த மகாபுருஷரென்றபடி. "தமி ருநக்குநெய்யொ டுண்டா னடிச் சடகோபன்" என்றபடி, நம்மாழ்வார் எம்பெருமானது திருவடிகளுக்கு மிகவும் அந்தரங்கபக்தராக இருந்ததனால், அப்பெருமானது பாதுகை 'ஸ்ரீசடகோபன்' என்று இவரது திருநாமத்தையிட்டு வழங்கப்படும்; அத்திருவடிநிலைகள் தமது முடியின்மேல் வைக்கப்பெறும்படி வேண்டுதல் பாகவதர்க்கு இயல்பாதல்பற்றியும், ஸ்ரீவைஷ்ணவசிகாமணியான கம்பர் 'சடகோபன் எம்மைத்தீண்டுக' என்று இசைதல் ஏற்கும். மற்றும் விவரம், சம்பிரதாயம்வல்லார்வாய்க் கேட்டு உணரத்தக்கது.

இனி, திருக்குருகூரிற் பிறந்த சிறுமாமனிசர்களைத் தொழுதோம், அவர்கள் எம்மைத் (தம்திருவடிகளினால்) தீண்டுவாராக என்று உரைத்தலும் ஒன்று; அத்திவ்வியதேசத்தில் தோன்றிய அடியார்களிடத்து ஈடுபாட்டினால் இதுகூறியவாறு: கீழ் ௩௦ - ஆஞ் செய்யுளில் "வழுதிநாட்டிற் பிறந்தவர்க்கு ஆளுஞ்செய்தேன்" என்றாற்போல.

[கல்வியிற்பெரிய கம்பரது வாக்கு 'கம்பசூத்திரம்' என்னும்படி சில்வகையெழுத்திற் பல்வகைப்பொருளைச் செவ்வனேசெறித்து இனிதுவிளக்கித் திட்பநுட்பஞ்சிறந்ததாதலால், அதன்பொருளை நன்குவிளக்கப் புகுமிடத்து இங்ஙனம் விரிகின்றது உரை யென உணர்க.]

(௭௬)

௭௭. திண்டித்திருவடியைப்பற்றிக்கொண்டுசிந்தித்ததையே
வேண்டிக்கொளப்பெற்றிலென்வினையேனிவ்வெறும்பிறவி
யாண்டிறப்பிறந்தவக்காலத்திலேயன்பனையணிநீர்ப்
பாண்டித்தமிழ்த்திருநாட்டுருக்காட்டியபாவகற்கே.

(இ - ள்.) வினையேன் - தீவினையுடையேனான யான், வெறும் பிறவி ஆண்டில் பிறந்த அ காலத்திலே - பயனற்ற இந்தப்பிறப்பாகிய அவ்விடத்திற் பிறந்த அந்தக்காலத்திலே, அணி நீர் பாண்டி தமிழ் திருநாடு உரு காட்டிய பாவகற்கே அன்பன் ஆய் - அழகிய தன்மையையுடையதும் செந்தமிழ் வழங்குமிடமுமான சிறந்த பாண்டியநாட்டிலே திருவவதாரஞ்செய்த பரிசுத்தமூர்த்தியான நம்மாழ்வார்க்கே பக்தனாகி, தீண்டி திருவடியை பற்றிக்கொண்டு சிந்தித்ததையே வேண்டி கொள பெற்றிலேன் - கைகளால் தொட்டு அவர் திருவடிகளைச் சரணமாகப் பிடித்துக்கொண்டு நினைத்ததைவேண்டி அடையப்பெற்றேனில்லை; (எ - று.)

நான் பிறந்தபொழுதேதொடங்கி நம்மாழ்வார்க்கே அடியவனாகி அவர் திருவடிகளைத்தொட்டுப் பிடித்துச்சரணமடைந்து நினைத்தவற்றை வேண்டிப் பெற்றுக்கொண்டிலேன் என்று, இதுவரையிலும் பழுதேபோனபோதுபோக்கினதைக் குறித்துக் கழிவிரக்கத்தாற் கூறினார். முத்தியை நேரில் அடையக்கூடியதான மனிதஜன்மம் "அரிதரிது மானிடராதல் அரிது" என்னும்படி மற்ற எல்லாப்பிறப்புக்களினுஞ் சிறந்ததாயினும், அதனையடைந்தவர்செய்யுங்கடமையாகிய முத்திபெறும்நெறியை இவர் இதுவரைமேற்கொள்ளாததுபற்றித் தம்மை 'வினையேன்' என்றும், தமதுஜன்மத்தை 'வெறும் பிறவி' என்றும் வெறுத்துக்கூறினார். வேண்டுவார் வேண்டும் பயன்களை அவர்வேண்டியபடியெல்லாம் அளிக்கும் ஆற்றலுடையவர் ஆழ்வார் என்பது, 'சிந்தித்ததை வேண்டிக் கொள' என்பதனாற் போதரும். இங்கு இவர் சிந்தித்தது, முத்தி; ஆதலால், ஏகாரத்தை உயர்வுசிறப்பு என்னலாம். தமிழ் முனிவராகிய அகஸ்தியரும் பாண்டியராஜாக்களும் சங்கப்புலவர்களும் இனிதுவீற்றிருந்து தமிழ்ப்பாஷையைப் போற்றி வளர்த்த நாடாதலால், பாண்டியநாடு 'தமிழ்த்திருநாடு' எனப்பட்டது. உருக்காட்டுதல் - ரூபத்தைத் தோன்றுவித்தல், வடிவெடுத்துப்பிறத்தல். பாவகன் என்ற வடசொல் - (தன்னையடைந்தவர்களைப்) பரிசுத்தராக்குபவனென்று பொருள் படும்; இக்காரணத்தால், இச்சொல் அக்கினிக்குப் பெயராதலு முண்டு; ஆதலால், பாவகற்கு - ஜ்யோதிஸ்வரூபியான ஆழ்வார்க்கு என்று பொருள்கொள்ளவும் அமையும்: வடதிசையாத்திரைசென்றிருந்த மதுரகவிகளுக்கு நம்மாழ்வார் முதலில் திவ்யதேஜோமூர்த்தியாய்த் தென்னாட்டிற் காட்சிதந்தனராதலால், அவரை 'பாண்டித்திருநாட்டுருக்காட்டிய பாவகன்' என்னத்தகும்.

பிறவியிற்பிறந்த என்று எடுத்து, ஆண்டென்பதை 'ஆங்கு' என்பதைப் போல அசை யெனினுமாம். நீர் - நீர்மையென்ற பண்புப்பெயரின் விகாரம். இனி, அணி நீர் - ஓர் ஆபரணம்போல அழகிதாகத் தாமிரபர்ணிநதிநீர்ப் பாயப்பெற்ற என்றுங் கொள்ளலாம்.

இனி, அணிநீர்ப்பாண்டித்தமிழ்த்திருநாட்டு உருக்காட்டிய பாவகற்கு - நம்மாழ்வார்க்கு, பிறந்த அக்காலத்திலே - அவர்திருவவதரித்த அந்தக்காலத்திலே, அன்பனாய்த் தீண்டித் திருவடியைப்பற்றிக்கொண்டு சிந்தித்து அதையே வேண்டிக்கொள - அன்பனாகி அவர் திருவடியைக் கைகளால்தொட்டுப்பிடித்துக்கொண்டு தியானித்து அத்திருவடியையே அல்லது அந்தநன்

யையே] பிரார்த்தித்துப் பெற்றுக்கொள்ளும்படி, வினையேன் இவ்வெறும் பிறவி ஆண்டில் பெற்றிலேன் - தீவினையேனான யான் இப்பொழுது வீணாகப்பிறந்தபிறப்பை அக்காலத்தில் [அத்திருநகரியிலே] பெறாதொழிந்தேன் என்று உரைகொள்ளினுமாம். ஆழ்வார் அவதரித்த அக்காலத்திலே யான் ஆழ்வார்திருநகரியிற் பிறந்து அவர்க்கு அன்புசெய்திருந்தால், மீளவும் இங்ஙனம் பிறப்பெடுத்து உழலவேண்டாதபடி வீடுபெற்று உய்ந்திருப்பேனென்று கழிந்ததற்கு இரங்கிக் கூறியவாறும். "புலையாம்பிறவிபிறந் தென்செய்தோம் பொன்னிபொன் கொழிக்கும், அலையார்திருவரங்கத்தெம்பிரான் நமதன்னையொடுந், தொலையாதகானஞ்சடந்தவந்நாள் தடந்தோறும் புல்லாய்ச், சிலையாய்க் கிடந்திலமே நெஞ்சமே கழல்தீண்டுகைக்கே" என்ற திருவரங்கக்கலம்பகத்தோடு இதனை ஒப்பிடுக. (எ௭)

எ௮. பாவகத்தாற்றன்றிருவவதாரம்பதினொன்றென்றிப்
பூவகத்தாரறியாதவண்ணந்தன்னையேபுகழ்ந்து
நாவகத்தாற்கவியாயிரம்பாடிநடித்தளித்த
கோவகத்தாற்கன்றியென்புறத்தார்செய்குற்றேவல்களே.

(இ - ள்.) பாவகத்தால் - (தனது) தோற்றத்தைக் கண்டு அதனால், தன் திரு அவதாரம் பதினொன்று என்று இ பூ அகத்தார் அறியாத வண்ணம் - (திருமாலாகிய) தனது சிறந்த அவதாரங்கள் பதினொன்று என்று இந்நிலவுலகத்திலுள்ளார் அறிந்துகொள்ளாதபடி, தன்னையே புகழ்ந்து நாஅகத்தால் கவி ஆயிரம் பாடி - தம்மையே தாம் துதித்துத் தம்நாவினிடமாகத் திருவாய்மொழியாயிரம் பாசுரங்களைப் பாடி, நடித்து - வேறான ஒருவரைப் போலத் தம்மைக்காட்டி, அளித்த - (அப்பாசுரங்களை உலகத்தார்க்குக் கொடுத்து அவர்களைப் பாதுகாத்தருளிய, கோஅகத்தாற்கு அன்றி - பரமபதநிலையையுடைய அத்திருமாலாகிய நம்மாழ்வார்க்கே குற்றேவல்செய்து உய்வதல்லாமல், (அன்னியர்களுக்கு), புறத்தார் செய் குறுஏவல்கள்-மாதாந்தரங்களிலுள்ளவர்கள் செய்கிற சிறிய ஊழியங்கள், என் - யாதுபயன்தரும்? [யாதொருநற்பயனையுந் தரமாட்டா என்றபடி]; (எ - று.)

லோகாதீதமான பலவகைமகிமைகளை யுடைமையால், நம்மாழ்வார், ஸ்ரீமந்நாராயணனது அம்சமெனப்படுவர்; "வங்கிப்புரத்துநம்பி, எம்பெருமான்தான் இப்படிவந்து அவதரித்தானென்பர்: இப்படிசொல்லுகைக்கு அடி, ஆழ்வாருடைய ப்ரபாவத்தாலே" என்ற பெரியவாச்சான்பிள்ளைவியாக்கியானவாக்கியம் காணத்தக்கது. ஆழ்வார் திருவாய்மொழியில் "தானேயானென்பானாகித் தன்னைத் தானே துதித்து" என்றும், "நண்ணா வசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த, எண்ணாதனகளெண்ணும் நன்முனிவரின்பந் தலைசிறப்பப், பண்ணார்பாடலின்கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடித், தென்னாவென்னு மென்னம்மான் திருமாலிருஞ்சோலையானே" என்றும் பகவானுடைய ஸாந்நித்யவிசேஷம் தம்மிடத்து இருப்பதைத் தாமே அருளிச்செய்தார். ஆழ்வாரைப் பகவானுடைய அம்சமென்று பாத்மபுராணமுங் கூறும்; ஆனதுபற்றியே, "நாராயணா அடியேன்நாடும் தமிழ்வேத பாராயணா சடகோபா" என்பர் பிள்ளைப்பெருமாளையங்காரும்.

(இவர்க்கு இருப்பிடமான புளியமரம், எம்பெருமானுக்குத் திருப்பள்ளிமெத்தையான ஆதிசேஷனது அம்சமென்று ப்ரஹ்மாண்டபுராணத்திற் கூறப்பட்டிருக்கிறது.) "தீவினையாளரால் கெடுக்கப்பட்ட கலியுகத்திலே, விசுவாதிகரும் விசுவமயருமான விஷ்ணு, அடியார்கள்பக்கல் மிக்க அன்பினால் அனைவரையும் பாதுகாத்தற்பொருட்டு, பக்தரூபியாய்த் தோன்றினர்" என்று ருஷிகள் சொல்வர். "அத்திரியும் ஜமதக்நியுமாகிய பிராமணோத்தமர்களுக்குப் பிள்ளைகளான தத்தாத்ரேயனும் பரசுராமனுமாக முதல்யுகத்திலே முதல்வருணத்திலும், க்ஷத்திரியரான தசரதசக்கரவர்த்திக்குப் பிள்ளையாகிய இராமபிரானாக இரண்டாம்யுகத்திலே இரண்டாம்வருணத்திலும், யயாதிசாபத்தாலே அபிஷேகப்ராப்தியற்று க்ஷத்திரியரில்தாழ்ந்து வைசியப்ராயரான யதுகுலத்தில்தோன்றிய வசுதேவர்க்கும் கோபரான நந்தகோபர்க்கும் பிள்ளையாகிய கண்ணபிரானாக மூன்றாம்யுகத்திலே மூன்றாம் வருணத்திலும், ஆக இப்படி கிருதாதியுகக்கிரமத்திலே ப்ராமணாதிவர்ணக் கிரமத்தால் இந்நிலவுலகத்திலே அவதரித்துவந்த ஸர்வேசுவரன்தானே, நான்காவதானகலியுகத்திலே நான்காம்வருணத்திலே காரியார்க்குப் புதல்வராகிய நம்மாழ்வாராய் வந்து அவதரித்தனன்" என்று விசேடங்கூறுதலு முண்டு. இப்படி அம்சாவதார மென்பதன்றி, ஆவேசாவதார மென்பர் சிலர்; 'ஸ்ரீமந்நாராயணன் வியாசர்முதலானவர்களிடம் ஆவேசித்து வேதங்களைவகுத்தல் முதலிய காரியங்களைச் செய்துமுடித்தாற்போல, நம்மாழ்வார்பக்கல் ஆவேசித்துத் தமிழ்வேதங்களை வெளியிட்டருளினான்' என்பது. அவர்கள் கருத்துக் கூறுமாறு.

இப்படி ஆழ்வார் எம்பெருமானுடைய மத்ஸ்யம் கூர்மம் முதலிய தசாவதாரங்கள் போலத் தாமும் அப்பெருமானுடைய அவதாரவிசேஷமாயிருந்தும், அந்தரகசியம் அனைவர்க்கும் எளிதிற் புலனாகாதிருத்தற் பொருட்டு, அவர், தமக்கு மூலமான அப்பெருமானையே துதித்துக் கவிபாடி எம்பெருமானடியாரி லொருவர்போலவே தம்மைக்காட்டித் தமது திவ்வியப்பிரபந்தமூலமான உபதேசமுகத்தால் உலகத்தாரை உய்வித்தருளினர் என்பது. முதல்மூன்றடிகளின் தாற்பரியம். இவ்வகை இறைமைக்குணமுடைய ஆழ்வார்பக்கல் அன்புகொண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அவர்க்குச்செய்யும் உத்தமவழிபாடுகள் இம்மைமறுமைவீடுகளிற் பெறும் பேறுகளை விளைத்துப் பயன்படுமே யன்றி, இறைமைக்குணங்களிலாத பிறக்கையில் தம்மைத் தாமே இறைவ ரென்று சிலஇடங்களிற் சொல்லிக்கொள்கிற இதரதேவர்களை இறைவரென மாறுகக்கருதிப் பரச்சமயத்தார் அத்தேவர்தாங்கட்கு ஆட்பட்டுச் செய்யுங் குற்றேவல்கள் யாதொருநற்பயனையும் விளைக்குமாட்டுவன அல்ல என்பது. நான்காம்அடியின் கருத்து.

இனி, பாவகத்தால் - (தனது) தூய்மைசெய்யுந்திறத்தால் எனினுமாம். பூஅகத்தார் - பூமியிடத்தவர். தன்னையேதான்புகழ்ந்து கவிபாடுதல் உலகவியல் பன்றாதலாலும், ஆழ்வார் திருமாலை முன்னிலைப்படுத்தியும் படர்க்கையாக நிறுத்தியுந் துதித்துக் கவிபாடியுள்ளாராதலாலும், அவ்வாழ்வாரை அத்திருமால்தானே யென்று உலகத்திற்பெரும்பாலார் எளிதில் அறிந்திட-

ரென்க. 'பூவகத்தார்' என்றது. ஸாமாந்யஜனங்களை. நடித்தல் - நிஜஸ்வரூபந்தோன்றாதபடி வேற்றுவேஷங்கொண்டு வெளிப்பட்டுத் தொழில்செய்தல். கோ அகம்-மேலானஇடம்: எனவே, பரமபதமாயிற்று. இனி, கோபகம் என்ற வடமொழி தமிழில் 'கோவகம்' என்று விகாரப்படும்; ஆதலால், கோவகத்தான் என்பதற்கு - பாதுகாப்பவ ரென்றும், (தம்மை) மறைக்குந் தன்மையுடையவ ரென்றும் பொருள்கொள்ளலாம். 'கோவகத்தாற்குஅன்றி' என்றதனால், 'தேவதாந்தரங்களுக்கு' என்பது பெறப்பட்டது. இனி, 'புறத்தார்செய்' என்று பாடமாயின், அயலார்க்குச் செய்கிற என நான்காம்வேற்றுமைத் தொகையாகப் பொருள்படும். "தேவும் எப்பொருளும் படைக்கப், பூவில் நான்முகனைப் படைத்த, தேவ னெம்பெருமானுக்கல்லாற், பூவும் பூசனையுந் தகுமே" என்று ஆழ்வார் எம்பெருமான்விஷயத்தில் அருளிச்செய்தாற்போல, அவ்வாழ்வார்விஷயத்திற் கம்பநாட்டாழ்வார் 'அளித்த கோவகத்தாற் கன்றி என் புறத்தார்செய் குற்றேவல்களே' என்றார். 'நடித்து என்பதற்கு-"ஸ்ரீதரன்தொல்புகழ்பாடிக் கும்பிநெட்டமிட்டாடி" என்றபடி பக்திமிகுதியால் ஆனந்தக்கூத்தாடி யென்றும் உரைப்பர். திருமாலுக்கு மற்றும் பற்பல அவதாரங்கள் நூல்களிற்கூறப்பட்டிருப்பினும், தசாவதாரம் பிரதானமாதலால், அவற்றோடு இதனையுங் கூட்டி 'தன்திருவவதாரம் பதினொன்று' எனப்பட்டது. (எஅ)

எக. குற்றேவலுஞ்செய்துமெய்கண்டுகைகொண்டுகும்பிட்டன்பு
பெற்றேனென்போலெவர்பேறுபெற்றார்பின்னையேபிறந்து
வெற்றேவலினின்றபொய்யன்பர்தாங்களுமெய்யுணர்ந்தா
ரெற்றேகுருகைப்பிரானெம்பிரான்றனியலிசைக்கே.

(இ - ள்.) குருகைப் பிரான்-திருக்குருகூரில் அவதரித்த உபகாரகரும், எம் பிரான்தன் - எமதுதலைவருமான நம்மாழ்வாருடைய, இயல் இசைக்கு - பண்ணமைதியோடுகூடிய இயற்றமிழ்ப்பாசுரங்களாகிய திவ்வியப்பிரபந்தங்களினால், (யான்), மெய் கண்டு - தத்துவார்த்தங்களை யுணர்ந்து, கைகொண்டு கும்பிட்டு - (அவ்வாழ்வாரை எனது) கைகளைக்கொண்டு தொழுது, குறு ஏவலும் செய்து-(அவர்க்குச்) சிறியஅடிமைத்தொழில்களையுஞ் செய்து, அன்பு பெற்றேன் - (அவருடைய) கருணையை அடைந்தேன்; என்போல் எவர் பேறு பெற்றார் - என்னைப்போல (வேறு) எவர்தாம் இவ்வகைநற்பயன் பெற்றனர்? (இதுவன்றி), பின்னையே பிறந்து - (ஆழ்வாரவதாரத்திற்குப்) பிற்காலத்திலே தோன்றி, வெறு ஏவலில் நின்ற - (தேவதாந்தரங்களுக்குச் செய்யும்) பயனற்ற பணிவிடைகளில் நிலைநின்ற, பொய் அன்பர் தாங்களும் - (உண்மையுணர்வில்லாமல்) திரிபுணர்வையேயுடைய தொண்டர்களும், மெய் உணர்ந்தார்-(ஆழ்வாருடைய பிரபந்தங்களினால்) தத்துவப்பொருளை அறிந்துகொண்டார்கள்; எற்றே - (இது) என்னவியப்புடையது! (எ - று.)

ஆழ்வாருடையபிரபந்தங்களினால், யான் பரமாத்மஸ்வரூபம் ஜீவாத்மஸ்வரூபம் முதலிய தத்துவார்த்தங்களை ஐயந்திரிபற உண்மையாக உணர்ந்து, அவ்வாழ்வாரை ஆசிரியராகக்கொண்டு, கைகூப்பித்தொழுது, அவர்க்கு அடிமைத்தொழில்செய்து, அவாருளைப் பெற்றேன் என்பது, முதல்

• வாக்கியத்தின் பொருள். 'என்போல் எவர் பேறுபெற்றார்' என்றது - தம்மைப்போல வேறு எவரும் பாக்கியம் பெற்றிலரென்று. தமது பக்திபரிசயத்தையும் அதனாலாகிய பெரும்பயனையுங் குறித்துக் கொண்டாடிக் களித்துக் கூறிய வார்த்தை. ஆழ்வாரவதாரத்துக்குப் பிற்காலத்தார் பலரும் அவர்பிரபந்தங்களினாற் பிறப்புவீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீதஞயங்களால் அன்றி உண்மையால் உணரலாயினர் என்று, அத்திவ்வியப்பிரபந்தங்கள் தம்மைக்கற்பாரியாவர்க்குந் தத்துவஞானோதயத்துக்குக் காரணமாகுந் திறமுடைமையை எடுத்துக்காட்டியது. மூன்றாம்வாக்கியம். "மருளாய்ப்பரந்த மயக்கத்துயக்கற்றமாறனைக்கோ, னருளாற் சமயமெல்லாம் பரனுண்டென்றறிவுற்றதே" என்றார் முன்னும்; (கசு - ஆஞ்செய்யுள்.) 'எற்றே' என்றது, இம்மகிமைகளைக்குறித்து வியந்து கூறியவாறு.

'குருகைப்பிரான் எம்பிரான் தன் இயலிசைக்கு' என்பதனை 'மெய்கண்டு' என்றதனோடும், 'மெய்புணர்ந்தார்' என்றதனோடுங் கூட்டுக; நடைநிலைத்தீவகம். இயலிசை - "பண்ணார்பாடலின்கவிகள்," "குருகையர்கோன், யாழினிசை வேதத்தியல்" என்றபடி முதிர்ந்த குறிஞ்சி சாதாரி முதலான பண்ணிசையோடு இசைந்த பாடல். இயலிசை=இசையியல். இசைக்கு=இசையினால்; உருபுமயக்கம். கும்பிடுதல் - அஞ்சலி செய்தல். 'எவர்' என்ற வினைப்பெயர் - இன்று. இன்மைகுறித்து நின்றது. வெற்றேவலினின்ற பொய்யன்பர் - பொய்யாகிய வழிகளிற் சென்று அன்புகொண்டு குற்றேவல் செய்பவர்: தத்துவஞானமின்றி விபரீதஞானமுடையராய் மதாந்தரங்களில் தெய்வவழிபாடு செய்து நின்றவர். (௧௯)

[தலைமகளைத் தலைமகன் கண்ணுற்று 'இஃது ஒரு வியப்பு என்?' என்றல்.]

௨0. இயலைத்தொடுத்தின்னிசையைப்புணர்த்தெம்மைப்பிறவி
மயலைத்துடைத்தபிரான்குருகூர்மதியைக்கொணர்ந்து
முயலைத்துடைத்துத்தனுவைப்பதித்துமுத்தந்குயிற்றிக்
கயலைக்கிடத்திக்கொல்சாளரத்தூடுகதவிட்டதே.

(இ - ள்.) இன் இசையை புணர்த்து - இனிமையான பண்ணிசைகளை அமைத்து, இயலை தொடுத்து - இயற்றமிழ்ப் பாசுரங்களைப் பாடி, எம்மை இ பிறவி மயலை துடைத்த - எமது இந்தப் பிறப்புத்துன்பங்களைப் போக்கியருளிய, பிரான் - உபகாரகராகிய நம்மாழ்வாருடைய, குருகூர் - திருக்குருகூரிலே,—மதியை கொணர்ந்து - சந்திரமண்டலத்தைக் கொண்டுவந்து, முயலை துடைத்து - (அதன் நடுவிலுள்ள) முயலென்பதன் களங்கத்தைப் போக்கி, தனுவை பதித்து - (அதிலே இரண்டு விற்களைப் பதியவைத்து, முத்தம் குயிற்றி - முத்துகளைப் பதித்து, கயலை கிடத்தி - இரண்டு கயல் மீன்களையும் வைத்து, சாளரத்து ஊடு - பலகணியினுள்ளே அச்சந்திரமண்டலத்தை நிறுத்தி, கதவு இட்டது கொல் - புறத்தே கதவு அமைக்கப்பட்டதோ! (எ - று.)—'இத்தோற்றம்' எனத் தோன்றாஎழுவாய் வருவித்துமுடிக்க.

ஒருவருள்ளக்கருத்தை ஒருவரறியாத ஒருதலைக்காமமாகிய கைக்கிளைத்திணையின் முதலதான காட்சியென்னுந் துறை. இது, விசுவாமித்திரமுனிவர்பின்னே இலக்குமணனுடன் சென்ற இராமபிரான் மிதிலாபுரி

யின் வளங்களைக் கண்டுகொண்டே இராஜவீதிவழியாக அந்நகரினுட் புகும் போது கன்னிமாடத்தின் மேலிடத்து முன்புறத்தில் நின்ற ஜாநகியைக் கண்டு காதல்கொண்டதுபோலவும், இராசமாபுரத்து வீதிவழியே சென்ற சீவகன் அங்கு எழும்பிச்சென்று வீழ்ந்த தன் பந்தை யெடுத்தற்குவந்த விமலையைக் கண்டு வேட்கைகொண்டதுபோலவும் ஒரு தலைமகன் திருக்குருகூரின் வீதியிற் போம்போது "வாளரம்பொருதவேலு மன்மதன்சிலையும் வண்டின். கேளொடுகிடந்தநீலச்சுருளுஞ் செங்கிடையுங்கொண்டு, நீளிருங் களங்கநீங்கி நிறைமணிமாடநெற்றிச், சாளரந்தோறுந் தோன்றுஞ் சந்திரவுதயங் கண்டார்" என்றபடி அங்கு ஒரு மாளிகையின் சாளரத்திலே ஒரு தலைமகளது முகமண்டலத்தைக் கண்டு காதல்கூர்ந்து அதன்சிறப்பை வியந்து பாராட்டி இங்ஙனம் தன்னுட் கூறின னென்க. பொருளதிகாரத்திற் கூறப்பட்ட குணநலங்களிற் சிறந்த தலைமகனும் தலைமகளும் ஒருசோலையினிடத்து ஏகாந்தத்திலே தற்செயலாகச் சந்தித்து ஒருவரையொருவர் நோக்கியபொழுது ஒருவர்மே லொருவர் அன்புகொண்டு இயற்கைப்புணர்ச்சி பெறுமாறு போல, இதுவும் ஒருநிகழ்ச்சி. இச்செய்யுளின் மெய்ப்பாடு - உவமையைச் சார்ந்த மருட்கை; கண்ட பொருளால் நெஞ்சில் மயக்கந் தோன்றி ஒன்றை ஒன்றாகக்கூறுதலின். இங்ஙனஞ்சொன்னதனாற் பயன் - மகிழ்தல்; "சொல்லெதிர் பெறாஅன் சொல்லியின்புறுதல், புல்லித்தோன்றுங் கைக்கிளைக்குறிப்பே" என்றார் தொல்காப்பியனார்.

மதி - கலைநிறைந்த சந்திரன். இங்கு 'மதி' என்றது, அம்மாதின் முகமண்டலத்தை. கண்டவர்கண்களிக்கச்செய்யும் இயல்பிலும், குளிர்ந்த இனிய ஒளியிலும், முகத்துக்குச் சந்திரன் உவமை. அச்சந்திரனுக்காயின் முயலெனப்படுங் களங்கம் உண்டு; இம்முகசந்திரனுக்கோ அது இல்லை யென்னும் விசேடங் கூறுவான், 'மதியைக்கொணர்ந்து முயலைத்துடைத்து' என்றான்; கீழ் எ௬ - ஆஞ் செய்யுளில் "வெண்மதிமேற், கள்ளம்பரந்தனவோ முயல் நீக்கி" என்றதும் காண்க. விற்போல வளைந்து ஆடவர்நெஞ் சுறுதியைப் போக்கும் ஆற்றலுடைய புருவங்களின் சிறப்பைப் பாராட்டி 'தனுவைப் பதித்து' என்றும், புன்முறுவல்செய்கையிற் சிறிது வெளித்தோன்றிய வெண்மையான பற்களின் அழகில் ஈடுபட்டு 'முத்தங்குயிற்றி' என்றும், பிறழ்கிற கண்களின் நலத்தைக் கொண்டாடி 'கயலைக் கிடத்தி' என்றுங் கூறினான். 'சாளரத்தூடு கதவிட்டதே' என்றது, பலகணியுங் கதவுமுள்ள இடத்தே இவ்வகைமதியமொன்றுஉண்டோ எனவியந்தவாறு. இது, தற்குறிப்பேற்றவணியின்பாற்படும்; 'கொல்' என்ற இடைச்சொல் அவ்வணிக்கு உருபாய் நின்றது.

பிரான் குருகூர் - ஆழ்வார்திருவவதரித்ததலமான திருநகரி. பாமாலையென்ப வாதலால், 'இயலைத் தொடுத்து' எனப்பட்டது. பிறவித்துன்பங்களாலாகும் மயக்கத்தைத் தம்மைச்சார்ந்தவர்கட்குப் போக்கியருளுதலால் ஆழ்வார் 'எம்மை இப்பிறவிமயலைத் துடைத்த பிரான்' எனப்பட்டனர். ஆழ்வாரையடுத்தார்க்கு அவரருளால் வினையனைத்துந் தீரவே, பிறவித்துயர்க்குவருந்துதல் இல்லையாம்.

ஆழ்வாரிடத்தில் அன்புகொண்ட பாகவதர் ஆழ்வாரை யுத்தேசித்துத் திருக்குருகூரைச்சார்ந்துள்ள கம்பநாடரது திருமுகமண்டலத்தின் விளக்கத்தைக் கண்டு அதனைக் கொண்டாடுதல், இதற்கு உள்ளுறைபொருள். ஆழ்வார் பாட்டுடைத்தலைமக னென்றும், அவரிடத்து அன்புள்ள பாகவதர்கள் கிளவித்தலைமக்க ளென்றும் வேறுபாடு அறிக. கிளவித்தலைமகனும் பாட்டுடைத்தலைமகனுமாக இரண்டுதலைமகன் அமைதல், இறையனாரகப் பொருளுரையாலும் விளங்கும். ஆழ்வாரிடத்திற்போல அவரடியாரிடத்தும் "சடகோபனைச்சென்றிறைஞ்சுந்,தலையாரெவ ரெவ ரெம்மையாளுந் தபோதனரே." "மாறனென்றுற் பதுமக்கரங்கள், முடியெடுத்துக்கொண்ட வந்தனைத் தாளென்முடி" என்று கம்பநாடர் மிக்கபக்திகொண்டு அவர்களையுந் தமக்குத் தலைவராகக் கொள்ளுதல், அவ்வடியார்களைக் கிளவித்தலைமகனாகக்கொண்டதற்குக் காரணம். இங்ஙனம் தலைமகன் வார்த்தையாலே தமது வைபவத்தைப் பேசி மகிழ்கின்றனர் கம்பநாட ரென்க. "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங், கடுத்தது காட்டும் முகம்" என்றபடி இவரது அகத்தி லுண்டான ஞானானந்தங்களால் முகம் மலர்ச்சியுற்றுக் களங்கமில்லாததொரு சந்திரன்போன்று விளங்குதலால், 'மதியைக்கொணர்ந்து முயலைத்துடைத்து' எனப்பட்டது. வில்என்பது-அம்பைச்செலுத்திக்குறியையெய்வதாகையாலே, இவரது ஸாதநபூர்த்தி முகக்குறிப்பிலே விளங்குதல் 'தனுவைப் பதித்து' எனப்பட்டது. இனிய துதிமொழிகளை இவர் வாய்மலர்ந்துகூறும்போது சிறிதுவெளித்தெரிகிற தந்தபங்க்தியின் பொலிவை 'முத்தம குயிற்றி'என்று பாராட்டியவாறு. ஆராய்ச்சியாற் பல விஷயங்களில் விரைந்துசெல்லவல்ல இவரது ஞானக்கண்ணின் அமைதியை 'கயலைக் கிடத்தி' என்று கொண்டாடின ரென்க. அம்முகமண்டலத்தின் விகாசம் மேல்நோக்காகவன்றி ஊன்றி நோக்கினல்மாத்திரமே நன்கு புலனுவ தென்பதனை 'சாளரத்துடு கதவிட்டதே' என்றதனுற் பெறவைத்தபடியாம். பிறவும் விரிப்பிற் பெருகும்; உய்த்துஉணர்ந்துகொள்க.

கொல் என்ற இடைச்சொல், பிரித்துக்கூட்டப்பட்டது. 'எம்மை மயலைத் துடைத்த' என்பது இரண்டு செயப்படுபொருள் வந்த வினை. 'எம்மை' என்பதை 'எமது' என உருபுமயக்கமாகக்கொள்ளுதலும் நேராம். (அ0)

அக. இட்டத்திலுந்தந்தமுள்ளத்திலும்மெண்ணிலும்மிருப்பின்
கிட்டத்திலுமவலியாருமுருகுவர்கேணியிலும்
பட்டத்திலும்பைந்தடத்திலுமோடைப்பழனத்திலுங்
குட்டத்திலுங்கயல்பாய்குருகூர்குணங்களுக்கே.

(இ - ள்.) கேணியிலும் - கிணறுகளிலும், பட்டத்திலும் - (பெருக்குக் காலத்தில் நீரேறிப்பாயும்) பட்டக்கால்களிலும், பைந் தடத்திலும் - பசுமையான தடாகங்களிலும், ஓடை பழனத்திலும் - நீரோடைசூழ்ந்த வயல்களிலும், குட்டத்திலும் - ஆழமான குட்டைகளிலும், கயல் பாய் - (நீர் வளத்தால்) கயல்மீன்கள் பாயந்துகுதிக்கப்பெற்ற, குருகூர் - திருக்குருகூரில் அவதரித்தவரான நம்மாழ்வாருடைய, குணங்களுக்கு - நற்குணங்களைக் கண்டு அவற்றிற்காக,—இருப்பின் கிட்டத்திலும் வலியாரும் - இரும்

புருக்கிய உருக்குக்கிட்டத்தைக்காட்டிலுங் கடினமானவர்களும்;—தம் தம் இட்டத்திலும் உள்ளத்திலும் எண்ணிலும் உருகுவர் - தம்தம்முடைய மனம் புத்தி சித்தம் என்னும் அகக்கரணங்களிற் கரைவார்கள்; (எ - று.)

மனம் மொழி மெய் என்னுந் திரிகரணங்களின் புடைபெயர்ச்சியாகிய எண்ணம் சொற் செயல்களி லெல்லாம் இருப்புக்கிட்டத்தினுங் கடினமான இயல்புடையவர்களும், நம்மாழ்வாருடைய திருக்கல்யாண குணங்களை நோக்குமிடத்து, அவற்றின் சிறப்பினால், தம்கடுமையொழிந்து, அகக்கரணங்கள் நெகிழ்ந்து உருகி நீராய்க்கரைவர் என்று அத்திவ்வியகுணங்களின் மேன்மையை எடுத்துக்காட்டியவாறும்; எனவே, இளகுநெஞ்சுடையா ருருகுவது சொல்லவேண்டாதாயிற்று. ஆகவே, அவை யாவரும்ஈடுபடும்படியுள்ளன வென்க. (திருமாலையில் "இரும்புப்போல் வலிய நெஞ்சம் இறை யிறை யுருகும் வண்ணம்" என்றஇடத்தில் 'இரும்பாகில் அக்நியாலே நிமிர்த்துக் கொள்ளலாம்; இது ஒருபடியாலுந்திருத்தவொண்ணாதென்கை,' கடிநஸ்தலத்திலே வர்ஷித்தால் காடிந்யமடங்க நெகிழ்ச்சிக்கு உறுப்பாமாபோல, விஷயாந்தரத்தாலே மனஸ்அதிகடிநமானாலும் சிதிலமாம்படி வயிர வுருக்காயிறே பகவத்ப்ரபாவ மிருப்பது' என்ற பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானவாக்கியங்கள் நோக்கத்தக்கன.) மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்ற நான்கு அந்தக்கரணங்களுள், அகங்காரம்ஒழிந்த மூன்றும், முதலடியில் எடுத்துக் கூறப்பட்டன.

'கிட்டத்திலும்' என்ற இடத்து, இல்-ஐந்தனுருபு, எல்லைப்பொருளது; இது, உறழ்பொருவுஎனப்படும்: உம்மை - இழிவுசிறப்பு; 'வலியாரும்' என்ற உம்மையும் அதுவே. 'இட்டத்திலும்' என்பது முதலியவற்றில், இல்-ஏழனுருபு; உம்மை - எண்ணுப்பொருளது. சிறுகுளத்தைக் கேணி யென்பது அருவாநாட்டுச்சொல்; அது, தமிழில் வந்துவழங்கியபோது, திசைச்சொல்லாம். 'ஓடைப்பழனத்திலும்' என்பதற்கு - நீரோடைகளிலும் வயல்களிலும் என்று உரைப்பினும் அமையும். பைந் தடம் - குளிர்ச்சியான தடாகம்; இங்குப் பசுமை, குளிர்ச்சியின்மேலது: குளிர்ந்த நீரை 'பச்சைஜலம்' என்றல், உலகவழக்கு. இனி, பைந் தடம் - (தாமரையிலைகளினாற்) பசுமையையுடைய தடாகம் என்றலுமாம். இருப்பின் = இரும்பின்: மென்றொடர், வன்றொடராயிற்று. ஆழ்வாரது திருவருட்பெருக்கினாலாகும் இடையறாதநீர்ப்பெருக்கால் மேடு பள்ளமென்னும் வாசியின்றி எங்கும் ஒப்பக் கயல்பாய்தல்போல, அவரது குணவிசேஷத்தால் வல்நெஞ்சரோடு மெல்நெஞ்சரோடு வாசியற அனைவரும் உருகுவர் என்பது, குருகூர்க்குக் கொடுத்த 'கேணியிலும் பட்டதிலும் பைந் தடத்திலும் ஓடைப்பழனத்திலும் குட்டத்திலும் கயல்பாய்' என்ற விசேடணத்தாற் போதரும். (௮௧)

௮௨. குணம்வேண்டுமேநற்குலம்வேண்டுமேபக்குலத்தொழுக்காம்
பிணம்வேண்டுமேசெல்வப்பேய்வேண்டுமேபெருந்தண்வகுள
மணம்வேண்டுந்தண்டெரியற்பெருமான்செய்யுண்டாமணியின்
கணம்வேண்டுமென்றறிவாரைக்கண்டாற்சென்றுகைதொழுமே.

(இ - ள்.) பெருந் தண் வகுளம் மணம் வேண்டும் - பெரிய குளிர்ந்த மகிழமலர்களின் வாசனை (அனைவராலும்) விரும்பப்படுகிற, தண் தெரியல் -

இனிமையான மாலையைத் தரித்த, பெருமான் - பெருமையையுடையவரான நம்மாழ்வார் அருளிச்செய்த, செய்யுள் - பாசுரங்களாகிய, மா மணியின் கணம் - சிறந்த இரத்தினங்களின் கூட்டத்தை, வேண்டும் என்று அறிவாரை - (தமக்கு) இன்றியமையாதனவென்று தெரிந்து ஓதியுணர்பவர்களை, கண்டால் - (நீங்கள் எங்குக்) கண்டாலும், சென்று கைதொழும் - (உடனே) அருகிற்சென்று கைகூப்பிவணங்குங்கள்; குணம் வேண்டுமே - நற்குணம் வேண்டுமோ? நல் குலம் வேண்டுமே - நல்லகுலத்திற்பிறத்தல் வேண்டுமோ? அக்குலத்து ஒழுக்கு ஆம் பிணம் வேண்டுமே - அந்த நற்குலத்துக்கு ஏற்ற ஆசாரமாகிய பிணம் வேண்டுமோ? செல்வம் பேய் வேண்டுமே - செல்வப் பொருளாகிய பேய் வேண்டுமோ? [ஒன்றும் வேண்டுவதில்லை யென்றபடி].

விலையுயர்ந்த இரத்தினங்கள்போல அனைவரும் நன்குமதிக்கத்தக்கனவான ஆழ்வார்பாசுரங்களின் மகிமையை யறிந்து அவற்றை அன்புடன் ஓதுபவரைக் கண்டால், அவர்களுடைய குணம் குலம் ஒழுக்கம் பொருள் எதனையும் பார்க்கவேண்டுவதில்லை: உடனே அவரருகிற்சென்று அவரை வணங்குங்கள்: நற்குணவமைதி, உயர்குடிப்பிறப்பு, அதற்குஏற்றஆசாரபூர்த்தி, செல்வப்பொருள் என்பவற்றில் எதுவும் இலராயினும் அவர்கள் நன்கு மதிக்கத்தக்கவர் என்றும்; ஆழ்வாரருளிச்செயல்களை யறிபவர்களை அடுத்துத் தொழுவதுமாத்திரமே நீங்கள் மிக்கமேன்மையடைதற்குப் போதும்: உங்கட்கு மேன்மைவிளைத்தற்காகக் குணம் முதலியன வேண்டுவதில்லையென்றும் இருவகையாகக் கருத்துஅமையும். "அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன, அவாவிலந்தாதிகளா லிவையாயிரமும் முடிந்த, அவாவிலந்தாதியிப்பத்தறிந்தார் பிறந்தாருயர்ந்தே" என்று ஆழ்வார்தாமே அருளிச்செய்ததனால் அப்பாசுரங்களையறிவாரது மேன்மையும், "நல்லார் பலர்வாழ் குருகூர்ச் சடகோபன், சொல்லார் தமிழாயிரத்துள் ளிவைபத்தும், வல்லார் தொண்டராள்வது சூழ்பொன்விசும்பே" என்று ஆழ்வார்தாமே அருளிச்செய்ததனால் அப்பாசுரங்களையோதுவார்க்கு ஆட்பட்டவர்கள் அடையும் பெரும்பயனும் விளங்குதல் காண்க.

குணம் - அன்பு, அருள், அடக்கம் முதலியன. ஒழுக்கு - வருணாச்சிரம தருமங்களில் வழுவாது ஒழுகுதல்; ஒழுகு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். பகவத்பாகவதபக்தியில்லாதாரது ஆசாரம் பயனற்றதும் அருவருக்கத்தக்கதுமா மென்பார், 'அக்குலத்துஒழுக்காம்பிணம்' என்றார். பேய்தாக்கி வருத்துதல்போலச் செல்வம் தன்பக்கல் ஆசையையூட்டி வருத்துதலால், 'செல்வப்பேய்' எனப்பட்டது. தெரியல் என்ற பெயர்-விளங்குவது என்று காரணப்பொருள்பெறும். 'பெருமான்செய்யுள்' என்றவிடத்துத் தொக்கு நின்ற ஆறும்வேற்றுமையுருபு - செய்யுள்கிழமைப் பொருளது. தொழும் - பன்மையேவல். (அஉ)

அ௩. தொழும்பாக்கியவினைத்தொல்லைப்பிறவிச்சுழியிடைநின்
றெழும்பாக்கியமுடைத்தாக்கவுந்தென்னியலோடிசைந்து
கெழும்பாக்கெழுமியகீர்த்தியைநாளுங்கிளத்தியென்னைத்
தழும்பாக்கவும்வல்லகோசடகோபன்றயாபரனே.

தழும்பாக்கவும் வல்ல கோ சடகோபன்' என்றார். "கேட்பார்கள் கேசவன் கீர்த்தி யல்லால் மற்றுங் கேட்பரோ," "இறைவன், பொருள்சேர் புகழ்" என்றபடி, கேட்கத்தக்கதும் பொருள்சேர்ந்ததுமான புகழ் ஸர்வேச்வரனது கீர்த்தியொன்றே யாதலால், 'கீர்த்தி' என்ற பொதுப்பெயர் சிறப்பாய்த் திருமாலின்புகழையே குறித்தது. ஆழ்வார்பாசுரங்கள் அக்கீர்த்தியே நிறைந்தனவாதலே, "செவிகளாலார நின்கீர்த்திக்கனியென்னுங் கவிகளே காலப் பண்தே னுறைப்பத்துற்று" என்ற திருவாய்மொழி கொண்டும் உணர்க. "அருள்கொண் டாயிரமின்தமிழ் பாடினா னருள்கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே" என்றபடி, இங்ஙனம் ஆழ்வார் "ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடைய பேரும் தார்களுமே பிதற்ற"ம்படி பண்ணியதற்குக் காரணம் அவர்க்கு இயல்பாக எல்லாவுயிர்களின்மேலும் எழுந்த கருணையே யாதலால், 'சடகோபன் தயாபரன்' என்றார்.

சடகோபன் என்ற திருநாமத்தின் காரணம்-மதாந்தரத்தவர்களாகிய சடரைக்கோபித்துத் தம்திருவாய்மொழிகொண்டு வெல்பவர் என்று கூறுவர்; * சடர் - மூர்க்கர், விடாப்பிடியுடையோர். தொல்லைப்பிறவி-பண்புத்தொகை. 'இடைநின்று' என்பதில், நின்று - ஐந்தாம்வேற்றுமைச்சொல்லுருபு, நீக்கப் பொருளது. கோ - உயர்திணைப்பெயர்; இது, 'சடகோபன்' என்ற பெயர்ப் பயனிலை கொண்டது. தயா பரன் - தயையினாற் சிறந்தவன்: பரமதயாளு வெனினுமாம். (௯௩)

[நற்றாய்க்குச் செவிலி அறத்தொடு நிற்றல்.]

௭௪. பாந்தலைக்கும்பொருநைக்குருகூரென்னிற்கண்பனிக்குங்
கரந்தலைக்கொள்ளுமுள்ளுமுருகுங்கவியாலுலகைப்
புரந்தலைக்கும்வினைதீர்த்தான்புனைமகிழ்பூவுமன்றி
மரந்தலைக்கொள்ளவும்போதுநங்காயுன்மகள்கருத்தே.

(இ - ள்.) நங்காய் - மகளிரிற்சிறந்தவளே! பாந்து அலைக்கும் பொருநை குருகூர் என்னில் - பரவி அலைவீசுகிற பொருநையாறென்னும் தாமிரபர்ணி நதிபாயப்பெற்ற திருக்குருகூர் என்று (யாரேனும் தலைவனது ஊர்ப்பெயர்) சொன்னமாத்திரத்தில், (நின்மகள்), கண் பனிக்கும் - கண்ணீர் பெருக்குகின்றாள்; கரம் தலை கொள்ளும் - கைகளைத் தலைமேற்கொண்டு கூப்பித் தொழுகின்றாள்; உள்ளும் உருகும் - (புறமாகிய உடல் உருகுதலேயன்றி) அகமாகிய மனமும் கரைந்து நீராகின்றாள்; கவியால் உலகை புரந்து - (தான் பாடிய) பாசுரங்களினால் உலகத்தைப் பாதுகாத்து, அலைக்கும் வினை தீர்த்தான் - (உயிர்களை) வருத்துகின்ற கருமத்தைப் போக்கியருளி

* ஆசார்யஹ்ருதயத்தில் "சடரை யோட்டி" என்றதும், "சடகோபராகையாலே "வேதசாஸ்த்ராவிரோதிகா" என்கிறபடியே ப்ரமாணாநுகூல தர்க்கங்களாலே மத்யஸ்தமாக அர்த்தத்தை ஸாதிக்கையன்றிக்கே ஸ்வபுத்தியாகல்பிதகுஷ்கதர்க்கங்களாலே ஸ்வஸ்வமதஸ்தாபநம்பண்ணும் பாஹ்ய குத்ருஷ்டிகளாகிற சடரை, ப்ருத்யந்ததாத்பர்யமான ஸ்வோக்திவிசேஷங்களாலே ஸ்வஸந்நிதாநத்தில் நில்லாதபடி துரத்தி" என்ற அதன் வியாக்கியானமுங் காண்க.

யவனுன அத்தலைவன், புனை - அணிந்த, மகிழ் பூவும் அன்றி-(மாலையாகிய) மகிழமலர்களைத் தான் சூடிக்கொள்ள விரும்புவதும் அல்லாமல், மரம் தலைக்கொள்ளவும் போதும் - (அந்தமலர்களைப் பூக்கின்ற) மகிழமரத்தைச் சார்ந்து அதனைத் தலைமேற்கொள்ளுதற்குஞ் செல்கின்றுள்; உன் மகள் கருத்து - உனது பெண்ணின் மனநிலை. (இத்தன்மையதாம்); (எ - று.)—'இத்தன்மையதாம்' என வினை வருவித்து முடிக்க.

தலைவியைக் களவொழுக்கத்தாற் கூடிநின்ற தலைவன், பின்பு 'ஊரெங்கும் பழிபரவுதலாலும், இவ்வஞ்சனையொழுக்கத்தைத் தாய்மார் அறிதல்கூடுமாதலாலும், இனி இதனை விட்டு, வெளிப்படையாக இவளை நீ மணம்புரிந்து கொள்ளுதலே தகுதி' என்று தோழியால் வற்புறுத்தப்பட்டு, அத்தலைவிக்காகத் தாய்தந்தையரிடங்கொடுத்தற்குஉரிய அருங்கலம் முதலிய பொருளைத் தன்முயற்சியால் ஈட்டுதற்பொருட்டுப் பிரிந்துசெல்வன்; இப்பிரிவு, வரைபொருட்பிரி வென்றும், வரைவிடைவைத்துப் பொருள் வயிற்பிரிதலென்றுங் கூறப்படும். அங்ஙனம் அவன்பிரிந்துசெல்லவே, தலைவி அப்பிரிவுத்துயரை ஆற்றமாட்டாமலும் தந்தைதாயரிடத்துத் தன்னைக்குறித்துப் பிறர் மணம் பேசுவதை யுணர்ந்தும் வருந்தி மெலிவடைய, அம்மெலிவுகண்ட செவிலித்தாய் இம்மெலிவு தெய்வாவேசத்தா லாகியதென்று மாறுக எண்ணி அதற்கு உரிய பரிகாரங்களைச் செய்யத்தொடங்க, அதுகுறித்து வருத்தம்மிக்க தலைவி தோழியைத் தூண்ட, அவள் செவிலிபக்கல் உண்மைக்காரணத்தை உரைக்க, அவள் அதனை நற்றுய்க்கு உரைத்தல், இச்செய்யுளிற் கூறிய விஷயம். (நற்றுய் - பெற்றதாய்.) இச்செய்யுளின் மெய்ப்பாடு - உவகை. இதன் பயன் தந்தைதமர்க்கும் அவள் சொல்லி வெளிப்படையாக இவளுக்கு அவனை மணம் புரிவிக்கும்படி தூண்டுதல். இங்ஙனங் களவை வெளிப்படுத்துதலை 'அறத்தொடுநிற்றல்' என்பர்; மகளிர்க்குச் சிறந்ததருமமாகிய கற்போடு இசைய நிற்பதனுல், இவ்வாறு பெயராயிற்று; "தலைவி பாங்கிக்கு அறத்தொடுநிற்கும், பாங்கி செவிலிக்கு அறத்தொடுநிற்கும், செவிலி நற்றுய்க்கு அறத்தொடுநிற்கும், நற்றுய் தந்தை தன்னையர்க்கு அறத்தொடு நிற்கு மென்ப நெறியுணர்ந்தோரே" என்பதனுல், களவை வெளிப்படுத்திநிற்கும் முறைமையை அறிக.

தலைவனதுபெயரைக் குறியாமல் அவனதுஊரின்பேரைக்கூறக்கேட்டு மனவிலும் தலைவி ஆசைநோயால் அடையும் பலவகை நிலைவேறுபாடுகளும், ("தாராயினும் தழையாயினும் தண்கொம்பதாயினும் கீழ், வேராயினும் நின்ற மண்ணுயினும் கொண்டுவீசுமினே", "போரரிதாள்புனைதாரரிதாகில் தண் பூந்துளவின், தாரரிதாவுந்தழையரிதாகில் தழைதொடுத்த, நாரரிதாகிற் பிழைப்பரிதாம் எங்கள்நன்னுதற்கே," "கொழுந்தோ டிலையும் முகையு மெல்லாங் கொய்யுங் கொய்மகிழ்க்கீழ், விழுந்தோடுவதொர்சருகும்பெறுள்" என்றபடி) பிரிவாற்றுதநிலையில் தலைவி தலைவனது மாலையாயினுங் கிடைக்கப்பெறவேண்டுமென்றுவிரும்புவதேயன்றி அம்மாலைக்குஉரிய மலரின் சம்பந்தமுள்ள பொருள் எது கிடைத்தாலும் போதுமென்று விரும்புவதும் இங்கு எடுத்துக்கூறப்பட்டன.

பனிக்கும், கொள்ளும், உருகும், போதும் என்ற செய்யுமென்முற்றுக்கள் - பெண்பாலுக்குவந்தன. இம்முற்றுக்கள், இங்கு நிகழ்காலங் காட்டின; "செய்யும் நிகழ்பு எதிர்வும்" என்றார் நன்னூலார். உள் - உள்ளம்: அந்தக்கரணமாகிய மனம். 'உள்ளும்' என்பதை 'உள்' என்ற வினைப்பகுதியடியாப் பிறந்த செய்புமென்முற்றெனக் கொண்டு, அதற்கு - சிந்திக்கின்றாளென்று உரைத்தலும் ஒன்று; உள்ளுதல் - நினைத்தல். உன்மகள்கருத்துப் போதும் - நினதுமகளின்கருத்துச் செல்லும் என்றுங் கொள்ளலாம். கவியா லுலகைப் புரந்து—"கவியா லுலகை யுய்த்தலைச்செய்தது" என்றார் முன்னும்,(ந அ-ஆஞ் செய்யுள்.) 'கவியால்' என்றதை 'வினைதீர்த்தான்' என்பதனோடுங் கூட்டுக. கவி - திருவாய்மொழி முதலியன. 'உலகு' என்பது - பலபொருளொருசொல்லாய், நிலத்தையும் உயிர்களையும் ஒழுக்கத்தையும் உயர்ந்தோரையும் உணர்த்திநிற்குமேனும், இங்கே 'புரந்து' என்றதனால், நிலவுலகத்தில்வாழுஞ் சீவான்மாக்களையுணர்த்திற்று; "உலக முவப்ப" என்றவிடத்து 'உலகம்' என்பது போல.

சிற்சிலசமயங்களிற் கம்பநாடரது ஞானக்கண்ணுக்குப் புலனான ஆழ்வார் அப்பொழுதே அவர்க்குச் சதாசாந்நித்யத்தைத் தந்தருளாமற் பரம்பொருளைநாடி மறைந்தவளவிலே, அப்பிரிவைப்பொறாது அவர் வருந்துகிற நிலையைப் பரிவுடையார் ஞானிகட்குக்கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். இங்ஙனம் செவிலிபேச்சாலே தமதுநிலைமையை வெளியிடுகின்றனர் கம்பநாட ரென்க. ஆழ்வாரவதரித்த திவ்யதேசத்தின் திருநாமத்தைக் கேட்ட மாத்திரத்தில் இவர்க்குஉண்டாகும் பக்திகாரியமான மெய்ப்பாடுகளும், ஆழ்வாரது பிரசாதத்தைச் சிரமேற்கொள்வதில் இவர்க்குஉண்டான அதியாதரமும், இதில் நன்கு வெளியாகின்றன. 'வினைதீர்த்தான் புனைமகிழ்ப் பூவுமன்றி மரந்தலைக்கொள்ளும்' என்பதற்கு ஸ்வாபதேசம் - ஆழ்வாரது சம்பந்தத்தை நேரிலேனும் இடையிட்டேனும் உடைய அடியார்களைத் தலைமேற்கொள்ளச் செல்கின்றன ளிவ ளென்றும் உரைக்கலாம்; ஆழ்வாரது அன்பர்கள் எழுந்தருளியிருக்கிற இடமும் இவளாற் சிரமேற்கொள்ளுமாறு விரும்பப்படுகிற தென்பதுந் தோன்றும். பிறவுங் கண்டுகொள்க. (அச)

[தலைவனைநோக்கித் தோழி தலைவியை உடன்கொண்டுபோகச் சொல்லுதல்.]

அரு. கருத்திற்கருணைவைத்தேகுமிதுவுங்கலைமறையோர்
திருத்திற்றொருமணந்திருந்தினமயனீரினிறை
முருத்திற்செருந்தயலேயிவளோடுமுபற்கரும்பின்
குருத்திற்பிரசம்வைக்குங்குருகூர்சென்றுகூடுமினே.

(இ - ள்.) கருத்தில் கருணை வைத்து - (நமது) மனத்திற் பேரன்பு கொண்டு, இவளோடு ஏகும் - இம்மங்கையுடனே (நீர்) செல்லக்கடவீர்; இதுவும் - இவ்வாறு நீர் இவளைக்கைப்பற்றுவதும், கலை மறையோர் திருத்திற்று ஒரு மணம் - சாஸ்திரம்வல்ல அந்தணர்கள் செவ்விதாக அமைத்த விவாகங்களுள் ஒன்றன்பாற் படும்; (அன்றியும்), தினம் மயல் தீரும் - நாள் தோறும் (உங்களிருவர்க்கும் இடையீடுகளினால் உண்டாகும்) மயக்கமும்

(இவளை நீர் உடன்கொண்டுசென்றால்)நீங்கியிடும்; (ஆதலால்).—நீரில் நிறை- நீர்வளத்தால் நீரருகிலே முளைத்து நிறைந்துள்ள, முருத்தின் செருந்து-வெண்மையான அடிக்குருத்துக்களையுடைய செருந்தியென்னுங் கோரைகளின், அயலே - அருகிலே (யுள்ள), கரும்பின் - கரும்புகளின், குருத்தில் - குருத்துக்களிலே, முயல் - முயற்கூடெனப்படுகிற சந்திரமண்டலம்போல, பிரசம் வைக்கும் - தேன்கூடு கட்டப்பெற்ற, குருகூர் - (நமது) திருக்குருகூர்க்கு, சென்று கூடுமின் - (இவளை அழைத்துக்கொண்டு) போய்ச் சேர்வீராக.

அகப்பொருளிலக்கணநெறிகளுள் ஒன்றான உடன்போக்கின் இயல்பு' கீழ் ௨௦, ௬௭-ஆஞ் செய்யுள்களின் உரையிற் சிறிதுகூறப்பட்டது. இயற்கைப்புணர்ச்சி இடந்தலைப்பாடு பாங்கற்கூட்டம் பாங்கியிற்கூட்டம் என்பவற்றாற் களவுநெறியில் தலைமகளோடுகலந்த தலைமகனை நோக்கி, தோழி, 'இங்குப் பழிபரவுதலால், இனி இக்களவொழுக்கம் ஆகாது: மற்றும், இவளைப் பலர் மணம்பேசுகின்றாராதலின், இவட்குப் பரிசமாக இவளதுதந்தைதாயரிடங்கொடுக்கவேண்டிய அருங்கலம்முதலிய பொருள்களை நீ விரைவிற்கொடுத்து முற்பட்டு இவளை மணம்புரிந்துகொள்ளவேண்டும்; அதற்கு இப்பொழுது சௌகரியப்படாதாயின், இவளை உடன்கொண்டு உன்னூர்க்குச்சென்று, இடையூறின்றி இவளோடு கூடி வாழ்வாய்' என்று சொல்லித் தலைவனை உடன்போக்குக்குஉடன்படுத்துதல், இச்செய்யுளிற்குறித்ததுறைப்பொருள்; இது 'தளர்வறிந்துரைத்தல்' எனவும், 'பாங்கி தலைவற்கு உடன்போக்கு உணர்த்துதல்' எனவுங் கூறப்படும். இதன் மெய்ப்பாடு - பெருமிதம். பயன்-உடன்போக்குணர்த்தல்.

இந்தக் களவுப்போக்கு எட்டுவகைவிவாகங்களுட் காந்தர்வவிவாகத்துக்குஉரிய முறைமையாதலின், இது தக்கதேயாமென்றும், இது தகாதோவென்று ஒன்றும் ஆலோசிக்க வேண்டுவதில்லையென்றுங் கூறுவாள், 'இதுவும் கலைமறையோர்திருத்திற்று ஒருமணம்' என்றாள்.

(இவ்விவாகம், பின்பு தந்தைதாயர்முதலிய பெரியோர்களால் அங்கீகரிக்கப்படு மென்க; "காந்தர்வமென்னும் விவாகத்தாற் பல இராசவிருடிகன்னிகைகள் மணஞ்செய்யப்பட்டனராகவும், அவர்கள் தந்தைதாயரால் ஆமோதிக்கப்பட்டனராகவுங் கேள்விக்கு வருகிறார்கள்' என்ற வடமொழிச் சாகுந்தளநாடகமும், "காந்தர்ப்பமென்பதுண்டாற் காதலிற்கலந்தசிந்தை, மாந்தர்க்கும் மடந்தைமார்க்கும் மறைகளேவகுத்தகூட்டம், ஏந்தற் பொற்றோளிஞ யிஃதியைந்தபி னெனக்குமூத்த, வேந்தர்க்கும் விரும்பிற்றாகும்" என்ற கம்பராமாயணமுங் காண்க.) தந்தைதமர்களின் உடன்பாடு காந்தர்வவிவாகத்துக்கு வேண்டுவதில்லையென்றும், காதலிருவர் கருத்து ஒருமித்துத் தம்மிற்சேர்தலே அதனிலக்கணமாதலால் அங்ஙனஞ் சேர்ந்தவிடத்துப் பெரியோர் சம்மதித்துக் கொண்டாடுவார்க ளென்றும் உணர்த்தியவாறு. சுபத்திரை விஷயமாகக் கண்ணன் அருச்சுனனை நோக்கி "அடிகள் திருவுளத்தெண்ணமெம்மனோர்க ளறியினிசையலர் பலரிங்கறிவுறாமற், கடியயர்வுற்றம்பதிகொண் டடைக வென்றுங் காவலர்க்குக் கடனென்றுங் கசியக்கூறி" னாற்போல, இப்பாங்கியுந் தலைவனுக்குக் கூறின ளென்க. கந்தர்வ வழக்க

மெனப்படுகிற களவொழுக்கத்தின் பகுதிகளுள் உடன்போக்கும் ஒன்றாத லுணர்க. "கொடுப்போரின்றியுங் கரணமுண்டே. புணர்ந்துடன்போகிய காலையான" என்பது தொல்காப்பியம். சாஸ்திரங்களிற் சொல்லப்பட்ட எட்டுவகைவிவாகங்களாவன - பிராம்மம், பிராஜாபத்தியம், ஆர்ஷம், தைவம், காந்தர்வம், ஆசுரம், ராக்ஷஸம், பைசாசம் என இவை. இவற்றுள், பிராம்மமா வது - ஒத்தகோத்திரத்தானாய் உரியகால மளவும் பிரமசரியவிரதம் அநுஷ் டித்தவனை அழைத்து உபசரித்துக் கன்னிகையை அலங்கரித்து அவனுக்குத் தானமாகக் கொடுப்பது; இதற்கு 'அறநிலை' என்றும் பெயர். பிராஜாபத்திய மாவது - மகட்கோடற்குஉரிய கோத்திரத்தார் கொடுத்த பரிசத்து இரட்டி தம்மகட்குஈந்து அவளைக் கொடுப்பது; இதற்கு 'ஒப்பு' என்றும் பெயர். 'மைத்துனகோத்திரத்தான் மகள் வேண்டிச்சென்றால் மறாது மனமொத்துக் கொடுப்பது' என்றும், 'ஒப்பஇவர்களிருவரும் ப்ரஜோத்பாதநாதிரூபமான தர்மங்களை அநுஷ்டிக்கக்கடவர் என்று வாக்காலே அறுதியிட்டுச்சொல்லி அக்நிகார்யத்தையும் தானே அநுஷ்டித்துக் கந்யகையை அலங்கரித்துக் கொடுத்தல்' என்றும் இதற்குஇலக்கணங் கூறுதலு முண்டு. ஆர்ஷமாவது - பொற்கோட்டுப்பொற்குளம்பினவாக அலங்கரிக்கப்பட்ட பசுவிருதுகளினி டையே கன்னிகையை அலங்கரித்து நிறுத்தி 'நீரும் இவைபோற் பொலி வுற்று வாழ்வீர்' என்றுசொல்லி அவற்றுடன் கன்னிகையைத் தக்கதொருவ னுக்குக் கொடுப்பது; இதற்கு 'பொருள்கோள்' என்றும் பெயர். தைவமா வது - யாகத்தில் ருத்விக்காயிருந்து அதனைநடத்திவைத்தவரில் ஒருவனுக்கு அந்த யாகாக்கினியின் முன்னிலையிலே கன்னிகையை அலங்கரித்துத் தக்ஷி ணையாகக் கொடுத்தல்; இது 'தெய்வம்'எனப்படும். காந்தர்வமாவது - கந்தர்வ குமாரரும் கன்னியரும் நல்வினைப்பயனால் தனியிடத்துச் சந்தித்து ஒருவ ரையொருவர் காதலித்துப் பிறர்கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றி இயை தல்போல, உருவுந் திருவுங் குலனுங் குணனும் அன்பும் முதலியவற்றால் தம்முள்ஒப்புமையுடையராய்த் தலைவனும் தலைமகளும் பிறர்கொடுப்பவும் அடுப்பவு மின்றித் தாமே நல்வினைவசத்தால் வேட்கைமிகுதியாற் கூடுகை; இதற்கு 'யாழோர்கூட்டம்' என்றும் பெயர். ஆசுரமாவது - வரன் தானே கன்னிகைக்கு ஆபரணம் பூட்டி இயைந்தவளவு தந்தைதன்னையர்க்கும் பொருள்கொடுத்து மணஞ் செய்துகொள்ளுதல்; இதற்கு 'அரும்பொருள் வினை'என்றும் பெயர். "கொல்லேறு தழுவியவன் இவளைப்பெறுவன், வில் வளைத்து நாணேற்றியவன் இவளைப்பெறுவன், இயந்திரப்பொறியிலக்கை யெய்தவன் இவளைப்பெறுவன், சுயம்வரத்தில்மாலைசூட்டப்பட்டவன் இவ ளைப்பெறுவன்' என இவ்வாறு தந்தைதன்னையர் சொல்ல அங்ஙனம் ஒரு வன் செய்துநிறைவேற்றி மணம்புரிந்து கொள்ளுதலும இதன் இலக்கண மாம். ராக்ஷஸமாவது - உறவினரை உபேக்ஷித்துத் தலைவியின் காதலையும் எதிர்பாராது அவளை வலிதிற் கைக்கொள்வது; இது 'இராக்கதம்' எனப் படும். பைசாசமாவது - தன்னினும் மூத்தவளையாவது மதுபானத்தால் மயங் கியவளையாவது துயின்றவளையாவது இரகசியத்திற்கூடுகையும், இழிந்த வளை மணஞ்செய்தலும், ஆடைமாறுதலும் பிறவுமாம்: இதற்கு 'பேய்நிலை'

என்றும் பெயர். மற்றும் இவ்விவாகங்களின் இலக்கணவிரிவை, ஸ்மிருதிக ளெனப்படுகிற வடமொழித் தர்மசாஸ்திரங்கள் முதலிய பரந்தநூல்களுட் கண்டுகொள்க. கலை மறையோர் - கலைஞானத்திற் கைதேர்ந்த அந்தணர். மறையோர் - வேதியர், வைதிகர். இந்த எண்வகை மணமும் வேதத்திற் கூறப்பட்டு வேதவிதிப்படி அநுஷ்டிக்கும் ஆன்றோரால் அங்கீகரிக்கப்பெற் றனவுமா மென்பான், 'கலைமறையோர் திருத்திற்று' என்றான். "அறநிலை ஒப்பே பொருள்கோள் தெய்வம், யாழோர்கூட்டம் அரும் பொருள்வினையே, இராக்கதம் பேய்நிலை யென்று கூறிய, மறையோர் மன்றலெட்டிவை அவற் றுள், துறையமைநல்யாழ்ப் புலமையோர்புணர்ப்புப், பொருண்மை யென் மனார் புலமையோரே," "அன்பினைந்திணைக் களவெனப்படுவது, அந்தண ரருமறை மன்ற லெட்டினுட், கந்தருவவழக்க மென்மனார் புலவர்," "மறை யோர்தேஎத்து மன்ற லெட்டனுள், துறையமைநல்யாழ்த் துணைமையோரி யல்பே." "அதிர்ப்பில் பைம்பூணரும் ஆடவரும் தம்முள், எதிர்ப்பட்டுக் கண் டியைத—லென்ப - கதிர்ப்பொன்யாழ், முந்திருவர் கண்ட முனிவறு தண் காட்சிக், கந்திருவர் கொண்ட கலப்பு" என்றவை இங்கு அறியத்தக்கன.

இனி, 'இதுவும் கலைமறையோர் திருத்திற்றுஒருமணம்'-இதுவோ இன் பக்கலைகளையுணர்ந்த அந்தணர்களாற் சிறப்பித்துக்கூறப்படுகிற ஒப்பற்ற மணம்என்றுங் கொள்ளலாம். அன்பு குணம் கல்வி உரு திரு முதலியவற்றிற் சிறந்ததலைவன்தலைவியர் அநுட்டிக்கும் இந்தமணம் இன்பச்சுவைமயமாய்க் கற்புக்கும் முதலாகையாற் சிறப்புடைத்தென்று பலர் கொண்டாடிப் பேசுதலால், இங்ஙனங் கூறப்பட்ட தென்க. களவொழுக்கத்தில் நாள்தோறும் நேர்கிற பல இடையீடுகளும் அவற்றாலாகும் மதிமயக்கமும் இனி இல்லையாக இடை யூறின்றிக்கூடிவாழலா மென்பான், 'தீரும்தினமயல்'என்றான். மயல் - வியா மோகம். ஏகும், கூடுமின் - ஏவற்பன்மைகள்; தலைவனைத் தோழி உயர்த்திக் கூறுதலால் வந்தன. 'ஏகும்' என்பதைப் பெயரெச்சமாகக்கொண்டு 'இது' என்பதனோடு இயைத்தலும் ஒன்று. 'குருகூர் சென்று கூடுமின்' என்றது - நீவிரிருவரும் சௌக்கியமாகத் திருக்குருகூர்க்குப் போய்ச்சேர்ந்து கூடிவாழ் வீராக என்று தோழி தலைவியையும் உளப்படுத்தித் தலைவனைவாழ்த்தியதாக வும் பொருள்படும். 'கயல் நீரைப்பிரிந்து வாழாதவாறுபோல இவள் நின்னைப் பிரிந்துவாழா ளாதலால், நீ உடன்கொண்டு போகாயாகில் இறந்துபடுவள்: அங்ஙனமாகாதபடி இவள்பக்கல் அருள்வைத்து இவளை உடன்கொண்டு போதல்வேண்டும்' என்று இறந்துபாடு உரைத்து உடன்போக்கு வற்புறுத்து தல் தோன்ற 'கருத்திற் கருணைவைத்து ஏகும்' என்றும், 'இவளிடத்து என் றும் நின் அருள் திரியாமற் பாதுகாப்பாய்' என்று ஓம்படுத்து உரைத்தலும் 'நீவிர் திருவொடுசென்று நும்பதியிடைச் சேர்வீராமின்' என்று வாழ்த்துக் கூறலும் தோன்ற 'சென்று கூடுமின்' என்றுங் கூறினளென்க.

முருந்து - வெண்மையான அடிக்குருத்து; "முருந்தே முதலிற் செறி வெண் குருத்தே" என்றார் திவாகரத்திலும், பிங்கலந்தையிலும். அது 'முரு த்து' என மென்றொடர் வன்றொடராயிற்று; இன் - சாரியை. செருந்து எனினும், செருந்தி எனினும் ஒக்கும். மதுரைக் காஞ்சியில் "களிறுமாய்

செருந்தியோடு சண்பமன் றார்தர" என்றவிடத்து, நச்சினார்க்கினியர். 'செருந்தி' என்பதற்கு - 'வாட்கோரை' என்றும், 'நெட்டிக்கோரையுமாம்' என்றும் பொருளெழுதியிருக்கின்றனர். சந்திரனிடத்துள்ள களங்கத்தை முயலென்ப வாதலால், சந்திரன் 'முயற்கூடு' என்று ஒரு பெயர் பெறும்; முயலை அகத்துக்கொண்டதொரு கூடு போன்ற தென்க: "உடுவேந்தன் நிறை முயற்கூடு பசுங்கதிர், சந்திரன் திங்கள் சோமன்தன் பெயர்" என்ற நிகலந்தையையும், "சிதைவிலா முயலின்கூடு பசுங்கதிர்த்தேவென் றெல்லாம், புதியசந்திரன்" என்ற சூடாமணிநிகண்டையுங் காண்க. தேனிறாலுக்குச் சந்திரன் வடிவில் உவமம்; "கொம்பினிறால் வாங்க நிமிர் குஞ்சரக்கை அம்புலிமேல், வெம்பியெழுங் கோளரவாம் வேங்கடமே" என்றார் பிறரும். நமதுஊரில் நீர்வளமுள்ள நிலத்திலே செழித்துவளர்கிற கோரையைச் சார்ந்து சிறக்கிற கரும்பின் குருத்தில் தேனடைவைப்பதுபோல நீவிர் உயர்ந்த இக்குடும்பத்திலே என்னினுஞ்சிறந்து விளங்குகிற தலைவிபக்கல் தலையளிசெய்யக்கடவீர் என உள்ளுறையுவமங் காண்க. நீர்வளமுள்ள நிலத்தை உயர்ந்த குடும்பமாகவும், அதிற்செழித்துவளர்கிற செருந்தியை அக்குடும்பத்தைச் சார்ந்து சிறக்கிற தோழியாகவும், செருந்தியின் அயலிலே சிறந்துவிளங்குகிற கரும்பைத் தோழியிற்சிறந்த தலைவியாகவும், தலைவிபக்கல் தலைவனவைக்குந் தலையளியைத் தேனிவைக்குந் தேனிறலாகவுங் கொள்க.

இனி, செருந்து-செருந்திமரம் என்றுவைத்து, அயல் எய் இவளோடு என்றுபிரித்து, நீர்வளத்தால் நிறைந்த முருந்துகளையுடைய செருந்திமரத்தின் அருகிலே பொருந்திய இவளுடனே யென்று பொருள்கொண்டு, முன்பு இரவுக்குறியில் வந்து இவளை எதிர்ப்பட்ட இடமாகிய செருந்திமரத்தின்கீழே வந்தானில்: இன்றைநள்ளிரவில் இவளை அங்குக்கொண்டு சேர்ப்பேன்; இனிது அழைத்துக்கொண்டு செல்லலாம்' என்று குறியிடங்கூறல் துறிப்பால் நிகழ இந்த அடைமொழியைத் தலைவிக்குக்கொடுத்தன ரென்னலுமாம்; முருந்து - கொழுந்து, அல்லது அரும்பு: இலக்கணை.

திருத்திற்று - திருந்திற்று என்பதன் பிறவினை. இங்கே, முயல்-முயற்கூட்டுக்கும், கோல்தேனையுணர்த்தும் 'பிரசம்' என்பது - தேன்கூட்டுக்கும் தானியாகுபெயர்.

கம்பநாடர்க்குத் தமது நிரந்தராநுபவத்தைத் தராமல் இடையிட்டுக் காட்சிதந்துநின்ற நம்மாழ்வாரை நோக்கி, கம்பநாடரது அன்பர்கள், 'இனிப் பிரிவுத்துயரில்லாது நிரந்தராநுபவங்கிடைக்குமாறு திருவுள்ளத்திற் பூரணகிருபைவைத்து இவரைத் தேவரீர் திருநாட்டுக்கு உடன்கொண்டு செல்வீராக' என்று வேண்டுதல், இதற்கு உள்ளுறைபொருள். ஜீவாத்மாவைப் பரமாத்மா தன்பக்கல் சேர்த்துக்கொள்ளுதலை வேதசாஸ்திரங்களில் வல்ல வைதிகரான ஆன்றோர் ஒருவிவாகமென்ப ராதலால், 'இதுவும் 'கலைமறையோர்திருத்திற்று ஒருமணம்' எனப்பட்டது; (இதன்விவரம், பிற்காலத்தில் வேதாந்தி நஞ்சீயர் தாம் பட்டர் நல்லருளால் அறிந்து அருளிச்செய்த 'ஆத்மவிவாஹம்' என்ற ரகசியக்கிரந்தத்திற் பரக்கக்காணலாம்.) "நானடிமைகொள்ள விடாய்நானுனேன் எம்பெருமான், தானடிமைகொள்ளவிடாய்

தானுனன் - ஆனதற்பின், வெள்ளக்குளத்தே விடாய் இருவரும் தணிந் தோம், உள்ளக்குளத்தேனையொத்து" என்றபடி, பரமாத்மாவைச் சேர்தலில் ஆசையும் சேராததில் வருத்தமும் விவேகியான ஜீவனுக்கு உண்டாதல் போல, ஜீவாத்மா தன்பக்கல் வந்துசேராததில் வருத்தமும் அதனைச்சேர்த் துக்கொள்ளுதலில் ஆசையும் பரமகாருணிகனுன பகவானுக்கும் உண்டாத லால், இருவர்க்குமாகப் பொதுப்பட 'நீரும் நினையல்' எனப்பட்டது. நீர் மையால் நிறைந்த ஞானக்கொழுந்தையுடைய நித்தியமுக்தர்களினிடையே ஸர்வரஸனுன எம்பெருமான் பூர்ணசந்திரன்போன்று இனிது வீற்றிருக்குந் தேசமென்பது, 'நீரில் நிறைமுருத்திற் செருந்தயலே முயற் கரும்பின்குருத் திற்பிரசம்வைக்குங் குருகூர்' என்பதன் உள்ளுறைபொருள். ஸர்வேசுவரனைத் திருமங்கையாழ்வார் "கரும்பினிடைத்தேறல்" என்றும், "மாமதி" என்றுங் கூறியது, இங்கு நோக்கத்தக்கது. பிறவுங் கண்டுகொள்க. (அரு)

வுகூ. கூட்டங்கடோறுங்குருகைப்பிரான்குணங்கூறுமன்ப
ரீட்டங்கடோறுமிருக்கப்பெற்றேமிருந்தெம்முடைய
நாட்டங்கடோறும்புனல்வந்துநாலப்பெற்றேமினிமேல்
வீட்டெங்கடோழர்க்கென்றேபெரும்போகம்விளைகின்றதே.

(இ - ள்.) கூட்டங்கள் தோறும் - தாம் கூடும்பொழுதெல்லாம், குரு கைப்பிரான் குணம் கூறும் - திருக்குருகூரிலவதரித்த உபகாரகரான நம் மாழ்வாருடைய திவ்வியகுணங்களைச் சொல்லிப்புகழ்கிற, அன்பர் - அடியார் களுடைய, ஈட்டங்கள் தோறும் - கூட்டங்களிலெல்லாம், இருக்க பெற்றேம்- கூடியிருக்கப்பெற்றேம்; இருந்து - அங்ஙனங் கூடியிருந்து, எம்முடைய நாட்டங்கள் தோறும் புனல் வந்து நால பெற்றேம் - (அன்புமிகுதியால்) எங்கள் இரண்டு கண்களிலும் ஆனந்தக்கண்ணீர் பெருகிவழியப் பெற்றேம்; இனிமேல் - நாங்கள் இங்ஙனம் ஆனபின்பு,—வீடு - பரமபதத்தில், எங்கள் தோழர்க்கு என்றே பெரும் போகம் விளைகின்றது - எங்களைச் சார்ந்தவர்கட் காகவே பேரின்பநலம் நிகழாநின்றது; (எ - று.)

தாம் கூடுமிடத்தெல்லாம் நம்மாழ்வாருடைய ஸௌசீல்யம் தமம் முதலிய திருக்கல்யாணகுணங்களைக் கொண்டாடித் துதிக்கிற அடியார்களுடைய குழாங்களிலெல்லாங் கூடியிருக்கவும், அங்கு இருந்து பக்திமிகுதியா லனு பவிக்கும் ஆனந்தாதிசயத்தாற் கண்ணீர் பெருகவும் பெற்றேம்; ஆதலால், இனி எங்கட்கேயன்றி எங்களைச் சார்ந்தவர்க்கும் பரமபதத்திற் பேரின்ப நலம் வாய்ப்பது திண்ணமென்பதாம். 'வீட்டெங்கள் தோழர்க்கென்றே பெரும்போகம் விளைகின்றதே' என்பதை, "தமரங்களவர்க்கு மெஞ் ஞான்று நரகில்லையே" என்றாற்போலக் கொள்க. (ததிபாண்டனுக்காக அவனுக்குவேண்டிய இருபத்தெட்டுமேனையிலுள்ளார்க்கும் அவனது தயிர்த் தாழிக்கும், கண்டாகர்ணனுக்காக அவன் தம்பியான தந்தகனுக்கும பரம பதம் கிடைத்தமை காண்க.) "வாய்க்குங் குருகைத் திருவீதி யெச்சிலை வாரியுண்ட, நாய்க்கும் பரமபதமளித்தார்" ஆழ்வார் ஆதலால், அவர்திறத் தில் இங்ஙனஞ் சொல்லத்தகும். 'இவர்கள் தோழர்க்கென்றே வீட்டுலகத் திற் பெரும்போகம் விளைகின்றது' எனவே, இவர்கட்கு அங்குப் பெரும்

போகம் விளைதல் சொல்லவேண்டாதாயிற்று. அருத்தாபத்தியாற் பெறப்படுதலின், இவர்கள் தாங்கள் "விண்ணுளாரிலுஞ்சீரியர்" என்பது தொனிக்கின்றதென்றுங் கொள்ளலாம். 'பெற்றேம்', 'எங்கள்' என்ற பன்மை, மற்றும் பல அடியார்களையும் உளப்படுத்தியது.

வீடு 'வீட்டு' என நெடிற்றொடர்க்குற்றுகரம் டகரவொற்று இரட்டிற்று.

[பகற்குறியில் தலைமகனுடன் தலைமகளைக் கூட்டுவித்த தோழி, பின்பு தலைவன் சிறைப்புறமாக அவன் செவிப்படுமாறு தினையோடுவெறுத்து வரைவுகடாதல்.]

௩௭. விளையாதொழியமருந்துமுண்டேயெம்வினைதினையின்
கிளையாக்கிளரவிளைகின்றதாற்கிளையாம்பிறவித்
தளையாசழியத்தடுத்துத்தென்பாலைவழிதடுத்துக்
களையாசறத்தடுத்தாண்டான்குருகையிற்காப்புனமே.

(இ - ள்.) கிளை ஆம்-மேன்மேற்கிளைத்து வளருந்தன்மையதான, பிறவி-பிறப்புக்களிலுலாகிற, தளை - பந்தத்தை, ஆசு அழிய - விரைவில் அழியும்படி, தடுத்து - போக்கி, தென் பாலை வழி தடுத்து - தென்திசையிலுள்ள பாலைநிலவழியையும் தவிர்த்து, களை-(வினைகளாகிய) களைகளை, ஆசு அற தடுத்து - முற்றும் அழியும்படி களைந்து, ஆண்டான் - (உயிர்களை) ஆட்கொண்டருளியவராகிய நம்மாழ்வாருடைய, குருகையின் - திருக்குருகூரைச் சார்ந்த, கா புனமே - (எம்மாற்) பாதுகாக்கப்படுதலையுடைய தினைக்கொல்லையே!—எம் வினை - எமது தீவினையே, தினையின் கிளையா - தினைப்பயிர்களாக முளைத்து வளர்ந்து, கிளர விளைகின்றது - நன்றாகக் கதிர்முற்றிப் போகின்றது; விளையாதொழிய - (இவ்வாறு) முற்றுமற் கதிர்பறிர்தபடியே யிருக்கும்படி செய்தற்கு, மருந்தும் உண்டே-(ஏதேனும்) மருந்தும்உளதோ? (சொல்வாயாக என்றபடி); (எ - று.)—ஆல் - ஈற்றசை; இரக்கமுமாம்.

இயற்கைப்புணர்ச்சியும் பாங்கர்கூட்டமும் பெற்றபின்பும் களவொழுக்கநெறியிலேயே நின்ற தலைவன் தலைவியின் காதற்பாங்கியை உணர்ந்து அவளை அனுசரித்துத் தன்குறைகூறிஇரப்ப, அவன்கருத்துக்கு அிதின் இசைந்த அப்பாங்கி, அத்தலைமகனுக்கு ஒருகுறியிடங் கூறி, தாம் தினைப்புனங்காப்பதாகச் சொல்லி மனையிலுள்ளாரிடம் விடைபெற்று அந்த வியாஜத்தால் தலைமகளை அழைத்துவந்து குறியிடத்திற்கொண்டுசேர்த்து, அங்குக் தலைமகன் வந்து சந்தித்துத் தலைமகளுடன் சேருமாறு செய்விக்க, அத்தலைமகன் பின்னரும் அக்களவுநெறியையே வேண்டிநின்றானாக, அவனுக்கு அத்தோழி, 'இனி இவ்வாறு ஒழுகுவது தகுதியன்று' என்றும், 'விரைவில் இவளை வெளிப்படையாக மணஞ்செய்து கொள்ளுதலே தகுதி' என்றும் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் எதிரில் நின்று பேசியும் முன்னிலைப் புறமொழியாகக்கூறியும் பலவாற்றான் உணர்த்துவள். இது, பாங்கியிற்கூட்டத்திலே பகற்குறியில் வரைவுகடாத லெனப்படும். (வரைவு வெளிப்படையாக மணஞ்செய்துகொள்ளுதல்: அதனை, கடாதல் - வற்புறுத்தி உணர்த்துதல்.)

கீழ்க்கூறியவாறு பகற்குறிவந்து ஒழுகுகின்ற தலைமகன் வழக்கப்படி ஒருநாள் சிறைப்புறமாக (சிறைப்புறம் - வேலிக்குவெளி)க்குறியிடத்து வந்து நிற்க, தோழி, அவன் செவிப்படுமாறு, 'இத்தினைக்காவல் வியாஜமாக நாம் உன்னைச் சந்திக்கலாமென்று நினைந்து இதுவரையிலும் தினைகாத்துவந்தோம்: அத்தினை நன்றாகக் கதிர்முற்றிவிட்டதாதலால், எம்மவர் தினை கொய்துவிடுவார்கள்: யாம் இன்று ஊர்க்குப் போய்விடுவோம்: இனி எமக்குத் தினைப்புனங்காவல் இல்லை யாதலால், நாம் இனி உன்னைச் சந்திக்க இயலாது' என்பது தோன்ற, தினைப்புனத்தைநோக்கி 'எம்மாற்பாதுகாக்கப்பட்டுவந்த புனமே! தலைவன்மேல்வைத்த விருப்பினால் தினைகாத்து மகிழ்ந்து நின்ற எங்கட்கு, அத்தினை எங்கள் தீவினையாய் வளர்ந்து விளைகின்றது; இதனை விளையாதபடிசெய்ய வகையுண்டோ?' என்று தினையைவெறுத்துக்கூறுதல், இச்செய்யுளிற் குறிக்கப்பட்ட விஷயம். திருக்கோவையாரில் "பொருப்பன்விருப்பில், தினைவித்திக்காத்துச் சிறந்துநின்றேமுக்குச்சென்று சென்று, வினைவித்திக் காத்து விளைவுண்டதாகி விளைந்ததுவே" என்றது. நோக்கத்தக்கது. இதன் மெய்ப்பாடு - அழுகை: பயன் - பகற்குறிவிலக்கல். தினைப்புனங்கூறியதனால், திணை குறிஞ்சியாயிற்று.

தினைவிதைத்தநாளில் இத்தினைக்காவல் வியாஜமாகத் தலைவனைச் சந்திக்கலாமென்று மகிழ்ந்து தினைக்காவற்கு உடன்பட்டன ராதலாலும், அத்தினை கதிர்முற்றிவிடவே கொய்துவிடுவராதலின் இனிப் பாதுகாவலில்லையாகவே அவனைச்சந்திக்க இயலா தாதலாலும், தினைவிளைந்ததைத் தங்கள் தீவினையே இங்ஙனம் விளைந்ததாக வெறுத்துக் கூறுவாள், 'எம்வினை தினையின்கிளையாக்கிளர விளைகின்றது' என்றாள். பிரியச்செய்வதாகிய தீவினையே இங்ஙனம் தினைவடிவாய்வந்து விளைந்த தென்றாளென்க. 'விளையாதொழிய மருந்தும் உண்டோ' என்றது, இரக்கத்தாற் கூறிய வார்த்தை. கதிர்முற்றாதிருப்பின் இன்னமும் தாங்கள் அங்கே புனங்காத்திருக்கலா மென்பது பற்றி, இங்ஙனங் கூறியவாறு. 'எம்' என்ற பன்மை, தலைவியையும் உளப்படுத்தியது; 'என்' என்ற பாடத்துக்கு - தலைவியைத் தன்னில் அடக்கிக்கூறினளென்க. கா-காத்தல்: முதனிலைத் தொழிற்பெயர்; இங்கே செய்வினை செயப்பாட்டுவினைப் பொருளதாய், காக்கப்படுதலென்ற பொருளை யுணர்த்திற்று. காப் புனம் - காக்கப்படுதலையுடைய புனம் என இரண்டனுருபும் பயனுந்தொக்கதொகை. 'கார்ப்புனம்' என்ற பாடத்துக்கு - கரியபுனமென்க; (திருக்கோவையாரில் 'கார்ப்புனம்' என்றதற்கு - 'கரியபுனம்' என்றும், 'கார்காலத்துப்பொலியும் புனமெனினும் அமையும்' என்றும் உரையெழுதியிருக்கின்றனர் பேராசிரியர்.) ஏகாரம்மிக்கது, விளியுருபு.

தம்மைச் சார்ந்தவர்களை நரகவழிச் செல்லவேண்டாதபடி அவர்கள் கொடுவினைகளை முற்றத்தொலைத்து அவர்கட்கு இனிப்பிறப்புமில்லையாம்படி செய்தருள்கிற ஆழ்வார் என்பது, 'கிளையாம்பிறவித்தளையாசழியத்தடுத்துத் தென்பாலை வழிதடுத்துக் களையாசறத்தடுத்தாண்டான்' என்பதன் பொருள். "வினையின் வந்தது வினைக்குவிளைவாயது" என்றபடி பிறப்புக் காரணகாரியத் தொடர்ச்சியாய் மேன்மேல் வளர்ந்துவருதலால், 'கிளையாம்

பிறவி' எனப்பட்டது. அது ஆன்மாவை வீடுபெறாதபடி பந்தப்படுத்துத லால், 'பிறவித் தளை' என்றார். ஆசு விரைவு: வடசொல். விரைவில் அழித லாவது - ஆழ்வாரைச் சரணமடைந்ததாகிய இப்பிறப்போடு முடிதல். தென் பாலைவழி - தென்திசையிலுள்ளதான நரகத்துக்குச் செல்லும் வழி. அக் கொடுவழியிலுள்ள அஸிபத்ரவனம்போன்ற வெப்புநிலம் 'பாலைவழி' எனப் பட்டது; பிறரும் "கோடில்தீக்கூற்றந் தொடுத்தாறு செல்லுஞ் சுரம்" என்றார். பாலை-நீரும்நிழலும் அற்ற கொடுஞ்சுரம். பயிர்செழித்தற்குத் தடை யாய் அதனுடன்தோன்றிவளர்கிற புல் பூண்டு முதலிய களைபோல, உயிர் உயர்கதிபெறுதற்குத் தடையாய் அதனுடன் அநாதியாய் அமைந்து வளர் ந்துவருகின்ற கருமமென்பார், அதனை 'களை' என்றார்; உவமையாகுபெயர். ஆசறத் தடுத்தல் - வேரோடறும்படி களைந்தெடுத்து மீண்டும் உண்டாகாத படிசெய்தல்; இங்கு, சஞ்சிதகருமமுழுட்படத் தொலைத்தல். ஆண்டான் - (எம்மை) ஆண்டவனெனினுமாம். களை ஆசு அற என்று பிரித்து, பேற் றுக்கு விரோதியான குற்றந் தீர என்று உரைப்பாருமுளர்.

ஆழ்வாரது காட்சிக்கு இடையூறாக இப்பிரபஞ்சத்திலே பலவாறு தீவினை விளைதலைக்குறித்து இரக்கங்கொண்ட சம்பநாடரது அன்பர்கள் அப்பிரபஞ்சத்தை முன்னிலைப்படுத்தி இரங்கிக்கூறுதல், இதற்கு உள்ளுறை பொருள். 'ஆழ்வாரது திருவவதாரஸ்தலமான திருக்குருகூரை அகத்துக் கொண்டதும் அவரதுபாதுகாவலுக்கு உட்பட்டதுமான உலகமே! என்று இந்த லீலாவிபூதியை விளித்து, 'எமதுஊழ்வினை தினைப்பயிர்போலக் கிளை த்து நன்றாகப்பலிக்கத்தொடங்குகின்றது: இதனை ஒழித்தற்கு உபாயமும் உண்டோ?' என்று வினையை வெறுத்துக்கூறினரென்க. இவ்வார்த்தை செவியுறப்பெற்ற ஆழ்வார் சம்பநாடரை இந்த லீலாவிபூதியினின்று நித்ய விபூதியாகிய பரமபதத்துக்குக் கொண்டுசென்று நிரந்தராநுபவந்தந் தருளவேண்டுமென்பது, இவர்களுத்தேசம்; பிறவுங் கண்டுகொள்க. (௮௭)

[தலைவன் வறும்புனங்கண்டு வருந்தல்.]

௮௮. புனம்பாழ்படுத்துப்புகழ்பாழ்படுத்ததல்லாற்புகுந்தென்
மனம்பாழ்படுத்ததுவாழ்தியன்றேவழுவாநரகத்
தினம்பாழ்படுத்தபிரான்சடகோபனின்னுக்கமுடின்
சினம்பாழ்படுத்தநின்றான்குன்றுசூழ்கின்றசெந்தினையே.

(இ - ள்.) வழுவா - (தீவினைசெய்தவர்கட்கு அவ்வினைப்பயனை அநுப விக்கச்செய்தலில்) தவறாத, நரகத்து இனம் - நரகவகைகளை, பாழ்படுத்த - பாழாக்கிய [தமது அன்பர்கட்கு இல்லாதபடிசெய்த], பிரான் - உபகா ரகரும், இன்னு கலியின் சினம் பாழ்படுத்த நின்றான் - துன்பஞ்செய்வதான கலியுகபுருஷனது கோபத்தையும் பாழாக்குமாறு நிலைகொண்டருளியவரு மாகிய, சடகோபன் - நம்மாழ்வாருடைய, குன்று - (பொதிய மலையை, சூழ்கின்ற - சார்ந்துவிளைந்த, செம் தினையே - சிவந்த தினையே! — (நீ) புனம் பாழ்படுத்து - (கதிர்கொய்துவிட்டதனால்) கொல்லையைப் பாழாக்கி, புகழ் பாழ்படுத்தது அல்லால் - (நினது) கீர்த்தியையும் பாழாக்கியதல்லா

மல், என் மனம் புகுந்து பாழ்படுத்தனை - என்மனத்தைச் சார்ந்து (அதனை யும்) பாழாக்கிறாய்; வாழ்தி அன்றே - (இவ்வளவுகொடுமைசெய்த நீ) வாழ் வாயன்றோ? (எ - று.)

கீழ்க்கூறியவாறு பகற்குறிக்கு உபயோகமாகத் தினைப்புனங்காத்து நின்ற தலைமகளும், தோழியும், அத்தினை கதிர்முற்றியிட்டதனாற் கொய்து விடப்பட்டமைபற்றிப் புனங்காவலின்றி அவ்விடத்தைவிட்டுத் தம்மனை யிடஞ்சேர்ந்தனராக, வழக்கம்போல மறுநாள் தலைமகன் அக்குறியிடத்து வந்துநின்று தலைவியில்லாத தினைக்கொல்லையை நோக்கி வருந்தி அதன் பொலிவழிவுகூறுதல். ;இச்செய்யுளிற்குறிக்கப்பட்ட விஷயம். "மென்புனம் விடுத்து மெல்லியல்செல்ல, மின்பொலி வேலோன் மெலிவுற்றது" என இதன் இலக்கணங் காண்க. இத்துறையை வறும்புனம்நோக்கி மன்னவன் மறுகல் என்றும், 'தலைவன் வறுங்களம்நாடி மறுகல்' என்றும் வழங்குதலு முண்டு. இதன் மெய்ப்பாடு - அழுகை. பயன் - ஆற்றாமை நீங்குதல்.

பகற்குறியிலே கீழ்ச்செய்யுள் - 'ஒருசார்பகற்குறி' யின்பாலும், இச் செய்யுள் - 'பகற்குறியிடையீட்' டின்பாலும் படும். 'ஒருசார்பகற்குறியாவது - ஒருகூற்றுப்பகற்குறி; அது யாதெனில், தலைவன் மற்றைநாள் தன்வேட்கை மிகுதியாற் பகற்குறியிடத்து வந்துநிற்க, தலைவியைப் பாங்கி குறியிடத்துச் செலுத்தாது மறுத்துக்கூற, தலைவன் வருந்திப்போத லாதலால், பகற்குறி யாகாது ஒருசார்பகற்குறியாயிற்று' என்பர். 'இரங்கல் வன்புறை இற்செ றிப்புணர்த்த லென்று, ஒருங்கு மூவகைத் தொருசார் பகற்குறி" என்று கூறப்பட்ட ஒருசார் பகற்குறியின்வகை மூன்றனுள், கீழ்ச்செய்யுள் இற் செறிப்புணர்த்தற்கு உரியது. பகற்குறியிடையீடாவது - பகற்குறிக்கண் வந்த தலைமகன் அவளதுசேர்க்கை பெறாது இடையீடுபட்டுப்போதல். "வில க்கல் சேறல் கலக்க மென்றாங்கு, இகப்பின்மூவகைத்தே பகற்குறியிடை யீடு" எனப்பட்ட பகற்குறியிடையீட்டின்வகை மூன்றனுள், இச்செய்யுள் - கலக்கத்துக்கு உரியது என்று உணர்க.)

தினைக்கதிர் கொய்யப்பட்டு வெறுந்தட்டை மாத்திரமாய் நின்ற புனம் பொலிவிழத்தலாலும், அப்புனத்துக்கு அணியாக வழக்கமாய் அங்குநிற்குந் தன் உயிர்த்தலைவி இன்றுஅங்கு இல்லாமைபற்றி அப்புனம் பொலிவிழந்த தாக இவனுக்குத்தோன்றுதலாலும், 'புனம்பாழ்படுத்து' என்றான்; ("மது வினிற் கைப்புவைத்தாலொத்தவா மற்றிவ்வான்புனமே," "நறுங்களவன்ன குழல்நீங்க மங்கலநாணிழந்த, வறுங்களமென்ன விருந்ததந்தோ இம்மணி யிதணே" என்றார் பிறரும்.) இப்படி புனம் இருவகையானும் பொலிவிழந்த தற்குக் காரணம் தினையின்முதிர்வே யாதலால், புனம்பாழ்படுத்தற்குத் தினை கருத்தாவாக்கப்பட்டது. 'புகழ்பாழ்படுத்தது' என்றது - தன்னைத் தலைவி சந்தித்தற்கு ஒரு வியாஜமாக இருந்து உபகரித்ததனாற் பெற்ற புகழை இழ ந்துவிட்டது என்றபடி. தினையுடன் காதலியையுங் காணலாமென்று மனத் துக் காதல்கொண்டு தான்வந்தவிடத்து, அத்தினை தானும் இன்றித் தலைவி யையுங் கொண்டுசென்று தன்மனத்து ஆசையைப் பயன்பெறாது வீண் படச்செய்ததனால், 'புகுந்து என்மனம் பாழ்படுத்தனை' என்றான். புகுந்து -

விளைந்தநீ இங்கு இராமல் மனையிடத்தே தலைவியுடன்சென்று புகுந்து எனினும் அமையும். 'வாழ்தியன்றே' என்றது. நினக்கு ஒருதீங்குஞ்செய்யாத எனக்கு இவ்வளவு பெருந்தீங்குசெய்த நீ இனிது வாழமாட்டாய் என்றவைதற்குறிப்பு. 'அன்றே' என்பதை அசையென்றுகொண்டு, வாழ்த்தி-வாழ்வாய் என்று பொருள்கொண்டாலும், கருத்து இதுவே. இனி. நீ தலைவியுடன் மனையிலே இனிதுவாழ்வையன்றோ எனினுமாம்; தனக்கு நேர்ந்த தலைவியின் பிரிவு அதுக்கு இல்லையென்று அழுக்காறுதோன்றக்கூறியது.

"எறியுநீர்வெறிகொள்வேலை மாநிலத்துயிர்களெல்லாம். வெறிகொள் பூந்துளவமாலைவிண்ணவர்கோனையேத்த, அறிவிலாமனிசரெல்லாம் அரங்கமென்றழைப்பராகிற். பொறியில்வாழ் நரகமெல்லாம் புல்லெழுந்தொழியுமன்றே" என்றபடி எல்லாவுயிர்களும் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டு உயர்கதி சேர்தலேயன்றி நரகம்புகுதலில்லாதபடி ஆழ்வார் அனைவர்க்கும் நல்லுபதேசஞ் செய்தருளினராதலால், 'பாவிகட்குத்தவறாத நரகவர்க்கத்தைப் பாழாக்கிய தலைவர்' எனப்பட்டார். கலி - கலியுகபுருஷன்; சனியின் அம்சமானவன். இந்தயுகத்துக்கு அதிதேவதையான இவன் பிராணிகட்குப் பாபசிந்தையைவிளைத்து அவை அதுசெய்து துயருறும்படி பண்ணுபவனாதலால், 'இன்னாக்கலி' எனப்பட்டான். அவனது சினமாவது - உயிர்களைத் தீவழிச்செலுத்திவருத்தும்முயற்சி. ("கலியும்நரகமும்மைந்த நமனுக்குஇங்கு யாதொன்றுமில்லை. கலியும்கெடும் கண்டுகொண்மின்", "திரியுங்கலியுகம் நீங்கித் தேவர்கள்தாமும்புகுந்து. பெரியகிதயுகம்பற்றிப் பேரின்பவெள்ளம் பெருக", "ஒக்கத்தொழுகிற்றிராகிற் கலியுகமொன்றுமில்லையே", "கலியுகமொன்றுமின்றிக்கே தன்னடியார்க்கு அருள்செய்யும். மலியுஞ்சுடரொளி மூர்த்தி மாயப்பிரான்கண்ணன்" என்றபடி) பகவத்ருசிவிரோதியான கலியுகத்தன்மை போய்க் கிருதயுகத்தன்மையான வைஷ்ணவதர்மமே எங்கும் நடக்கும்படி ஆழ்வார் தமது உபதேசத்தால் உலகில் திருந்தாதார் தம்மையுந் திருத்தியருளினராதலால், 'கலியின்சினம்பாழ்படுத்தபிரான்' என்றார்; கலிகாலதோஷத்தைப் போக்கிவிட்டவ ரென்றபடி. இப்படி ஆழ்வார் இவ்வுலகத்தில் தாம் மனிதவுடம்புடன் வாழ்ந்திருந்தபோது செய்ததே யல்லாமல், பிற்காலத்திலும் விக்கிரகரூபத்தில் அர்ச்சாவதாரமாக ஆவிர்ப்பவித்துத் தம்மைச் சார்ந்தவர்க்கு அருள்செய்துவருகிற இயல்பு தோன்ற, கலியின்சினம் பாழ்படுத்தி நின்றான் என்னாது 'கலியின்சினம் பாழ்படுத்தநின்றான்' என்றார். அவரது திருவவதாரம் முடிந்தாலும், அவரது உபதேசரூபமான திவ்வியப் பிரபந்தங்கள் இவ்வுலகில் நிலைநின்று பலரைக் கலிதோஷத்தினின்று மீட்டலும், இங்ஙனங் கூறக் காரணமாம். ஆழ்வார் திருவவதரித்த திருநாடாகிய பாண்டியநாட்டில் தலைமைபெற்ற மலை யாதலாலும், அவரது திருவவதாரஸ்தலமான திருக்குருகூரைச் சார்ந்து பெருகுகிற பொருநையாற்றுக்கு உற்பத்தித்தானமாதலாலும், 'சடகோபன்குன்று' என்றது, பொதியமலையெனக் கொள்ளப்பட்டது; முன் "பொதியத் தரு நதியங் குருகூரெந்தை" என்றதுங் காண்க. தினை - ஒருவகைத்தானியம். செந்தினை - செவ்விய தினையுமாம்.

கம்பநாடர் நம்மாழ்வாரிடத்திற்போலவே அவரடியாரான பாகவதர்கள் பக்கலிலும் ஆராதகாதல்கொண்டு அவர்களையும் தமக்குத்தலைவராகப் பாவித்து அடிமைபூண, அப்பாகவதர்களும் ஆழ்வார்போலவே கம்பநாடரிடத்து அன்புவைத்து அவருடன்கூடிக் குலாவிக்களித்துவருகிற காலத்திலே, த்ரிகுணாத்மகமான பிரபஞ்சமாதலால் தமோகுணம் அழிந்தபின்பும் தான் முற்றும் அழியாது சிறிது மிச்சப்பட்டு நின்ற ரஜோகுணகாரியமான ராகம் [அவா] தலையெடுத்துக் கம்பநாடரைத் தங்களோடு சேராதபடி சம்சார பாச பந்தத்துக்கு உள்ளாகித் தங்கள் சேர்க்கைக்கு இடையூறுசெய்ய, அந்த ராகத்தைப் பாகவதர்கள் பழித்து உரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். இங்ஙனம், தலைவன்பேச்சாலே தமதுநிலைமையை வெளியிடுகின்றனர் கம்பநாடரென்க. 'எனக்கு இதுவேண்டும்' என்று ஒருபொருளினிடத்து முதலில் உண்டாகும் அவாவாகிய அந்த ராகமானது, செந்நிறகுணமுடையதெனப் படுகிற ரஜோகுணத்தின் காரியமாய்த் தானும் செந்நிறமுடையதெனப்படுதலால், 'செந்தினை' எனப்பட்டது. தினை - மிக்க சிறுமைக்கு எடுத்துக்காட்டப்படுவதோர் அளவையாதலை, "தினைத்துணை நன்றி செயினும்," "தினையனைத்தே யாயினுஞ் செய்தநன்றுண்டால்" என்ற இடங்களிற் காண்க. ராகம் ஸூக்ஷ்மபதார்த்த மாதலாலும், இங்குச் சிறிதே சேடித்து நின்றதனாலும், தொடக்கத்திற் சிறியதே யாதலாலும், அதனைத் தினையென்றல் சாலும். செம் தினையே - செந்நிறமான ராகமே! என்று விளி. அந்த ராகம் சுத்த ஸத்வமயராய் வைராக்கியம்மிக்க ஆழ்வாரது குணமென்னுங்குன்றின் அகத்துச் சாரமாட்டாது புறத்தேநிற்றல் தோன்ற, அதற்கு 'சடகோபன் குன்று சூழ்கின்ற' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. புனம் - போகஸ்தாநம்; இங்கே, பாகவதர்கள் தாங்களுங் கம்பநாடருமாக "தூராத மனக்காதல் தொண்டர்தங்கள் குழாங்குழுமித் திருப்புகழ்கள் பலவும்பாடி, ஆராத மனக்களிப்போடு" என்றபடி கூடிக்குலாவிக்களித்திருந்த இடம். 'அதனைப்பாழ்படுத்து' என்றது, அந்த ராகம் கம்பநாடரை அங்குச்சேரவொட்டாது இடையீடுபடுத்தலால். அந்த அவாவானது சுருங்கியிருந்த நிலையிலே பாகவத சகவாசத்துக்கு இடையூறாகாது முதிர்ந்து அகத்திற் சேர்ந்தவளவில் இடையூறுகின்றது பற்றி, 'புகழ்பாழ்படுத்தது' என்றனரென்க. மற்றவையும் இங்ஙனமே நுட்பமாக நோக்கிக்கொள்க. இப்பாசுரத்துக்கு ஸ்வாபதேசம் வேறுவகை கூறுவராயினும் பொருந்துமாற்றான் உய்த்துஉணர்ந்துகொள்க. (அஅ)

[பிரிவாற்றாத தலைவி, அன்றிலின்குரல்கேட்டு அயர்தல்.]

அகூ. தினையொன்றிபகுற்றமற்றுணர்ந்தோர்மகிழின்றிறத்தின்
மனையொன்றியகொடியாடுயின்றாலுந்தன்வாயடங்கா
வினையொன்றியவன்றிலுக்கிடங்காட்டவிரிதலைய
பனையன்றியுமுளதோ தமிதேபற்குப்பழம்பகையே.

(இ - ள்.) மனை ஒன்றிய கொடியாள் துயின்றாலும்-வீட்டின் அகத்தே பொருந்திய கொடியவளான தாய் (வாயடங்கித்) தூங்கினாலும், தன்வாய் அடங்கா - (தான்தூக்கமின்றித்) தன்வாய்திறந்து கத்துகிற, வினை ஒன்றிய

அன்றிலுக்கு - கொடுமைபொருந்திய அன்றிற்பறவைக்கு. இடம் காட்ட - (தங்க) இடங்கொடுக்குமாறு. விரி தலைய - விரிந்த தலையையுடைய. பனை அன்றியும் - பனைமரமல்லாமலும்.—தமியேற்கு - (தலைவனைப்பிரிந்து) தனியளாயிருக்கிற எனக்கு.—தினை ஒன்றிய குற்றம் அற்று உணர்ந்தோர் மகிழின் திறத்தின் - தினையளவுகுற்றமுமில்லாமல் (மெய்ப்பொருளை) உணர்ந்தவரான தலைவரது மகிழமலர்மாலை விஷயமாகக்கொண்ட ஆசையினாலே. பழம் பகை உளதோ - பழமையானபகை (வேறொன்று) உளதோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)

கீழ் "அன்றாதஅன்றிலையும் அன்றுவித்து" என்றபடி அன்றிற்பறவை இரவில் இணைபிரிந்துகத்துகிற குரல் காமோத்தீபகமாய்ப் பிரிந்தாரைவருத்துமாதலால், தலைவனைப்பிரிந்துவருந்துகிறநிலையில் அக்குரல்கேட்டு ஆற்றாதவளான தலைவி, அவ்வன்றில் தங்குதற்கு இடமாகத் தன்மனைவாயிற்புறத்தே வளர்ந்துள்ள பனைமரத்தைத் தனக்குப்பகையெனக்கொண்டு பழித்து உரைத்தல். இச்செய்யுளிற் கூறப்பட்ட விஷயம். பிரிவாற்றாததலைவியின் இரங்கல் வகைகளில் ஒன்று, இது. மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயர்வுயிர்த்தல்.

இப்படி இவள் வருந்துதற்குக் காரணம், தலைவனது சேர்க்கை கிடையாவிடினும் அவன்தோளில்தரித்த மாலையேனுங் கிடைக்கவேண்டுமென்று தான்கொண்ட மிக்ககாதலே யாதலால், 'தினையொன்றிய குற்றமற்றுணர்ந்தோர் மகிழின்திறத்தின்' என்றாள்; (முன்னும் "குருகைப்பிரான் மகிழேயன்றி வேறில்லை" என்றாள்:) இதனை, 'பகைஉளதோ' என்பதனோடு கூட்டுக. "தினைத்துணையாங் குற்றம்" என்றாற்போல, 'தினையொன்றியகுற்றம்' எனப்பட்டது; தினைபோன்ற குற்றம்: அதாவது - மிகச்சிறியகுற்றம் என்றபடி; ஒன்றிய-ஒத்தஎன உவமவாசகம்: "வேலொன்று கண்ணார்" என்றவிடத்துப்போல. இனி, தினையினளவு பொருந்திய குற்றமென்று பதப்பொருள் கூறினும் அமையும். உணர்வுக்குக்குற்றம் ஐயந்திரிபுகளாதலை "கற்கசடற" என்றவிடத்துங் காண்க. சந்தேகவிபரீதங்கள் சிறிதுமின்றித் தத்துவங்களை உள்ளபடி அறிந்தவர் ஆழ்வார் என்பது, 'தினையொன்றிய குற்றமற்றுணர்ந்தோர்' என்றதன் கருத்து.

'மனையொன்றியகொடியாள்' என்றது, செவிலித்தாயை; தனதுவேட்கைநோய்க்குஏற்ற பரிகாரஞ் செய்யாததுமன்றித் தன்னைக்குறித்து வெகுளிகொண்டு எதிரிலும் மறைவிலும் பலவாறு புன்சொற்கூறிப் பழித்துரைத்து வருத்துதலுஞ் செய்கின்றனளென்பதுபற்றி, செவிலியைத் தலைவி 'கொடியாள்' என்று குறித்தாள்; "சொல்லிற் கொடிய நம்மன்னையைப் போல்பவர் சூழ்ந்திருக்கும், இல்லிற் கொடியகொல்லோ செல்லுநாட் டன்விருந்தாமே" என்ற தஞ்சைவாணன் கோவையையுங் காண்க; இங்ஙனம் அவளை வெறுத்துரைக்க வேண்டியிருத்தல் தோன்றவே, முன்னம் "அன்னையுடன் பின்றாதவண்ணமெல்லாம் பின்றுவித்து" என்றதும்; "பூதனையாருயிர்கழித்தார்.........தூற்றும் அன்னையை... .....விடுத்தார் தோன்றிய மதியை என்சொல்வேனே.........பிறர்க்கு உபகாரமொன்றிலதே" என்று

ஒருதலைவி இரங்குவதுங் காண்க. 'கொடியாள்' என்பது - கொடுமையென்னும் பண்பினடியாப் பிறந்த பெண்பாற்பெயர். இச்சொல் கொடிபோன்றவளென்று பொருள்பட்டு, மாதென்றமாத்திரமாயும் நிற்கும். தலைமகளது களவொழுக்கத்தை அவளது வடிவுவேறுபாட்டாலும் ஊரார்பழிதூற்றுதலாலும் வேறுசிலகுறிப்புக்களாலும் உணர்ந்த செவிலி அக்களவொழுக்கத்தைக்குறித்துக் காய்ந்து மனம்மாறுபட்டு மற்றும் அதுநிகழாதபடி குறிக்கொண்டுகாப்பவளாய்த் தலைவியை மனையகத்தேசெறித்து நள்ளிரவிலுமுட்படத் துயிலாதுவிழித்திருத்தல், 'கொடியாள் துயின்றாலும்' என்பதனாற் பெறப்பட்டது; சிறைக்காவல்களுள் தாய்துஞ்சாமை முதலதாதலுங் காண்க. இச்சிறைக்காவல் வரைதற்குமுன்பு இரவுக்குறியிடையீடாகவும் ஒருவழித் தணத்தலிலும் வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிவிலும் நிகழுமென்று உணர்க. கொடியாட்குக் கொடுத்த 'மனையொன்றிய' என்ற அடைமொழியினால், அன்றில் மனைப்புறத்தே நிலைகொள்ளாதிருக்கிற தென்பது தோன்றும். 'தன்வாய் அடங்கா' என்று அன்றிற்குக்கொடுத்த விசேஷணம், அச்செவிலியும் வாயடங்காது இரைபவளென்பதைக் குறிப்பிக்கும்; ("ஓவலில் வாயன்னை ஞாளி இவ்வூர்கணுறங்கினும்," "துண்ணெனன் கடுங்குரல் வாயன்னைதுஞ்சினும்," "வன்சொலன்னை துஞ்சாள்," "நின்றாற்றும், அன்னைக்கு மாறற்கு அயர்ந்தாள்" என்றார் பிறரும்.)

வினை - இங்கே, தீவினை; இனி, வாய்மூடாதுகத்துதலாகிய செயல் பொருந்திய என்று உரைப்பினுமாம்; (என்து) தீவினைப்பயனாய் அமைந்த அன்றிலென்றலுமாம். அன்றில் பனைமரத்தில் வாழ்வது இயல்பாதலால்; 'அன்றிலுக்கு இடங்காட்ட விரிதலைய பனை' எனப்பட்டது; ("முன்றில் தனிநின்ற பெண்ணைமேற் கிடந்தீர்கின்ற, அன்றிலின் கூட்டைப் பிரிக்ககிற்பவரார்கொலோ" எனப் பெரியாரும் பணித்தார்: "தனியே பறவாய் தகவேதுமிலாய், பனைமேலுறைவாய் பழிபூணுதியோ" என்றார் இராமாயணத்திலும்.) என்னைக் குரலால்வருத்துகிற அன்றிற்கு இடங்கொடுத்தற்காகவே செழித்துவளர்ந்துள்ளது இப்பனையென்று நிந்தித்தவாறு. 'விரிதலையபனை' என்றதனால், காட்சிக்கு அலங்கோலமாகத் தலைவிரிகோலமாயுள்ளது இதுவென்று பழித்தலும் தோன்றும். தமியேன் - துணைவனைப்பிரிந்துள்ள யான் என்றபடி. இப்பனை இங்ஙனம் என் எதிரிக்கு இடங்கொடுத்து உதவி எனக்கு எதிர்செய்யுமாறு இம்மையில் இதற்குமெனக்கும்பகைமைக்காரணம் ஒன்றும் இல்லையாதலால், இது பூர்வஜன்மத்தில் ஏதேனும் நேர்ந்த விரோதத்தின் தொடர்பாதல்வேண்டுமென்பாள், 'பழம்பகை' என்றாள்.

நம்பநாடாரது ஞானக்கண்ணுக்கு ஒரோசமயத்தில் இலக்கான நம்மாழ்வார் மறைந்தவளவிலே, அவரது நிரந்தராநுபவத்தை விரும்பிய கம்பநாடர், அப்பிரிவாற்றாமையாலும் தம்மைவருத்தக்கூடியனவான லௌகிக பதார்த்தங்களைக் குறித்தும் அவற்றிற்கு ஆதாரமான இப்பிரபஞ்சத்தைக் குறித்தும் மிகவருந்தி வெறுத்துரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். ('வாடை அன்றில் தென்றல் முதலான பாதகங்கள் [பாதகங்கள்] என்பது, ஸ்மாரகத்வேக அஸஹ்யங்களான லௌகிகபதார்த்தங்களை' என்பது, ஸ்வாபதேச

வுரை.) தம்மைப்போலப் பிரிந்துவருந்துவாரது ஆர்த்தொலியைக் கேட்டு மிடத்து உய்யக்கடவரல்ல ரிவரென்பது. சந்நிதியில்வெளியாய். பகவத் ஸ்வரூபரூபகுணவிபூதிகளை உள்ளபடியறிவாரில் தலைவரான ஆழ்வார் சூடிக் களைந்த மகிழமலர்மாலையை [அல்லது அவரது திருமேனியைப் பெறுதற்கு] ஆதரத்தால் என்பது, முதலடியின் உட்கிடை. 'மன்னிடத்துக்கொடியான்' என்றது - தம்பக்கல் பரிவுடைய ரென்னும் ஞானிகளை. விரிதலைய பனை = பரந்த இடத்தையுடைய இப்பிரபஞ்சம். தன்னைச்சார்ந்த உயிர்கட்கெல்லாம் பொல்லாங்கையே மிகுதியாக விளைக்கின்ற இப்பிரபஞ்சம். தன்மேலேறுவார் கொடும்புண்படும்படி மடற்கருக்குநிறைந்த பனைமரத்துக்கு உட்கிடையாகத் தகும். பிறவும், முன்கூறியவாற்றால் விளங்கும். அ௯)

௯0. பகையாய்வருகின்றமூன்றையும்வேரொடும்பறித்து
வகையாய்வருவனயாவையுமாற்றிவ்வையமுய்யத்
தொகையாயிரங்கவிசொன்னோன்பெயர்சொல்லச்சூழ்பனியின்
புகையாமிருள்பின்னையெந்நாட்கழியப்புகுகின்றதே.

(இ - ள்.) பகை ஆய் வருகின்ற மூன்றையும் வேரொடும் பறித்து - உட்பகையாய் வருகின்ற (காமம் வெகுளி மயக்கம் என்னும்) முக்குற்றங்களையும் அடியோடு ஒழித்து, வகை ஆய் வருவன யாவையும் மாற்றி - (அக் குற்றங்களின்) கூறுபாடாய் விளைவனவான கருமங்களெல்லாவற்றையும் போக்கி [தமக்கும் தமது அடியார்க்கும் இல்லையாக்கி,] இ வையம் உய்ய தொகை ஆயிரம் கவி சொன்னோன் - இந்நிலவுலகத்தார் உய்வு பெறும்படி (நூறுபதிகமாகத்) தொகுக்கப்பெற்ற (திருவாய்மொழி) ஆயிரம் பாசுரங்களை அருளிச்செய்தவராகிய நம்மாழ்வாரது, பெயர் - திருநாமங்களை, சொல்ல—, (அதனால்), சூழ் பனியின் புகை ஆம் இருள் கழிய புகுகின்றது - நெருங்கிச் சூழ்கிற பனியும் புகையும் போல்வதான அஜ்ஞானவிருள் நீங்கப்போகின்ற காலம், பின்னை எந்நாள் - இனி எப்பொழுது வாய்க்குமோ? (எ - று.)

"குரோர் நாம ஸதா ஜபேத் [= குருவின் பெயரை எப்பொழுதும் ஜபிக்கவேண்டும்]" என்றபடி, மகோபகாரகரான பரமாசாரியராகிய நம்மாழ்வாரது திருநாமங்களை யான் இடையறாது உச்சரித்து, அதனால் அஜ்ஞாநாந்தகாரம்நீங்கி ஞானானந்தச்சுடர்பெற்று உய்வது எந்நாளோ? என்பதாம். இதுவரை பழுதேகழிந்த பலபகலும்போலவன்றி இனியாயினும் நற்பயன் பெறுங்காலம் வாய்க்கவேண்டுமே யென்று ஆதரங்கொண்டு கழிவிரக்கத்தோடு கூறிய வார்த்தை, இது.

காமம்-இப்பிரபஞ்ச விஷயங்களில் ஆசை. வெகுளி-கோபம். மயக்கம் - விபரீதவுணர்வு. இம்மூன்றும், உயிரை உய்வுபெறவொட்டாது கெடுத்தலால், 'முப்பகை' எனப்படும். எல்லாவினைகளும், இவற்றின்காரியமே யாதலால், 'வகையாய்வருவன' எனப்பட்டன. இங்கு 'வகை' என்பதை, "சுவையொளி யூறோசைநாற்றமென்றைந்தின், வகை" என்றவிடத்துப்போலக் கொள்க. சஞ்சிதம் பிராரப்தம் ஆகாமியம் என்ற கருமவர்க்கங்களெல்லாம், 'வகையாய் வருவனயாவையும்' என்றதில் அடங்கும். ஆழ்வார், தாம் முப்பகையும் வினைத்தொடர்பும் சிறிதும் உடையராகாததோடு, தம்மைச்சார்ந்தவர்கட்கும்

முப்பகையையும் வினையனைத்தையும் போக்கியருள்பவ ராதலின், 'பகையாய் வருகின்ற மூன்றையும் வேரினொடும்பறித்து வகையாய் வருவனயாவையும் மாற்றி இவ்வையமுய்யத் தொகையாயிரங்கவி சொன்னோன்' எனப்பட்டனர். பொருள்களை உள்ளபடி உணரவொட்டாது செய்தலால், அஜ்ஞானம், இருளெனப்படும். அஜ்ஞானவிருளைப்போக்குபவ னென்ற பொருள்பற்றியே 'குரு' என்ற பெயர் நிகழ்தலால், அக்குருவின்பெயர் சொன்னவளவிலே பேதைமையிருள் கழியுமென்க. அக்குருவினது அருட்சுடரின் முன் இவ்விருள் எளிதில் நீங்குமென்பது தோன்ற, அதற்குப் பனியும் புகையும் உவமை கூறப்பட்டன.

ஆம் - உவமவுருபு; "வேதாவாம் வேங்கடம்" என்னுமிடத்துப் போல. மூன்று - எண்ணலளவையாகுபெயர். வையம் - இடவாகுபெயர்.

இச்செய்யுள், கம்பநாடர் தாமானதன்மையில் உரைத்தது; அன்றி, தலைவிநிலையை மேற்கொண்டு உரைத்ததென்றால், பிரிவாற்றாத நிலையில் இரவுநீட்டித்ததாகத்தோன்ற அவ்விருட்பொழுதின் நெடுமைக்குத் தலைவி இரங்கி இங்ஙனங்கூறியதாகத் துறைப்போக்கு அமைத்தல் சாலும். தலைவன் பெயரை என்செவிப்படுமாறு எவரேனுஞ் சொல்வராயின் அதுகேட்டுச் சிறிது ஆறுதலடைவேன்: அங்ஙனம் இவ்விருட்பொழுது இனிதுகழியப் பெறுவேனோ என்பது தாற்பரியம். உதயகாலத்தில் அனைவரும் துயிலெழும்போது 'ஆழ்வார் திருவடிகளே சரணம்' என்று தொடங்கி அவர்திருநாமங்களைஉச்சரித்தல் இயல்பாதலால் அங்ஙனம் தலைவன்பெயர் சொல்லுமாறு இவ்விருள்கழிவது எப்பொழுதோ என்று இரங்கிக்கூறியதாகவுங் கொள்ளலாம். பகலில் இந்திரியங்கள் பலவேறுவகைப்பட்ட பொருள்களை நாடுதல் கூடுமாதலால், ஒருவாறு பிரிவை ஆற்றிநிற்கலாம்; இரவில் அங்ஙனமன்றி எல்லாப்பொருளும் அடங்க இந்திரியங்களோடு மனம் பிரிந்தபொருளொன்றையே நாடுதலாலும், கலவிக்கு உரியகாலமாதலாலும், அதில் ஆற்றமாட்டாது வருந்தி இங்ஙனம் அவ்விருட்பொழுதின் கழிவை வேண்டுகின்றாளென்க. 'சூழ்பனியின் புகையாம் இருள்' என்பதற்கு - சூழ்ந்தபனியாகிய புகையையுடையதான இருள் என்று பதப்பொருள்கொண்டு, புகைபோலப் பனிபரந்துசூழப்பெற்ற இருள் என்று கருத்து உரைத்தலுமாம். ஆழ்வாரது நிரந்தரானுபவத்தைப் பெறாத நிலையிலே மோஹாந்தகாரம் தலையெடுத்துக் காலவிளம்பம் பொறுக்கமாட்டாமையாற் காலம் நீட்டித்ததாகத் தோன்ற அதனால்வருந்துகிற கம்பநாடர் 'ஆழ்வாரது திருநாமமந்திரோச்சாரணபலத்தால் மோகாந்தகாரம் தணிவது எப்பொழுதோ?' என்று இரங்கிக்கூறும் வார்த்தை; இதற்கு உள்ளுறைபொருள் ('இருள் என்பது - அஜ்ஞானத்தை, இரவு நெடுமையென்பது - விளம்பாக்ஷமத்வத்தை' என்பர் ஸ்வாபதேசம் கல்லார்.) ஆழ்வார் இவரது உட்பகைகளை யொழித்து இவரைத் தம்பக்கல் உடனேசேர்த்துக்கொள்ள வல்லராயிருக்க அதுசெய்யாது விளம்பித்தலால் இவர்க்கு இந்த இருள்தருமாஞாலத்திலிருப்பு நெடுகித்தோற்றுகையாலே ஆற்றாமைபிறந்து அதுவிஞ்சுதலால் இவர் அத்தன்மையை வாய்விட்டுக்கூறி ஆற்றுகின்றனரென்க. (௬௦)

[பிரிவாற்றது வருந்துந் தலைவிநிலைகண்டு பாங்கி இரங்கல்.]

கூக. புகுகின்றதுவிருள்போகின்றதுவண்ணம்பூவைகண்ணீ
ருகுகின்றதென்றுயிர்சோர்கின்றதாலுலகேழுமுய்யத்
தொகுகின்றவாயிரஞ்சொன்னோன்குருகைச்சொல்லால்விளங்கத்
தகுகின்றனரல்லர்மென்மேலுங்காதறருமவரே.

(இ - ள்.) இருள் புகுகின்றது - இருட்டோ வந்து நிறைகின்றது; பூவை - கிளிபோன்றவளான இம்மங்கையினது, வண்ணம் - (உடம்பின்) நல்லநிறம், போகின்றது - நீங்குகின்றது; பூவை கண் நீர் உகுகின்றது - (மற்றும்) இம்மங்கையின் கண்களிலிருந்து நீரும் பெருகுகின்றது, என்று - என்ற இக்காரணத்தால், உயிர் சோர்கின்றது - (எனது) உயிர் சோர்வடைகின்றது; மேல்மேலும் காதல் தருமவர் - (இவளுக்கு இங்ஙனம்) ஆசைநோயை மேல்மேல் விளைப்பவரான, உலகு ஏழும் உய்ய தொகுகின்ற ஆயிரம் சொன்னோன் - ஏழுலகத்தாரும் உய்வுபெறும்படி (பதிகம் பதிகமாகச்) சேர்கின்ற (திருவாய்மொழி) ஆயிரம் பாசுரங்களை அருளிச்செய்தவராகிய தலைவர், குருகை சொல்லால் விளங்க தகுகின்றனர் அல்லர் - (தாம்பிறந்த தலமான) திருக்குருகூர்க்கு உரிய கீர்த்தியால் விளங்கத்தக்கவரல்லர்; (எ-று.)

'குருகைச்சொல்லால் விளங்கத்தகுகின்றனரல்லர்' என்றது - நல்லவரல்லர் என்றபடி. தாம்பிறந்த இடமான திருக்குருகூரென்னுந் திவ்வியதேசத்தில் வசிக்கின்ற பலவகைமனிதர்களும் நல்லவரென்பது விளங்க ஆழ்வார்தாமே "நல்லார் பலர்வாழ் குருகூர்ச் சடகோபன்" என்றும், "நல்லார் நவில் குருகூர்நகரான்" என்றுஞ் சொல்லியிருத்தலை மேற்கொண்டு, நல்லவரென்னும் பொருளில் குருகைச்சொல்லால் விளங்கத் தகுகின்றனர்' எனப்பட்டது; இது பிறிதினவிற்சியணியின் பாற்படும். 'குருகைச்சொல்லால்விளங்கத்தகுகின்றனர்' என்பதை, "வையம்பெறினும் பொய்யுரைக்கமாட்டார் தொண்டைநாட்டாரே", "வையைநாட்டுறைவோர், புறையார் தனம்" என்றாற்போலக் கொள்க. 'பிரியேன் பிரியினுந் தரியேன்' எனவும் 'நமதுஉடம்பு இரண்டுக்கும் உயிர்ஒன்றே' எனவும் 'நீ என் கண்மணியே' எனவும் 'ஒருபொழுதும் உன்னை மறவேன்' எனவும் 'இம்மைப்பிறப்பிற் பிரியலன்' எனவும் இவ்வாறு பல பசப்புவார்த்தைகளைத் தலைவிக்குக்கூறிப் பின்பு அவற்றில் ஒன்றன்படியேனும் நடவாதவரென்றும், தம்மையே நம்பியடைந்தவளும் வேறுகதியில்லாதவளுமான இம்மெல்லியலாளிடத்துச் சிறிதும் தயைதாக்ஷிணியமின்றி இவளை விட்டுப் பிரிந்துசென்றவரென்றும், தமது அகத்தே மெய்யன்பு இன்றிப் புறத்தே பொய்யன்பு பாராட்டியவரென்றும், இவ்வாறு நினைப்பும் சொல்லும் செயலும் மாறுபடுதலால் திரிகரணசுத்தியில்லாதவரென்றும், இவளது ஆற்றாமைகருதாது பிரிந்ததுமன்றிக் குறித்தபருவத்தில் மீண்டுவாராது நீட்டித்துப் பொய்த்தவரென்றும், மற்றும் பலபடியாகவும் பழிப்பாள், அக்கருத்துக்களெல்லாம் தோன்றப் பொதுப்பட 'நல்லவரல்லர்' என்றாளென்க. 'மென்மேலும் காதல்தருமவர்' என்றது - ஆசைகாட்டி மோசஞ்செய்தவரென்று பழித்தற் குறிப்பு. 'உலகேழுமுய்யத் தொகுகின்ற ஆயிரஞ்சொன்னோன்' என்றது - தம் கூறிய

சிலசொற்களின்படி நடந்து தமது அகத்து அடிமையை உய்வியாமல் உலகங்களையெல்லாம் உய்வித்தற்குப் பலதொடுத்துச்சொல்லத் தொடங்கினர் போலும் என்று பரிகசிக்கின்ற குறிப்பு; கீழ் ௩அ - ஆஞ்செய்யுளில் "கவியாலுலகை உய்தலைச்செய்ததும் பொய்யென்றுமோ" என்றதுங் காண்க. 'சொன்னேன் தருகின்றனரல்லர் தருமவர்' என்றது, ஒருமைப்பன்மை மயக்கம்: பால்வழுவமைதி; [நன் - பொது - உக] இதனை, சீவகசிந்தாமணியில் "பெற்றவர்க்கிமித்தத்தாலும்" என்று தொடக்கத்துச் செய்யுளில் "கொண்டவர் முனிவரன்" என்றதுபோலக் கொள்க; "ஒருமைசுட்டிய பெயர்நிலைக்கிளவி, பன்மைக்காகு மிடனுமாருண்டே" என்றார் தொல்காப்பியனாரும். இம்மயக்கம், இலக்கியங்களிற் சிறுவரவிற்று. 'சொன்னேன்' என்றது - இயற்கையொருமை; மற்றவை - உயர்வுப்பன்மை: ("எனைத்துணையராயினு மென்னும் தினைத்துணையுந், தேரான்பிறனில்புகல்" என்ற திருக்குறளின் உரையிற் பரிமேலழகர் "என்னீரறியாதீர்போல விவைகூறல் நின்னீரவல்ல நெடுந்தகாய்" என்புழிப்போல உயர்த்தற்கண் பன்மையொருமைமயங்கிற்று' என்றதையும் உணர்க.) உலகேழும் உய்ய - ஏழுதீவுகளாகவுள்ள இந்நிலவுலகம் முழுவதிலு மிருக்கிற ஜனங்களெல்லாரும் பிறவிப்பெருங்கடலினின்றுகரையேறி உஜ்ஜீவிக்கவேண்டியென்றபடி. 'ஆயிரம்'என்பது-எண்ணலளவையாகுபெயராய், அத்துணைச்செய்யுள்களை உணர்த்திற்று.

கலவிக்கு உரியகாலமாதலாற் பிரிவுத்துயரை - மிகுவிப்பதான இராக்காலத்தின் வரவைக் குறித்து அஞ்சுவாள், 'புகுகின்றது இருள்' என்றாள். போகின்றது வண்ணம்—"பேர்கின்றது மணிமாமை பிறங்கி யள்ளற்பயலை, பூர்கின்றது கங்கு லூழிகளே", "வண்ணம் பயலை, விரிகின்றது முழுமெய்யும் என்னுங்கொல் என்மெல்லியற்கே" என்றார் ஆழ்வாரும்; மகளிர்க்கு இளமைப்பருவத்திலுண்டாகிற ஒளிபெற்ற அழகியமாமையெனப்படும் நல்ல நிறம் மாறி, பிரிவினாலுண்டாகும் பசப்புநிறம் பரவுகின்றதென்றபடி.

இங்ஙனம் தோழி தான் தலைவனைப்பழித்துக்கூறுதலைத் தலைவிகேட்பாளாயின், ஆற்றாமை சிறிதுதணிவள்; தலைவன்கேட்பானாயின், விரைவில் தலைவியை வெளிப்படையாக மணம்புரிதுகொள்வன்; எவரும் கேளாராயின், தோழி தான் அயர்வுயிர்ப்பள் என இதன்பயன் காண்க. இதன் மெய்ப்பாடு - அழுகை.

புகுகின்றது விருள் - குற்றியலுகரம் உயிர்வரச் சிறுபான்மைகெடாது பொதுவிதியால் வகரவுடம்படுமெய்பெற்றது. வண்ணம் - வர்ணம் என்ற வடசொல்லின் விகாரம்; இதனைத் தனியே தமிழ்ச்சொல்லென்பாருமுளர். பூவை - கிளி, அல்லது நாகணவாய்ப்பறவை; அதுகொஞ்சுவதுபோல இனிமையாகப் பேசுகிற பெண்ணுக்கு இங்கு உவமையாகுபெயர். இதனை, மத்திமதீபமாக. முன்நின்ற 'வண்ணம்' என்றதனோடும், 'பின்நிற்கும் கண்ணீர்' என்பதனோடுங் கூட்டுக. ஆல் - ஈற்றசை; அந்தோ என இரக்கமுமாம். மேன்மேல் - அடுக்குத்தொடர்.

ஆழ்வாரது பிரிவையாற்றாத கம்பநாடரது வருத்தத்தைக் கண்ட அவரது அன்பர்கள் இரங்கிக்கூறும் வார்த்தை; இதற்கு உள்ளுறைபொருள், இப்

படி, தோழிபேச்சால் தமது நிலையை வெளியிடுகின்றனர் கம்பநாடரென்க. 'புகுகின்றது இருள்' என்றது - உரியகாலம் நேர்ந்தவிடத்தும் பெறவாய்க் காமையால் மோகாந்தகாரம் மேலிடுதலைக் குறித்து இரங்கியது. 'பூவை வண்ணம் போகின்றது' என்றது - இவர்க்கு இப்பிரிவினாலாகும் வைவர்ண்யத்தை [நிறவேறுபாட்டை]க் கூறியது. 'பூவைகண்ணீர்உகுகின்றது' என்றது - இப்பிரிவுத்துயரை ஆற்றமாட்டாமல் இவர் புலம்பிக் கண்ணீர்சொரிதலைக் காட்டும். 'என்று உயிர்உய்கின்றது' என்றது - இவர்படுகிற துன்பத்தைக்கண்டு இவரது அன்பர்கள் தாம் துன்புறுதலைக் கூறியது. இவர்க்கு இங்ஙனம் பரமபக்தி தலையெடுக்கும்படி மேன்மேற் காதலை விளைப்பவரும் இந்நிலவுலகத்தாரனைவரும் உஜ்ஜீவிக்கும்படி திவ்யப்ரபந்தம் திருவாய் மலர்ந்தருளியவருமான ஆழ்வார் இவர்பக்கல் இன்னமும் பூர்ணகடாக்ஷம் வைத்திலரே யென்று குறைகூறுவது, பிரதியவாக்யத்தின் உட்கிடை. "குருகூர்நகர் நம்பிக்கு ஆளுரியனாய், அடியேன் பெற்ற நன்மையே." "திருக்குருகூர்நகர்நம்பி, என்றும் என்னை இகழ்விலன் காண்மினே" என்று களித்துக்கொண்டாடிப்பேசும்படி மதுரகவியாழ்வார்க்குப் பேரருள் செய்தாற்போல இக்கம்பநாட்டாழ்வார்க்கு நம்மாழ்வார் இன்னமும் பூர்ணகடாக்ஷஞ் செய்திலரே யென்று நம்மாழ்வார்மேற் குறைகூறுவார், 'குருகைச்சொல்லால் விளங்கத்தகுகின்றனரல்லெ'ரென்றாரெனக் கொள்க. (௬௧)

௬௨. தருமமுங்காமமுந்தாவிலரும்பொருளுந்தணவாக்
கருமமுமாகியகாரணங்கண்டவக்காரணத்திற்
பெருமையுமாயப்பிணக்குந்தவிர்த்துறுபேதஞ்செய்யு
மிருமையுந்தீர்ந்தபிரான்சடகோபன்றனின்னருளே.

(இ - ள்.) தருமமும் —, காமமும் - இன்பமும், தா இல் அரும் பொருளும் - குற்றமற்ற அருமையான செல்வமும், தணவா கருமமும் - எம்பெருமானை விட்டுப்பிரியாது செய்யுங் கைங்கரியமும் [மோக்ஷமும் என்றபடி], (ஆக நான்கு புருஷார்த்தங்களும்), ஆகிய - உண்டாவதற்கு காரணம்-ஏது; (எதுவென்றால்),— கண்ட அ காரணத்தின் - (தம்மாலே) காணப்பட்ட ஆதிமூலப்பொருளாகிய அந்தப் பரப்ரஹ்மம்போலவே, பெருமையும் மாயப்பிணக்கும் தவிர்த்து - அனைத்தினும் பெரியதாம் மகாமாயையெனப்படுகிற பிரகிருதியின் சம்பந்தமும் அந்தப்பிரகிருதியின் சலனத்தாலாகும் மாறுபாடுகளும் இல்லாமல், உறு பேதம் செய்யும் இருமையும் தீர்ந்த - மிக்க பலவேறுபாடுகளை யுண்டாக்குகிற (நல்வினை தீவினை யென்னும்) இருவகை வினைகளும் தொடரப்பெறாத, பிரான் - தலைவராகிய, சடகோபன் தன் - நம்மாழ்வாருடைய, இன் அருளே - இனிமையான கருணையேயாம்; (எ - று.

காரணம், சடகோபன்தன் இன்னருளே என முடிபு காண்க. அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகை உறுதிப்பொருள்களும் ஆழ்வாரது திருவருளாலே அவரடியார்க்கெல்லாம் சித்திக்கு மென்பது கருத்து.

பொருளும் இன்பமும் போலாது, அறம், இம்மை மறுமை வீடு என்னும் மூன்றிலும் நன்மைவிளைக்குஞ் சிறப்புடைமையால், முதலிற் கூறப்பட்டது; ("சிறப்புடைமரபிற் பொருளும் இன்பமும், அறத்து வழிப்படூஉந்

தோற்றம்போல" என்றார் பிறரும் - இம்மையே பயப்பதாய இன்பத்தை அதனைச்சாரவைத்து, இவ்விரண்டும் பொருளாற் பெறப்படுதலின், அதனை இவற்றின் பின் வைத்தார். த்ரிவர்க்க மெனப்படுகிற இம்மூன்றன்பின் அபவர்க்க மெனப்படுகிற வீட்டை நிறுத்தியது; "பானைநினைந்து இம்மூன்றும், விட்டதே பேரின்பவீடு" ஆதலின். நல்வழியால் ஈட்டப்பட்டதும் நற்பயன்களைத் தருவதுமாகிய பொருளென்பது பட, 'தாவி லரும்பொருள்' எனப்பட்டது. "குருகூர்ச்சடகோபன் குற்றேவல் செய்து, ஆய்ந்ததமிழ் மாலையாயிரத்துள்ளிவையுமோர்பத்தும்வல்லாருலகில், எந்துபெருஞ் செல்வத்தராய்த் திருமாலடியார்களைப் பூசிக்கநோற்றார்களே', "குருகூர்ச்சடகோபன், குழலின்மலியச்சொன்ன வோராயிரத்துளிப்பத்தும், மழலைதீரவல்லார் காமர்மானேய் நோக்கியர்க்கே", "குருகூர்ச் சடகோபன் சொன்ன, பண்கொளாயிரத்துள்ளிவைபத்தும் திருவண்வண்டூர்க்கு, இன்கொள்பாடல் வல்லார் மதனர்மின்னிடையவர்க்கே," "குருகூர்ச்சடகோபன், சொல்லப்பட்ட வாயிரத்து இவையும்பத்தும் வல்லார்கள், நல்லபதத்தால் மனைவாழ்வர் கொண்டபெண்டிர்மக்களே" என்று ஆழ்வார்தாமே அருளிச்செய்தமை கொண்', இடையிரண்டு புருஷார்த்தங்களுக்கும் சடகோபனருள் காரணமாமெனப்பட்டது. மற்றையிரண்டுக்கும் அது காரணமாதல், வெளிப்படை. தா - உரிச்சொல். தர்மம், காமம், கர்மம், காரணம் - வடசொற்கள். ஆகிய - செய்யியவென்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம்; அதன்முன்னும் வலி இயல்பே.

"காரணந்துத்யேயః [=காரணப்பொருள் தியானிக்கத்தக்கது]" என்ற மறைமொழியிலும், காரணமென்பது ஆதிமூலப்பரம்பொருளை யுணர்த்துதல் காண்க; கீழ் (௬௭) "புரைதுடைத்துப்பெரும்பொய்யுந் துடைத்து" (௬௧) "மருளாய்ப்பரந்த மயக்கத்துயக்கற்ற மாறன்" என்றாற்போல, 'பெருமையும் மாயப்பிணக்குந் தவிர்ந்து' என்றார்; பெருமை - மூலப்பிரகிருதி: மாயப்பிணக்கு - பிராகிருதவிஷயங்கள். ("தெரிமாண்தமிழ் மும்மைத்தென்னம்பொருப்பன்", "இருமைவகை தெரிந்தீண்டறம்பூண்டார்" என்ற இடங்களில் 'மும்மை', 'இருமை' என்றவைபோல) இங்கு 'இருமை' என்பது - இரண்டின் தன்மையென்னும் பொருளை யுணர்த்தாமல், இரண்டு என்னும் எண்ணையே உணர்த்திற்று. இது, இங்கு இருவகைவினைகட்கு எண்ணலளவையாகுபெயர். 'இருமையுந்தீர்ந்த' என்பதற்கு, இம்மை மறுமை யென்னும் இரண்டையுந் தவிர்ந்து வீடுபெற்ற என்றும், அகங்கார மமகாரங்களாகிய இருவகையபிமானத்தையும் ஒழிந்த என்றும் பொருள்கொள்ளலுமாம். 'பெருமைதவிர்ந்து' என்றது, தமது பெருமிதத்தைப் பாராட்டாது அடியவர்க்கு எளியராய் நின்று என்றும் பொருள்படும். 'தவிர்த்து', 'தீர்த்த' என்ற பாடத்துக்கு - அடிமைப்பட்ட எனது பெருமையையும் மாயப்பிணக்கையும் போக்கி, இருமையையும் ஒழித்த தலைவனெனப் பொருள்காணலாம். பெருமையென்பது, பெரு மை என்று இரண்டு சொல்லாய்ப் பெருங்குற்றத்தை யுணர்த்தலுங் காண்க; இனி, பெருமையென்பதற்கு-வித்தியாமதம் தனமதம் குலமதம் என மூவகையாற் பெருமிதம் பாராட்டுஞ் செருக்குக்கொன்று உரைப்பாருமுளர்.

(௬௨)

[இருளுக்கு ஆற்றாத தலைவியைக்குறித்துத் தோழி இரங்குதல்.]

கூ௰. அருளிற்சிலமகிழாயிழைக்கீவர்கொலந்திவந்த
விருளிற்பிறிதுதுயருமுண்டோவியலோடிசையிற்
பொருளிற்சிறந்தவலங்காரவல்லியிற்போக்கிலுள்ளத்
தெருளிற்கரும்பொக்குமாயிரம்பாப்பண்டுசெய்தவரே.

(இ - ள்.) இயலோடு இசையின் பொருளில் சிறந்த - இயற்றமிழ்ப் பொருளமைதியிலும் இசைத்தமிழ்ப்பொருளமைதியிலும் சிறப்புற்ற, அலங்கார வல்லியின் - அலங்காரங்க ளமைந்ததொரு பூங்கொடி போலும்படி, போக்கு இல் உள்ளம் தெருளின் கரும்பு ஒக்கும் ஆயிரம் பா பண்டு செய்தவர் - குற்றமற்றவையும் மனத்தெளிவால் ஆராயுமிடத்துக் கருப்பஞ்சாற்றை யொத்து இனியவையுமான திருவாய்மொழி ஆயிரம்பாசுரங்களை முன்பு செய்தருளினவராகிய நம்மாழ்வார், ஆய் இழைக்கு - தேர்ந்தெடுத்த ஆபரணங்களை யுடையளான இத்தலைவிக்கு, அருளின் - கருணையினால், சில மகிழ் - (தாம்சாத்திய மாலையி லுள்ள) சில மகிழம்பூக்களை, ஈவர்கொல் - கொடுத்தருள்வரோ? அந்தி வந்த இருளின் - மாலைப்பொழுதில்வந்த இருள்போல, துயர் பிறிதும் உண்டோ - (இவட்குத்) துன்பந்தருவது வேறொன்றும் உளதோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)

கூடிப்பிரிந்த தலைவனது பிரிவை ஆற்றாது வருந்திய தலைவியின் நிலைமை கண்டு தோழி இங்ஙனம் இரங்கிக்கூறினளென்க. பிரிந்த நிலையிலே தலைவி தலைவன் தரித்த மலர்மாலை கிடைக்கப்பெற்றால் அதுகொண்டு ஒருவாறு மகிழ்ந்து ஆறியிருப்பள்; அம்மாலைமுழுவதும் கிடையாவிடின் அதிலுள்ள சிலமலர்களேனும் கிடைக்கப்பெற்றால் அவைகொண்டு சிறிதுதணிந்திருத்தல்கூடு மென்பதுபற்றி, 'அருளிற் சிலமகிழ் ஆயிழைக்கு ஈவர்கொல்' என்றாள். ஆழ்வார் வகுளாபரணரென்ற ஒருதிருநாமம்பெறுமாறு மகிழமலர்மாலை தரிப்பவ ராதலால், மகிழ் கூறப்பட்டது. காதல்நோய் மற்றைப் பொழுதுகளிலும் உளதாயினும், "மாலையுழக்குந்துயர்", "மாலைதுணியரும்பித், துன்பம்வளரவரும்", "காதலரில்வழி மாலை கொலைக்களத், தேதிலர்போல வரும்" என்றபடி மாலைப்பொழுதில் வளர்ந்து மிகவருத்துதலால், 'அந்திவந்த இருளிற் பிறிதுதுயரு முண்டோ' எனப்பட்டது. இச்செய்யுளின் முதலடியைக் கீழ் சசு - ஆஞ் செய்யுளின் முதலடியாகிய "அரிவைபொன்மகி ழாயிழைக்கீயுங்கொலந்திவந்து" என்றதனோடு ஒப்பிடுக. பிரிந்து வெளிச்சென்ற தலைவர் மீண்டுவருதற்கு உரிய காலம் மாலையாதலால், அப்பொழுது தலைவனுக்கு மகிழ்ச்சி விளைத்தற்பொருட்டுச் சிறந்த அணிகலன்களைத் தெரிந்தெடுத்து அணிந்து அவன்குறித்தகாலத்திலே மீண்டுவருவதை எதிர்நோக்கியிருக்கின்றன ளென்க. அங்ஙனம் வான்பார்க்கும்பைங்கூழ்போல வரவெதிர்பார்க்கின்ற சமயத்தில் அவன் தான்வர இயலாதாயின் இவட்குத் தாரகமாகத் தனதுமாலையின்மலர்களைக் கொடுத்தனுப்புதலாவது செய்வனோ வென்பாள், 'அருளிற்சிலமகிழீவர்கொல்' என்றாளென்க. 'ஈவர்கொல்' என்ற வினா, கொடுத்தருள்வாராக என்று வேண்டுதற்பயத்தது. துயர்தருவதை 'துயர்' என்றது, உபசாரவழக்கு; காரணம் காரியமாக் கூறப்பட்டது.

பலவகைச் சொல்லணி பொருளணி குணவணி சுவையணிகள் அமைந்து சொற்றொடர்நிலையோடு பொருட்டொடர்நிலையு மாகி அவ்வலங்காரங்களாகியமலர்கள்பூத்ததொரு கொடிபோலத் திருவாய்மொழி இருத்தலால், 'அலங்காரவல்லியின்' எனப்பட்டது. எம்பெருமானுடைய குணஞ்செயல்களை அழகாகத்தொடுத்துக்கூறிய தொடர்நிலை யென்க. உபநிஷத்துக்களை கடவல்லி, ப்ரஹ்மவல்லி, ப்ருகுவல்லி, ஆநந்தவல்லி என வழங்குதல்போல, அவ்வுபநிஷத்துக்களின் பொருளடங்கிய திருவாய்மொழியை 'அலங்காரவல்லி' என்றதாகக் கொள்ளலாம். 'இயலோடிசையின் பொருளிற்சிறந்த' என்பதற்கு - இலக்கணநடையாலும் இசைத்தமிழ்வகையாலும் மெய்ப்பொருளுணர்த்துந்திறத்தாலும் சிறந்த என்று உரைப்பினும் அமையும். 'போக்கு இல்', 'உள்ளந்தெருளிற் கரும்பொக்கும்' என்ற இரண்டும், ஆயிரம்பாவுக்கு அடைமொழி. தொல்காப்பியம் "போக்கறுபனுவல்" எனப்பட்டாற்போல, திருவாய்மொழி 'போக்கில் ஆயிரம்பா' எனப்பட்டது; போக்கு - சொற்பொருட்குற்றங்கள். போக்கற்பாலது போக்கு எனக் காரணக்குறி. கீழ் கூ௩ - ஆங் கவியிற் கூறியபடி ஆழ்வாரருளிச்செயல்கள் ஆராயுந்தோறும் மேன்மேல் இனிமைசுரத்தலால், 'உள்ளந் தெருளிற் கரும்பொக்கும் ஆயிரம் பா' எனப்பட்டன. பண்டு - கலியுகத்தொடக்கத்தி லென்க.

அகக்கண்ணுக்கு இலக்காகி மறைந்த ஆழ்வாரது பிரிவை யாற்றாமல் மோகாந்தகாரத்தால் மிகவும்வருந்துகிற கம்பநாடரது துயரத்தை நோக்கிய அன்பர்கள், 'அருள்கொண்டு ஆயிரம் இன்தமிழ் பாடியவராகிய ஆழ்வார் இவர்க்கு உரியசமயத்தில் தமது இனிமையைத் தந்து தலையளிசெய்யவேணும்' என்று ஆதரத்தோடு கூறிய வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். இங்ஙனம் தோழிவார்த்தையாலே தமது நிலைமையை வெளியிடுகின்றனர் கம்பநாட ரென்க. ஆயிழை ஆழ்வார்திருவுள்ளத்தை மகிழ்விக்கும்படியான சற்குணபூர்த்தியையுடையவர்; நல்லோர்க்கு நற்குணமே ஆபரணமாம். இயலோடு இசையின் பொருளிற் சிறந்த ஆயிரம்பா = "குருகையர்கோன், யாழினிசை வேதத்து இயல்". (கூ௩)

கூச. அவரேயயற்குமரற்குமல்லாவமரர்க்குமெல்லாம்
பலரேகையுற்றென்பணிகொள்ளுமோபடர்நீரினிட்ட
நவரேகையுட்கொள்ளச்செய்ததல்லானம்பிமாறனைப்போ
லெவரேதிருவாயிரமோக்கமாலையிசைத்தவரே.

(இ - ள்.) அயற்கும் - பிரமனுக்கும், அரற்கும் - சிவபிரானுக்கும், அல்லா அமரர்க்கும் - இவர்களல்லாத (இந்திரன் முதலிய) மற்றைத்தேவர்கட்கும், எல்லாம் - ஆகிய அவர்கட்கெல்லாம், பலர் ரேகை உற்று என் - பிறப்புவகை நேர்ந்து என்னபயன்? (அவர்களுடையபிறப்பு), படர் நீரின் இட்ட நவரேகை உட்கொள்ள செய்தது அல்லால் - பரவுமியல்புள்ளநீரிலே யெழுதிய புதிய எழுத்துப்போலச்சிறிதும் நிலையில்லாதனவான இப்பிரபஞ்ச விஷயங்களை (அவர்கள் தாமும் பிறரும்) மனங்கொள்ளும்படி செய்ததல்லாமல், பணி கொள்ளுமோ - (எம்பெருமானுக்கு நிரந்தர) கைங்கரியஞ்செய்தலைப் பெறுமோ? (அன்றியும்), அவர் எவரே - அவர்களில் எவர்தாம், நம்பி

மாறனை போல் திரு ஆயிரம் மோக்கமாலை இசைத்தவர் - திருக்குருகூர்நம்பியாகிய நம்மாழ்வாரைப்போல(த் தாமும் உய்ந்து பிறரும் உய்யுமாறு) சிறந்த ஆயிரம்பாசுரங்களாகிய மோக்ஷமாலையைப் பாடியவர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

'ஆழ்வார், ஜீவாத்மாவாகிய பக்தரே யன்றிப் பரமாத்மாவாகிய பகவானல்லர்; நித்யர் முக்தர் பத்தர் என்ற மூவகையாத்மாக்களுள் முதல்தரமான நித்யரு மல்லர்; இரண்டாந்தரமான முக்தரு மல்லர்; கடைசித்தரமான பத்தாத்மாக்களில் ஒருவராய்ப் பகவானது லீலாவிபூதிக்கு உட்பட்டுப் பிறந்தவரே' என்பாரது கொள்கையை ஏற்றுக்கொண்டு, அங்ஙனம் பத்தாத்மாக்களாய்த் தலைமையும் புகழும் பெற்ற பிரமருத்திரேந்திராதி தேவர்களுடைய பிறப்புக்கும் சாதாரண சம்சாரிகளி லொருவராய்த் தோன்றிய ஆழ்வாருடைய திருவவதாரத்துக்கும் உள்ள தாரதம்மியத்தை எடுத்துக் காட்டி, அவ்வுயிர்களனைத்தினும் ஆழ்வார் மேம்பாடுடையவ ரென்று நிலைநிறுத்துகிறார். அவர்கள் தாங்கள் எம்பெருமானுக்கு நிரந்தரகைங்கரியஞ் செய்து முத்திபெறுததாலும், அவர்களுடைய போதனைகளுட் முத்திக்கு நேரே காரணமாகாமையாலும், அவர்களுடைய பிறப்பு தாமும் பிறரும் நிலையற்ற பிரபஞ்சவாழ்க்கைக்கு உட்பட்டு உழலுதற்கே காரணமாகிறது; அங்ஙனமன்றி, நம் ஆழ்வாரோ எம்பெருமானுக்கு நிரந்தர கைங்கரியஞ் செய்து தாம் வீடுபெற்று உய்ந்ததுமன்றி, தமது உபதேசத்தால் பிறரும் வீடுபெற்று உய்யுமாறு மோக்ஷமாலையென்று ஒருபெயர் பெறத்தக்க திருவாய்மொழியை அருளிச்செய்தன ராதலால், இவர் அவர்களினும் மிகமேம்பட்டவ ரென்பதாம். 'அராஜகமான தேசத்திலே பட்டத்துக்கு உரிய யானையைக் கண்ணைக் கட்டிவிட்டால் அது எடுத்துத் தன்கழுத்திலே வைத்துக்கொள்ளப் பெற்றவன் அரசனாய் விடுமாறுபோல, இவ்வுலகத்தில் வைதிகமரியாதையழிந்து போன சமயத்திலே அதனை நிலைநிறுத்துதற்பொருட்டு எம்பெருமான் தனது நிரங்குசஸ்வாதந்திரியத்தால் பத்தாத்மாக்களி லொருவர்பக்கல் விசேஷகடாக்ஷஞ்செய்ய அதனால் இவர் மற்றையோரையும் சீர்திருத்தும்படி சிறப்புற்றனர்' என்பர் ஆன்றோர்.

ரேகையென்பது - இரண்டாமடியில் வரிசையென்ற பொருளிலும், மூன்றாமடியில் வரிவடிவெழுத்தென்ற பொருளிலும் வந்தது. நீரிலெழுதும் வரிவடிவு சிறிதுபொழுதேனும் நில்லாமல் உடனே கலைந்து வருதலால், அது, சிறிதும் நிலைநில்லாமைக்கு உவமைகூறப்படும்; "நீர்மேலெழுத்துக்கு நேர்", "நீரிலெழுத்தாகும் யாக்கை" என்பன காண்க. இங்கு பட்டநீரினிட்ட நவரேகை' என்பது - உவமையாகுபெயராய், நிலையற்ற பிரபஞ்சவிஷயங்களை உணர்த்திற்று. நம்பி - ஆடவரிற் சிறந்தவன்; ஆண்பாற் சிறப்புப்பெயர்: நமது தலைவ னென்றும், நம்பிச்சரணமடையத்தக்கவ னென்றும் இதற்குக் காரணப்பொருள் கூறப்படும்; இப்பெயர்ப்பொருளை 'பூர்ணன்' என்ற வடசொற்கொண்டு வழங்குவர். 'முகுந்தமாலை' என்றாற்போல, 'மோக்ஷமாலை' எனப்பட்டது; முத்திநிலையையும் அதுபெறும் உபாயத்தையும் கூறும் பாடல்களின் வரிசையா லமைந்த சொன்மாலை யென்க. (ஏ - அ௯௯.)

௯௫. தவஞ்செய்வதுந்தழல்வேள்விமுடிப்பதுந்தம்மையொறுத்
தெவன்செய்யுமெய்யன்குருகைப்பிரானெம்மையின்னமொரு
பவஞ்செய்கைமாற்றியபண்டிதன்வண்டமிழ்ப்பாவுமுண்டே
யவஞ்செய்கைமாற்றச்செவியுண்டுநாவுண்டறிவுமுண்டே.

(இ - ள்.) தம்மை ஒறுத்து - தங்களை வருத்தி, தவம் செய்வதும் - தவத்தைச் செய்வதும், தழல் வேள்வி முடிப்பதும் - அக்கினிமுகமாக யாகத்தைச் செய்துமுடிப்பதும், எவன் செய்யும் - யாதுநற்பயனைத் தரமாட்டும்?—அவம் செய்கை மாற்ற - கொடிய கருமங்களை யொழித்தற்கு,—மெய்யன் - உண்மைப்பொருளை உணர்ந்து உரைப்பவரும், குருகைப்பிரான் - திருக்குருகூரில் அவதரித்த உபகாரகரும், எம்மை இன்னம் ஒரு பவம் செய்கை மாற்றிய பண்டிதன் - (அடிமைபூண்ட) எங்களை இனிமேல் ஒரு பிறவிபிறத்தலைப்போக்கியருளிய புலவருமான நம்மாழ்வாருடைய, வள் தமிழ் பாவும் - (சொற்பொருட்கருத்துக்களின்) வளமுடைய தமிழ்ப்பாசுரங்களும், உண்டு - இருக்கின்றன; செவி உண்டு - (அவற்றை அனைவரும் உபதேசமுகமாகக் கேட்பதற்கு அவரவர்க்குக்) காதுகளும் இருக்கின்றன; நா உண்டு - (ஓதிப் பாராயணஞ்செய்தற்கு) நாக்கும் இருக்கின்றது; அறிவும் உண்டு - (அதிலுள்ள அர்த்தபஞ்சகங்களை அறிதற்கு) அறிவும் இருக்கின்றது; (எ று.) —ஏகாரம் இரண்டும் - தேற்றம்.

வேதத்தின் முற்பகுதியாகிய கர்மகாண்டத்தை முக்கியமாகக் கொண்டு அதன்படி தவமும் வேள்வியும் செய்பவர்களை நோக்கி, 'அவை, அழியுமியல்பினவான சுவர்க்கம் முதலிய காமியபலன்களைத் தருவனவாய் முத்திக்கு நேரேகாரணமாகாமையாலும், சிரமசாத்தியமாயிருத்தலாலும், சிறந்தமார்க்கமாகா; திருக்குருகூரில் அவதரித்து லோகோபகாரமாய்த் தத்துவார்த்தங்களை வெளியிட்டுத் தமது அடியார்கள் இனியொருபிறப்பின்றி முத்தியைப் பெறுமாறு அருள்செய்த பொய்யில்புலவராகிய நம்மாழ்வாருடைய அருளிச்செயல்களைக் கேட்டும் ஓதியும் உணர்ந்து அந்தமிலின்பத்து அழிவில்வீட்டை எளிதிற்பெறலாமே யென்று உணர்த்தியவாறும். "காயோடு நீடுகனியுண்டு வீசு கடுங்கால் நுகர்ந்து நெடுங்கால மைந்து, தீயோடுநின்று தவஞ்செய்யவேண்டா திருமார்பனைச் சிந்தையுள்வைத்து மென்பீர்" என்று திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளியதுங் காண்க. இங்ஙனம் தவத்தைத் தாழ்த்திப் பிரபந்தத்தலைவனதுசம்பந்தத்தை உயர்த்தி யுரைப்பது, கலம்பகவுறுப்புப் பதினெட்டனுள் தவம் எனப்படும். 'பரமபதஞ் சேர்தற்கு எளிதான நல்வழி இருக்க, கடுநெறியைக் கைப்பற்றுவானேன்?' என்றார். தம்மையொறுத்து எவன்செய்யும் என்று எடுத்து, தம்உயிரை வருத்துவதேயன்றி மற்று என்ன நன்மை செய்யவல்லன? எனினுமாம். "நா வாயிலுண்டே நமோநாரணவென்று, ஓவாதுரைக்குமுரை யுண்டே - மூவாத, மாக்கதிக்கட்செல்லும் வகையுண்டே யென்னொருவன், தீக்கதிக்கட்செல்லுந்திறம்" என்ற பொய்கையாழ்வாரருளிச்செயலை ஒருசார் அடியொற்றியது இச்செய்யுளென்னலாம்.

'எம்மை' என்ற பன்மை - மற்றையடியார்களை உளப்படுத்தியது. இன்னம் ஒருபவம்செய்கை மாற்றுதல் - மீண்டுபிறத்தலில்லாதபடி முத்திபெறுவித்தல். ஆழ்வாரருளால் தாம் அடைந்த பயனை உலகத்துக்கு எடுத்துக் காட்டுவார், 'எம்மையின்னமொருபவஞ் செய்கைமாற்றிய பண்டிதன்' என்றார். நான்காமடியில், 'செய்கை' என்றது, கர்மம் என்ற வடசொற்பொருளை யுணர்த்தியது. 'அவஞ்செய்கை மாற்ற' என்பதற்கு - காலத்தை வீணுக்கு தலையொழிக்க [ஸத்காலக்ஷேபஞ்செய்ய] என்று பொருள்கொண்டு, அதனை, 'செவியுண்டு நாவுண்டு அறிவுமுண்டே' என்பதனோடு கூட்டவுந் தகும். எவன் - வினாவடியாய்ப்பிறந்த அஃறிணைப்பொதுக்குறிப்பு வினையாலணையும் பெயர். 'வேள்விமுடிப்பது' என்றது, அதனைப் பிழைபாடின்றி முடித்தலின் அருமைதோன்ற நின்றது. (௯௪)

[தலைவன், தலைவியின்நோக்கினாலாய வருத்தங் கூறுதல்.]

௯௫. உண்டாட்டியலுந்திருமாலுருவையுயர்த்துலகைத்
தொண்டாட்டியவந்துதோன்றியதோன்றறுறைக்குருகூர்
நண்டாட்டியநங்கைநாட்டங்களாலிந்தநாட்டையெல்லாந்
திண்டாட்டியகண்கள்போற்செய்யுமோகயறீங்குகளே.

(இ - ள்.) உண்டாட்டு இயலும் - (பலவகைத்) திருவிளையாடல்கள் பொருந்திய, திருமால் - ஸ்ரீமந்நாராயணனுடைய, உருவை - திருவுருவங்களை, உயர்த்து - சிறந்தமோக்ஷசாதநமெனக் கூறி வெளியிட்டு, உலகை தொண்டு ஆட்டிய - உலகத்தவர்களை அப்பெருமானடியவர்களாகச் செய்தற்பொருட்டு, வந்து தோன்றிய - வந்துதிருவவதரித்த, தோன்றல் - பெருமையிற் சிறந்தவரான நம்மாழ்வாருடைய, துறை குருகூர் - (தாமிரபர்ணிநதியின் சங்கணித்துறையென்னும்) திருமுகத்துறையையுடைய திருக்குருகூரிலே, நண்டு ஆட்டிய நங்கை - நண்டுகளை அசைத்துக்கொண்டு நடந்துவருகிற சிறந்த பெண்ணினது, நாட்டங்களால் இந்த நாட்டை எல்லாம் திண்டாட்டிய கண்கள் போல் - தம் பார்வைகளால் இவ்வுலகத்தவரையெல்லாம் வருத்துகின்ற கண்கள்போல, கயல் தீங்குகள் செய்யுமோ - கயல்மீன்கள் வருத்தஞ்செய்ய வல்லனவோ? [அல்ல என்றபடி]; (எ - று.)

இச்செய்யுட்குக் கைகோள்-களவு. கிளவி-இயற்கைப்புணர்ச்சி. திணை - குறிஞ்சி; புணர்ச்சியும், புணர்தல்நிமித்தமும் குறிஞ்சிக்குஉரிப்பொருளாதலுணர்க: (நெய்தலென்றல், இரங்குதற்பயத்தது.) துறை - நலம்புனைந்துரைத்தல்; அஃதாவது - ஒருபூஞ்சோலையினிடத்து ஏகாந்தத்திலே தலைவியைச் சந்தித்த தலைவன் அவளழகு தன்னைவருத்தமுறுவித்தலைச் சொல்லுதல். திருக்குறளிற் காமத்துப்பாலிற் களவியலிலே 'தகையணங்குறுத்தல்' என்ற முதலதிகாரத்தில் "கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப், பேதைக் கமர்த்தன கண்" என்றதுபோல, தலைமகன் தலைமகளது காதற்குறிப்புநோக்கினால் தனக்குஉண்டான வருத்தத்தைக் கூறியது இது. கயல்கள் பிறழ்ச்சிபற்றிக் கண்களுக்கு உவமைகூறப்படுமேனும், இவைபோல அவை வருத்தஞ்செய்யமாட்டா என்றான். இங்கு உபமானத்திலும் உபமேயத்துக்குச் சிறப்புத் தோன்றுதலால், வேற்றுமையலங்காரம் ஆதலால், இச

கண்கட்குக் கயலுவமை பொருந்தாது; இவை கயலினுஞ் சிறப்புடையன என்ற தாற்பரியம் அமையும். மெய்ப்பாடு - உவகையைச் சார்ந்த மருட்கை. பயன் - மகிழ்தல். கூற்று - தலைமகன் கூற்று. நெட்பது - நெஞ்சு; இங்ஙனம் நெஞ்சொடுகூறின னென்க.

உண்டாட்டெனினும், விளையாட்டெனினும் ஒக்கும். "உண்டாட்டுக் கிரீடை யுப்புக்கேளி, வண்டல் தொடலை மகளிர்விளையாட்டு" என்ற திவாகரத்தால், உண்டாட்டு என்பது மகளிர்விளையாட்டென்று தெரியவரினும், அது, பொதுப்பட விளையாட்டுக்கு வழங்கும்; சிறப்புப்பெயர், பொதுப் பொருளின்மேலது. படைத்தல் காத்தல் அழித்தல் முதலிய தொழில்களை யெல்லாம் எம்பெருமான் சிறிதும்சிரமமின்றி மிகஎளிதில் விளையாட்டுப் போல நடத்துதலால், 'உண்டாட்டியலுந் திருமால்' என்றார். இக்கம்பர் தாமே இராமாயணத்தொடக்கத்தில் "உலகம்யாவையுந் தாமுளவாக்கலும், நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா, அலகிலாவிளையாட்டுடையாரவர், தலைவரன்னவர்க்கே சரணங்களே" என்றதுங் காண்க; (ஸ்ரீபாஷ்யகாரரும், தமது பாஷ்யத்தின் தொடக்கத்தில் "அகிலபுவநஜந்மஸ்தேமபங்காதிலீலே" என்பர்.) இங்கு 'உண்டாட்டு' என்றதில், பகவானது அற்புதத்திருவிளையாடல்களனைத்தும் அடங்கும். உண்டாட்டு - உண்டாடு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். திருமால்=ஸ்ரீமகாவிஷ்ணு. 'திருமாலுரு' என்றது - பரத்வம், வியூகம், மத்ஸ்ய கூர்மாதி விபவாவதாரம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரம் என்ற ஐவகைவடிவையும் உணர்த்தும். எம்பெருமானது பலவகை மகிமைகளையும் எடுத்துக்காட்டி உலகத்தவர்களை வைஷ்ணவர்களாக்கிச் சீர்திருத்துதற்பொருட்டுத் திருவவதரித்தவராதலால், ஆழ்வார், 'திருமாலுருவையுயர்த்து உலகைத் தொண்டாட்டிய வந்து தோன்றிய தோன்றல்' எனப்பட்டனர். தொண்டாட்டுதல் - ஆட்படுத்துதல். இங்கு 'ஆட்டிய' என்றது செய்யிய, என்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம்; செய் என்றபொருளை யுணர்த்துகிற 'ஆடு' என்ற வினைப்பகுதியின் பிறவினையான ஆட்டு - பகுதி. தோன்றல் - (அனைவரினுஞ்) சிறந்து தோன்றுபவர்; ஆண்பாற்சிறப்புப்பெயர்: இதில், அல் - கருத்தாப்பொருள் விகுதி யென்னலாம். ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீமந்நாராயணனது அம்சமும், அவன் திருமார்பிலணிந்துள்ள திவ்வியரத்தினமாகிய ஸ்ரீகௌஸ்துபத்தினது அம்சமும், அவனது அடியார்களின் குழாத்துக்குத் தலைவராகிய விஷ்வக்ஸேநரென்னும் சேனைமுதலியாரது அம்சமுமாக வந்து திருவவதரித்தவர் ஆழ்வாரென்பது தோன்ற, 'வந்துதோன்றிய' என்ற தென்னலாம்.

இம்மங்கை நடக்கிறபோதும் பூக்கொய்தல்முதலாகப் பொழில்விளையாடுகிறபோதும் அவளதுகைவளைகள் அசைதல்பற்றி, 'நண்டாட்டியநங்கை' என்றான். 'நண்டு' என்றது - தனது பரியாயநாமமாகிய கடகமென்ற சொல்லைக் குறிப்பிட, அது - தன்பொருள்களில் ஒன்றான கைவளையை யுணர்த்திற்று; இது, லக்ஷிதலக்ஷணை: (கம்பராமாயணத்தில் கேகயராஜவம்சத்தை "மயின்முறைக்குலம்" [மயில்=கேகயம். கேகயம்=கேகயநாடு] என்றதும், திருச்சந்தவிருத்தத்தில் பக்தியை "எட்டிரெண்டு" [எட்டிரெண்டு=

பத்து? பத்து = பத்தி, பக்தி] என்றதும், சீவகசிந்தாமணியில் புத்திசேனனை "திங்கள்விரவியபெயரினான்" [திங்கள் = மதி, மதி = புத்தி] என்றதும் இத் தன்மையனவே.] உலகு, நாடு என்றவை - உலகத்தவர்மேலும், நாட்டார் மேலும் நின்றன. நங்கை கண்கள் என இயையும்.

நம்மாழ்வாரது திருக்குருகூரைச் சார்ந்த கம்பநாடரது ஞானவகைகள் தங்களையும் உலகத்தாரையும் பிறிதொன்றிற் செல்லவொட்டாதபடி வசப்படுத்துந் திறத்தை, அவ்வாழ்வாரிடத்தில் அன்புகொண்ட பாகவதர் பாராட்டிக்கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். இங்கு ஸ்வாபதேசத்தில், தலைவி - கம்பநாடர். தலைவன் - நம்மாழ்வாரடியார்களான பாகவதர். கண்கள் - ஞானவகைகள்; ஆராய்ச்சியாற் பலவிஷயங்களில் விரைந்துசெல்லவல்ல இவரது ஞானக்கண்ணின் அமைதிக்குக் கயல் ஒப்புமையாகத்தக்கதேனும், அதற்கு, இங்ஙனம் அனைவரையும் சிந்தைமற்றொன்றின் திறத்ததாகாதபடி தன்பக்கல் அகப்படுத்துந்தன்மை இல்லையாதலால், "நங்கை நாட்டங்களா விந்தநாட்டையெல்லாந் திண்டாட்டிய கண்கள்போற் செய்புமோ கயல் நீங்குகள்' என்றனர். 'திண்டாட்டிய நங்கை' என்றதன் உட்கிடை - ஸ்ரீவைஷ்ணவர்கட்குத் தாம் அடிமைசெய்தற்கென்று சங்கணங்கட்டியுள்ள கம்பநாடரென்க. இங்ஙனம் தலைமகன் வார்த்தையாலே, தமது நிலைமையை வெளியிட்டனர் கம்பநாடர். (கசு)

[பிரிவாற்றது வருந்துந்தலைவி இரங்கல்.]

கஎ. தீயைக்கிழித்தொருதிங்கட்கொழுந்தெனச்செய்ததல்லாற்
பேயைக்கிழித்தெனவன்றிற்பனைபிளவாருளவா
நோயைக்கிழிக்கும்வகுளநல்காரிந்தநன்பிறவி
மாயைக்கிழியைக்கிழித்தெம்மைவாங்கிடவல்லவரே.

(இ - ள்.) இந்த —, நன் பிறவி - எளிய பிறப்பாகிய, மாயை கிழியை - மாயாரூபமான ஆடை எமது உயிரைப் போர்த்துள்ளதை, கிழித்து —, எம்மை —, வாங்கிட வல்லவர் - எடுத்துத் தமது திருவடிகளிற் சேர்த்துக்கொள்ள வல்லவராகிய எமதுதலைவர், — தீயை கிழித்து - நெருப்பைத் துண்டாகப் பிளந்தெடுத்து (அப்பிளவை), ஒரு திங்கள் கொழுந்து என செய்தது அல்லால் - ஒருபிறைச்சந்திரனாகச் செய்ததே யல்லாமல், — அன்றில் பனை - அன்றிற்பறவைகட்கு இருப்பிடமான பனைமரத்தை, பேயை கிழித்து என பிளவார் - பேயை இரண்டாகக் கிழித்தாற்போலப் பிளந்திட்டாரு மில்லை; உள ஆம் நோயை கிழிக்கும் வகுளம் நல்கார் - (அவர்விஷயமாக எமக்கு) உண்டாகிய காதல்நோயை நீக்கும்படியான மகிழம்பூமாலையைக் கொடுத்தலுஞ்செய்யார்; (எ - று.)

தலைவனைப் பிரிந்து தவிக்கிற நிலையிலே பிறைக்கும் அன்றிற்கும் ஆற்றாத தலைவி தாரும்பெறாது வருந்தி இரங்கி இங்ஙனங் கூறினளென்க. இதன் மெய்ப்பாடு அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல்.

கூடினார்க்குக் குளிர்ச்சியைச்செய்து மகிழ்ச்சியை விளைப்பதாய் மாலைப் பொழுதிலே விளங்குகிற பிறைச்சந்திரன், பிரிந்தார்க்குத் தாபத்தைச்செய்து

வருத்தர்த்தருதலால், நெருப்புத்துண்டாகக் குறிக்கப்பட்டது: இது, சந்திரோ பாலம்பநம் [சந்திரனைவெறுத்தல்.] திங்கட்கொழுந்து - இளஞ்சந்திரன். "ஓங்காகின்ற விருளாய்வந் துலகைவிழுங்கி மேன்மேலும், வீங்காகின்ற கருநெருப்பி னிடையே யெழுந்த வெண்ணெருப்பே" என்று (கம்பராமாயணத்திற்) பிராட்டி சந்திரனை நெருப்பென்றமை காண்க. இங்கு 'திங்கட் கொழுந்து' என்றமையின், 'தீயைக்கிழித்து' எனவேண்டிற்று, தனக்குப் பிறை இங்ஙனமாதற்குக் காரணம் தலைவர்செய்த பிரிவேயாதலால், 'தீயைக் கிழித்து ஒருதிங்கட்கொழுந்தெனச் செய்தது' என அவரைக் கருத்தாவாக்கிக் கூறினள்.

("விளரிக்குரலன்றில் மென்படைமேகின்ற முன்றிற்பெண்ணை, முளரிக்குரம்பை", "முன்றிற்பெண்ணைமேல் முளரிக்கூட்டகத்து, அன்றிலின் குரலடருமென்னையே", "பெண்ணைமேற், பின்னுமவ்வன்றிற் பேடைவாய்ச் சிறுகுரல்" என்று பெரியாரும் பணிக்கும்படி.) பனைமரம் அன்றிற்பறவைகள் கூடுகட்டி வாழு மிடமாம். காமோத்தீபகமான குரல்கொண்டு வருந்துகிற அப்பறவைகள் தங்குமிடமாகிய பனைமரத்தைப் பிளந்தெறிந்துவிட்டால், அப்பறவைகள் இங்கு நிலைபெறாது அப்பாற்சென்றுவிடு மாதலால், தனக்கு அவற்றாலாகுந் துயர மின்று மென்பதுபற்றி, அதனை வேண்டுகின்றவளும், அது செய்யாமையைக்குறித்துத் தலைவன்மேற் குறைகூறுபவளு மாயினள். (முன்றில தனிநின்ற பெண்ணைமேற் கிடந்தீர்கின்ற, அன்றிலின்கூட்டைப் பிரிக்ககிற்பவ ரார்கொலோ" என்று ஒருதலைவி கூறியதுங் காண்க.) 'கருநெடும்பனங்காடு முழுமையுங் காலுங்கையுமுடையதுபோல்வன" என்னும் படி பனைமரமும் பேயும் வடிவில் ஒத்தலால், 'பேயைக்கிழித்தென அன்றிற் பனைபிளவார்' எனப்பட்டது.

பிரிந்தநிலையிலே தலைவனதுமாலை கிடைக்கப்பெற்றால் அதுகொண்டேனும் ஆறியிருக்கும் கருத்தின ளாதலின், அதனைக் கொடுத்தனுப்பாமையைப்பற்றியுங் குறைகூறினள். உள - பலவின்பாற் குறிப்புவினையாலணையும்பெயர். துய்ப்பனதெவிட்டல், துயில்கொள்ளாமை, மொழிபலபிதற்றல், வெய்துயிர்ப்பு, நிறம்மாறுதல், உடல்மெலிதல், கண்ணீர்சோர்தல், அரற்றுதல், அழுங்கல், அயர்ச்சி, மயக்கம் முதலாக விரகவேதனை பலவகைப்படுதலால், 'உளவாம்நோய்'எனப் பன்மையாற்கூறப்பட்டது. "தெய்வந்தொழாஅள்கொழுநற் றொழுதெழுவாள்" என்றபடி குலமகட்குத்தெய்வம் கொழுநனேயாதலால், தனதுதலைவனை 'இந்தநுண்பிறவிமாயைக்கிழியைக் கிழித்து எம்மை வாங்கிடவல்லவர்' என்றாள். பிரிவாற்றாமையும் பிறவித்துயரங்களுள் ஒன்றேயாதலால், அதனைப்போக்கி எம்மைத் தம்மொடு சேர்த்துக்கொள்ள வல்லராயிருந்தும் அதுசெய்திலரென்று பழித்தவாறுமாம். நுண்மை-இங்கு, எளிமையின்மேலது. பிறப்பு மாயாகாரியமாதலால், அதனை மாயைக்கிழியாக உருவகப்படுத்துதல் ஏற்கும்.

தமதுஞானக்கண்ணுக்கு ஒரோசமயத்தில் இலக்கான நம்மாழ்வார் மறைந்தவளவிலே, அவரது நிரந்தரானுபவத்தைப் பெறும் விருப்பினால் பிரிவாற்றாதுவருந்துகிற கம்பநாடர், மற்றும்தம்மைவருத்துவனவான விவேக

விளக்கத்தையும், லௌகிகபதார்த்தங்களையும் குறித்தும், தமக்கு ஆழ்வார் அருள்செய்யாமையைக்குறித்தும் இரங்கிக்கூறும் வார்த்தை; இதற்கு உள்ளுறைபொருள். உளவாம்நோயைக்கிழிக்கும் வகுளம் நல்கார் - எமக்குஉள்ளனவான துன்பங்களைப் போக்கவல்ல தமது இனிமையை அருளாரென்றபடி. ஆழ்வார்சூடிக்களைந்த மகிழமாலையைப் பெறவதில் ஆதரத்தால் இங்ஙனங்கூறியதுமாம்; பகவத் பாகவதர்களுடைய பிரஸாதமாகக் கிடைப்பது எதுவும் அடியார்கட்கு உள்ள நோயைத் தீர்க்குந்தரத்த தாதலால், 'உளவாம் நோயைக் கிழிக்கும் வகுளம்' என்றது ஏற்கும். அர்யாபதேசத்தில் சந்திரனென்றது, ஸ்வாபதேசத்தில் விவேகமாம்; பேறுகிடையாத நிலையில் விவேகமும் வருத்தத்துக்கே காரண மாதலால், அதுவும் வெறுப்புக்கு இடமாம். 'அன்றிற்பனைபிளவார்' என்றது, தம்மைவருத்தக்கடவனவான லௌகிக பதார்த்தங்கட்கு ஆதாரமான இப்பிரபஞ்சத்தினிடத்து வெறுப்பினூற் கூறியது; கீழ் அக - ஆஞ் செய்யுளில் "தன்வாயடக்கா, வினையொன்றியவன்றிலுக்கிடங்காட்டவிரிதலைய, பனையன்றியுமுளதோ தமிபெற்குப்பழம்பகையே" என்றதன் உள்ளுறையும் காணத்தக்கது. பிரகிருதிசம்பந்தத்தாலாகிய எமதுபிறப்புத்துன்பங்களைப்போக்கி எம்மைத் தம்பக்கல்சேர்த்துக்கொள்ள வல்லராயிருந்தும் அதுசெய்தருளினாரில்லை யென்று குறைகூறுவார், 'நன்பிறவிமாயைக்கிழியைக்கிழித்து எம்மைவாங்கிடவல்லவர்' என்றார். (கரு)

[இதுவும் அது.]

கூஅ. வல்லம்புலிமுகவாயிற்கரும்பின்மறுபிறப்பைக்
கொல்லம்புலியொர்வகுளங்கொடார்கொடுங்கோகுகட்டிச்
சல்லம்புலியிட்டெதிரிடப்பாய்வதுதாயென்றிங்கோ
ரில்லம்புலியுமுண்டம்புலிமீளவெழுகின்றதே.

(இ - ள்.) அம் - நீரிற்பொருந்திய, புலி - தாமரைமலர்போன்ற, முகம் - திருமுகமண்டலத்திலேயுள்ள, வாயில் - திருவாய்மலரினின்று வெளியான, கரும்பின் - கருப்பஞ்சாறுபோ லினிய திருவாய்மொழிமுதலிய திவ்வியப்பிரபந்தங்களைக்கொண்டு, வல் - விரைவிலே, மறு பிறப்பை கொல் - கருமவசத்தால் மனிதர்கட்குஉண்டாகும் மறுபிறப்பை யொழித்திட்ட, அம் புலி - அழகிய சிங்கம்போன்றவராகிய எமதுதலைவர் [நம்ஆழ்வார்], ஓர் வகுளம் கொடார் - ஒப்பற்ற (தமது) மகிழமலர்மாலையை (எனக்குத்) தந்தருளுகின்றாரில்லை; கொடுங் கோகு உகட்டி - கொடுமையான முறைகேடு தலைக்கேற [அக்கிரமம்விஞ்சி], சல்லம் பு(ல்)லியிட்டு எதிரிட பாய்வது - முள்ளம்பன்றியைப்போன்று எதிர்த்துப்பாய்வதாகிய, தாய் என்ற ஓர் இல்லம் புலியும் - தாயென்கிற ஒரு வீட்டுப்புலியும், இங்கு உண்டு - இவ்விடத்திலே (என்னை இடைவிடாதுவருத்திக்கொண்டு) உள்ளது; (இவ்வளவோடு நிற்காமல்), அம் புலி மீள எழுகின்றது - (வானத்திலும்) ஓர் அம்புலி [சந்திரன்] (என்னை வருத்துமாறு) மீளவும் தோன்றுகின்றது. (எ - று.) ஈற்று ஏகாரம்-இரக்கம்.

தலைவனைப்பிரிந்து அப்பிரிவைப்பொறாது வருந்தும்நிலையிலே தாரும் பெறாது துயருறுகிற தலைவி. தாயின்கொடுமைக்கும் சந்திரோதயத்துக்கும்

ஆற்றாது இங்ஙனம் இரங்கிக்கூறினளென்க. மெய்ப்பாடும், பயனும் - கீழ்ச் செய்யுட்குக் கூறியவையே.

வல் - விரைவுகுறிக்கும் இடைச்சொல்; இது 'கொல்' என்பதனோடு இயையும். 'அம்' என்ற சொல் முதலடியிலே நீரையும், இரண்டாமடியிலே அழகையும் உணர்த்திற்று; நான்காமடியிற் சாரியையாய் நின்றது. முதலடியில் 'புலி' என்ற சொல் - தன் பரியாயநாமமான புண்டரீகமென்பதை யுணர்த்தி, அதன்ஒருபொருளாகிய தாமரையைக் குறித்தது; லக்ஷித லக்ஷணை. ("புலியைக்கொடுத்துப்பசுவாங்கியோர்புலிப்பூங்குழலாள், புலியைப் பசுதின்னவிட்டுப் புலியைத்திருகற்றிப், புலியயரைத்துப் பலகாரஞ் செய்து பொருந்து முகப், புலியைக் களிப்புடன் சாறுவைத்தாள் தன் புருடனுக்கே" என்ற பிற்காலத்துச் செய்யுளிலே, முகத்தாமரையென்ற பொருளில் 'முகப்புலி' என்றதுங் காண்க. [அச்செய்யுளில், முறையே, புலி = வேங்கை = பொன். புலி - மயிர்ச்சாந்து. புலி-புல். புலி - ஓர் மிருகம். புலி = வரி = நெல். புலி = புண்டரீகம் = தாமரை. சாறு - திருவிழா.] வேங்கையென்ற பொருளில் "தீந்தீண்டுகையார்" என்றலும் [தீந்தீண்டுகை = வேம்கை = வேங்கை.] அவலக்ஷணமென்ற பொருளில் "எட்டேகால்லக்ஷணம்" என்றலும் [எட்டேகால் = அவ = அவ] போல்வனவும் இவ்வகையிலக்கணையே.) நீரினின்று பறிக்கப்பட்டுச் சிறிதுவாடிய தாமரையன்றி நீர்நிலையிலேயே செழித்துப் பொலிவுமாறாதுநிற்குந் தாமரைமலர் போன்ற முகமென்பாள், 'அம் புலி முகம்' என்றாள்; இது, ஆழ்வாரது திருமுகத்தினழகிற் கொண்ட ஈடுபாட்டினாற் கூறியது. இது, வாய்க்கு அடைமொழியாய் நின்றது. முகவாயின் - முகத்தினிடத்திலிருந்து எழுந்த எனினுமாம்.

கரும்பு-அதுபோல் இன்சுவைத்தானபாசுரத்துக்கு உவமையாகுபெயர்; இன் - ஐந்தனுருபு, ஏது. தமதுபாசுரங்களிற் கூறிய உபதேசத்தால் மனிதர்கள் இனிப்பிறத்தலில்லாது முத்திபெறுமாறு செய்தருளியவ ரென்பது, 'வாயிற்கரும்பின் மறுபிறப்பைக்கொல் அம்புலி' என்றதன் கருத்து. மறுபிறப்பு - புநர்ஜந்மம். "சரண மாகுந் தனதாளடைந்தார்க்கெல்லாம், மரணமானால் வைகுந்தங்கொடுக்கும் பிரான்" என்றபடி இப்பிறப்பின் முடிவிலேயே முத்தியருள்கின்ற அருமையைக் குறித்தற்கு, 'மறுபிறப்பை விரைவிற்கொல்லுகிற' எனப்பட்டது. "சிங்கவிராசியும் நால்வகைச்சாந்தத்து ஒன்றும் வியாக்கிரமு முரைப்பர் புலியே" என்றபடி புலியென்றசொல் சிங்கவிராசியை யுணர்த்தலால், அது இங்குச் சிங்கமென்றமாத்திரமாய் நின்றதென்க. பலவகைப்பிராணிகளை விரைவிற்கொல்லவல்ல சிங்கம்போல, மறுபிறப்பை விரைவிற்கொல்லுஞ் சிங்கம் ஆழ்வா ரென்க. பரசமயங்களாகிய யானைகளை அழிக்குந் திறம்பற்றியும், அவரைச் சிங்கமெனத் தகும்; பரசமயகோளரி யென்பர். அன்றியும், கம்பீரமான தோற்றத்திலும் நடையிலும் உத்தமபுருஷனுக்குச் சிங்கம் உவமைகூறப்படும். சிங்கம்போன்றவரைச் சிங்கமென்றது, உபசார வழக்கு.

'கோகுகட்டு' என்ற சொல்தொடர் - "பைதலேக்கோகுகட்டிட்டேட்டிலேற்றியபண்பனையே" எனக் கீழ் ௯௮ - ஆஞ் செய்யுளிலும் வந்துள்ளது.

திருவாய்மொழியில் "கும்பிநட்டமிட்டாடிக் கோகுகட்டுண்டுழலாதார்" என்றது நுங் காண்க. கோகு - அடைவுகேடு; உகட்டுதல் - தலைமண்டையிடுதல். மேலிடுதல். முள்ளம்பன்றியைக் குறிக்கிற ஶல்ய மென்ற வடசொல், சல்லமென விகாரப்பட்டது. புல்லிபிட்டு என்பது, புலிபிட்டு எனத் தொகுத்தல்விகாரமடைந்தது; புல்லுதல் - சார்தல், தழுவுதல்; இது, இங்கு உவமவாசகமாய் நின்றது; ("புத்தேளுலகிற் பொன்மரம்புல்ல" என்றவிடத்துப்போல: "என்ன விழையப் புல்லப் பொருவக், கள்ள மதிப்ப வெல்ல வீழ, என்றாங் கெட்டே பயனிலையுவமம்" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும்.) இனி, சல்லம் புல்லிபிட்டு - முள்ளம்பன்றியின் தன்மையைக்கொண்டு எனினுமாம். என்றிங்கு - தொகுத்தல். தாயைப் புலியென்றதற்கு ஏற்ப, 'பாய்வது' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. பாய்வது - ஒன்றன்பால் வினையாலணையும் பெயர்; தொழிற்பெயராகக்கொண்டு, புலிபாய்வதும்உண்டு எனமொழிமாற்றியுரைத்தலும் ஒன்று. காட்டுப்புலியிலும் வேறுபாடுதோன்ற, 'இல்லம்புலி' எனப்பட்டது. இங்ஙனம் தாயைவெறுத்துரைத்தற்குக் காரணம், கீழ் ௩௨, "அன்னையுடன், பின்றூதவண்ணமெல்லாம் பின்று வித்து", (அக) "மன்னையோன்றிய கொடியாள்" என்ற இடங்களிற் கூறிப்போந்தாம். தாயினது மிக்ககொடுமை விளங்க, அவட்கு, முள்ளம்பன்றியும் புலியும் உவமைகூறப்பட்டன. அவள்சொல்லுங் கொடுஞ்சொற்கள் முட்போலத் தன்னெஞ்சில் தைத்தல் பற்றி அவளை முள்ளம்பன்றி யென்றும், அவளது சீற்றம் தனக்கு மிக்க அச்சத்தைத் தருதல்பற்றி அவளைப் புலியென்றும் ஒப்புமையாற் குறித்தாள்.

ஒரு கொல்லம்புலியோ எனக்கு வகுளமாலை கொடுக்கின்றதில்லை; அது பற்றி யான் வருந்துஞ்சமயத்திலே இம்மண்ணுலகத்து இல்லம்புலியொன்று எதிரிடப்பாய்கின்றது; அதனோடு, வானத்திலும் ஓர் அம்புலி எழுந்து பாய வருகின்றதே! இனி இங்ஙனம் பலபுலிகளால் ஒறுக்கப்படுகிற ஒரு நான் பிழைப்பது எவ்வாறு? என்று இரங்கினளென்க. இது, சந்திரோபாலம்பநம். 'அம்புலி' என்பது ஒரு சொல்லாய்ச் சந்திரனையுணர்த்தும். சிலேடைத்தோற்றத்தால் முந்தினநாளிரவிலாகிய துயரத்தை ஞாபகத்திற்கொண்டு, 'மீள வெழுகின்றதே' என்றாள். மீள - நேற்றுவந்துபோனதேயன்றி இன்றைக்கும் என்றபடி. எழுதல் - உதித்து வருதல்.

இச்செய்யுளில் 'புலி' என்ற சொல் வெவ்வேறுபொருளில் அடுத்து வந்தது, சொற்பின் வருநிலையணி. அதனோடு திரிபு என்ற சொல்லணியுங் காண்க. நான்காமடியில், 'இல்லம்புலியுமுண்டு அம்புலி மீள எழுகின்றது' என்ற சொல்நயமும் கருதத்தக்கது. 'சல்லம்புல்லிபிட்டு எதிரிடப்பாய்வது' என்றது, உவமையணி. 'தாயென்றிங் கோரில்லம்புலியுமுண்டு' என்றது, உருவகவணி. இங்ஙனம் பல அணிகள் சேர்ந்துவந்தது, சேர்வையணியாம்.

அகக்கண்ணுக்குப் புலனாகி மறைந்த நம்மாழ்வாரது பிரிவையாற்றாது வருந்துகிற கம்பநாடர் இரங்கிக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறை பொருள். 'அவ்வாழ்வார் தாமாகவந்து அருள்செய்யுமளவும் ஆறியிராது பேற்றுக்கு விரைந்துதுடித்தல் தகுதியன்று' என்பது முதலாக உணர்த்தி

கூறுகிற பரிவுடைய ஞானிகள். 'கொடுங்கோகுகட்டிச் சல்லம் புலியிட்டேதிரிடப்பாய்வது தாயென்றிங்கோரில்லம்புலியு முண்டு' என்று வெறுக்கப்பட்டன ரென்க. 'அம்புலி மீளவெழுகின்றது' என்றது, பிரிவாற்றாதபோது ஞானோதயமும் வருத்துவதாதல்பற்றி; ('சந்த்ரோதய மென்பது, அலாபதசையில் விவேகமும் பாதகமானபடியை' என்றனர் ஆன்றோர்.) பிறவும், முன்கூறியவாற்றால் விளங்கும். (கூஅ)

கூகூ. எழுதியநாளும்வினையுந்தொகுத்தெம்மையிப்பிறவிப்
புழுதியினாற்றிட்டுவைப்பரிதாற்புகழ்மெய்ப்புலவோர்
தொழுதியனாயகனோதுங்கனற்றுறைநீர்ப்பொருநை
வழுதிநன்னாடன்றிருவாய்மொழியெம்மனத்தனவே.

(இ - ள்.) புகழ் - கீர்த்தியையுடைய, மெய் புலவோர் - உண்மைப்புலவர்கள் [தத்துவஞானிகள்], தொழுது இயல் - வணங்கி அடியார்களாகி ஒழுகப்பெற்ற, நாயகன் - தலைவரும், ஓதும் கனல் துறை நீர் பொருநை வழுதி நல் நாடன் - (வேதங்களாற்) சொல்லப்படுகிற அக்கினிகாரியமாகிய யாக வகைகள் நடக்கப்பெற்றதும் நீரறாத தாமிரபர்ணிநதி பாயப்பெற்றதுமாகிய சிறந்த பாண்டியநாட்டிலே திருவவதரித்தவருமான நம்மாழ்வார் அருளிச்செய்த, திருவாய்மொழி - திருவாய்மொழியென்ற பிரபந்தத்தின் பாசுரங்கள், எம் மனத்தன - எமதுமனத்திலே நிலைகொண்டிருக்கின்றன; (ஆதலால்),— எழுதிய நாளும் வினையும் தொகுத்து - (இவ்வளவென்று பிரமன் எமக்கு) எழுதிவைத்துள்ள ஆயுளையும் பழவினைக்தொடர்பையும் (எம்மோடு) இயைபுபடுத்தி, எம்மை—, இ பிறவி புழுதியில் நாற்று இட்டு வைப்பு-இவ்வாறுபிறத்தலாகிய புழுதிக்காலில் நாற்றாகநட்டு விளையும்படிவைத்தல், அரிது - முடியாததாம்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

கீர்த்திபெற்ற மதுரகவிகள் முதலிய உண்மைப்புலவர்கள் வணங்கி வழிபடப்பெற்ற பரமாசாரியரும், வேதவிதிமுறைதவறாது நிகழும் வேள்விகளும் அவற்றின் பயனாகும் பருவமழைப்பெருக்கும் அறாத பாண்டிவளநாட்டில் திருவவதரித்தவரு மாகிய நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழிப்பாசுரங்களை யான் இடையறாது சிந்தித்துவருகின்றேனாதலால், இனி என்னைப் பிரமன் வினைவசமாக ஆயுளைக்கற்பித்து இவ்வுலகத்திலே பலவகைப் பிறப்புக்களில் இட்டுவைக்க முடியா தென்பதாம். "மாதவன்பாற் சடகோபன், தீதவமின்றியுரைத்த, ஏதமிலாயிரத்திப்பத்து, ஓதவல்லார் பிறவாரே," "குருகூர்ச்சடகோபன், நேர்ந்தவோராயிரத்திப்பத்து அருவினைநீறு செய்யுமே" என்று ஆழ்வார்தாமே திருவாய்மொழியிற் பயன் அருளிச்செய்தபடி, அதனை அநுசந்தானஞ் செய்வார் வினையனைத்துந் தொலைந்து பிறப்பற்று வீடுபெறுதல் நிச்சயமாதலால், இங்ஙனங் கூறினர்.

எம்மை, எம் என்றவை - தனித்தன்மைப்பன்மை; தம்மைச்சேர்ந்தவர்களையுங் கூட்டிய உளப்பாட்டுத்தன்மைப்பன்மை யெனினுமாம். நாள் - உடம்போடு கூடிவாழும் நாள். வினை - சஞ்சிதகருமம். 'எம்மை' என்றது, தமது உயிரை. நாறுவது நாற்று எனக் காரணக்குறி; நாறுதல் - முளைத்தல். 'எம்மை இப்பிறவிப்புழுதியில் நாற்றிட்டுவைப்பு' என்றது, உருவகவிசேடம்.

புலவர் - புலவோர் எனச் சிறுபான்மை ரகரவீற்று அயல் அகரம் ஓகாரமா யிற்று. நாயகன் - பிரபந்நஜநகூடஸ்தர். (கக)

கOO. மனையும்பெருஞ்செல்வமுமக்களுமற்றைவாழ்வுந்தன்னை
நினையும்பதமெனநின்றபிரான்குருகூர்நிமலன்
புனையுந்தமிழ்க்கவியாலிருணீங்கிப்பொருள்விளங்கி
வினையுந்திரிவுற்றனகுற்றநீங்கினவேதங்களே.

(இ - ள்.) 'மனையும் - மனைவியும், பெருஞ்செல்வமும் —, மக்களும் - பிள்ளைகளும், மற்றை வாழ்வும் - மற்றுமுள்ள வாழ்வுகளும், (ஆகிய இவை யெல்லாம்), தன்னை நினையும் பதம் - (ஆழ்வாராகிய) தம்மைத் தியானிக் கின்ற நிலைமைதான்,' என - என்று (ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாரும்) கொள் ளும்படி, நின்ற பிரான் - (அத்தொண்டக்குலத்துக்குத்) தலைவராய் நின்றவ ராகிய, குருகூர் நிமலன் - திருக்குருகூரில் அவதரித்த குற்றமற்ற நம்மாழ் வார், புனையும் - பாடிய, தமிழ் கவியால் - தமிழ்ப்பாசுரங்களால், இருள் நீங்கி-அஜ்ஞாநாந்தகாரம் ஒழிந்து, பொருள் விளங்கி - தத்துவார்த்தம் விள ங்க, வினையும் திரிவுஉற்றன - (உயிர்களின்) கருமசமூகங்களும் அழிவடைந் தன; வேதங்கள் குற்றம் நீங்கின - வேதங்களும் (எளிதில் மெய்ப்பொருள் விளங்காதிருந்த) குற்றம் நீங்கப்பெற்றன; (எ - று.)

ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் நம்மாழ்வாரையே தமது பலவகை ஐச வரியங்களாகக்கருதுகின்றனரென்பது, முதலிரண்டடியில்விளக்கப்பட்டது. நம்மாழ்வார் விஷயமாக ஆளவந்தார் அருளிச்செய்த "மாதா பிதாயுவதயஸ்த நயாவிபூதிஸ் ஸர்வம்யதேவநியமேநமதந்வயாநாம் - ஆத்யஸ்யந: குலபதேர்வ குளாபிராமம் ஸ்ரீமத்ததங்க்ரியுகளம்ப்ரணமாமி மூர்த்நா" என்ற தனியன் 'எமது வம்சத்தார்க்கு எந்நாளும் தாயும் தந்தையும் மனைவியரும் மக்களும் செல்வமும் எல்லாம் ஆவது எதுவேயோ, அந்த, எமதுகுல முதல் தலைவ ரான நம்மாழ்வாருடைய மகிழமலர்மாலை யணிந்து விளங்குந் திருவடி யிணையை, தலையால் வணங்குவேன்' என்னும் பொருளதாதலுங் காண்க. "உறுபெருஞ்செல்வமுந் தந்தையுந் தாயு முயர்குருவும், வெறிதருபூமகள் நாதனு மாறன்விளங்கியசீர், நெறிதருஞ் செந்தமிழாரணமே யென்றிந் நீணி லத்தோ, ரறிதர நின்ற விராமாநுசன்" என இராமாநுசநூற்றந்தாதியில்வரு வதும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.) 'தன்னை நினையும் பதம்' என்பதற்கு - தமது திருவடிகளைத் தியானித்தலென்று அறிதற் பொருள்கொள்ளவும் அமையும். இங்குக்கூறப்படாத இம்மைப்பயன்களனைத்தும் மோக்ஷோபாய மும் 'மற்றை வாழ்வு' என்றதில் அடங்கும். மனைவிபோல மனத்துக்கு மிக இனிய பொருளும், இளமையில் தமக்கு இன்பந்தந்து பின்பு தம்மைப்பாது காப்பவராய் மறுமையில் நரக நிவிருத்திக்குங் காரணமாகிற மக்கள்போலப் பலவாற்றால் உதவுபவரும், சகலபோகங்களுக்கும் இன்றியமையாததாகிற செல்வம் போல மிகவிரும்பப்படும் பொருளும், மற்றுமெல்லாம் தமக்கு நம் மாழ்வாரென்றே கருதுகின்றனர் அடியார்க ளென்க. அவ்விஷயங்களின் அநுபவத்தால் அடையும் ஆனந்தமெல்லாம் ஆழ்வாரைத்தியானித்தலாற் பெறலாகுமென்பது கருத்து.

இனி, இதற்கு - 'மனைவியும் பெருஞ்செல்வமும் மக்களும் மற்றை வாழ்வும் எல்லாமாவது, தமது ஆதிஸ்வரூபமான ஸ்ரீமந்நாராயணனை இப் பொழுது அடியவராகிய தாம் மனத்திற் கொண்டு தியானித்தலே' என்று சொல்லி நின்ற உபகாரக ரென்று பொருள்கொள்ளவும் இடமுண்டு; "மேலாத்தேவர்களும் நிலத்தேவரும் மேவித்தொழும், மாலார் வந்தினநா ளடியேன் மனத்தே மன்னினர், சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன் மக்களும், மேலாத் தாய்தந்தையும் அவரே யினியாவாரே" என்ற திருவாய்மொழிப்பாசுரங் காண்க. மிக்க விருப்பத்துக்கு இடமாதல்பற்றி மனைவியை முதலிற் கூறி, "இல்லாளை யில்லாளும் வேண்டாள்" என்றபடி அவளது காதற்கும் "பொருளிலார்க்கு இவ்வுலகமில்", "பொருளுடையான்கண்ணதே போகம்" என்றபடி அவளோடு கூடியனுபவிக்கும் இன்பங்கட்கும் இன்றியமையாமைபற்றி அவளையடுத்துப் பெருஞ்செல்வத்தையும், அச்செல்வத்தைப் பிற்காலத்திற் பெற்றுக்கொள்ளுதற்கு உரியராய் வேண்டப்படுதலும் "மக்கட்பேற்றிற்பெறும்பேறில்லை" என்றபடி எல்லா ஐசுவரியங்களினும் புத்திரபாக்கியம் சிறந்ததாதலும் "தம்பொருளென்ப தம்மக்கள் அவர் பொருள், தந்தம்வினையான் வரும்" என்பதும்பற்றி அச்செல்வத்தையடுத்து மக்களையும் நிறுத்தி, பிறவற்றை 'மற்றைவாழ்வு' எனக்கடைசியில்வைத்தார்.

'புனையுந் தமிழ்க்கவி' என்ற சொற்போக்கினால், தொடுத்துச்சாத்திய தமிழ்ப்பாமாலை யென்னலாம். ஆழ்வாருடைய திவ்வியப்பிரபந்தங்களினால் ஐயந்திரிபற உண்மைப்பொருள்விளங்கவே, வேதத்திற்கு 'மயங்கவைத்தல்' என்னுங் குற்றம் இல்லையாயிற் றென்க.

விளங்கி = விளங்க: எச்சத்திரிபு. மனை - மனைவி: இடவாகுபெயர். நிமலன் - வடசொல். (௧00)

மன்றேபுகழுந்திருவழுந்தூர்வள்ளன்மாறனைமுன்
சென்றேமதுரகவிப்பெருமாடென்றமிழ்த்தொடையி
லொன்றேபதிகமுரைத்தவன்பொன்னடியுற்றுநின்றா
னென்றேபதிகம்பதிகமதாகவிசைத்தனனே.

(இ - ள்.) மன்றே புகழும்-எச்சபையாராலும் புகழப்படுகிற, திருஅழுந்தூர் வள்ளல் - திருவழுந்தூரில் அவதரித்த உதாரியாகிய கம்பநாட்டாழ்வார்,—முன் - முற்காலத்தில், மதுரகவி பெருமாள் - மதுரகவியாழ்வார், மாறனை - நம்மாழ்வாரை, சென்று - போய்அடைந்து, தென் தமிழ் தொடையில் - அழகிய தமிழ்ப்பாமாலைகொண்டு, ஒன்றே பதிகம் உரைத்து ('கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்னும்) ஒருபதிகத்தையே பாடி, அவன் பொன் அடி உற்று நின்றான் - அவ்வாழ்வாருடைய திருவடிகளைச் சேர்ந்து வாழ்ந்தனர்,' என்றே - என்று உட்கொண்டு, பதிகம் பதிகம் அது ஆக இசைத்தனன் - அப்பதிகம் பத்துள்ளதாக [நூறுபாடல்களாக] (இவ்வந்தாதியை அந்த நம்மாழ்வார்விஷயமாகப்) பாடினர்; (எ - று.)

வள்ளல் இசைத்தனன் என இயையும். முற்காலத்திலே மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரைச்சரணமடைந்து 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்னும் ஒரு

பதிற்றந்தாதியைப் பாடிப் பரமபதமடைந்தன ரென்பதைக் கருதி, பிற்காலத்திலே கம்பநாட்டாழ்வார் தாமும் அங்ஙனமேபேறுபெறுமாறு அதற்குப் பத்துமடங்காக இந்தஆழ்வார்நூற்றந்தாதியைப் பாடினர் என்பதாம். கம்பர் தாம் ஆழ்வார்விஷயமாகப் பிரபந்தம்பாடுதற்கு மதுரகவியாழ்வாரை "மார்க்கதர்ஶீ மஹர்ஷி:" என்றபடி வழிகாட்டியாகக் கொண்டன ரென்க. மதுரகவியாழ்வாரோடு கம்பநாட்டாழ்வார்க்கு ஒருபுடையொப்புமை இங்குத் தோன்றும். இவ்விருவரும் ஆழ்வாரெனப்படுதற்குக் காரணம், நம்மாழ்வார்விஷயமாகப் பிரபந்தம்பாடிய சிறப்பன்றோ? அந்த மதுரகவி ஒருபதிகம்பாடினர்; அதற்குஈடாக இவர் பத்துமடங்கு பாடியதனால், விஸ்தாரகவி யாவர். அவர் வடதிசையினின்று ஆழ்வார்திருநகரிக்குச்சென்று தசகம்பாடினர்; இவர் திருவரங்கத்தில் இருந்தே சதகம் பாடினர்.

மன்று - பலர்கூடும் இடம். சிலரேனும் பலரேனும் கூடும் இடங்களிலெல்லாம் அவர்களனைவராலும் பாராட்டிப் பேசப்படுகின்றது கல்வியிற் பெரிய கம்பரது கீர்த்தி யென்பது. 'மன்றேபுகழுந் திருவழுந்தூர்வள்ளல்' என்றதனாற் போதரும். முன்பு ஐம்புலன்வழிச் சென்று நீர்த்தமை தவிர்ந்து பின்பு எம்பெருமானைச் சரணமடைந்து ஆழ்வாரருளைப் பெற்றதனாலாகிய தமதுபுகழை இங்ஙனம் பாராட்டிக்கூறுகின்றனராதலால், இது தற்புகழ்ச்சிக்குற்றத்தின்பாற்படாது. "மன்றின்மலிபுகழ் மங்கைமன் கலிகன்றி" என்று, திருமங்கையாழ்வார் தாம்பாடிய பெரியதிருமொழியின் ஈற்றில் தம் பெருமையைத் தாமே வெளியிட்டதுங் காண்க. கம்பர் பிறந்த இடம் திருவழுந்தூராதலை, "சீரணிசோழநாட்டுத் திருவழுந்தூருள் வாழ்வோன், காரணக்கொடையான் கம்பன் தமிழினாற் கவிசெய்தானே" என்ற கம்பராமாயணத்தனியன்கொண்டும் உணர்க. வடமொழியில்வழங்கிய ஸ்ரீராமசரித்திரத்தைத் தமிழ்நாட்டவர்யாவரும் எளிதில் ஓதியுணர்ந்துஉய்யும்படி சிறந்தபெருங்காப்பியமாகப் பாடியுதவிய பெருவண்மையுடைமைபற்றி, 'வள்ளல்' என்றார்; "கம்பநாடுடையவள்ளல் கவிச்சக்கரவர்த்தி பார்மேல், நம்புபாமாலையாலே நருக்கின்றமுதமீந்தான்" என்ற கம்பராமாயணத் தனியனையுங் காண்க: "கவிநல்குகொடைக்காரணன்" என இந்நூற்சிறப்புப்பாயிரத்திற் கூறியதும் இதுபற்றியே.

குலசேகராழ்வாரை 'குலசேகரப்பெருமாள்' என்றாற்போல, மதுரகவியாழ்வாரை 'மதுரகவிப்பெருமாள்' என்றார்; இராமாநுசநூற்றந்தாதியில், திருப்பாணாழ்வாரை "பாண்பெருமாள்" என்பதுங் காண்க. பெருமாள்பக்கல் கொண்ட பக்திமிகுதியாலாகிய ஈடுபாட்டினால் அப்பெருமாள்மயமாகுதலால், ஆழ்வார்கள் 'பெருமாள்' எனப்படுவர். மதுரகவியாழ்வார் - பன்னிரண்டு ஆழ்வார்களில் ஒருவர்; "தேவு மற்றறியேன் குருகூர்நம்பி, பாவினின்னிசை பாடித்திரிவனே" என்று நம்மாழ்வார்க்கே தொண்டுபூண்டொழுகியவர். முன் - கலியுகத்தொடக்கத்தில், பாண்டியநாட்டில் திருக்குருகூர்க்கு அருகிலுள்ள திருக்கோளூரிலே நம்மாழ்வார்க்குமுன்னமே உதித்துச் செவிக்கினியசெஞ்சொற்கவிகளைப் பாடவல்லரானதனால் மதுரகவியென்ற திருநாமம்பெற்ற மெய்யடியவர், திவ்வியதேசயாத்திரையாய் உத்தரதேசஞ்

சென்று திருவயோத்தியி லிருந்தபோது தென்திசையில் திவ்வியமான தொரு பேரொளிப்பிழம்பைக் கண்ணுற்று வியந்து அதனை இன்னதென்று அறியுமாறு குறிக்கொண்டு மீண்டு ஆழ்வார்திருநகரியையடைந்து அப்பெருஞ்சோதி அங்கு அவதரித்துள்ள நம்மாழ்வாரது திருமேனிவிளக்கமேயென்று அறிந்து அவர்க்கு ஆட்பட்டு, 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்ற திவ்வியப்பிரபந்தம் பாடின ரென்பது தோன்ற, 'சென்று' எனப்பட்டது. இங்ஙனம் அவர் நம்மாழ்வார்க்குத்திருவடித்தொண்டராய் ஒழுகி அவரது சீர்பாதத்திற் சேர்ந்தன ராதலால், அந்நம்மாழ்வாரது திருவடிநிலை 'மதுரகவிகள்' என இவர்திருநாமத்தையிட்டு வழங்கப்பெறும். பத்துச்செய்யுள் கொண்டது, பதிக மெனப்படும். திருநாமப்பாட்டு நீங்கலாகக் கண்ணிநுண்சிறுத்தாம்பு பத்துச்செய்யுளுடையது.

வள்ளல் - வண்மையையுடையவன். மாறனை உரைத்துளன இயையும். மதுரகவியாகியபெருமாளென இருபெயரொட்டு. தென் தமிழ் - தென்திசையில் வழங்குதலால் தென்மொழியெனப்படுகிற தமிழெனினுமாம். ஒன்றே, ஏ - சிறப்பு. பொன் அடி - அழகிய பாதம்; அரிய திருவடி. நின்றான் - அழியாப்பேற்றில் நிலைநின்றனர். என்றே, ஏ - தேற்றம்.

இச்செய்யுள், நூலாசிரியர் தாமே தம்மைப் பிறன்போலும் பாயிரங் கூறியது. இது, திருநாமப்பாட்டு எனப்படும். பதிகம் பாயிரம் என்ற சொற்களால் இதனைவழங்குதலும் உண்டு. (பிரயோகவிவேகநூலார் 'இது, தன்னைப்பிறன்போலும்நாந்திகூறுகின்றது,' 'வடநூலார் தாமே பதிகமும் உரையுஞ் செய்வார்', 'இனிச் சம்பந்தர் சடகோபர் முதலாயினாரும், திவாகரரும் பதினெண்கீழ்க்கணக்குச்செய்தாரும் முன்னாகப் பின்னாகப் பதிகங்கூறுவதுங் காண்க' என்றவை கருதத்தக்கன.) இதனைத் தற்சிறப்புப்பாயிர மென்பர். இது, ஒருவகைக்கவிசமய மாதலால், தற்புகழ்ச்சியாகாது.

இவ்வந்தாதியைப் பாடியவரும் ஓதினவர்களும் நம்மாழ்வாரதுபொன்னடியையடைவ ரென்ற நூற்பயன் இச்செய்யுளில் தொனித்தலால், இது பலச்ருதி கூறியவாறுமாம்.

சடகோபரந்தாதி முற்றிற்று.



## அநுபந்தம்.

இந்நூலின் கஉ, உ௦, உக, சரு - இச்செய்யுள்களுக்கு—கம்பநாடர் தலைமகளாகவும், பாகவதர் அல்லது நம்மாழ்வார் தலைமகனாகவுங் கொண்டு உள்ளுறைபொருளுரைத்தலே சிறக்கும்.

———

# சடகோபரந்தாதிச்

## செய்யுண்முதற்குறிப்பகராதி.



| செய்யுள் | பக்கம். | செய்யுள் | பக்கம். | செய்யுள் | பக்கம். |
|---|---|---|---|---|---|
| அந்தணர்க்கோ | ௫௪ | கைதலைப்பெய் | ௫௧ | பகையாய்வரு | ௧௩௧ |
| அந்தமிலாமறை | ௩௪ | கோடியெடுத்து | ௫௦ | பண்ணப்படுவன | ௩௫ |
| அரிவளைபொன் | ௬௮ | கொழுந்தோடிலை | ௪௧ | பண்ணுந்தமிழுந் | ௬௦ |
| அருளிற்சில | ௧௪௫ | சந்தியுஞ் | ௫௫ | பதியந்தமிழென்ன | ௧௦௦ |
| அவரேயயற்கு | ௧௪௬ | சாதிக்குமே | ௩௧ | பரந்தலைக்கும் | ௧௨௩ |
| அறிவேயுனை | ௭௫ | சாரற்குறிஞ்சி | ௪௨ | பாவாதுகேட்டினி | ௯௩ |
| அறுவகையாய | ௧௦௬ | சித்தர்க்கும் | ௪௬ | பாடுங்கறங்குஞ் | ௯௨ |
| அன்றுதவன்றிலை | ௭௮ | சூடரிரண்டே | ௧௨ | பாவகத்தாற் | ௧௧௪ |
| ஆட்செய்யலாவ | ௮௭ | சூரக்குந்திருவும் | ௯௧ | பாவைத்திரு | ௮௩ |
| ஆயிரமாமறைக்கும் | ௨௫ | சுவடிறக்க | ௭௨ | பாவொடுக்குந் | ௧௪ |
| ஆரணத்தின்சிர | ௭ | சூட்டிற்குருகுரங்கு | ௫௧ | புகுகின்றது | ௧௪௧ |
| ஆற்றிற்பொதிந்த | ௩௦ | செய்யன்கரிய | ௫௩ | புரைதுடைத்து | ௭௦ |
| இட்டத்திலுந் | ௧௧௧ | செய்யோடருவி | ௨௧ | புனம்பாழ்படுத்து | ௧௩௩ |
| இயலைத்தொடுத் | ௧௧௭ | சேராதனவுளவோ | ௬௭ | பூட்சிகண்டீர் | ௧௦௧ |
| இருளாய்ப்பரந்த | ௭௪ | சோல்லென்கெ | ௪௦ | பெறும்பாக்கிய | ௭௬ |
| இலவேயிதழுள | ௩௩ | தடம்பணை | ௯௫ | பொருளைச்சுவை | ௬௩ |
| இழைத்தாரொருவ | ௮௬ | தருமமுங்காமமு | ௧௪௩ | பொன்னையுரைப்ப | ௮௧ |
| உண்டாட்டியலு | ௧௪௧ | தவஞ்செய்வதுந் | ௧௨௧ | போந்தேறுக | ௪௫ |
| உயிர்த்தாரையிற் | ௫௩ | தனமாஞ்சிலர்க்கு | ௧௭ | மணித்தாரரசன் | ௮௨ |
| உயிருருக்கும் | ௩௩ | தித்திக்குமூல | ௨௪ | மலையாரமுங் | ௪௪ |
| உரிக்கின்ற | ௬௦ | தினையொன்றிய | ௧௩௬ | மனையும் | ௧௫௭ |
| எழுதியநாளும் | ௧௫௬ | தீண்டித்திருவடி | ௪௧௨ | மன்றேபுகழுந் | ௧௫௮ |
| என்முடியா | ௫௦ | தீயைக்கிழி | ௧௫௩ | மாலைக்குழலி | ௪௦ |
| ஒருந்தகைமைக்கு | ௧௦௫ | துறவாதவர்க்குந் | ௫௭ | மூர்த்தத்தினை | ௯௨ |
| கடலைக்கலக்கி | ௩௬ | தென்றலை | ௮௧ | மெய்யுமெய்யாயது | ௫௨ |
| கருத்திற்கருணை | ௧௨௫ | தேவரையேறிய | ௫௬ | மேகத்தையாற்றிற் | ௯௭ |
| கவிப்பாவமுத | ௨௩ | தேவிற்சிறந்த | ௪ | மொழிபலவாயின | ௨௦ |
| கற்றுஞ்செவியுற | ௧௦௨ | தோகையுளவாய | ௪௭ | வந்தடிக்கொண்ட | ௬௫ |
| கனவாயினவுந் | ௬௬ | தொடங்குகின்ற | ௯௧ | வல்லம்புலிமுக | ௧௫௩ |
| காலத்திலேகுருகூர் | ௬௧ | தொழும்பாக்கிய | ௧௨௧ | விடவந்தகா | ௯௨ |
| காணம்வேண்டுமே | ௧௨௦ | தோன்றுவபடைத | ௨௧ | விழிப்பாரினி | ௪௭ |
| குருகூர்நக | ௭௭ | நஞ்சடகோபனை | ௮ | விளையாதொழிய | ௧௩௧ |
| குற்றேவலுஞ் | ௧௧௬ | நாதனரங்க | ௯ | வெள்ளம்பரந்தன | ௧௦௩ |
| கூட்டங்கடோறு | ௧௩௦ | நாய்போற் | ௩௮ | வேதத்தின்முன் | ௧௧ |
| கூறப்படாமறை | ௮௮ | நாவலந்தீவிற் | ௮௫ | வேறேநமக்கிவ | ௮௦ |

# சடகோபரந்தாதியிலுள்ள துறைகள்.

| எண். | துறை. | பாட்டு. | பக்கம். |
|---|---|---|---|
| ௧ | இயலிடங்கூறல். | | |
| ௨ | செலவுணர்த்திச் செவிலியைத்தேற்றல். | ௧௨ | ௩௧ |
| ௩ | பாங்கிநெறியருமைகூறித் தலைவனைவரவுவிலக்கல். | ௨௦ | ௪௦ |
| ௪ | பிரிவாற்றாத தலைவிநிலை கண்டு தோழி இரங்கல். | ௨௧ | ௪௨ |
| ௫ | பாங்கி வெறிவிலக்கி அறத்தொடு நிற்றல். | ௨௭ | ௪௯ |
| ௬ | மடலூரத் துணிந்த தலைமகளின் வழி யொழுகித் தோழி இரங்கல். | ௩௬ | ௫௬ |
| ௭ | தலைவனுக்குத்தோழி தலைவியின் ஆற்றாமைகூறல். | ௩௮ | ௫௯ |
| ௮ | மருங்கணைதல். | ௪௨ | ௬௩ |
| ௯ | தோழி இரங்கல். | ௪௩ | ௬௫ |
| ௧௦ | தலைவி கடலைநோக்கித் தேர்வழிதூரவென்றல். | ௪௬ | ௬௮ |
| ௧௧ | செவிலி, நற்றாய்க்கு இருவர்காதலு முரைத்தல். | ௪௭ | ௭௦ |
| ௧௨ | பிரிந்தநிலையில் ஆற்றாத தலைவி இரங்கிக்கூறல். | ௪௮ | ௭௨ |
| ௧௩ | மகட்பாற்காஞ்சி. | ௫௩ | ௭௮ |
| ௧௪ | பிரிந்த தலைவி தென்றற்கு வருந்தி யிரங்கல். | ௫௬ | ௮௨ |
| ௧௫ | தலைவியின் துயர்கண்ட தோழி இரங்கல். | ௬௧ | ௮௮ |
| ௧௬ | தலைவன் தலைவிக்குத் தன்நகரணிமைகூறல். | ௬௬ | ௯௨ |
| ௧௭ | பிரிவாற்றாத தலைவி கார்கண்டுகலங்குதல். | ௬௭ | ௯௩ |
| ௧௮ | பிரிந்து மீளுந் தலைமகன் முகிலொடுகூறல். | ௬௮ | ௯௫ |
| ௧௯ | மதங்கு. | ௬௯ | ௯௭ |
| ௨௦ | தலைவிகண்ணழகுகண்டு வியந்த தலைவன் கூறல். | ௭௦ | ௯௯ |
| ௨௧ | தலைமகளைத் தலைமகன் கண்ணுற்று 'இஃது ஒரு வியப்பு என்?' என்றல். | ௭௪ | ௧௦௩ |
| ௨௨ | நற்றாய்க்குச் செவிலி அறத்தொடு நிற்றல். | ௮௦ | ௧௧௭ |
| ௨௩ | தலைவனைநோக்கித் தோழி தலைவியை உடன்கொண்டுபோகச் சொல்லுதல். | ௮௪ | ௧௨௩ |
| ௨௪ | தோழி தினையொடு வெறுத்து வரைவுகடாதல். | ௮௫ | ௧௨௫ |
| ௨௫ | தலைவன் வறும்புனங்கண்டு வருந்தல். | ௮௭ | ௧௩௧ |
| ௨௬ | தலைவி அன்றிலின்குரல்கேட்டு அயர்தல். | ௮௮ | ௧௩௩ |
| ௨௭ | தலைவிநிலை கண்டு பாங்கி இரங்கல். | ௮௯ | ௧௩௬ |
| ௨௮ | தலைவியைக்குறித்துத் தோழி இரங்கல். | ௯௧ | ௧௪௧ |
| ௨௯ | தலைவன், தலைவிநோக்கினாலாய வருத்தங் கூறல். | ௯௩ | ௧௪௫ |
| ௩௦ | பிரிவாற்றாதுவருந்துந் தலைவி யிரங்கல். | ௯௬ | ௧௪௯ |
| ௩௧ | ... ... ... ... ... ... ... ... ... | ௯௭ | ௧௫௧ |
| | | ௯௮ | ௧௫௩ |

ஸ்ரீ:

திருநறையூர் நம்பி

# மேகவிடு தூது



இது

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச்

"செந்தமிழ்" உதவிப்பத்திராதிபர்

**இராமாநுஜையங்காரால்**

பரிசோதிக்கப்பெற்றது.




செந்தமிழ்ப் பிரசுரம்—௪௩.

மதுரைத்
தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்
பதிப்பு.
1921.

ஸ்ரீ:

# திருநறையூர் நம்பி

# மேகவிடுதூது.



இது

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச்

"செந்தமிழ்" உதவிப்பத்திராதிபர்

## இராமாநுஜையங்காரால்

பரிசோதிக்கப்பெற்றது.




செந்தமிழ்ப் பிரசுரம்—௩௩.

மதுரைத்

தமிழ்ச்சங்க முத்திராசாலைப்

பதிப்பு.

1921.

ஸ்ரீ:

# முகவுரை.

---

அமிழ்தினுமினிய தமிழ்மொழியகத்தே அகப்பொருளும் புறப்பொருளும்பற்றி ஆன்றோரா லழகுபெறப் பாடப்பட்ட பிரபந்தங்களும் அனந்தமே. அவற்றுள் தூதுப்பிரபந்தங்களு மடங்கும்.

மேகவிடுதூது என்பது மேகமாகிய விடுதூதையுடையதென விரியு மன்மொழித்தொகையாய்ப் பிரபந்தத்துக்குப் பெயராயிற்று. மேகத்தைத் தூதுவிட்ட விருத்தாந்தமுடையதென்பது கருத்து.

திருநறையூர்நம்பி மேகவிடுதூது என்னு மிது, 'காமப்பகுதிகடவுளும்வரையார்' என்ற விதிப்படி, திருநறையூரிலே கோயில்கொண்டெழுந்தருளியுள்ள நம்பியிடத்து மால்கொண்ட ஒரு தலைவி, அவரிடத்தே தன் னாற்றாமையைத் தெரிவித்து அவரணிந்த திருத்துழாய்மாலையை வாங்கிவரும்படி மேகத்தைத் தூதுவிடும் விருத்தாந்தத்தை விடயமாக வைத்து மிகவும் நயமுடையதாகப் பாடப்பட்டிருப்பதொரு கலிவெண்பாட்டு.

திருநறையூர் என்பது சோழநாட்டுத்திருப்பதியு ளொன்று. சோழன் கோச்செங்கணான், நம்பியைப்பணிந்து சேரபாண்டியர்களை வெல்லுதற்கு வெற்றிவாள்பெற்ற தலம் இது. இன்னும், இதன் மான்மியமெல்லாம் இந்நூலின் 60-முதல் 140-வரையுள்ள கண்ணிகளால் விளங்கும்.

இப்பாட்டின் முதலிலுள்ள "போதுமணவாளனுக்கு" என்னுஞ் செய்யுளால் இது திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்காரால் இயற்றப்பட்டதென்று தெரிகிறது. ஆழ்வாராசார்யர்களைப் பின்பற்றி அவர்கள் மங்களாசாசனம்செய்துபோந்த திவ்யதேசங்களுக்கெல்லாம் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியும் அவற்றுட்சிறந்த கோயில், திருமலை, திருமாலிருஞ்சோலைமலை என்ற மூன்று திவ்யதேசங்களுக்கும் முறையே திருவரங்கத்தந்தாதி, திருவரங்கக்கலம்பகம், திருவரங்கத்துமாலை; திருவேங்கடமாலை, திருவேங்கடத்தந்தாதி; அழகரந்தாதி என்ற பிரபந்தங்களும் அருளிச்செய்த திவ்யகவி, ஆழ்வார்களுள், "மாறன்பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூறவவதரித்த" திருமங்கைமன்னனைப் பின்பற்றி,

அவர் அதிகமாக ஈடுபட்டுப் பல திருப்பதிகமருளிச்செய்து மடலியற்றிய திருநறையூர்நம்பிவிஷயத்தி லிப்பாட்டையியற்றினு ரென்பது பொருத்த மானதென்று தோன்றுகிறது.

மேலும், இப்பாட்டு 'சொல்ளுக்கும்பொருளுக்குந்தொடைநோக்கு நடைநோக்குந் துறையினுக்கோ—டெந்நோக்குங்காணஇலக்கியமா' யமைந் திருப்பதும்,

"கேசவனையேசெவிகள்கேட்கத்திருவரங்கத்
தீசனையேசென்னியிறைஞ்சிடுக—நேசமுடன்
கண்ணனையேகாண்கவிருகண்ணிணைர்கொள்காயாம்பூ
வண்ணனையேவாழ்த்துகவென்வாய்"

என்ற திருவரங்கக்கலம்பகச்செய்யுளோடொப்ப இப்பாட்டின் 192-முதல் 198-வரையுள்ள கண்ணிகள் அமைந்திருப்பதும், இதிற் பலவிடத்தும் அஷ்டப்பிரபந்தநடையோடொத்த நடை விரவிவருவதும் அவ்வாறு கொள்வதற் காதாரமாகும்.

இப்பாட்டு இருநூறுகண்ணிகளாற் பல அரியவிஷயங்களை விளக்கி அநேக சரிதங்களும், மடக்கு, முரண், உவமை, பின்வருநிலை, சிலே டை-முதலிய பல அணிகளும் உடையதாய்ப் படிப்பவர்க்கு மிக்க இனி மையுடையதாகவும் எளிதிற் பொருள்விளங்குவதாகவும், கற்போர்க்குச் செய்யுள் செய்யுந்திறமையை உண்டாக்க வல்லதாகவும் இயற்றப்பட்டிருக் கிறது.

இப்பிரபந்தம் இதற்குமுன் அச்சிடப்பெற்றிருப்பினும், பிரதிகள் கிடைத்தற்கரிதாயிருப்பதுபற்றிக் குறிப்புரையுடன் இப்பொழுது செந் தமிழ்ப்பிரசுரமாக வெளியிடப்பட்டது.

இதை யச்சிட்டதிற் சிற்றறிவுடைய என்னால் ஏற்பட்ட பிழைகளை அறிஞர்கள் பொறுத்துத் திருத்தியளிக்குமாறு வேண்டுகிறேன்.

இங்ஙனம்,

இராமாநுஜையங்கார்,

உதவிப்பத்திராதிபர்,

செந்தமிழ்.



ஸ்ரீ:

# திருநறையூர் நம்பி மேகவிடு தூது.

## தனியன்.

### நேரிசைவெண்பா.

போதுமணை வாளணங்கு புல்லுநறை யூர்நம்பி
மீதுமணை வாளருண் மேகவிடு—தூதுதனைச்
சொல்லுவார் கேட்பார் துதிப்பாரிம் மேதினிமேல்
வெல்லுவா ரெல்லாம் விரைந்து.

## காப்பு.

### நம்மாழ்வார்.

நாரணனை யெவ்வுயிர்க்கு நாயகனை யண்டரண்ட
பூரணனை நாகணையிற் புண்ணியனை—வாரணமுன்
வந்தானை யேத்து மறையா யிரந்தமிழாற்
றந்தானை நெஞ்சே தரி.

### திருமங்கையாழ்வார்.

நாட்டியசீர்த் தென்னறையூர் நம்பி திருவடிக்கே
சூட்டியதோர் மேகவிடு தூதுக்குக்—கூட்டம்
பொலியன்ப ரேத்தும் புனலாலி நாடன்
கலியன் பரகாலன் காப்பு.

## நூல்.

### கலிவெண்பா.

1 சீர்கொண்ட செங்கமலச் செல்வத் திருமகளு
நீர்கொண்ட வேலை நிலமகளு—மோர்கொண்ட

2 வார்தண் மணிக்கடகக் கையா லடிவருடப்
பார்தண் மணிச்சுடிகைப் பாயன்மேற்—சேர்ந்துறங்குஞ்

3 செங்கண்மா லுந்தித் திருத்தா மரைப்பிறந்த
வங்கண்மா ஞாலத் தனைத்துயிர்க்குந்—தங்காமும்

4 மாரி வழங்குதன் மாறாமே கைம்மாறு
காரிய மென்று கருதாமே—பாரிற்

5 றுளிக்கின்ற தண்ணார் துளியமுத நல்கி
யளிக்கின்ற கொண்மூ வரசே—களிக்கின்ற

6 மேலுலக மேறி விரிஞ்சநா மம்படைத்து
நாலு திசைமுகமு நண்ணுதலான்—மாலுமா

7 நீலநிற மாகி நிறைகமலக் கண்ணுகிக்
கோல வளையாழி கொள்கையாற்—சூலம்

---

க முதல் கக—கண்ணிவரை மேகத்தின்சிறப்புக் கூறப்படுகிறது.

2. கடகம்-வளை. பார்தன்-பாம்பு. சுடிகை-தலை.

3. உந்தி-கொப்பூழ். தங்கா-தங்கி.

5. கொண்மூ, புயல், கொண்டல், மேகம், மஞ்சு, மங்குல், கனம், எழிலி, பயோதரம், விண், கார், கந்தரம், மாரி என்பன ஒருபொருட் சொற்கள்.

6. இது முதல் மூன்று கண்ணிகளால் முறையே பிரும்ம விஷ்ணு, ருத்திரர்க்கும் மேகத்துக்குஞ் சிலேடை கூறப்படுகின்றது. அவற்றுள், பிரமனுக்கும் மேகத்துக்குஞ் சிலேடைவருமாறு:—

மேலுலகமேறி-1. சத்தியலோகத்தை யடைந்து, 2. ஆகாயமாகிய இடத்தை யடைந்து. விரிஞ்சநாமம் படைத்து—1. விரிஞ்சன் என்னும்பெயரையடைந்து, 2. பரந்த அச்சத்தை விளைக்கக்கூடிய கடல்நீரைக்கொண்டு. நாலு திசை முகமு நண்ணுதலால்—1. நான்குதிக்கிலுமுகத்தையுடைமையால்; 2. நான்கு திக்கிலுஞ் செல்லுதலால்.

7. திருமாலுக்கும் மேகத்துக்குஞ் சிலேடை. மாலும்-மயக்கத்தைச்செய்கின்ற. மா-பெருமைமிக்க.

நிறைகமலக் கண்ணுகி-1. தாமரைப்புஷ்பம்போன்ற ஆயிரம் கண்களையுடையனாய், 2. மிக்கநீரைத் தன்னிடத்தே கொண்டதாய். கோலவளையாழி கொள்கையால்-1. அழகிய சங்கு சக்கரங்களைத் தரித்தலால், 2. அழகிய சங்குகளையுடைய (அல்லது உலகைச் சூழ்ந்துள்ள) கடலைக்கொள்ளுதலால்.

16 சாதகமுந் தோகைத் தனிமயிலும் போலவே
மேதகையை நின்வரவை வேட்டிருந்தேன்—பூதலத்துப்

17 பல்லுயிருங் காக்கப் பரமா முனக்கெனது
புல்லுயிருங் காக்கிற் புகழன்றோ—வல்லதொரு

18 சீருயிரு மேகமே செங்கண்மாற் காளானே
னோருயிரு மேகமே யல்லவோ—பேரரவ

19 நீலமஞ்சே கேட்டியா னின்னையல்லா தென்னையிந்தக்
காலமஞ்சே லென்பாரைக் காண்கிலே—னேலமுறு

20 விண்மாரி யேபெருமான் வேரித் துழாய்வேட்டென்
கண்மாரி பெய்வதெல்லாங் கண்டாயே—தண்மை

21 விளையும் பயோதரமே வெம்பாத செம்பொ
னிளையும் பயோதரமே யானேன்—கிளைபிரியாக்

22 கோல மழையே குயின்மா ரனையந்திக்
கால மழையாமே காப்பாரார்—நீலநிற

23 மங்குலுக்கு வேந்தே மலர்க்கண் புதைத்தனைய
கங்குலுக்கு நெஞ்சங் கரைகின்றே—னிங்கு

24 நடந்தகன மேமுலையி னாலுந் தாள
வடந்தகன மேசெய்து மாய்ந்தேன்—கிடந்திரண்ட

25 திங்களொழி லிக்குச் சிலைமார வேளொழியி
லெங்களொழி லிக்கரசே யென்செய்கேன்—மங்கலமா

16. மேதகையை-முன்னிலைவிளி. மேம்பட்ட தகுதியையுடையோய் என்பது பொருள். வேட்டல்-விரும்புதல்.

17. பரம்-பொறுப்பு. இது முதல் உள ஆங் கண்ணிவரை தலைவி மேகத்தை நோக்கித் தனது எளிமை கூறுகிறாள்.

18. சீருயிரும்-சிறப்பா னுயர்தலையுடைய. அ க ர ம் தொடை நோக்கி இகரமாய்த் திரிந்துநின்றது. முதல் அடியில் மேகமென்றும் இரண்டாமடியில் ஏகம் என்றும் பிரிக்க. ஏகம்-ஒன்று

20 வேரி—வாசனை.

21. பயோதரம்-1 மேகம், 2 தனம். வெம்பாதசெம்பொன்-தேமல்.

23. கங்குல்—இரவு.

24. தாலுதல்—தொங்குதல். தாளவடம்—முத்துமாலை. தகனஞ்செய்து-எரித்து.

25. எழில் இக்குச்சிலை—அழகிய கருப்புவில். மாரவேள்—மன்மதன்.

26 மிந்திரவில் வாங்கி யெழுகின்ற மைப்புயலே
வந்திரவில் வாடை வருத்துங்கான்—அந்தரத்து

27 விண்ணே யுனக்கிவற்றை விண்டுரைத்தே னல்லாதெ
னுண்ணேய வேட்கையெவர்க் கோதுவேன்—கண்ணழலால்

28 வெந்தா னிலத்துக்கும் வீறுகத் தாங்குகையான்
மந்தா னிலத்துக்கும் வாய்திறவேன்—சந்தக்

29 குருத்தத்தை மாரன் குரகதமா மென்றே
வருத்தத்தை யங்குரைக்க மாட்டேன்—கருத்துள்ள

30 மாதண் டலைவாய் மதுகரத்துக் கும்மவன்றன்
கோதண்ட நாணென்று கூறேனென்—மூதண்ட

31 கோளக் குயிற்கெல்லாங் கோவே யவன்றனது
காளக் குயிற்குங் கழறேனு—ஞளொன்றி

32 லன்புறா வுக்கு மரசனுட லீர்வித்த
புன்புறா வுக்கும் புகன்றிடேன்—மென்புறத்தாக்

33 கொம்பிக் குடல்பனிக்குங் கொச்சைமட மஞ்ஞைக்குஞ்
சொம்பித் தளருந் துயர்பணியேன்—றேம்பிரச

34 நிற்கின்ற பூவைக்கு நீள்குழலார் சொல்லிப்பதே
கற்கின்ற பூவைக்குங் கட்டுரையேன்—பொற்கால்

26. இந்திரவில்—வானவில். வாடை இரவில் வந்து வருத்து மெனக் கூட்டுக.

27. வேட்கை—காதன்மிகுதி.

28. இதுமுதல் 36 வரை யுள்ள கண்ணிகளாற் றென்றல், கிளி முதலியன தூதுசெல்லத் தக்கனவல்லவென்று தலைவி கூறுகிறாள். கண்ணழலால் வெந்தான்—மன்மதன். நிலத்துக்கும்-பூமியில் பொடியாயுதிர்ந்துவீழ்ந்தும். வீறுக—வன்மையடையும்படி. (இறந்தொழிந்த மன்மதனும் இயங்கும்படி) தாங்குகையால்—தேராயிருந்து தாங்குதலால். மந்தானிலம்-தென்றற்காற்று.

29. குருத் தத்தை-நிறத்தையுடைய கிளி. மாரன்-மன்மதன். குரகதம்—குதிரை.

30. தண்டலை—சோலை. மதுகரம்—வண்டு. கோதண்டநாண்-வின்னாண்.

31. குயின்—மேகம். காளம்—சிறுச்சின்னம். கழறுதல்-சொல்லுதல். நாள் ஒன்றில்-ஒருகாலத்தில்.

32. அன்புறா-அன்புற்று. உக்கும்-மனம் கரையும். அரசன்-இங்கு சிபிச்சக்கரவர்த்தி. உடல்-சரீரம். ஈர்வித்த—அறுக்கச் செய்த. புகலுதல் - சொல்லுதல். மென்புறம்-மெல்லியவுடல்.

33. பனித்தல்-நடுங்குதல். கொச்சை-இழிவு. மஞ்ஞை-மயில். பணித்தல்-சொல்லுதல். தேம்பிரசம்-இனியதேன்.

34. பூவைக்கும்-பூச்சூடிய. பூவை-நாகணவாய்ப்புள். கட்டுரைத்தல்-சொல்லுதல்.

35 வெறிப்பதும வீட்டன்னம் வெண்பாலு நீரும்
பிறிப்பதுபோ னட்புப் பிறிக்குங்—குறிப்பறிந்து

36 காதலா லுள்ளக் கவலை யதுகேட்க
வோதலா காதென் றுரையாடே—னாதலா

37 லுள்ளே புழுங்குவ தன்றி யொருவருக்கும்
விள்ளே னுனக்கு விளம்பினேன்—றெள்ளியநூ

38 லோதுவா ரெல்லா முதவுவார்க் கொப்புரைக்க
வேதுவாய் நின்ற வெழிலியே—பூதலத்துப்

39 பெய்யுதவி யும்புரிந்தாற் பேச்சுதவி யுஞ்சிறிது
மெய்யுதவி யும்புரிய வேண்டாவோ—துய்ய

40 அடலாழி யானடிக்கே யன்பாய காதற்
கடலாழி மூழ்கினேன் கண்டா—யுடல்வாடி

41 விம்முகிலே சந்தாக மீளத் திருமால்பான்
மைம்முகிலே சந்தாக மாட்டாயோ—பெய்ம்மதவேள்

42 தண்ணப்பஞ் செய்வதெலாந் தாமோ தரனடிக்கீழ்
விண்ணப்பஞ் செய்தருள வேண்டாவோ—வெண்ணத்தின்

43 சீதரனை நீபிரந்து தெய்வத் துழாய்கொணர்ந்தெ
னாதரவு தீர்த்தருள லாகாதோ—கேதகைக்கு

44 மின்கேள்வ னாக்கியநீ விண்ணோர் பெருமானை
யென்கேள்வ னாக்கினா லோராதோ—முன்கேட்டு

---

**35.** வெறி-வாசனை. பதுமம்-தாமரை. அன்னம், பாலையும் நீரையும் பிரித்தருந்துமென்பது கவிமரபு. இது "நீர் பிரித்தமிர்துணுநீர்மையினோதிமம் - ஓரிருபான்மைக் குவமையதாகும்" என மாறனலங்காரத்துள்ளும், "பாலிருந்த நீர் பிரிப்பீர்" என அழகர்கலம்பகத்துள்ளும் பயின்றுள்ளது.

38 முதல் 51 வரையுள்ள கண்ணிகளால், மேகத்தினிட மமைந்த தூது சொல்லற்குரிய தகுதி விளக்கப்படுகிறது.

**38.** ஆதலால் நீ எனக்குத் தவறாது தவுவாயென்பது குறிப்பு.

**39.** பேச்சுதவி - தூதுசொல்லல். மெய்யுதவி-சரீரஉபகாரம்; அது தூது செல்லல்.

**40.** அடல்—வலி. ஆழி-சக்கரம். கடலாழி இருபெயரொட்டுப்பண்புத்தொகை. ஆழ்கடல் என்பது பொருள்.

**41.** விம்மு கிலேசம்—அதிகரித்த கவலை. சந்து-தூது. மதவேள்-மன்மதன்.

**42.** தண் அப்பு அஞ்சு எய்வது—குளிர்ந்த (புஷ்ப) பாணங்களைந்தையும் எய்வது. விண்ணப்பம் செய்தல்-சொல்லுதல். வெண்ணத்தின் சீதரன்-வெள்ளிய சங்கத்தினையுடைய திருமால்.

**43.** கொணர்ந்து - கொண்டுவந்து. ஆதரவு-விருப்பம். கேதகை — தாழை.

**44.** கேள்வன்-கணவன்.

45 மெள்ளரிய தாம மெனக்குதவா யேயுனக்கு
வள்ளலெனு நாமம் வழுவாதோ—தெள்ளுகடன்

46 ஞாலத் துளவமே நல்லிளமை போகாமற்
கோலத் துளவமே கொண்டுதவாய்—சீலத்தா

47 லூனு யுடலா யுறுதுணையாய்த் தெய்வமா
யானு மருந்தாயென் னுருயிரா—யானுத

48 நெஞ்சமாய்க் கண்ணுய் நினைவாய் வினையேற்குத்
தஞ்சமாய் நின்ற தனிமுதலே—பஞ்சவர்க்காய்

49 மெய்த்தூது சென்றவரை வெல்லவே வெண்சங்கம்
வைத்தூது செங்கமல மாயோன்பா—லித்தூது

50 நல்லதெனக் காரே நடந்தருள வேண்டுநீ
யல்லதெனக் காரே யருள்செய்வார்—சொல்லித்

51 தருதுமெனக் கந்தரமே சாற்றுயே லுய்யக்
கருதுமெனக் கந்தரமே கண்டாய்—பெரிது

52 மெனைத்தோன்றி யோதுயர மெய்தினுர் பார்மே
லுனைத்தோன்றி போதூ துழன்றுர்—நினைத்தார்

53 தமது பிறப்பறுக்குந் தாயாகி மேனு
ளமுதிற் பிறந்தாள்பா லன்றே—நமது

54 கருமஞ் சனையவற்காய்க் காய்கதிரைப் பாய்ந்து
பொருமஞ் சனைசிறுவன் போனுன்—றரணிதனின்

45. தாமம்—மாலை.

46. ஞாலம்-உலகம். அவம்-வீண். கோலம்-அழகு. துளவம்-திருத்துழாய். உதவுதல்-கொடுத்தல். சீலம்-தூய்மை.

48. தஞ்சம்—புகலிடம்.

50. நல்லதெனக் காரே எனவும், அல்லது எனக்கு ஆரே எனவும் பிரிக்க.

51. கந்தரமே! "சொல்லித் தருதும்" எனச் சாற்றுயேல் உய்யக்கருதும் எனக்கு அந்தரமே எனக் கூட்டுக. கந்தரம்—மேகம். கருதும்—தனித்தன்மைப்பன்மை. அந்தரம்-முடிவு.

52. முதல் 57 வரையுள்ள கண்ணிகளால், தலைவி மேகத்தை நோக்கித் தூதுசெல்லுதல் இழிவாகக்கருதப்படாது தொன்றுதொட்டு உயர்வாக மதிக்கப்பட்டதென்று சரித்திர ஆதாரங்கொண்டு விளக்கி அதைத் திருநறையூர்நம்பியிடம் தூது சென்றுவரும்படி வேண்டுகிறுள்.

53. அமுதிற் பிறந்தாள் என்பது இங்கு சீதையையுணர்த்திற்று.

54. கருமஞ்சு அனையவன்—கரிய மேகம்போலும் இராமன். காய்கதிர்-சூரியன். அஞ்சனை சிறுவன் - அனுமன். தரணி-பூமி.

55 மீது பாவை விடமுண் டவனன்றே
யாது பாவை மனைவந்தா—ளுதலா

56 லோது மிவரி லுயர்ந்தோ ரிலையன்றே
தூதுபுரிந் தோரைத் தொகுத்துரைத்தேன்—ஆதலாற்

57 றேனின் புறத்தூது தெய்வத் துளவினன்பால்
யானின் புறத்தூ தெழுந்தருளாய்—வானிற்

58 றிவலை பிலிற்றிவருந் தெய்வமே நீயென்
கவலையறத் தூதுபோங் காலைக்—குவலயத்தி

59 லெம்பிரா னாரு மவர்பெருமை மெய்ப்பபின்ற
தம்பிரான் செய்கைமையுஞ் சாற்றக்கேள்—உம்பரிற்

60 பன்னிருவர் மான்றேர்ப் பரிதிக் கடவுளரு
மன்னிருவர் தெய்வ மருத்துவரு—மொன்னலரைப்

61 பாயும் விடையர் பதினொருவ ருந்திசையிற்
காயுங் கடாயானைக் காவலருந்—தூயகதிர்

62 வெண்ணிலா விட்டு விளங்குங் கலாமதியு
மெண்ணிலாத் தாரகையி னீட்டமுங்—கண்ணி

63 லருடரும ஞானத் தருந்தவர் நாகர்
தெருடரும் விஞ்சையர் சித்தர்—கருட

64 ரரக்க ரியக்க ரவுணர் முதலோர்
பரக்குங் கணங்கள் பலரும்—பெருக்கரு

65 நீரேழு மேழு நினைது பெருங்கணமும்
பாரேழு மேழு பருப்பதமு—மீரே

66 பூதிக்கும் புனைபு பாதாலமல் வெற்பு
மொதிக்கு மாசுமு சொல்லும்—தொகுத்தான்

55. பாவை-1. [illegible] 2. பாவை [illegible] நாச்சியார். [illegible] வைகுந்தம், [illegible] திருப்பும், [illegible] மதிப்பற்றதைக் [illegible]

57. தேன் [illegible] எனவும், யான் இன்புற [illegible] எனவும் பிரித்துப் பொருள் [illegible].

58. திவலை-துளி. [illegible] குவலயம்-பூமி.

59. முதல் 133 வரையுள்ள கண்ணிகளால் தலைவி, தான் விரும்பிய தலை[illegible]

60. [illegible]-பகைவர்

62. தாரகை-விண்மீன். ஈட்டம்-கூட்டம்.

63. தெருள்-தெளிவு.

66. [illegible]மால்வெற்பு—மகமேரு. ஆதிசேடன்.

67 முண்டக நாபி முளைக்குஞ் சதுமுகனே
டண்ட வனாக மடங்கலுங்கண்—கண்டளித்து

68 முன்னிய வண்ண முடித்து விளையாடுந்
தன்னிகரில் லாத தனிமுதல்வன்—அன்னமாய்

69 மீனாகி யாமையாய் வெள்ளேன மாய்மடங்கல்
மானாகி மாயையாய் வாமனமாய்—ஆனாத

70 மானிடராய்ப் பாய்பரியாய் வாழு மடியவர்க்குத்
தானிடராற் றப்புகுந்த தம்பிரான்—மேனாளிற்

71 பைந்நாகப் பள்ளிமேற் பங்கயங்கள் பூத்தொளிரு
மைந்நாகம் போற்கண் வளருநாட்—பொன்னாய

72 வன்ன முளரி மலர்த்தவிசில் வீற்றிருக்கு
மன்ன முணர்த்தவுண ராமையா—லென்னையல்லா

73 லிந்நித் திரைமடந்தை யெய்தலுமா யிற்றேவென்
றுன்னித் திரைமடந்தை யூடினளா—வந்நிலையே

74 காயத்திரியுங் கலைமகள்சா வித்திரியு
மாயத் தெரிவையரா யாங்குவர—நேயத்தார்

75 கோலத்தாள் கைதொழுது கூறிலைய முக்கவட்டுச்
சூலத்தா ளேவற் றொழில்கேட்ப—ஞாலத்து

76 மானிட மங்கை வடிவாக வந்துறையுங்
கானிடம் யாதென்று கண்சாத்தி—யானா

77 நலமாரும் யோசனையோர் நாற்றிசையு முத்தித்
தலமாஞ் சுகந்தவனந் தன்னு—ளலமாற

---

67. முண்டகம்—தாமரை. நாபி—கொப்பூழ். சதுமுகன்-பிரமன்.

69. ஏனம்-பன்றி. மடங்கல்மான்-நரசிங்கம்.

70. இடர்-துன்பம்.

71. நாகப்பள்ளி-பாம்பணை. ஒளிர்தல்-விளங்குதல். மைந்நாகம்—நீலமலை.

72. வன்னம்-நிறம். தவிசு—ஆசனம். உணர்த்த-துயிலெழுப்ப.

73. நித்திரைமடந்தை — நித்திராதேவி. உன்னி—எண்ணி. திரைமடந்தை-இலக்குமி. ஊடினளாக என்பது ஊடினளா எனக் கடைக்குறையாயிற்று.

74. ஆயத்தெரிவையர்-பாங்கியர்.

75. கோலத் தாள்—அழகிய திருவடி. சூலத்தாள்-துர்க்கை.

76. கண்சாத்தி—பார்த்து.

77. அலம் மாற—பாவம் நீங்க.

78 வான்றிகழுங் கங்கைமுதன் மங்கைமார் மார்கழியிற்
றோன்றியமுற் பக்கத் துவாதசியிற்—றேன்றிகழுங்

79 கூந்த லனையக் குடைந்தாட லானதிக்கு
வேந்தனென நாமம் விளம்பியே—பாய்ந்த

80 திருமணிமுத் தாறலைக்குந் தீரத்தி னின்ற
மருமருவு வஞ்சியின்கீழ் வைக—வருகாக

81 வானமே தாவி வளரு மகிழுடியின்
ஞானமே தாவியெனு நன்முனிவன்—றானெய்திச்

82 செய்ய கமலத்துச் செய்யவளைக் கண்டுவந்தே
யையர் பயந்தெடுத்த வன்னையார்—துய்யபெய

83 ரூரே தெனப்பெயரு மூருமிலை தந்தைதாய்
நீரே யெனமுனிவ னெஞ்சுருகிப்—பாரேத்த

84 மன்னிள வஞ்சியின்கீழ் வந்துறைத லாற்பெயரு
மென்னிள வஞ்சியா ரென்றுரைத்துத்—தன்னுழையி

85 லான வரமுனிவ னவ்வனத்துக் கொண்டிருப்ப
வானவர் தோலா வலிதோற்றுத்—தானவரால்

86 விண்ணு டிழந்து விரிஞ்சனொடு கூட்டிடுநாட்
டண்ணூர் துழாய்மா தவனுணர்ந்து—நண்ணூர்

87 மிடைகெடுத்து மென்று விடைகொடுத்த பின்னர்க்
கிடைகெடுத்த செந்துவர்வாய்க் கிள்ளை—படைகொடுத்த

88 புண்டரிக மாளிகைமேற் பூவை தணந்தமையு
மண்டரெலா மாற்ற லகன்றமையுங்—கண்டருளிச்

89 செந்திருவை நாடிவான் றெய்வ வடிவகற்றி
யைந்துருவை மானி யவனிமேல்—வந்தருளி

---

78. முற்பக்கம்-சுக்கிலபக்ஷம்.
80. தீரம்-கரை. மருமருவு-வாசனை பொருந்திய. வஞ்சி-ஒரு மரம். அருகு-பக்கம்.
81. வானமே தாவி-ஆகாயத்தின் கட்பரந்து. மகிழ்-வகுளமரம். மேதாவி-சுகந்தவனத்திலிருந்த ஒருமுனிவன்.
85. தானவர்—அசுரர்.
87. கிடை-செந்நெட்டி. துவர்-பவளம். கிள்ளை-கிளி. கிள்ளை, பூவை என்பன இங்கு ஆகுபெயராய் நின்று இலக்குமியை புணர்த்தின.
88. தணத்தல்-பிரிதல். அண்டர்-தேவர்.
89. தெய்வவடிவு- அப்ராக்ருததிவ்யசரீரம். ஐந்துருவம்-பஞ்சபூதமயமான மானிடசரீரம். அவனி-பூமி.

90 யாடற் பறவை யரச னகல்விசும்பு
தேடத் திசையனைத்துந் தேடியநா—ணீடுஞ்

91 சுகந்தவன நோக்கித் துணையாய செல்வி
யுகந்தவன மீதென் றுணர்ந்து—புகுந்தருள

92 மேதாவி கண்டு விருந்தளிப்ப வெவ்வுயிர்க்கு
மாதாவி னல்லான் மகிழ்ந்ததற்பின்—போதார்

93 முருகுவளை மொய்குழலை முன்றிறனிற் கண்டு
பெருகுவளை முன்கை பிடிப்பத்—திருமகளுங்

94 காதலால் வந்தநம்பி கைப்பிடித்தா னென்றலறிக்
கோதிலா மாமுனியைக் கூவுதலும்—வேதியனுங்

95 கண்புகையச் செய்ய கதிர்புகையக் கார்வெளிற
விண்புகைய வாய்துடிப்ப மெய்பதற—மண்புகைய

96 வந்தான் கரகநீர் வாங்கிச் சபிப்பதற்கு
முந்தாமுன் சங்காழி முன்காட்டச்—சிந்தை

97 மயங்கினா னஞ்சினான் வாய்குழறிப் பார்மேன்
முயங்கினான் செங்கை முகிழ்த்தான்—றியங்கி

98 யழுதான் றளவின்மா லஞ்சலென வானோர்
விழுதா மரைத்தாளில் வீழ்ந்து—முழுது

99 மறியாமை செய்தே னதுபொறுத்தி யென்ன
வெறியாழி யம்மா னிரங்கிச்—செறிதுழாய்க்

100 கோதை மணம்புணர்ந்த கொண்டலுமப் புண்டரிக
மாதை மணம்புணர்ந்து வைகியபி—னீதி

101 யறந்திறம்பா நேமியா னவ்வனஞ்சேர் கைக்கும்
பிறந்தார்கள் வீடு பெறற்குஞ்—சிறந்தமலர்

---

90. ஆடல்-வலி. பறவையரசன்-கருடன்.

92-93. போது-பூ. முருகு-வாசனை. வளைதல்-சூழ்தல். மொய்குழல்-அடர்ந்த கூந்தல், அது இங்கு அன்மொழித்தொகையாய் இளவஞ்சியாளை யுணர்த்திற்று. முன்றில்-முன்முற்றம்.

96. கரகம்—கமண்டலம்.

97. கைமுகிழ்த்தல்-கைகூப்புதல்.

100. கோதை- ஆண்டாள்.

101. அறந்திறம்பா நேமியான்—திருமால்.

102 மாமாதின் பேரே வழங்குகைக்குங் கேட்டவா
மாமா தவனுக் கருளியபின்—பூமாதைப்

103 பாமாதுள் ளிட்டார் பணிந்துவிடை கொடுபோய்த்
தேமா மலரோன் செவிப்படுப்ப—நாம

104 மறையாள னவ்வனத்து வந்தாசி ரீழன்
முறையாய வேள்வி முடித்துப்—பொறையார்ந்த

105 பாதார விந்தம் பணிந்தேத்தப் பாற்கடலிற்
சீதார விந்தத் திருவினொடும்—பூதலத்தோர்

106 பேறுபெற வேபஞ்ச பேர வடிவுகந்து
வீறுபெற மாமுனிக்கும் வீடருளிக்—கூறரிய

107 ஞாலத் தெழுபத்து நான்கு சதுரயுகம்
நீலத் தடவரைபோ னின்றபிரான்—மேலைச்

108 சிகரக் குடகிரியிற் சென்றிழிந்து கீழை
மகரக் கடல்வயிறு மட்டு—மகலிடத்திற்

109 பாரங் கிழித்துப் பரவி மதகிடறி
யாரஞ் சுருட்டி யகிலுருட்டி—நார

110 துறையெறிந்து வித்துருமக் கொத்து நுடங்கத்
திரையெறிந்து முத்தஞ் சிதறிக்—கரையிற்

111 கொழிக்குங்கா வேரி குதித்தோடப் பாய்ந்து
சுழிக்குங்கா வேரித் துறையா—னெழிற்கருகி

112 யோங்கிப் பகலிருளை யுண்டாக்கிப் பேசுரும்பைத்
தாங்கிப் புயறடுத்த தண்டலையுந்—தேங்கமலப்

113 பூமிசை யன்னம் பொருந்தி வலம்புரியு
நேமியு மேந்திய நீள்கயமும்—காம

103. தேம்-தேன். நாமம்-புகழ்.
104. பொறையார்ந்த — எல்லாவற்றையுந் தாங்கிய.
106. பேறு-சதுர்விதபுருஷார்த்தம்.
109. பாரம்—கரை. மதகு—மடை. இடறி-மோதி. ஆரம்-சந்தனம். நாரம்-நீர்.
110. வித்துருமக்கொத்து - பவளக்கொத்து. நுடங்க-அசைய.
111. சிதறி-சிதறப்பட்டு. கொழிக்குங் கா-கொழித்தற்கிடமாகியசோலை. வேரி-தேன்.
112. சுரும்பு—வண்டு.
113. வலம்புரி — ஒருவகைச்சங்கு. நேமி-சக்கரவாகப்பறவை. கயம்-தடாகம். காமர்-அழகு, மன்மதனுமாம்.

114 ருளமகிழ வெண்ணிலா வொண்கதிரைக் கன்னல்
வளமதனை யீன்ற வயலு—மளவின்றித்

115 தன்னையே போலத் தழைப்பத் தரணிக்கோ
ரன்னையே போல வருள்செய்வான்—மன்னு

116 மருநறையூர் வீதி மணிமாடக் கோயிற்
றிருநறையூர் வாழ்வாசு தேவ—னிரணியனைப்

117 பாரி லுரங்கிழித்த பன்னகத்தான் பன்னகத்தான்
வாரிநிகர் வண்ணத்தான் வண்ணத்தா—னூரிடத்துந்

118 தண்ணளியான் றண்ணளியான் றாழ்ந்தவன சக்கரத்தான்
கண்ணினழ கார்முகத்தான் கார்முகத்தான்—விண்ணுலகி

119 னல்லசுரர்க் கண்ணியா னாறுழாய்க் கண்ணியான்
புல்லசுரர்க் கூக்கொடியான் புட்கொடியான்—மெல்லிலங்கை

120 வஞ்சனை யங்கறுத்தான் வாய்ந்தவடி வங்கறுத்தான்
கஞ்சனைமுன் கண்சிவந்தான் கண்சிவந்தான்—றஞ்சந்

121 திரையான் மலரிந் திரையான் கவிகை
வரையான் செழுந்து வரையான்—றரையான

122 மங்கையான் வேதநிய மங்கையான் சென்னியிலோர்
கங்கையான் சூடுபகாற் கங்கையான்—பங்கயக்கை

123 யாரணன் கேசவ னாழியா னச்சுதன்
காரணை னெம்பெருமான் காகுந்த—னாரணன்

---

114. கன்னல்—கரும்பு.

115. தரணி—பூமி.

116. மருநறையூர்வீதி — வாசனை பொருந்தியதேன் ஒழுகுகின்ற தெரு.

117. பன்னகத்தான்—1. பலநகங்களையுடையான், 2. பாம்பை (அணையாக) உடையான். வாரி-கடல். வண்ணத்தான்—1, நிறத்தையுடையவன், 2. செழுமையான சங்கத்தையுடையவன்

118. அளி-1. கருணை, 2. வண்டு. வனசம்-தாமரை. கரம்-கை. 1. அழகு ஆர்முகத்தான். 2. கார்முகத்தான்-வில்லையுடையான்.

119. நல்ல சுரர்க்கு அண்ணியான்-நல்லதேவர்களுக்குக் கிட்டுமவன். கண்ணி-தலைச்சூட்டு. புட்கொடி - கருடக்கொடி.

121. திரை-இங்கு, திருப்பாற்கடல். இந்திரை-இலக்குமி. வரைக்கவிகையான் எனக் கூட்டுக. வரை-கோவர்த்தனகிரி. கவிகை-குடை. செழுந் துவரையான்-செழுமையான துவாரபதியையுடையான்.

122. வேதநியமம் கையான்-வேதவிதிகளைவிரும்புமவன் (பிரமன்.)சென்னி, கம் என்பன தலையென்னும் பொருளையுணர்த்திநின்றன. கம் கையான்-தலையைக் கையிலுடையான். (சிவன்)

124 யாதவன் கண்ண னிருடிகே சன்முகுந்தன்
மாதவன் கோவிந்தன் வைகுந்தன்—சீதரன்

125 மாய னனந்தன் மதுசூத னன்றிருமா
லாயன் முராரி யருளாளன்—றூயபுகழ்

126 றேவாதி தேவன் றிருநா யகத்தேவன்
றாவா விடர்கெடுத்த தம்பிரா—னோவாப்

127 படந்திகழு மாடரவப் பாய்க்கிடந்து மேலா
மிடந்திகழ்வை குந்தத் திருந்து—நடந்து

128 பொறையூ ரடிக்கமலம் பூத்தோய வந்து
நறையூரு ணின்றருளு நம்பி—மறையூரு

129 மாயிரம் பேழ்வா யநந்தன் பணைவிமேன்
மாயிரு ஞால மகிழ்ந்திறைஞ்சச்—சேயிருந்தா

130 ரண்டர் குழாமு மருந்தவ ரீட்டமுந்
தொண்டர் குழாமுந் தொழுதேத்தப்—பண்டைத்

131 திருவாய் மொழியுந் திருமொழியும் வேதாத்
தருவாய் மொழியுந் தழைப்ப—வொருவாத

132 திங்களு நாளுந் திருவிழா நின்றோங்க
மங்கல வெண்சங்கம் வாய்பிளிற—வங்கமர்ந்து

133 நன்பஞ்சேர் நாடகக்கா ணம்பிக்கு நாயகித
னின்பஞ்சேர் நாளி லினிதொருநாள்—அன்பமர்ந்து

134 தன்னிசையாற் புள்வேந்தன் சாமவே தம்பாடி
பின்னிசையாற் பள்ளி யெழுந்தருளி—மன்னிச்

---

126. தாவாவிடர்-கெடாததுன்பம்.

127. திகழ்தல்-விளங்குதல்.

128. பூ-பூமி. தோய-படிய.

129. பேழ்வாய்-பெரியவாய். அநந்தன்-ஆதிசேடன். பணைவி-படத்தொகுதி.

131. திருவாய்மொழி - நம்மாழ்வாரருளிச்செய்தது. திருமொழி-திருமங்கையாழ்வார் முதலியவர்க ளருளிச்செயல். வேதா-பிரமன். வாய்மொழி-வேதம்.

132. பிளிற-முழங்க.

134. முதல் 200வரையுள்ள கண்ணிகளால் தலைவி திருநறையூர்நம்பியை உலாவரும்போது கண்டு மையல்கொண்டமை கூறி அம்மையல் தீர அவரிடம் சென்று திருத்துழாய்மாலை வாங்கிவரும்படி மேகத்தை வேண்டுகிறாள்,

135 சிலம்புதிரை மோதுந் திருமணிமுத் தாற்றி
னலம்புதிரு மஞ்சனநீ ராடி—நலம்பரவு

136 சேலை களைந்தணிந்து தெய்வப் பசுந்துளப
மாலை புதிய வகைசூடிக்—கோலந்

137 தயங்குதிரு வாரா தனைகொண்ட பின்ன
ரியங்குகடற் சங்க மிசைப்பப்—பெயர்ந்தோர்

138 திருந்துமணி மண்டபத்துச் சிங்கஞ் சுமந்த
வருந்தவிசி னேறி யருளிப்—பொருந்தியநால்

139 வேதமும் வேதாந்த மெய்த்ததிரு வாய்மொழியு
நாதமுங் கேட்டு நயந்துருகி—யோது

140 மருண வடவரையி னம்பொற் குவட்டிற்
றருண மவுலி தயங்கத்—திருநாம

141 மிட்ட வதனத் தெழுதிய கத்தூரி
வட்ட மதியின் மறுவேய்ப்பக்—கிட்டரிய

142 தேங்குழைக்கீழ்க் கற்பகத்திற் செம்பாம்பு சூழ்ந்ததெனப்
பூங்குழைக்கீழ் வாகு புரிதயங்கப்—பாங்கிற்

143 பதிக்குங் கவுத்துவமு மார்பும் பரிதி
யுதிக்கு மரகதக்குன் றொப்பக்—குதித்தொருநாட்

144 கால்வீழ்ந்த கங்கை விலங்கிக் கடிமார்பின்
மேல்வீழ்ந்த தென்னமுந்நூல் விட்டிலங்கச்—சூல்வீங்கு

145 கொண்டலின்கீழ்த் தோன்றுங் குடதிசையிற் செக்கரென
விண்டிலங்கு பொன்னுடை மெய்யசைபத்—தொண்டரெலாம்

146 பற்றிக் கழலவிடாப் பாதார விந்தத்தின்
வெற்றிக் கழலின் வெயிலெறிக்க—மற்றுந்தான

---

135. சிலம்பு திரை — ஒலிக்கின்ற அலை.

139. நாதம்—இசை.

140. அருணம்-கருமைகலந்தசிவப்பு. தருணம்-புதுமை. மௌலி—கிரீடம்.

141. வதனம்—நெற்றி.

142. குழை- 1. தழை, 2. குண்டலம். வாகுபுரி-தோள்வளை.

143. பரிதி—இரவி.

144. கடி-விளக்கம். முந்நூல்-யஜ்ஞோபவீதம். சூல்-கருப்பம்.

145. குடதிசை-மேற்றிசை. செக்கர்-செவ்வானம்.

158 முன்னநீ வாயடக்கு முந்நீரை யென்பொருட்டா
லின்னநீ வாயடக்கி லேலாதோ—பன்னகத்தின்

159 பூமரமே முந்துளைத்த போர்வாளி புன்குயில்வாழ்
மாமரமொன் றுந்துளைக்க மாட்டாதோ—சேமலைந்து

160 மாவாய் பிளந்த மரகதமே வம்புரைப்பார்
நாவாய் பிளந்தா னகையாமோ—பூவாய்த்த

161 தூய குருந்தொசித்த தோளாய் செவிவெதுப்பு
மாயர் குழலொசித்தா லாகாதோ—மாயமாய்க்

162 காதிச் சுழல்காற்றைக் காய்ந்தநீ வாடையாய்
வாதிச் சுழல்காற்றை மாற்றாயோ—மோதிவரும்

163 மண்ணாறு நீங்க வழிகண்ட நீயெனது
கண்ணாறு நீங்கவழி காட்டாயோ—தண்ணார்ந்த

164 தாதுதிரும் பைந்துழாய் தாராயேற் கண்ணனென
வோதுதிரு நாமமா சுண்ணாதோ—வீதிருக்க

165 நீநெடுமா லானநிலை நின்சே வடிதொழுது
நானெடுமா லாகவோ நம்பியே—மாநிலத்துப்

166 பாவையர்கைச் சங்கம் பறிப்பதற்கு நின்சங்கந்
தீவகமோ நேமித் திருமாலே—மேவத்

167 திருக்கடைக்கண் சாத்தாய் திருவாய் மலரா
யருட்கடலே யென்னு மளவின்—மருக்கமலை

---

158. முந்நீர்-கடல். கையமைத்துக் கடல்வாயடங்கச் செய்தது இராமாவதாரத்தில். இது, "வென்வேற் கௌரியர் தொன்முது கோடி, முழங்கிரும் பௌவ மிரங்கு முன்றுறை, வெல்போ ரிராம னருமறைக் கவித்த, பல்வீழ் ஆலம்போல, வொலியவிந் தன்றிவ் வழுங்கலூரே" என அகநானூற்றிலும்(செய்-௭௨) "மாயோ னடக்கு, நெடுங்கடல் போலடங்கி நிற்க" "இமைக்குங் கடலெழிலேகாந்தராம, னமைக்குங் கடல் பார்த் தமர்ந்நிர்" எனத் தேவையுலாவிலும் (கண்ணி-௧௬, ௬௧௭,) பயின்றுள்ளது.

159. வாளி-அம்பு. சே-எருது.

162. மாயமாய்ச் சுழல்காற்றைக் காதிக்காய்ந்த நீ எனக் கூட்டுக. உழல் காற்று - உழல்தற் கேதுவாயிருக்கும் (அதாவது வருத்தும்) காற்று.

163. கண்ணாறு— கண்ணிலிருந்து பெருகும் நீர்ப்பெருக்கு .

164. கண்ணன் - திருமால். இது சிலேடையால், கண்ணோட்டமுடையனென்னும் பொருளை யுணர்த்திற்று.

165. நெடுமால்-1. திருமால், 2 பெரியமயக்கம்.

166. தீவகம்-இணக்குப்பார்வை. (பார்வைமிருகம்.)

168 காதன் சிறிதே நகைகோட்டி வெண்கோட்டு
மாதங்க மீதே மறைதலாற்—சீதரன்றன்

169 வையம் புதைக்கு மலர்கருதி மாரவே
ளெய்யம்பு தைக்கு மிலக்கானேன்—செய்யதிறப்

170 பீதகவா டைக்கும் பெரிய திருவரைக்கும்
பாதகவா டைக்கும் பரிவானே—னாதலா

171 லந்திக் கமல னணையுங்கொ லென்றிருந்தே
னுந்திக் கமலத் துளமானேன்—கொந்துற்ற

172 கொய்துழாய் மார்பகலங் கூடுங்கொ லோவெனவே
கைதுழாய் மண்சுழித்துக் கைசோர்ந்தே—னெய்தி

173 யயனுலுங் காண வரியான் கரிய
புயனுலுங் காணமால் பூண்டேன்—வயமாரன்

174 றூதை திருப்பவளந் தான்வேட் டிளந்தென்ற
லூதை திருப்பவள மொல்கினேன்—மாதுவரை

175 யாயன் பவனிதொழு தன்றழுத வில்றளவுந்
தூய நயனந் துயினீங்கி—யாயொறுக்கப்

176 பந்து கழன்மறந்து பாவை கிளிதுறந்து
சந்து பனிநீர் தனத்தகற்றி—வெந்துயராப்

177 போதக் கலனிழந்து பூவிழந்து நீரிழந்து
காதற் சிறையிருத்தல் கண்டாயே—மாதுளபுக்

178 தாரானை வேட்கையெல்லாந் தந்தானை முப்பழமும்
வாரானை யன்றழைக்க வந்தானை—காரானை

179 மெய்ப்பானை யன்பருக்கு மெய்த்தானைக் கைகால்
செய்யானை வேலையானை செய்தானை—வையமெலாம்

168. நகைகோட்டி-சிரித்து. கோடு-கொம்பு. மாதங்கம்-யானை.
169 வையம் புதைக்குமலர் - உலகினை யுள்ளடக்கின தாமரைமலர்போலுந் திருவடி. கருதி-நினைத்து.
170. பீதக ஆடை—பொன்னுடை. பாதகவாடை-கொடிய வாடைக்காற்று.
171. அந்தி-மாலைக்காலம். அமலன்-மலமற்றவன். வையம்-மனது. கொந்து-பூங்கொத்து.
172. மண்சுழித்தல்-கடைவிழைத்தல்.
174. திருப்பவளம்-அழகிய பவளம்போலும் அதரம். ஒல்குதல்-சுருங்குதல்.
175. யாய்-தாய். ஒறுத்தல்-தண்டித்தல்.
178. வார்தல்—ஒழுகுதல்.

180 பெற்றானைக் காணப் பெறுதானைக் கன்மழையிற்
கற்றானைக் காத்ததொரு கல்லானை—யற்றார்க்கு

181 வாய்ந்தானைச் செம்பவள வாயானை மாமடியப்
பாய்ந்தானை யாடரவப் பாயானைப்—பூந்துவரை

182 மாமாலைக் கண்டந்தி மாலைவரு முன்னமே
தேமாலை வாங்கநீ செல்லுங்காற்—பூமாயன்

183 முன்னந் தடுத்த முளரித் திருக்கரத்தா
லின்னந் தடுக்குமென வெண்ணாதே—நின்னுடைய

184 தீமுழக்கின் மிக்கதெனச் செங்கண்மால் கைச்சங்கின்
வாய்முழக்கங் கேட்டு மயங்காதே—நீமருவும்

185 வானச் சிலையின் வனப்புளதென் றெம்பெருமான்
கூனற் சிலைகண்டு கூசாதே—மேனிலத்து

186 மின்சோதி யெல்லாம் விழுங்குமென்று நாந்தகத்தின்
நன்சோதி கண்டுமிக நாணாதே—நின்சோதி

187 மையழகி னீல மணியழகி லெம்மான்றன்
மெய்யழகு நன்றென்று வெள்காதே—துய்யமணி

188 யாரக் கபாட மணிக்கோயில் வாசலெலாஞ்
சேரக் கடந்து திருமுன்போய்த்—தூரத்தில்

189 நின்று வணங்கி நெடிதேத்தி வாய்புதைத்துச்
சென்று பெருமான் றிருச்செவியிற்—றுன்றுகடற்

190 றையற் கரசேயுன் றார்வேட் டொருபேதை
மையற் கரைசேரு மாறறியாள்—மெய்யுருகிக்

191 கொம்பனையா ளோர்விரகங் கொண்டா ளது தன்னை
யெம்பெருமான் கேட்டருளா யேதென்னி—லம்பாமு

192 மட்புனலு முண்டுமிழ்ந்த மாயோ னுருவமலாற்
கட்புலனும் வேற்றுருவங் காணற்க—புட்புறத்து

---

180. கற்றான்-கன்றோடுகூடிய பசு. இது, சாதியொருமை. கல்லான்—கோவர்த்தனத்தைக்குடையாகவுடையான்.
183. முளரி-தாமரை.
185. வனப்பு—அழகு.
186. நாந்தகம்-வாள்.
188. கபாடம்—கதவு.

193 மூர்த்தி புகழே முகப்பதல்லான் மற்றொருவர்
கீர்த்தி செவிமடுத்துக் கேளற்க—நீர்த்தரங்கப்

194 பூவெடுத்த வெண்கோட்டுப் புண்ணியனை யல்லாதென்
னாவெடுத்து வேறு நவிலற்க—கோவெடுத்த

195 கங்கை யுலவுங் கழலினாற் கல்லாதென்
செங்கை தலைமிசைபோய்ச் சேரற்க—பங்கயத்தா

196 டாக்குந் திருத்துழாய்த் தாமமண மல்லாதென்
மூக்கும் பிறிதுமண மோவற்க—மாக்கடல்போ

197 லஞ்சன வண்ண னடிக்கமல மல்லாதெ
னெஞ்சமு மொன்றை நினையற்க—செஞ்சுணங்கோ

198 டிங்கெழுந்த கொங்கை யெழுபிறப்பு மெம்பெருமான்
கொங்கணைந்த தோளல்லாற் கூடற்க—மங்கைநல்லீ

199 ரென்று வருந்தி யிருந்தா ளவளுக்குன்
மன்றல் கமழ்தார் வழங்கென்று—நின்றிரந்து

200 பண்டுளவத் தாமரையாள் பற்றுந் திருமார்பின்
வண்டுளவத் தார்வாங்கி வா.



செங்கமல வயல்சேருந் திருநறையூர் வாழியே
சீராரு நம்பியிணைத் திருவடிகள் வாழியே
பங்கமறு மேதாவி பயந்தசெல்வி வாழியே
பாரின்மறை தென்சொல்லாற் பகுத்துரைப்போன் வாழியே
யெங்களெதி ராச னிணைமலர்த்தாள் வாழியே
யீடில்வர வரமுனிவ னெப்பொழுதும் வாழியே
செங்கைகுவித் தன்போடு சேவிப்போர் வாழியே
செப்புவோர் வாழிசெவி சேர்ப்போரும் வாழியே.

---

193. தரங்கம்—அலை.
197. சுணங்கு—தேமல்.
198. கொங்கு, 199. மன்றல் —நறுமணம்.